SRI VENKATESVARA ORIENTAL SERIES No. 14.

EDITOR :—P. V. RÀMANUJASWAMI,

M.A.

# திருக்குறள் பொருட்பால்

(அறத்துப்பால்

துறைப்பகுதியுடன்)

## காலிங்கருரை : பரிப்பெருமாளுரை

பதிப்பாசிரியர் :

வித்வான்

PRINTED AT
TIRUMALAI-TIRUPATI DEVASTHANAMS PRESS
TIRUPATI

# FOREWORD

**BY**

**SRI S. SATCHIDANANDAM PILLAI, B.A., L.T.**

**(Retired Dt. Educational Officer, Madras.)**

**Member, Advisory Council of the Sri Venkatesvara Oriental Institute.**

திருக்குறள் உலகப் பெரு நூல்களுள் ஒன்று; தமிழ் நூல்களுள் தலையாயது. கி. பி. பதினான்காவது நூற்றாண்டு முடியு முன்னமே இவ்வொரு நூலுக்குப் பத்துரைகள் வரையப் பெற்றிருந்தன. பின்னாளிற் செய்யுளுருவ உரைகளும் சில தோன்றின. திருக்குறள் தோன்றிய பின்பு எழுந்த தமிழிலக்கியங்களில் அதனை ஓரளவேனும் தழுவாத நூலொன்று மிலதென்றே கூறலாம். அது நூற்றுப் பத்துக்கு மேற்பட்ட பாஷைகளில் மொழி பெயர்க்கப் பட்டுள்ளது. அதன் தன்னக் தனிப் பெருமையை உணர்த்துதற்கு

இச்சான்றுகளே சாலும்.

இப்போதுமறையின் பண்டை யுரைகள் பத்தில் பரிமேலழக ருரை யொன்று தான் இந்நூற்றாண்டில் அனைவர்க்கும் கிடைத்துப் பயிலப் பெற்று வந்தது. பின்னர் மணக்குடவர் உரை அகப்பட் டது. இது போது காலிங்கர் பரிப்பெருமாள் என்னும் மற்று மிருவர் உரைகள் கண்டு பிடிக்கப் பட்டன. இலக்கியத் துறையில் பன்முகப் புதுவிழிப்பும், திருக்குறட் பயிற்சியில் பொங்கு பேரார்வமும் தற் காலத் தமிழகத்திற் காண்கின்றன. மறைந்து கிடந்த உரைகள் இரண்டு இச்சமயத்தில் வெளிப் போந்திருப்பது மகிழ்ச்சிக்குரிய நிகழ்ச்சி யாகும்.

வடவேங்கடத்தில் அறிவுப் பெருக்க நிலையமாய் ஒளிர்கின்ற திருவேங்கடேசுவரர் கீழைக்கலை யாராய்ச்சிக் கழகம் (Sri Venkatesvara Oriental Institute, Tirupati) வடமொழியிலும் தெலுங் கிலும் பல அரிய நூல்களை முதன் முறையாக அச்சு வாகனத் தேற்றி உலவச் செய்து புகழ் பெற்றுள்ளது. அம்முறையில், 1945-ம் ஆண்டில் தமிழ் நூல் முதல் வெளியீடாக, மேற் குறித்த பண்டை உரையாசிரியர்கள் இருவர் உரையுடன் திருக்குறளிற் காமத்துப்பால் வெளி வந்தது. இது போழ்து வெளியாகும் இந்நூலில், அறத்துப் பாலின் இறுதி யேழதிகாரங்கட்கு 31-ம் அதிகாரத்தில் முதலேழ்ந்து பாக்கள் நீங்கலாகக் காலிங்கர் இயற்றிய உரைகளும் பொருட்பா லுக்கு அவரும் பரிப்பெருமாளும் இயற்றிய உரைகளும் அடங்கி யுள்ளன. " அறத்துப்பால் முழுதுக்கும் உள்ள பரிப்பெருமாள் உரை



தனியே வெளிவருதல் முறை யாதலின் பின்னர் பதிப்பு என்று - இந்நூலின் பதிப்பாசிரியர் வாக்களித்திருப்பது

எய்தும் "

அறிஞரால்
வரவேற்கப்படும்.

காலிங்கர் உரைக்கு ஒரே ஒரு ஏட்டுச் சுவடியும், பரிப்பெருமாள் உரைக்கு ஒரு கடிதக் கையெழுத்துச் சுவடியுமே மூலமாக இருந்தன என்று பதிப்பாசிரியர் திரு. வித்துவான். T. P. பழனியப்ப பிள்ளை B.O.L. அவர்கள் தெரிவித்துள்ளார்கள். எனவே, ஒப்பு நோக்குதற்கும் ஒன்றுக்கு மேற்பட்ட பிரதிகள் கிடைத்தில. கிடைத்தவற்றுள்ளும் ஒன்று ஆங்காங்குச் சிதில மானது. இந்த நிலைமையில் அரிதிற் கிடைத்த மூலங்களை நுணுகி ஆய்ந்து அச்சேற்றிய இப் பதிப்பாசிரியர் தம் அழுத்தமான புலமைக்கும், உலையா முயற்சிக்கும், ஆராய்ச்சிக்கும் தமிழுலகம் என்றும் நன்றி செலுத்தக் கடமைப் பட்டுள்ளது. முன்னமே இவர்கள் மாணிக்க வாசகர் கால வாராய்ச்சிக்குத் துணை செய்ய வல்ல அரிய புதுக் குறிப்புக்களை வெளியிட்டிருப்பதும் இங்கு எனது நினைவிற்கு வருகின்றது.

மேற் சுட்டிய பண்டை உரையாசிரியர்களின் உரைத்திறம் பற்றியும், காலம் பற்றியும் அறியக் கூடிய குறிப்புக்கள் பலவற்றைப் பிள்ளையவர்கள் எழுதியுள்ள ஆராய்ச்சி முகவுரைகளிற் கண்டு களிக்கலாம். பின் வந்த முன்னுரையில், திருவள்ளுவர் காலத்தைப் பற்றிய ஆராய்ச்சி யொன்று இடையே சிறிது நிகழ்கின்றது. அது மற்றோர் தமிழ்ப் பேரறிஞர் கூற்றை மறுக்கும் வகையில் அமைந்துள்ளது. இப்பகுதி விவாதத்திற் கிடந் தருவது. எதிர்க் கூற்றுளார் காரணங்களனைத்தையும் விரிந்த அளவில் தனியே ஆய்ந்து மறுத்த பின்னரே முடிவு செய்தற் குரியது. இதனுள் யானிப்போது புக விரும்புகின்றேனில்லை.

இது வரை கிடைக்கா திருந்த இரண்டுரைகளைத் தக்க புலவரைக் கொண்டு ஆராய்வித்து அச்சிற் கிடைக்குமாறு செய்த கழகத்திற்கும், அதன் தலைவராகிய திரு. P. V. இராமாநுஜஸ்வாமி M.A. அவர்கட்கும் தமிழகத்தின் நன்றி என்றும் உரியதாகும். திருக்குறளாராய்ச்சி மேன் மேலும் வளர்தற்குப் பெருந் துணை செய்ய வல்ல இப் பண்டை யுரைகளைக் கண்டெடுத் தளித்த பதிப்பாசிரியரவர்கட்கு எனது மனமார்ந்த பாராட்டைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இவர்களது சீரிய அறிவுத் தொண்டு மேலும் [illegible]

சபாபதி நிலையம்,
175A, லாயிட்ஸ் ரோட்
இராயப்பேட்டை, சென்னை.
18—3—1948

ச. சச்சிதானந்தம் பிள்ளை.

# முகவுரை.



"வட சொற்கும் தென் சொற்கும் வரம்பு ஆகி, நான்மறையும் மற்றை நூலும் இடை சொற்ற பொருட்கு எல்லாம் எல்லையது ஆகி, நல்லறத்துக்கு ஈறு ஆகி, வேறு புடை சுற்றும் துணை இன்றிப் புகழ் பொதிந்த மெய்யே போலப் பூத்து நின்ற" திருவேங்கடத்து எம்பெருமான் திருவருளாலே இந் நல்லாண்டின் தொடக்கத்தில் நம் தமிழகத்துத் தெய்வப் புலவர் திருவள்ளுவர் அருளிச்செய்த பெருந் திருநூல் ஆகிய திருக்குறளின் இரண்டாம்பகுதி ஆகும் பொருட்பால் பழம்பெருமை வாய்ந்த உரையாசிரியர் காலிங்கர், பரிப்பெருமாள் இருவர் உரைகளுடன் அச்சாகித் தமிழறிவு சான்ற நன்மக்கள் கையெய்த வெளிப்படுகின்றது. 1945-ம் ஆண்டில் திருவேங்கடேசுவரன் கீழைக் கலையாராய்ச்சிக் கழகத்தின் முதல் தமிழ் நூல் வெளியீடு ஆகத் திருக்குறள்-காமத்துப்பால்—இவ்விருவர் உரைச் சுவடி பதிப்பு எய்திய போது அது மட்டும் அப்பழைய உரைகளுடன் வெளியாதற்கும் ஏனைய முதல் இரண்டு பகுதிகளும் வெளியாகாமைக்கும் ஏது, பெரிதும் செல்லரிப்புண்ட அரிய ஒரே ஏட்டுச் சுவடியைப் பார்த்துக் கையெழுத்துப் பிரதி செய்து போற்றியதும், அதனுள் பெரிதும் சிதைவு எய்தாத காமத்துப்பால் பகுதியை முன்னர் வெளியிட்டுத் தமிழகத்தில் உலவச் செய்து பழந்தமிழ்ச் செல்வத்தை உலையாது நிலை பெறுவிப்பதுவுமே ஆகும் என்று எளியேன் அறிவித்துள்ளேன். பலவிடத்துச் சிதைவு உளதேனும் முழுதும் உள்ள பொருட்பாலினை அவ்விருவ ருரைகளுடன் வெளியிட்டு அவ்வாறே நிலைபெறச் செய்வதும் தமிழ்ப் பணியின் தொடர்பான கடப்பாடு என எண்ணி இப்போது பொருட்பாலின் உரைகளிரண்டும் பதிப்பித்துள்ளேன். அச்சாகும்போது வேறு ஏட்டுச் சுவடி பெற முயன்றும் அஃது எங்கும் கிடையாமை தெளிய அறிந்த பின்பு குறைப் பகுதியாய அறத்துப்பால் காலிங்கர் உரையினை மட்டும் எஞ்ச இட்டுவைப்பது முறை அன்று என எண்ணி உள்ளவரை தமிழறிஞர் படித்து மகிழும் பொருட்டு அதனையும் பின்பு அச்சிட்டு முதற்கண் வைத்துள்ளேன். அது 31-வது அதிகாரம் ஆகிய வெகுளாமையில் 6-வது பாடல் ஆகிய "நகையு முவகையும்" என்ற குறள் தொடங்கி 38-வது "ஊழ்" முடிய உள்ளது ஆகும். அறத்துப்பால் முழுதுக்கும் உள்ள பரிப்பெருமாள் உரை

தனியே வெளி வருதல் முறையாதலின் பின்னர் பதிப்பு எய்தும்.

## ii

முன் காமத்துப்பால் பதிப்பினுட்போல இப்பதிப்பினுள்ளும் காலிங்கர் உரைச் சுவடியில் கண்ட குறட்பாக்களின் மூல பாடத்தினையே முதன்மையாகக் கொண்டுள்ளமையால் ஒவ்வொரு குறட்பாவின் தலைப்பினும் காலிங்கர் எண் குறிப்பும் பரிப்பெருமாள் எண் குறிப்பும் வேறு வேறு தெரிதரு முறைமைக்காக இடப்பால் தலைப்பில் கா. 1. எனவும், வலப்பால் தலைப்பில் ப. 1. எனவும் தடித்த எழுத்து எண்முறைகளும் கொடுத்துள்ளன. குறட்பாவின் மூல பாடத்துக்குப் பின்பு முதற்கண் காலிங்கர் உரையெனக் குறியீடு செய்து அவருரையினைப் பெய்தும், அதன் பின்னர் பரிப்பெருமாள் உரையெனக் குறியீடு இட்டு அவருரையினைப் பெய்தும் அச்சிட்டுள்ளது. குறட்பாவின் மூலபாடத்தில் பரிப்பெருமாள் உரையின் வேறு பாடம் கண்ட இடங்களில் அஃது உணருமாறு அவருரைத் தொடக்கத்தில் பாடாந்தரங்கள் குறித்துள்ளன. எனவே அவருரையில் மூற்பட்ட குறட்பாவின் சுட்டுள்ள இடங்களில் அவ்வக்குறட்பாவின் வலப்பால் தலைப்பில் உள்ள பரிப்பெருமாள் எண் முறைமைப்படி நோக்கிக் கொள்ளுதல் வேண்டும் என அறிக. காலிங்கர் உரையில் சிதைவுற்ற இடங்களை அறியும்படி அங்கங்கு நிரைப்புள்ளிகள் இட்டுள்ளது கண்டு கொள்ளுக. (பரிப்பெருமாள் உரையினும் ஓரோர் இடங்களில் இச்சிதைவு காணப்படும். இவ்விருவருரைக்கும் ஓரோர் ஏட்டுச் சுவடியே ஆதாரம் ஆதலின், குறைபாடுகளைப் பிற பிரதிகள் கொண்டு நிறைவுறுத்தற்கு வழியில்லை யாயது. என் கருத்துப்படியாக ஓரெழுத்தேனும் கூட்டவும் குறைக்கவும் பெற வில்லை என்று அறிக. உரைகளிற் கண்ட சில அருகிய வழக்கிற்கு அடிக் குறிப்பு மட்டும் கொடுத்துள்ளேன் 'கில்' என்னும் ஆற்றல் உணர்த்தும் இடை நிலை பயிலும் வினைச்சொற்கள் ஆகிய செய்கிற்பான், உய்க்கிற்பின் என்பன ஏட்டில் செய்கற்டான், உய்க்கற்பின் என இருந்தவற்றைப் பிழை எனக் காட்டிப் பதித்துள்ளமை ஒன்றே

மாற்றம் ஆகும்.

முன்பு பதிப்பித்த காமத்துப்பால் சுவடியின் முன்னுரையில் இவ்வுரைகளின் காலம் பற்றியும் இயல்பு பற்றியும் சில குறிப்புகள் கொடுத்தேன். இப்பதிப்பினும் அவை பற்றிய குறிப்புகள் தொடர்ந்து வருதற்கு இடனுண்மையின் சிறிது எழுதுகின்றேன். பரிமேலழகர் தமது உரையில் மறுத்த பகுதி இவர்கள் உரையில் காணப்படுதலின் இவர்களுரைகள் காலத்தின் முற்பட்டன என்பதற்கு அகச்சான்றாக இப்பொருட்பாலின் கண்ணும் சில குறிப்புகள் காண்கின்றோம். நாணுடைமை என்ற அதிகாரத்தில் வரும் "ஊனைக் குறித்த வுயிரெல்லாம்" என்ற குறளுக்கு உரை விரித்தபின் இறுதியில் "ஊணைக் குறித்த வென்று பாடமோதுவாரு முளர்" என்றார் பரிமேலழகர். இவர் சுட்டிய பாடத்தினையே



காலிங்கரும் பரிப்பெருமாளும் கொண்டு அத்தொடர்க்கு ஏற்பப் பொருள் கூறியுள்ளார்கள். மற்றும் "கருமத்தா னாணுத னாணு" என்ற குறளுரையில் மறுக்குமுகத்தான் "பொது மகளிர் நாணொடொக்கு மென்றுரைப்பாருமுளர்" என்று அவர் எழுதியது பரிப்பெருமாளுரையின் மறுப்பே யாகுமென்பதனை அவருரை நோக்கிக் கண்டு கொள்க. இவற்றால் இவருரைகளின் பழமை வலியுறுதல்

காண்க.

இனி, காலிங்கருரையிற் கண்ட குறட்பாக்களின் மூல பாடங்கள் பழமையாதலோடு சிறப்புடையவாதலும் புலப்பாடு பெறும். "வெருவந்த செய்யாமை" அதிகாரத்தில் "கடிதோச்சி மெல்ல வெறிக" என்ற பாடமே பரிமேலழகர் கொண்டது. காலிங்கர் கண்ட பாடம் "கடிதோக்கி மெல்ல வெறிக". என்பது ஆகும். எறிதல், வீசுதல் என்னும் பொருளதாகிய 'ஓச்சுதல்' என்பதினும், உயர்த்தல், ஓங்குவித்தல் என்ற பொருளதாகிய 'ஓக்குதல்' என்பது பொருட் சிறப்புடைய தாதலோடு பின் வரும் சீராகிய 'நெடிதாக்கம்' என்பதனொடு ஒரூஉ வெதுகைத் தொடைச் சிறப்புடையதாய்ப் பாடற்கு ஓசைநய மூட்டுதல் தேர்ந்து கொள்ளுக. 'உழவு' என்ற அதிகாரத்தில் 'பலகுடை நீழலுந் தங்குடைக்கீழ்க் காண்பர்' என்று பாடங் கொண்டுள்ளார் பரிமேலழகர். காலிங்கர் கண்ட பாடம் "பல குடை நீழலுந் தங்கொடைக்கீழ்க் காண்பர்" என்பது. உழுதுண் டுலகூட்டும் வேளாண் மாந்தர்க்கு இலக்கண வகையால் தமக்கெனக் குடையின்மை கண்ட பரிமேலழகர் "தங்குடை" என்பதற்குத் "தமது வேந்தன் குடை" என ஆகுபெயர்ப் பொருள் கண்டு பொருத்தினர். ஆயின் காலிங்கர் வள்ளுவனார் தெள்ளிய வாய்மொழி "தங்கொடை" என்றே கொண்டு இரப்போர் சுற்றமும் புரப்போர் கொற்றமும் உழவிடை விளைக்கும் பழவிறலோர் கொடைத் திறனைக் குறித்ததாகக் கூறினர். மற்றும் பரிமேலழகர் 'இலமென் றசைஇ யிருப்பாரை' என்ற குறளுரை விளக்கத்தில் "இரப்பாரை என்று பாடமோ துவாரு முளர்" என்றெழுதியது இக் காலிங்கருரைப் பாடங் கண்டென்றே நோக்கிக் கொள்ளுக. இவ் வாறுகக் காலிங்கர் கண்ட பாடங்களின் திறனை ஆய்ந்து கொள்ளுமாறு அறிஞர்களை வேண்டுகின்றேன்.

இனி, காலிங்கர் வரலாற்றுச் செய்திகளை நாம் அறிந்து கோடற்கு வாயில் இல்லை யெனினும் அவருரைக் குறிப்பினின்று அவர் சமயச் சார்பு இஃதென அறிந்து கொள்ளுதல் கூடும்.

> "பெயக்கண்டு நஞ்சுண் டமைவர் நயத்தக்க
> நாகரிகம் வேண்டு பவர்"

என்ற குறளுரையில் 'நயத்தக்க நாகரிகம் வேண்டுபவர்' என்ற தொடர்க்கு "உம்பருலகினுட் சிறப்புடைய உத்தர குருவினைத் தாம்

எய்தி இனிது வாழ்ந்திருக்க வேண்டுமவர்" என்றெழுதியுள்ளார். இது "நாக நீணகரொடு நாகநாடதனொடு போகம்" "உத்தரகுரு வினை யொப்ப" எனச் சிலப்பதிகாரமும் "நாகமா நகர்" எனச் சிந்தாமணியும் போகந் துய்க்கும் பூமி எனச் சுட்டும் சைனநூற் கருத்து ஆகலின் காலிங்கர் சைனர் போலும். மற்றும் "எண்பதத் தானெய்தல்" என்ற குறட்பாவுரையில் அத்தொடர்க்குப் "போகச் சிறப்பினான் எண்ணத் தக்க சுவர்க்க பதத்தின்கண் சென்றெய்துதல்" என்று பொருள் தந்ததும் காண்க. அறத்துப்பாலில் "ஊழ்" என்னும் அதிகாரத்தில் பரிமேலழகர்

"வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்த லரிது"

என்று குறட்பாடங் கொண்டு "வகுத்தான்-தெய்வம்" என்று பொருள் கூறிப் பின்னர் விசேடவுரையில் "ஓருயிர் செய்த வினையின் பயனை பிறிதோருயிரின்கட் செல்லாமல் அவ்வுயிர்க்கே வகுத்தலின் வகுத்தா னென்றார்" என்று விளக்கிக் காட்டினர் என்பது அறிஞர் அனைவரும் நன்கு தெரிந்ததே. ஈண்டு, காலிங்கர் அவ்வாறு பாடங் கொள்ளாது

"வகுத்தார் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்த லரிது"

என்று பாடங்கொண்டு "முன்னஞ் செய்தார் செய்த வினை வகை யாற் றுய்க்கலல்லது மற்றுக் கோடி பொருளீட்டினார்க்கு மதுகொண்டு துய்த்த லரிது" என்றுரை வரைந்தார். இக்கோட்பாடு சைனர்க் குரியது என்றறியப்படுகின்றது. பழவினையானது தன்னைச் செய்தானைத் தானே நாடி அடைய வல்லது என்பது அவர் மேற்கோளாற் காணலாம். பழவினை தானே செய்தானை நாடி யடைதற்குச் சைன நூலாகிய நாலடியார் ஒப்புமை காட்டி விளக்குதலை ஈண்டு ஓர்ந்துணர்தல் வேண்டும். பழவினை யதிகாரத்துள்

"பல்லாவு ளுய்த்து விடினுங் குழக்கன்று
வல்லதாந் தாய்நாடிக் கோடலை —தொல்லைப்
பழவினையு மன்ன தகைத்தேதற் செய்த
கிழவனை நாடிக் கொளற்கு"

என்றுள்ள வெண்பா பெருநிரை மந்தையுள்ளும் இளங்கன்று ஒன்று தன்னை யீன்ற தாயாகிய ஆவினைத் தானே நாடிச் சென்று பிறவற்றை யணையாது அதனையே யடையும்-அது போலப் பழவினையும் பல்லுயிர் பரந்துள்ள உலகின்கண் தன்னைச் செய்த உயிர்க் கிழவனைத் தானே நாடிச் சென்றணைந்து அவற்குப் பயனூட்டும் என்று கர்மங்கள் ஆஸ்ரவ முறையால் அடையும் நெறியைக் கூறுவது கண்டுகொள்

v

ளுக. இக்கோட்பாடு உயிர்கள் தன்னுணையின் இருவினையிற் போக்கு வாவு புரிய முதல்வன் நடத்துவன் என்ற சைவக் கொள்கைக்கும், ஸ்ரீமந் நாராயணன் சர்வ நியந்தா வாதலின் உயிர்கள் நியாம்பியமாக நிலைபெற நடத்துவ னென்று கூறும் ஸ்ரீ வைணவக் கொள்கைக்கும் வேறாக உள்ள தெனவும் நோக்கிக் கொள்க. பரிமேலழகர் 'வகுத்தான்' என்று பாடங் கொண்டுரைத்த வுரை இச்சைவ வைணவக் கொள்கைகட்டு இணங்குமன்றிச் சைனராற் கருத்துக் கொவ்வாதா மெனவு மறிக. இதனானும் காலிங்கர் சைன ராதல் தெள்ளிது. 63 வது அதிகாரம் நன்றியில் செல்வத்துள் "மருளானு மாணாப் பிறப்பு" என்பதற்கு "இதனன் நரக யோனியும் திருக்கும் பிறவும் ஆகிய கடையான பிறப்பு உளது ஆம்" என்றுரைத்தமையும் இவர் சைன ரென்பதனைத் தெரிவிக்கும்.

காலிங்கர் கண்ட குறட்பாப் பாடங்கள் ஒரோ விடங்களிற் சிறப்பின வாதல் போன்று அவருரையும் சிறந்து நிற்பது காணலாம்.

51-வது உட்பகை அதிகாரத்தின்கண் வரும்,

"உட்பகை யஞ்சித்தற்
மட்பகையின் மாணத்

காக்க வுலைவிடத்து
தெறும்".

என்பதற்குப் பரிமேலழகர் கூறிய பொருள் அவர்க்கு முற்பட்டோ ராகிய பரிப்பெருமாள் கண்ட உரையே யாம். மணக்குடவர் உரை யும் வேறுபட்டிலது. இம்மூவரும் 'மட்பகை' என்பதற்குக் "குயவன் வினைகலத்தை யறுக்கும் கருவி" என்று பொருள் கண்ட னர். இம்மூவரினும் வேறாகக் காலிங்கர் "மண்பகை என்றது நீர் வெள்ளம்" என்று பொருள் கூறி விளக்கு முகத்தான் "தனக்குத் தளர்ச்சி வந்த இடத்தே கரைபடக் கட்டிய மண் ணுறுதிக்குத் தளர்ச்சி வந்த இடத்து மற்று அதனை முழுவது முரித்து எறியும் வெள்ளம் போல் இதுவும் (உட்பகை) தன் குடிமுழுதும் குலைத்து எறிந்து விடும்" என்றுரைத்தார். மட்பகை என்னுந் தொடர் மொழி மண் வினைஞராகிய குயவர் கையாளுங் கருவிகளாகிய சுழ லுருளி, கொட்டுக்கோல், அச்சச் சட்டம், ஊசி, ஒலை முதலியவற் றுள் எதற்கும் பெயராக வழக்குப் பெற்றுள தன்று. மண்ணைப் பகுக்கும் காரணத்தாற் போந்த தெனின் அவ்வினை செய்யும் 'மண் வெட்டி, குந்தாலி முதலியவற்றுக்கும் பெயராதல் செல்லாது ஊசி ஒன்றற்கே பெயரா யமைதலும் பொருந்தாதெனக் காண்க. மற்று, திணிந்த மண்ணினை இயல்பாகக் கலக்குந் தன்மை யுடைத்தாகிய நீர் அம் மண்ணிற்குப் பகையாதலோடு, இறுகச் செறித்த கரைகளை வெள்ளப் பெருக்கால் முரித்தெடுத் தெறிந்து செல்லுதல் கண் கூடாதலால் மண்பகை என்ற தொடர்க்கு நீர்வெள்ளம் என்பது பொருட் பேறுடைத்தாவது காண்க. அன்றியும் 'ஊசி' வினைத்த

பாண்டத்தை வனையா மண்ணிற் பகுக்குங்கால் உலைவிடத்துப் பயனு வதின்றாய் நிலைவிடத்துப் பயனுவது. நீர் வெள்ளம் உலைவிட னுடைய கரையை முற்றி மோதி யுடைத்தல் எளிதாதலின் உலைவிடத்துச் செயலுடையது. ஆகவே உலைவிடத்துச் செயலுடைமை உட்பகைக் கும் மட்பகைக்கும் பொருந்தவ தாயின் நீர் வெள்ளத்துக்குப் பெரி தும் பொருந்து மன்றிக் குயவ னூசிக்குப் பொருந்தாமை அறிந்து கொள்க. இது போல "நிழனீரு மின்னாத" "ஊணுடை" முத லிய குறட்பா வுரைகளினும் காலிங்கர் பொருட்கூற்று சிறந்து காட்டுதல் காண்க.

காலிங்க ருரையின் வேறு சில குறிப்புங்

காண்பாம்.

"வெருவந்த செய்தொழுகும் வெங்கோல
னொருவந்த மொல்லைக் கெடும்"

ஐயி

என்பதில் பரிமேலழகர் 'ஒருவந்தம் என்பதற்கு' ஒருதலை யாக என்று பொருளெழுதிப் பின்னர் விளக்குகின்றுழி "ஒருவந்தம், ஒருதலை, ஏகாந்தம் என்பன ஒரு பொருட் கிளவி" என்றுரைத்தார். 'ஒருவந்தம்' என்ற இச்சொல்லே பயின்ற பிறிதொரு குறட்பாவில் (593 ஆக்க மிழந்தேம்) இதற்கு 'நிலைபெற்ற' என்று வேறு பொருள் கூறினர். இவர்க்கு மாறாகக் காலிங்கர் இவ்வருமை சொல் லுக்குப் பெருஞ்செல்வம் என்று அவ்விரிடத்தும் ஒப்ப ஒரே பொருள் கூறினர். இதன் சிறப்பு அறிஞர் நோக்கிக் கொள்ளக்

கடவர்.

பரிமேலழகர் 'ஒருவந்தம்' என்பதற்கு உரைத்த விசேடம் பற்றிச் சென்னைப் பல்கலைக் கழகத்துத் தமிழாராய்ச்சித் துறைத் தலைவராயிருந்த பேரறிஞர் இராவ் சாஹிப் திருவாளர் S. வையாபுரிப் பிள்ளையவர்கள் B.A , B.L. அண்மையில் தாம் பதிப்பித்த திரிகடுகம்-சிறுபஞ்சமூலச் சுவடியின் முன்னுரை 15-ம் பக்கத்தில் எழுதியதனை இயைபு பற்றி ஈண்டெடுக்க, அறிந்துகொள்ள வேண்டும். அது வருமாறு " ......தனிமொழியே யன்றி ஆதிபகவன் என்ற இருமொழித் தொடரும் வள்ளுவரால் கையாளப்பட்டுள்ளது. இதுபோன்ற வடமொழி வழக்கும் சங்க இலக்கியங்களில் காணுமாறில்லை. ஒருவந்தம் (563, 593) என்ற சொல் வள்ளுவரில் இரண்டு இடங்களில் உள்ளது. இச்சொல்லில் ஒரு என்பது தமிழ்; அந்தம் என்பது வடசொல். இவ்விரண்டும் இயைந்து ஒரு சொன்னீர்மைப் பட்டு வடமொழியிலுள்ள ஏகாந்தம் என்பதற்குரிய கலவைச் சொல்லாக Hybrid தமிழில் ஆளப்பட்டுள்ளது. இக் கலவை ஆட்சியும் சங்க நூல்களில் காணப்படாததொன்றும். இங்குக் காட்டியன வெல்லாம் வடசொற்களை எடுத்தாளுதலில் வள்ளுவர் விரிந்த மனப்பான்மை யுடையவர் என்பதை நன்கு தெரிவிக்கின்றன. இம்மனப்பான்மையும் சங்க



காலத்தின்றிப் பிற்காலத்துத் தோன்றியதே யாம். இவற்றாலும் சங்க காலத்திற்குப் பிற்பட்டவர் வள்ளுவரென்பது நன்கு உணரக் கிடக்கின்றது ........ ... எனவே சுமார் கி. பி. 450-ல் திருக்குறள் தோன்றியதெனக் கொள்ளுவோ மாயின் அது உண்மையோடு பட்டதாகவே இருக்கலாமெனத் தோன்றுகிறது" என்றெழுதினர்கள்.

மற்று இவர்கள் அம் முன்னுரையின் 11-ம் பக்கத்தில் சங்கச் செய்யுட்கள் கி. பி. முதல் அல்லது இரண்டாம் நூற்றாண்டி லியற்றப் பட்டன வென்று முடிவுரைத்திட்டார்கள். அதன்படி எட்டுத் தொகையுள் முதல் நூலாகிய நற்றிணையும் இறுதி நூல் ஆகிய புற நானூறும் அக்காலத்தன வென்பது ஐயப்பாடின்றி நிலைபெறுகின் றது. ஆயின் இத்தொகை நூல்கள் திருக்குறட் பாக்களை எடுத் தாண்டும் அந்நூலினைத் தெளிவாய்ச் சுட்டியும் சென்றன வாயின் அத்தொகை நூல்களின் காலத்துக்குத் திருக்குறள் முற்பட்ட தென்று உடன்படல் வேண்டு மன்றே! அவை திருக்குறளை யாண்ட இடங்களைச் சுட்டுகின்றேன்: காண்மின்!

முந்தை யிருந்து நட்டோர் கொடுப்பி
னஞ்சு முண்பர் நனிநா கரிக
ரஞ்சி லோதியென் றோழி தோட்டியி
னெஞ்சி னின்புறு யாயினு மதுநீ
யென்க ணோடி யளிமதி —நற்றிணை. நஉ௫.

இக்நற்றிணைப் பாடற் பகுதியில் தலைவனைத் தோழி அருகடுத்து வரைவு கடாவுவாளாய் நின்று நீதிநெறி மொழியு முறையில் தன் பாற் கண்ணோடிச் செய்தல் வேண்டுமெனத் தமிழ்ப் பேரற நூற் கட்டளையை எடுத்துக் கூறியது காண்மின். ஈண்டு

"பெயக்கண்டு நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்"

என்னும் திருக்குறள்
துள்ள பாடலை எடுத்து

நூலின் கண்ணோட்டம் என்ற அதிகாரத்
அமைத்துள்ளமை நோக்குமின்.

நீயுங் கண்டு நுமரொடு மெண்ணி
யறிவறிந் தளவல் வேண்டு மறுதரற்
கரிய வாழி தோழி! பெரியோர்
நாடி நட்பி னல்லது
நட்டு நாடார்தம் மொட்டியோர்

திறத்தே—நற்றிணை, ௩௨.

ஈண்டு, தோழி தலைவிக்குக் குறை நயப்புரைப்புழி அறநெறி வற்புறுத்துவாளாய் அறநூற் பொருளைச் சுட்டிக் காட்டுதல் காண்மின். இது

# viii

கபிலர் பாடியதெனின் அதன் சிறப்பு மிக்க தன்றோ?
திருக்குறளின் நட்பாராய்தல் அதிகாரத்துள்ள
இப்பகுதியில்

"நாடாது நட்டலிற் கேடில்லை நட்டபின்
வீடில்லை நட்பாள் பவர்க்கு",

என்ற குறள் எடுத்தாளப்பட்டமை தேர்மின்.

இனி, புறநானூற்றுப் பாட்டொரு சில
காட்டுகின்றேன்.

" ஆன்முலை யறுத்த வறனி லோர்க்கு
மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்
பார்ப்பார்த் தப்பிய கொடுமை யோர்க்கும்
வழுவாய் மருங்கிற் கழுவாயு முளவென
நிலம்புடை பெயர்வ தாயினு மொருவன்
செய்தி கொன்றோர்க் குய்தி யில்லென
வறம் பாடிற்றே." —புறம் ௩௪.

இதன்கண் திருக்குறள் - அறத்துப்பால் - செய்ந்நன்றி யறிதல் அதிகாரத்துள்ள

" எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு"

என்ற பாடலைச் சுட்டியதன்றி அந்நூல் 'அறநூல்' என்றும், அது வடநூற்கண் உரைவகையான் அறமுரைத்தல் அமைந்தமை போலாது தமிழ்ப் பாடலான் அமைந்த தென்றும் தெளிதருமாறு 'அறம் பாடிற்றே' என்று விளங்கக் கூறித் திருக்குறளைப் போற்றுதல் காண்மின்! அகனும் புறனும் பற்றித் தனித் தனிச் செய்யுளே பாடும் வழக்காறும் இயனூல் யாத்தல் வழக்காறுமே நிகழ்ந்த அக் காலத்து அறப்பெரு நூலாகத் தமிழ் மொழிக்கண் திருக்குறள் விளக்கம் பெற்றமை பற்றி யன்றே ஆலத்தூர் கிழார் தம் பெருமுறை யறநூலை அங்ஙனம் பாராட்டிக் கூறுவாராயினர்.

மேலும் புறநானூறு—௩௫-ம் பாட்டிலுள்ள

" அறம்புரிந் தன்ன செங்கோ னாட்டத்து
முறைவேண்டு பொழுதிற் பதனெளி யோரீண்
டுறைவேண்டு பொழுதிற் பெயல் பெற்றோரே"

என்ற பகுதி திருக்குறள் - செங்கோன்மை யதிகாரத்துள்ள

"வானோக்கி வாழு முலகெல்லா மன்னவன்
கோனோக்கி வாழுங் குடி"

முதலிய குறட்பாக்களின் கருத்தமைதி யுடைய தன்றோ?
கபிலர் மலையமான் திருமுடிக்காரியை நோக்கி

## ix

"ஒருதிசை யொருவனை யுள்ளி நாற்றிசைப்
பலரும் வருவர் பரிசின் மாக்கள் :
வரிசை யறிதலோ வரிதே : பெரிது
மீத லெளிதே : மாவண் டோன்ற
லதுநற் கறிந்தனை யாயிற்
பொதுநோக் கொழிமதி புலவர் மாட்டே"—புறம். கஉக.

என்ற பொருண்மொழி ஊக்கத்து திருக்குறளாசிரியர் அரசன் தன் சுற்றந் தழுவலிற் பெரு நோக்குடையா னாதல் வேண்டுமென வற்புறுத்துரைத்த

"பொதுநோக்கான் வேந்தன் வரிசையா
னதுநோக்கி வாழ்வார் பலர்"

நோக்கி

(528)

என்ற பொய்யாப் பொன் மொழியைப் போற்றி யுரைத்த தன்றோ?

"ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்
சான்றோ னெனக்கேட்ட தாய்"

என்ற குறளின் சொல்லும் கருத்தும் "நரம்பெழுந் துலறிய" என்று தொடங்கும் புறப்பாட்டின் (278) இறுதி யடியிற் போற்றி யுரைத்த மையும் நோக்குக. கலித்தொகையிலும் பல குறட்பாக்கள் ஆட்சி யுண்டு: காண்க.

பிள்ளையவர்கள் கி. பி. முதலாவது நூற்றாண்டின என்று அறுதியிட்டுரைத்த சங்கச் செய்யுட்கள் மேற்காட்டிய வாற்றால் திருக்குறளின் சொல்லும் பொருளுந் தோன்றி விளங்க எடுத்தாண் டமையால் திருக்குறளும் திருவள்ளுவனாரும் அக்காலத்துத் திகழ்ந் தமை புலப்பா டன்றோ? அவர்கள் இதனை உள்ளங் கொள்ளா தயர்ந்து திருவள்ளுவர் கி. பி. 450 ஆண்டிற்குப் பின்னர் வாழ்ந்தன ரென்பது வியப்பும் நகைப்புந் தருகின்றது. இனி வள்ளுவனாரைச் சைன முனிவராகிய ஏலாசாரியா ரென்பாரும் சைனாசாரிய பட்டா வளிப் படி அவரைக் கிறிஸ்து பிறந்து வாழ்ந்த முதல் நூற்றாண்டின ரென்றன்றோ நிறுவுகின்றனர்? இதனையும் பிள்ளையவர்கள் காற்றிற் பறக்க விட்டுப் பரிமேலழகர் காட்டிய சொல் மரபின் நெறிமே லழக ராய்த் தனிச்சொல் லாராய்ச்சி செய்து மெய்ம்மை காணா தொழிந் தார்கள்.

பரிப்பெருமாள் 'ஒருவந்தம்' என்பதற்கு ஈரிடத்தும் வேறுபா டின்றி 'ஒருதலையாக' என்றே பொருள் கூறினர். பரிமேலழகர் அப்பொருளை ஓரிடத்துக் கொண்டு அச்சொல் வழக்கை யாய்ந்து காண்பாராகித் தமக்கு இயல்பா னமைந்த வடநூற் புலமைப் பற் றால் ஒருவந்தம் என்பது 'ஏகாந்தம்' என்ற வடசொற்றொடர் போன்ற தென்று மயங்கி யெண்ணித் தம் விசேட வுரையுள்

2

அதனைப் பெய்துவிட்டார். வடமொழியிற்றானும் ஏகாந்தம் என் பது தனித்த, அதிகமான என்ற பொருளதன்றி ஒருதலையான, நிலைபெற்ற என்ற பொருளில் வழக்குடையதன்று. தமக்கு முற் பட்ட காலிங்கர் 'பெருஞ் செல்வம்' என்று பொருளெழுதியதனை அறியாமையின் திரிவு பட எழுதினர் போலும். ஒருக்கால் ஏடெழுது வோர் பிழைபட எண்ணி 'ஏகாந்தம்' என்ற வடசொற்றொடரைப் பரிமேலழகர் விசேடவுரையிற் பிணைத்தனரோ தெரிகின்றிலேன். பரிமேலழகர் விசேடவுரை கொண்டு பிள்ளையவர்கள் 'ஒருவக்தம்' என்பது ஒரு என்ற தமிழ் எண்ணுத் திரிபெயரும் அக்தம் என்ற வடசொல்லும் கலப்புற்றுக் கலவைச் சொற்றொடராயின வென்று கூறி, வள்ளுவனார் 'ஒருதலை' என்ற பொருளில் அதனை வழங்கினர் என்றார்கள். வள்ளுவனார்க்கு அது கருத்தாயின் தாம் பிறண்டும் 'ஒருதலையா னின்னாது காமம்' 'ஒருதலையா வுட்கோட்ட மின்மை,' என்று வழங்கியவாறே, அச்செந்தமிழ்த் தொடர்மொழி 'ஒரு வக்தம்' என்ற கலவைச் சொற்றொடரினும் பொருட்டெளிவுடைத் தாதலின் அதனையே அவ்விரு குறளினும் வழங்கி யிருப்பானன்றே? அங்ஙனம் வழங்கு மிடத்து 'ஒருவக்தம்' என்ற சீர் போன்றே 'ஒரு தலையான்' என்பதும் செய்யுளோசை சிதையாமை நின்று அமையு மன்றே? இனி அதனை வழங்காது 'ஒருவக்தம்' என்ற தமிழ்த் தனிமொழியை வழங்கியது, காலிங்கர் கூறியவாறு அது 'பெருந் திரு' என்ற பொருட் பேறுடையதாதல் பற்றியே யாமென மன் குணர்தல் வேண்டும். அச்சொல் வள்ளுவனார் காலத்தே வழக்காற் றின் நீங்கத்துப் பின்னர் அருகியது போலும். தமிழாசிரியருட் பிற ரொவரும் பொருந்தப் புணர்க்காத இவ்விருமொழிக் கலவைச் சொற் றொடரை வள்ளுவனார் வழங்கினரென்று காட்டிய பிள்ளையவர்கள சொல்லாராய்ச்சி பெரிதும் வியப்புச் செய்யா நின்றது.

பெரும் பொருட்டிறங்களைத் தமிழ் மொழியாற் கூறித் தமி ழகத்து நன்மக்கட்குப் புலம் பெருகச் செய்யும் பெருந் தொண்டி லீடுபட்ட வள்ளற் பெருமானு ராகிய வள்ளுவனர் தமிழ் மொழி மாபு பிழைக்க நூல் யாத்தல் செய்யார். அவரியற்றிய ஆயிரத்து முந் நூற்று முப்பது குறட்பாக்களினும் ஓரறுபதின் மிக்க தனி வட சொற்க ளில்லை. அறநூற் பொருளும், அரசியற் பொருளும், அளவை நூற்பொருளும், ஆகமப் பொருளும், மருத்து நூற்பொரு ளும் பிறவும் செறியக் கூறிய அக்நூலின் நூற்று முப்பத்து மூன்று அதிகாரங்களில் ஒன்றிலேனும், தனி வடசொற்களாகிய தவம், தூது, அமைச்சு, மானம் என்பன வொழிய அவற்றுக்குரிய வட சொற் றொடர்ப்பெயர் ஒன்றேனும் உளதோ? இனி நூன் முழுதும் தேடிக் காண்கினும் 'ஆதி பகவன்' என்ற ஒரே வடசொற் றொட ரன்றிப் பிற வடசொற் றொடர்களைக் காண்கின்றிலம். 'தானந் தவ

பிரண்டுந் தங்கா' 'தவமுந் தவமுடையார்க் காகும்' என்பன தாமும் பிரி சொற்றொடர் நிலையாய்ச் செவ்வெண், எழுவாய்த் தொடர் நிலை முறையின் வேறுபட நிற்றலின் தொடர்பா டுறுவன வல்லவே! இவ்வொரு வடசொற்றொடர் தான் பிள்ளையவர்கள் காட்சியில் திருவள்ளுவர் வடசொற் றொடர் வழக்கில் தாராள மனப்பான்மை யுடையரெனக் கூறச் செய்தது போலும். புறநானூற்றுப் பாடல்களினும் அமரர், ஆவுதி, கணம், காகம், கவுரியர், பிண்டம், பூதம், மண்டிலம், யூபம், வேதம் முதலிய வடசொற்களும், 'அவிர் சடை முனிவர் (43)' 'இந்திரமிழ்தம் (182)' என வடசொற்றொடரும், ஒருதிசை, நாற்றிசை, குடதிசை எனக் கலவைச் சொற்றொடரும், பாசி, ஊசி என்ற பாகதங்களும், 'த்ரேதாக்நி' 'சதுர்வேதா' 'பாரலௌகிகை சுவரியம்' என்பவற்றின் மொழி பெயர்ப்பாகும் 'முத்தீ' 'நால்வேதம்' 'செல்லு முலகத்துச் செல்வம்' என்பனவும் வந்துள்ளனவே. அகநானூற்றினும் 'தென்றிசை மாதிரம் (281)' என்ற வட சொற்றொடரும் 'மணிப்ரவாளம்' என்ற வடசொற் றொடரின் மொழிப் பெயர்ப்பாகிய 'மணியிடை பவளம்' (304) 'மணிமண்டு பவளம்' (374) என்பனவும் வந்துள்ளன வன்றோ? நற்றிணையினும் மண்டிலம், சடை, தவசியர், கம்மியர், பூதம், தெய்வம், சதுக்கம், கணம், யாமம் என்ற வடசொற்க ளுள்ளன. குறிஞ்சிக் கலியில் 'வாரண வாசிப்பதம்' என்றும், பரிபாடலில் 'தவப்படிவம்' (15) [illegible] (10) என்றும் வடசொற்றொடர்க ளுள்ளன. இவற்றை முதல் நூற்றாண்டு வழக்கு எனப் பிள்ளையவர்கள் காணாமை என்னோ? வடசொற் றொடர் வழக்குச் சங்கநூல்களில் அருகியது போன்று இவர் நூலினும் அருகியதாயிற்று. ஆதிபகவன் என்பதனை மட்டும் ஐந்தா நூற்றாண்டு வழக்கென்பது என்னை? ஆதிபகலன் எனப் பாடமும் உளது என்பர் சிலர். இவ் வடசொற்றொடர் வழக்குச் சங்க நாளில் இல்லை யாதலின் வள்ளுவர் அந்நாளில் வாழ வில்லை என்பது பெறப்படுகிறது என்று பிள்ளையவர்கள் காட்டும் எதிர்மறை வழியளவையினும், இவ் வழக்கு அந்நாளில் உண்டாதலின் அவர் அக்காலத்து வாழ்ந்தார் என எளியேன் நிறுவும் உடம்பாட்டு வழியளவை வலிது ஆதலைத் தருக்க நெறி யறியும் புலவர்கள் காணல் வேண்டும். வடசொற்றொடர்களைப் பெரிதும் வழங்கிய சைவ வைணவப் பெரியார்கள்

காலத்தை யடுத்துச் சற்றுமுன் கி. பி. 5-வது நூற்றாண்டில் வள்ளு வனர் வாழ்ந்தார் என்பதற்கு இக்க 'ஒருவந்த'ச் சொல்லாராய்ச் சியை ஏதுவாகக் கொள்ளாது வள்ளுவர், நாயனாரென்ற வடசொற் பெயரால் வழங்கப்படுகிறார்: அறுபான் மும்மைச் சைவ நாயனார் தன் காலத்தை யடுத்தே வாழ்ந்தன ரென்பதற்கு இப்பெயர் வழக் குச் சான்றாகு மென்று கூறி விடலாமே! இதுவும் சொல்லாராய்ச்சி யன்றோ?

## xii

இனி, காலிங்க ருரையால் அவர் பெருநூற் பயிற்சியும் ஓரள வால் நாம் தெளிந்து கொள்ள இடனுண்டு. ௯௯-வது அதிகாரம் ஆகிய குறிப்பறிதலில் 'பகைமையுங் கேண்மையுங் கண்ணுரைக்கும்' என்ற பகுதிக்கு உரை கூறி விளக்கு முகத்தால் "மது மறைந்துண் டோர் மகிழ்ச்சி கண்ணினானே கண்டு கொள்வர் என்பது" என்று விளக்கவுரை கூறினர். அவர் மேற்கோளாகக் காட்டிய 'மதுமறைந் துண்டோர் மகிழ்ச்சி' என்னும் தொடர், தொல்காப்பியம் பொரு ளதிகாரம் களவியல் இளம்பூரணருரை-சூத்திரம்—௱௬௨-வது 'நாற்ற மும் தோற்றமும்' என்பதனுட் காட்டிய மேற்கோள் செய்யுளாகிய 'எனல் காவ லிவளு மல்லள்' என்பதனுள் பயின்றுள்ள தென்பதனை அறிந்து கொள்க. நச்சினார்க்கினியரும் இச்செய்யுளை எடுத்துக் காட் டினர். ௯௪-வது வரைவின் மகளிர் என்ற அதிகாரத்தின் வரும் அ-வது குறள் "இருமனப் பெண்டிரும்" என்பதில் இவ்வுரைகாரர்

"இம்மையே தவஞ்செ யார்கை யிருநிதி யகற்றல் வேண்டி.
கம்மையுங் கள்ளுஞ் சூதும் நான்முகன் படைத்து விட்டான்"

என்றொரு செய்யுட் பகுதியை மேற்கோளாகக் காட்டியுள்ளனர். காமத்துப்பாலில் ௬அ-வது நிறையழிதல் என்ற அதிகாரத்தில் அ-வது 'நாணென வொன்றோ' என்ற குறளுரையில்

" பணிந்து மெழுந்தும் பரிவுற மகிழ்ந்து
நோக்கி யூடியு நுணுக நகைத்து
நீக்கிய நாமெனாடு நிறபேன் "

என்றோ சரிய செய்யுட் பகுதியை மேற்கோள் காட்டி நின்றார். இவ்விரு செய்யுட் பகுதியும் செய்யுணடையாலும் பொருளாலும் அரும்பெரு நூற்பகுதியாதல் வேண்டுமென எளியேன் எண்ணி முறநும் பெறச் சூழ்ந்தே னாயினும் யான் பயின்ற நூல்களில் இஃது கண்ணெதிர்ப் படவில்லை அரும் பெருநூற் பயிற்சியுடைய பெருந்தகைப் புலவர்கள் தாம் கண்ட இடஞ் சுட்டி யறிவுறுத்து வார்களாயின் அவர்கள் உதவுவதை நன்றியறிவுடன் ஏற்றுப் போற்றி மறு பதிப்பில் வெளியிடுவேன்.

மற்றும் 37-வது அதிகாரம் அரண் என்பதிற் போந்த 4-வது குறள்—" முனை முகத்து " என்பதனுள் பொறி வகைகளைக் கட்டுரைச் சுவைபட எழுதிய பகுதியும் இவர் பெருநூற் பயிற்சியைப் புலப்படுத்தும் திருக்குறளுரைகாரருள் பழைய பெரியாரென நாம் மதிக்கத் தக்க இவர் உரையேட்டில் ஒரு சில புதுமைகள் கண்டது முண்டு. தென்றமிழ் நாட்டு முதுமக்கள் பலர் பேச்சிடைப் பெரிதும் மற்று, மறித்து முதலிய இடைச்சொற்களை விரவிப் பேசுவது போன்றே இவர் உரையில் 'மற்று' என்ற இடைச்சொல்லைப் பெரிதும் விரவியே பொழிப்புக் கூறியுள்ளார். இவருரை நடையில் வட

சொற் கலப்பு காண்பது அரிதாகவே யுள்ளது. ஏட்டெழுத்தின கண் பல இடங்களில் சொற்றொடர்களின் இடை யிடையே இடம் விட் டெழுதி யிருந்தமை நோக்க மிகப் பழமையான ஓரேடு பார்த்தெழுதி யோர் அதிற் செல்லரிப்பு, முரிவு, தேய்வு முதலிய பழுது கண்டு அதற்கென இடம் விட்டெழுதியவை என்று இவ்வேடு எண்ணச் செய்தது. ஏட்டில் யாண்டும் ஆய்தவெழுத்து இக்காலத்துள்ளது போல எழுதப்பெறாது ஃ என்ற படியாகவே எழுதி யிருந்தது கண்டேன். இழக்கம், நணுமை, கேளிமை முதலிய அருகிய வழக்கா றுள்ள சொற்களும் கண்டேன்.

குறைப் பகுதியாகிய அறத்துப்பாலின் இறுதியில் இவ்வுரை காரர் அப்பாலின் பொருளைத் தொகுத்துரைக்குங்கால் 'புயல் பருவத்து எய்துவதாகிய நீத்தல்' 'இல்லறத்தியல்பு அஞ்சு வர்க்கம்' என்று வழங்கு முறையும் 'வள்ளுவக் கடவுள்' எனப் போற்றும் முறையும் நோக்க இவர் வள்ளுவனாரைச் சைனரெனக் கருதின ரென்று தோன்றுகின்றது. நல்லறிஞர் நாடி யாய்வாராக. காமத்துப் பாலினிறுயிற் கண்ட காலக் குறிப்பினாலே இவ்வுரையேடு உருரு- ஆண்டுகட்கு முன்பு பிறிதோரேடு பார்த்தெழுதியது என்று தெரி கின்றது.

. . .

இனி, பரிப்பெருமாள் என்ற பழைய உரைகாரர் குற்றங் கடிதல் என்ற அதிகாரத்தில் வெகுளியாற் கெட்டமைக்குச் சௌமேதயனையும், நுகர்ச்சியாற் கெட்டமைக்குச் சச்சந்தனையும், மானத்தாற் கெட்டமைக்குத் துரியோதனனையும், மகிழ்ச்சியாற் கெட்டமைக்கு வாதாவியையும், பொருள் விருப்பாற் கெட்டமைக் குப் புரூரவாவையும், காதலடக்க மின்மையாற் கெட்டமைக்கு வத்த ராயனையும், மதத்தாற் கெட்டமைக்குக் கார்த்தவீரியார்ச்சுனனையும் எடுத்துக் காட்டிய தன்றித் தெரிந்து தெளிதல் அதிகாரத்தில் 'வியாசர் மதம்', 'மகேச்சுரர் மதம்', 'நாரதர் மதம்' 'பராசரர் மதம்' 'கௌடில்யன் மதம்' 'துரோணாசாரியன் மதம்' 'உத்த வாசாரியன் மதம்' 'சுக்கிரன் மதம்' என்று காட்டிய ஒப்புமை யுரை கள் இவர் வடநூற் பயிற்சி மிகுதியுடையாரென்று தெளியக் காட்டு கின்றன. காமத்துப்பாலின் உரையில் வடநூற் கோட்பாடுகளைப் பிணைத்ததுங் காண்க.

> "தெள்ளி மொழியியலைத் தேர்ந்துரைத்துத் தேமொழியா
> ரொள்ளிய காமநூ லோர்ந்துரைத்து—வள்ளுவனார்
> பொய்யற்ற முப்பாற் பொருளுரைத்தான்
> தெய்வப் பரிப்பெருமாள் தேர்ந்து"

தென்செழுவைத்

என்று காமத்துப்பா லிறுதியிற் காட்டிய இவருரைப் பாட்டால், இவர் இலக்கணநூல் ஒன்றும் காமநூல் ஒன்றும்

பாயிரப்

இயற்றி

ளர் என்பது தெரிகின்றது. அவை இப்பொழுது கிடைப்பன வல்ல.

'விருந்து புறத்ததாத் தானுண்ணல்' 'பலகுடை நீழலும்' என்ற குறளுரைகள் போற்றத் தக்கவா றுள்ளன ஆதலின் இவர் உரைச் சிறப்பும் காண்க. இவர் புறநானூற்று '252'-வது செய்யுளுள் வரும் 'சொல்வலை வேட்டுவன்' என்ற தொடர் மொழியையும், கலித்தொகையில் வரும் 'நெத்தம்' என்பதனையும், சீவக சிந்தாமணியில் வரும் 'அடியொட்டி' என்பதனையும் உரையிற் காட்டிச் செல்லுதலின் சங்க நூல்களிலும் பழந்தொடர்நிலைச் செய்யுட்களிலும் பயிற்சி யுடையார் என்று காண்க. இங்குக் காட்டிய எல்லாம் பரிமேலழகருரையின் வேறுபட்ட இயல்புகளாம். பிறவும் நல்லறிஞர் நாடி யாய்ந்து பயனை உலகிற்கு நல்குவார்களாக.

நம் தமிழகத்துச் செந்தமிழ்ப் பைம்பயிர் வளர்த்து அறப்பைங் கூழ் விளைத்து இன்பந் துய்த்தற் பயன் எய்துவிக்க நமது கல்வி யமைச்சர் தமிழ் மாணவர் உள்ளமாம் கழனியில் திருக்குறள் பயிற்சி வித்திட்டுள்ள இந் நல்லூழி நாளில் இந்நூலுரைகள் விளைவுத் துணையாய்த் எருப்போ லியைந்துள்ளன என்பது எளியேன் உட்கோள். வித்தும் விளைவும் விளைப்போரும் வாழி.

இது பதிப்பெய்தக் கட்டளை செய்த எம் தேவஸ்தானக் கமிட்டியாருக்கும், முன்னுரை யளித்துதவிய ஷை கமிட்டிக் கல்விச் செயன்மை மந்திரத் துணைவர்-திருவாளர் S. சச்சிதானந்தம் பிள்ளை B.A., L.T. அவர்கட்கும், உதவிய எம் கழகத் தலைவர் ஸ்ரீ. P. V. ராமாநுஜஸ்வாமி அய்யங்கார், M.A. அவர்கட்கும், தேவஸ்தான அச்சுக்கூடத் தலைவர் ஸ்ரீ. T. R. நரசிம்மாசாரியார் B.A. அவர்களுக்கும் என் நன்றியறிவை யுரைத்திடுகின்றேன். அறிவு ஆற்றல்களில் குறைபாடுடைய எளியேன் இயன்றுங்கு இயற்றிய தமிழ்த் தாயின் திருப்பணியில் குறைகள் இருப்பின் பொறுத்தருளுமாறு தமிழ்ச் செல்வப் பெரியார்களைப் பணிந்து வேண்டுகிறேன்.

> குற்றங் களைந்து குறைபெய்து வாசித்தல்
> கற்றறிந்த மாந்தர் கடன்.

இங்ஙனம்

**தி. பொ. பழனியப்ப பிள்ளை** தலைமைத்
தமிழ் ஆராய்ச்சியாளன்.

---

குறிப்பு:—படிக்கத் தொடங்குமுன் நூலிறுதியிற் காட்டிய பிழைகளைத் திருத்திக் கொள்ளுக.

---

# திருக்குறள் - அறத்துப்பால்

## அறத்துப்பால் அட்டவணை.



அதிகாரம்.

...........

..................................................................................

..................................................................................

..................................................................................

6. நகையு முவகையுங் கொல்லுஞ் சினத்திற்
பகையு முளவோ பிற.

என்பது.—நகை யாகிய முக மலர்ச்சியும் உவகை யாகிய மன மகிழ்ச்சியும் இவை இரண்டினையும் கொன்று விடுவது ஆகிய சினத்தைப் போல வேறு சில (பகையும் உள)வோ? எனவே இதனைப் போல இவ்வுலகத்துப் பெருங் கேடு செய்ய வல்லனவாய் இருப்பன சில பகை யாவும் இல என்று பொருள் ஆயிற்று என்றவாறு. (6)

7. மறத்தல் வெகுளியை யார்மாட்டுந் தீய
பிறத்த லதனான் வரும்.

எ - து.—யாவர் மாட்டும் ஒருவன் வெகுளியை மறத்தலே காரியம் ஆவது : என்னை எனின் தனக்கு எல்லாத் தீயன ஆகியதும் தோன்றுதல் மற்று அவ்வெகுளியானே வரும் ஆதலால் எ - று. (7)

8. சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு
நிலத்தெறிந்தான் கைபிழையா தற்று.

எ - து.— இம்மை மறுமை ஆகிய இரண்டினையும் கெடுப்பது ஆகிய சினத்தைப் பொருளாகவே கைக்கொண்டவனது கேடானது சிற்றுப் தப்பாது என்பது எங்ஙனம் எனில் ஒருவன் தனக்கு நிலத்தை இலக்கு ஆகக் குறித்துக் கொண்டு மற்று அந்நிலத்தின்

கண் கண் புதைத்து எறியின் (உய்த்த) கை எ - று.

பிழையாது போலும் (8)

9. சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி யின
மேமப் புணையைச் சுடும். [மென்னு

எ - து.—உலகத்துச் சான்றோரால் கொடியவற்றுள் மிகவும் கொடியது இது என்று சொல்லப்பட்ட அடைந்தாரைக் கொல்லி ஆகிய கொடுந்தீயானது மற்று இத்துறவோர்க்குத் துணை ஆகிய அருளும் பொறையும் ஆசாரமும் முதலிய சேமம் ஆகிய தெப்பத்தைச் சுட்டு விடும் எ - று. (9)

10. உள்ளிய தெல்லா முடனெய்து முள்ளத்தா
னுள்ளான் வெகுளி யெனின்.

எ - து.—இவ்வெகுளியைத் தனது நெஞ்சத்தானும் கருதாது எஞ்ஞான்றும் ஒடுங்கிய உள்ளத்தான் ஆம் ஆயின் மற்று அவன் கருதிய எல்லாம் ஒக்க எய்துவன்: எனவே ஈண்டுத் தன் துணை ஆகக் கீழ்ச் சொல்லிய அருள் முதலியவற்றுஉம் குறைபாடின்(றிய) வின்(ப)ம் எய்துவன் என்பது பொருள் எ - று. (10)

இனி அத்துறவோர்க்குச் சினம் இன்மையால் சிறக்கும் செய்தி யாவது ஆற்றலால் பிறர்க்கு இன்னாதனவற்றைச் செய்யாது தம் போல நோக்கித் தவம் ஆற்றுதல் அன்றே: அதனால் அதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலே அதிகாரம்.

## 32. இன்னா செய்யாமை.

1. இன்னா வெனத்தா னுணர்ந்தவை
வேண்டும் பிறன்கட் செயல்.

துன்னாமை

எ - து.—ஒருவன் தனக்கு இன்னாதன எனத் தான் அறிந்தன வற்றைப் பிறர் மாட்டுச் செய்தலை அடையாமை வேண்டும் எ - று.

துன்னாமை என்பது அடையாமை எ - று. (1)

2. பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா
பிற்பகற் றாமே வரும்.

எ - து.—ஒருவர் பிறர்க்கு இன்னாதனவற்றை முற்பகற் காலம் தாம் செய்வர் ஆயின், தமக்கு இன்னாதனவும், அச்செய்த அக்கரு மத்தின் பயன் தானே பிற்காலத்துத் தானே வந்து எய்தும்: அதனை ஒருவர்க்கு............ரிது எ - று.

முற்பகல் பிற்பகல் என்பது முற்காலம் பிற்காலம் என்பது. (2)

## 32. இன்னா செய்யாமை 3

3. கறுத்தின்னா செய்தவர்க் கண்ணு
செய்யாமை மாசற்றார் கோள்.

மறுத்தின்னா

எ - து.—ஒருவர் தம் மாட்டுச் சினந்து இன்னாதனவற்றைச் செய்தவர் மாட்டும், தாம் பெயர்த்து அவர்க்கு இன்னாதன செய் யாமை உள்ளழுக்கு அற்ற துறவோரது கோட்பாடு எ - று.

கறுத்து என்பது சினந்து எ - று.

(3)

4. தன்னுயிர்க் கின்னாமை தானறிவா
மன்னுயிர்க் கின்னா செயல்.

னென்கொலோ

எ - து.—தனது உயிர்க்குச் சில இன்னாதனவற்றைத் தான் அறிந்து ஒழுகுவான் இனி மற்று உலகத்துப் பிறந்து இறந்து இங் ஙனம் வருகின்ற உயிர்கட்குத் தான் இன்னாதன செய்யும் செயல் என்னை கொல்லோ? எ - று.

(4)

5. நோயெல்லா நோய்செய்தார் மேலவா
நோயின்மை வேண்டு மவர்.

நோய்
[செய்யார்

எ - து.—.......................ஆதலால் பிறர்க்கு இனிது.........
........ ஒரு நோய் செய்வது இலர்: யார் எனின் தமக்குத் துன்பத் தின்......................

(5)

6. எனைத்தானு மெஞ்ஞான்றும் யார்க்கு

மனத்தா னு
மாணுசெய் யாமை தலை.

எ - து.—ஒருவன் உலகத்து யாவர்க்கும் எஞ்ஞான்றும் எத்துணையும் சிறிது ஆயினும் இன்னாதனவற்றைத் தன் மனத்தினானும் செய்யாமை எனவே வாக்கினால் உரைத்தல் செய்யாமையும் காயத்தால் செய்தல் செய்யாமையுமே தலைமைப்பாடு ஆவது எ - று.

மனத்தானும் என்பாரும் உளர். (6)

7. செய்யாமைச் செற்றார்க்கு மின்னாத
செய்தபி
னுய்யா விழுமந் தரும்.

எ - து.—தான் பிறர்க்கு ஓர் இன்னாமை முன்னம் செய்யாதிருக்கத் தன்னை வந்து செறுத்தவர்க்கும் தான் பெயர்த்து இன்னாதனவற்றைச் செய்தான் ஆயின், தனக்கு உய்ந்து கரை ஏறுதற்கு அரிது ஆகிய பெருந்துன்பத்தைத் தரும் எ - று. (7)

8. சிறப்பீனுஞ் செல்வம் பெறினும் பிறர்க்கின்னா
செய்யாமை மாசற்றார் கோள்.



எ - து.—மறுமைக்கு முத்தியையும் இம்மைக்குச் செல்வத்தையும் பெறினும் தன் நெஞ்ச.................குதுவ தாம் பிறர்க்குச் செய்யாது ஒழிதல் குற்றம் அற்ற உணர்வுடைத் துறவோரது நெஞ்சில் கோட்பாடு எ - று. (8)

9. இன்னாசெய் தாரை யொறுத்த லவர்நாண
நன்னயஞ் செய்து விடல்.

எ - து.—துறவோர்க்கு இன்னாதவற்றைச் செய்தாரை ஒறுத்தல் ஆவது யாதோ எனின் அவர்.................மையின் நிலைமை கண்டு மற்று அவர் தாமே நா.. .......... ...நாம் அவர்க்கு நல்ல ............ . ...விடல் எ - று.

நயம் என்பது ஒழுக்கம்.

(9)

10. அறிவினா னாகுவ துண்டோ பிறிதினோய்
தந்நோய்போற் போற்றாக் கடை.

எ - து.—துறவு நெறி ஒழுக்கம் உடைய தூய்ய அறிவினர் பிறிது உயிர் . . . . . . . தொரிடரையும தமதி .........தேர்ந்து குறித்துக் கொள்ளாத இடத்துத் தமது அறிவினால் ஆகுவது உண்டோ? எனவே அஃது இல்லை எ - று.

(10)

இனிப் பிறர்க்கு இன்னாங்கு செய்தலை அஞ்சுவார் கண்ணதே பிற உயிர்க்கு அழிவு செய்யாமையும்: ஆதலால் இதன் பின்னர் கொல்லாமை... ....... .. ...மேலை அதிகாரம்.

## 33. கொல்லாமை.

1. அறவினை யாதெனிற் கொல்லாமை
பிறவினை யெல்லாந் தரும்.

கோறல்

எ - து.—இருவினைப் பயனையும்
கச் சிறந்த பண்பு யாதோ எனின்

கொண்ட வையத்து அறவினைக்
யாதானும் ஒன்றினையும் கொல்

லாமை ஆதலால் ஒன்றினைக் கொல்லுதல்
ஆகிய எல்லாத் தீவினையும் தரும் எ - று.

ஆகின்ற இது பாவம் . 2.
(1)

கொல்லாமை மேற்கொண் டொழுகுவான் வாழ்
செல்லா துயிருண் ணுங் கூற்று. [நாண்மேற்

எ - து.—கொல்லாமை ஆகின்ற சிறந்த அறத்தினைத் தன் னிடத்து என்றும் கொண்டு இடைவிடாது நடாத்துகின்றான் எவன்? அவனது வாழ்நாள் மேல் தொடாது மற்று உயிர் உண்ணும் கூற் றனது எ - று. (2)

## 33. கொல்லாமை

3.

ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று.

எ - து.—அனைத்து அறங்களினும் தனக்கு இணையின......... தெ...........தானே ஆகச் சிறந்தது யாதோ எனின் கொல்லாமை ஆகிய அறம் ஒன்றுமே: அதனால் இக்கொல்லாமை மேற்கொண்டு ஒழுகுவா...........மொன்றுண்டு. அஃதாவது எஞ்ஞான்றும் பொய்யாமையைத் தப்பாமல் குறிக் கொண்டல் சாலத் தகைமை உடைத்து ஏ - று. (3)

4. பகுத்துண்டு பல்லுயி ரோம்புத னூலோர்
தொகுத்தவற்று ளெல்லாந் தலை.

எ - து.—தனக்கு உள்ளது கொண்டு பலர்க்கும் பகுத்து ஊட்டித் தானும் உண்டு அனைத்து உயிர்களையும் கொலை குறியாது பாது காத்த.......டவரு முனிவர் அனைவரும் சிறந்த நல்லறம் இவை இவை என்று முடித்தவற்றுள் எல்லாவற்றினுஞ் சாலத் தலைமைப் பாடு உடைத்து எ - று.

வேண்டாமையாற்.........கொலை ஆம் என்பது கருத்து. (4)

5.

உயிருடம்பு நீக்கியா ரென்ப செயிருடம்பிற்
செல்லாத்தீ வாழ்க்கை யவர்.

எ -

து.—பிற உயிரை அவ்வுடம்பினின்றும் அவற்றின்
பிரிக்கிட்டவர் என்று சொல்லுப சான்றோர் :

துயர்

யாவை

எனின் பின்பு தாம் உறும் துன்பம் ஆனது உடம்பினின்றும் ஒரு காலும் நீங்காத கொடு நாகத்துள் வாழும் வாழ்க்கையினை உடையார் எ - று.

செயிர் என்பது குற்றம்.

(5) 6. கொலைவினைய ராகிய மாக்கள்
புலைவினையர்
புன்மை தெரிவா ரகத்து.

எ - து.—கொலைத் தொழிலை உடையர் ஆகிய மாக்கள் கடையாயின புலையரினும இவரே புலைத்தொழிலை உடையர் என்று சொல்லப்படுவார் : நூல் முறையான நூல்களில் குற்றங்கள் ஆராயும் சான்றோரிடத்து எ - று. (6)

7. நிலையஞ்சி நீத்தாரு ளெல்லாங் கொலையஞ்சிக்
கொல்லாமை சூழ்வான் றலை.

எ - து.—வினைவழி எய்தி வருகின்ற பிறவித் தன்மையை அஞ்சிப் பிறவாமைக்குக் காரணம் ஆகிய தவநெறி இயற்றுவார் எல்லாரி

னும் மற்று இக்கொலைத் தொழிலை உயிர் அழிவு மற்று இதனால் என்ஞான்றும் கொல்லாமையைக் பவனே பெரிதும் தலைப்பாடு உடையோன் எ - று.

என்று அஞ்சி
குறிக் கொள்
(7)

.8. நல்லா றெனப்படுவ தியாதெனின் யாதொன்றுங்
கொல்லாமை சூழு நெறி.

எ - து.— உலகத்துத் தவநெறி பலவற்றினுஞ் சிறந்த நன்னெறி கள் என்று நூலால் எடுத்துச் சொல்லப்படுவ து யாதோ எனில் யாது ஒன்றினையும் கொல்லாமையைக் கருதும் நெறி ஒன்றுமே எ - று.

(8) 9. தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி
தின்னுயிர் நீக்கும் வினை.

எ - து.—பிறிது ஒன்று வந்து தனது உயிரை விடுவிப்பது ஆயி னும் தான் மற்று அதனுடைய பொருட்டு ஆக வெருண்டு இனிய உயிரின் காரணம் கொலை வினை அஞ்சும் பண்பு இன்று ஆகிய வினை யினைச் செய்யற்க எ - று. (9)

1 0. நன்றாகு மாக்கம் பெரிதெனினு மாந்தர்க்குக்
கொன்றாகு மாக்கங் கடை.

எ - து.— ஒன்றின் கொலையானது எக்காலமும் கேடு இன்றி இனிது ஆகும் ஆக்கத்தைப் பயக்கும் என்று அறநூல் வினும் துறவோர்க்கு ஒன்றினைக் கொன்று ஆகுவது ஓர் சாலக் கடை எ - று.

சொல்
ஆக்கம்
(10)

இனி மற்று இத்துறவோர்க்குக் கொல்லாமை என்னும் குறிக் கோள் உண்டாயிற்று : உடம்பும் உயிரும் உடன் வாழுநிலை அழிதல் அஞ்சி அன்றே : இதனால் அது வகைப்பட்ட உடம்பும் உயிரும்

காரணம் ஆகக் கொண்டு அனைத்து வினைவழி வினைவழிப் பிறந்து வரு

கின்ற நிலையாமையைத் தேர்தலும் அவாது நிலைக்கு உரித்து லான் மற்று இதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலே காரம்.

## 34. நிலையாமை.

1. நில்லாத வற்றை நிலையின
வென்றுணரும்
புல்லறி வாண்மை கடை.

எ - து.—இவ்வுலகத்தின்கண் உண்மை நோக்கில் யாவையும் நிலையாவாய் இருக்க அங்ஙனம் நில்லாதனவற்றை நிலையுடையன என்று கருதும் அறியாமையின் இயல்பு உணர்வோர்க்கு எஞ்ஞான்றும் சாலக் கடை எ - று. (1)



2. நாச்செற்று விக்குண்மேல் வாராமு
மேற்சென்று செய்யப் படும்.

னல்வினை

எ - து.— யாக்கையின்கண் உயிர் நிலையாமை இயல்பு ஆகலால் தமது நாவினைச் செற்றுக் கொண்டு விக்குளானது மேற்போந்து கழி வதன் முன்னே மேல் நல்வினைக் கண்ணே நெஞ்சு ஒருப்பட்டு மற்று அதனைக் காயத்தினுலும் மனத்தினுலும் வாக்கினுலும் மேலாகிய துறவறத்தின்கண் நின்று ஒழுகப்படும் எ - று. (2)

3. கூத்தாட், டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கு மதுவிளிந் தற்று.

எ - து.—கூத்து என்பது ஓர் காரணம் ஆக மக்கள் ஈட்டம் வந்து கூடினாற் போலச் சிறிது நல்வினை என்பது ஓர் காரணம் ஆகப் பொருள் ஈட்டம் வந்து உளது ஆய் மற்றும் அக்கூத்து ஒழிவின் பின்னரே மக்கள் கூட்டம் பிரிந்தாற் போலச் செய்த............பின் னரே மற்று அப்பொருள் அழிந்து ஒழிதலும் அத்தன்மைத்து எ-று.

விளித ல் என்பது ஒழிதல். குழாம் என்ப து கூட்டம். (3)

4.

அற்கா வியல்பிற்றுச் செல்வ மதுபெற்று
லற்குப வாங்கே செயல்.

எ - து.—உலகத்து யாவரும் மதித்த செல்வம் ஆனது நிலை யாகத் தங்காத இயல்பை உடைத்து. மறறு அச்செல்வத்தைத் தம் கைத்து உளது ஆகப் பெற்ருல் அதனுல் நிலைபேறு உடைய ஆகிய மறுமைக் காரியங்களையும் மற்று அப்பொருள் பெற்றவர் அப் பொழுதே செய்க எ - று.

அற்கா இயல்பிற்று என்றது நிலையாத இயல்பிற்று என்பது. அற்குப என்பது நிலை பெறுவன என்பது. (4)

5.

நாளென வொன்றுபோற் காட்டி யுயிரீரும்
வாள துணர்வார்ப் பெறின்.

எ - து.—உலகத்தோர்க்கு நாள் என்று கொண்டு வேறே ஒன்று உளது போல் ஒரு நெறி காட்டிச் செல்கின்றது யாதோ எனில், மற்று அது மரத்தினது உருபு வேறுபட்டுக் கழியுமாறு அதனை ஈர்ந்து செல்லும் ஈர்வாள் போல மற்று ஈண்டும் உடம்பொடு நடைபெற்று இயல்கின்ற உயிரினையும் அந்த நிலை வேறுபட்டுக் கழியு மாறு அதனை ஈர்ந்து செல்லும் ஈர்வாள் ஆம்: எவ்விடத்து எனின் இதன் உண்மைப் பாட்டினை உற்று உணர்வாரைப் பெற்ற இடத்து எ - று. (5)



6. புக்கி லமைந்தின்று கொல்லோ
வுடம்பினுட்

டுச்சி லிருந்த வுயிர்க்கு.

எ - து.—உடம்புகள் தோறும் குடியிருந்து வருகின்ற உயிர்க்கு மற்று இன்னும் இங்ஙனம் புக்குப் புக்கு ஒழிகின்ற யாக்கையானது நிலை பெறுது ஐயோ தான்! எ - று.

இதனுல் என் சொல்லியவாறோ எனில் உலகத்து அளவு இறந்த காலம் எல்லாம் அளவு இறந்த யாக்கைகள் தோறும் பிறந்தும் இறந்தும் உழன்று திரிதற்குக் காரணம் ஆகிய பேதைமை நீங்கும் உணர்வு பெறுதற்கு உறுதவம் இயற்றும் ஒருப்பாடே இனித் தங்குவது என்று பொருள் ஆயிற்று எ - று.

புக்கில் என்பது புக்குப் போதுகின்ற இல்லம் என்றது. துச்சி லிருந்து என்பது குடியிருந்து என்றது. (6)

7. குடம்பைத் தனித்தொழியப்
யுடம்போ டுயிரிடை நட்பு.

புட்பறந் தற்றே

எ - து.—இவ்வுலகத்துக் குருவி முதலிய பறவையானது தான் வாழும் கூடு தன்னை யின்றித் தனித்து ஆங்கு ஒழியப் பறந்து போகிய அத்தன்மைத்தே: மற்று யாதோ எனின் உடம்போடு உயிரின்கண் உளது ஆகிய உறவுபாடு எ - று.

குடம்பை என்றது புள் இயற்றும் கூடு என்றது. (7) 8. உறங்குவது
போலுஞ் சாக்கா டுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு.

எ - து.—வாழும் யாக்கையில் காணங்களின் ஒடுக்கம் போலும் மற்று அவ்வியாக்கையது இறந்து பாடும்: இனி இதன் கொள்கை உள காணங்கள் புலப்பட்டு இமைத்து விழித்தால் போலும் பிறப்பும் எ - று. (8)

9. ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப
கோடியு மல்ல பல.

எ - து.— இமைப்பொழுது அளவில் சாதலும் பிறத்தலும் உயிர்கள் நிலையாமைக்கு இயல்பு எனினும் இவற்றின் இடைப்படு காலம் பெரிது ஆம் எனில் மற்று அது தானும் உடம்பொடு உயிர் வாழும் காலம் ஒரு பொழுதும் ஒரு யாத்திரமும் துணிதல் அறியார்: மற்று இதன் நிலைமை இவ்வாறு ஆயினும் அளவு இறந்த காலம் எல்லாம் இருந்து வாழ்தற்குச் செய்து கொள்ளக் கருதுவன ஒரு கோடியும் அல்ல: பின்னும் பல: எனவே இக்கருத்துக் கொண்டு வாழ்தல் அரிது எ - று. (6)

## 35. துறவு 9

10. நெருந லுளனொருவ னின்றில்லை
பெருமை யுடைத்திவ் வுலகு.

யென்னும்

எ - து.—ஒருவன் நேற்று இருந்தவன் இன்று இல்லை என்றும் இன்று இருந்தவன் இன்று இல்லை என்றும் உரைக்கப்பட்ட நிலையாமையின் பெருமை உடைத்து இவ்வுலகம்: ஆதலால் மற்று இக்காலம் இறப்பதன் முன்னர்ப் பிறப்பு அறுத்தற்கு எய்துவது ஆகிய துறவறம் இயற்றுக என்பது கருத்து ஆயிற்று (10)

மற்று இவ்வுலகத்து உடலும் உயிரும் பொருளும் பிறவும் நிலையாமை தெரிந்த பெரியோர் இங்ஙனம் நின்ற பிறவியை அஞ்சித் துறவு...... ......ன்பக்கருதி .. ..... ...மற்று அதனால் இதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 35. துறவு.

1. யாதனின் யாதனி னீங்கியா னோத
லதனி னதனி னிலன்.

எ - து.—உலகத்து மக்கள் பண்பு உடையான் ஒருவன் இருவினையுள்ளும் தீவினை நீங்கி நூல் நெறி மரபு ஆகிய நல்வினை இயற்றும் அன்றே: மற்று அவை தம்முள்ளும் அரசு, பொருள், மக்கள், அமருலகு என்னும் சிறுசுவை விளைப்பன ஆகிய வினைகள் யாது ஒன்றினின்றும் தொடர்பு நீங்கித் துறவின் கண்ணே சென்றால் மற்று அவன் அந்த அந்தப் பயனைப் பற்றித் துயர் உறுதல் அதனின் அதனின் இலன்: எனவே அந்த அந்தப் பயன் விளைத்தற்குக் காரணம் ஆகிய அந்த அந்த வினைகளின் முயற்சி யுடையன் ஆதல் இல்லை யாதலால் அவன் துறவின்கண் முயல்வான் ஆம் என்று பொருள் ஆயிற்று எ - று. (1)

2. வேண்டி னுண் டாகத் துறக்க துறந்தபி
னீண்டியற் பால பல.

எ - து.—முதல் சொன்ன நிலையாமையைக் குறிக் கொண்டு பிற விக்கு வித்து ஆகிய வினையும் பயனும் என்பனவற்றை நமக்கு இயன்ற விடுத்தலை விரும்புவீராயின் அதனையும் முன் கோலி உண்மை யாகத் துறக்க: இங்ஙனம் துறந்தகற்பின் இவ்விடத்து மற்று அத் துறவு அற முயற்சியான் ஈண்டு ஆகற்பாலன பல எ - று. (2)

3. பற்றி விடாஅ விடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு.



எ - து.—மற்று ஆகிய மனை, மக்கள், செல்வம் முதலிய பல பற்றினையும் தமது உள்ளமானது தோய்ந்து கிடக்கின்ற காதலைக் கைக்கொண்டு விடாதிருக்கின்ற அறிவிலோர்க்கு எஞ்ஞான்றும் தம் மைச் செறியப் பற்றிக் கொண்டு விட்டு நீங்கா(திமாவை?) என்ற பிறவி முதலாகிய துயரங்கள் எ - று. (3)

4. மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க
லுற்றார்க் குடம்பு மிகை.

எ - து.—மற்று இப்பிறவி என்னும் துயரினை அறுத்தலை முயன் றன்ளோர்க்குக் கீழ்ச் சொன்னவை அனைத்தினும் உள்ள தொடர்ச் சியை, இனி அது அன்றி
கொல்லோ? எனவே இது

வேறும் ஒரு தொடர்ச்சிப்பாடு யாது
அன்றி மற்று யாதும் இல்லை: அஃது
யாதோ எனின் தமது உடம்பும் சிவர்க்கு மிகை எ -
று. (4) 5. அடல்வேண்டு மைந்தின்
புலத்தை விடல்வேண்டும்
வேண்டிய வெல்லா மொருங்கு.

எ - து.—இனி இதன் உட்கருவி ஆகிய ஐம்புலன்களையும் துறவு நெறிக்குப் புறவழி ஆகிய ஐம்பொறிகளின் நுகர்ச்சியைப் பாவாமல் தமது உள்ளத்தால் செறுத்தல் வேண்டும்: மற்று அங்ஙனம் செறுத்த பின் அவ்வுள்ளம் தானும் உள் நின்று விரும்புவன ஆகிய வேட்கைகள் எல்லா.ம் ஒரு தன்மைப் பட விடுதல் வேண்டும்: அவ்வுள்ளமானது தானும் ஒரு வழிப்பட்டு நிற்க வேண்டும்

எனவே
என்பது
பொருள் ஆயிற்று எ - று.
(5)

6. யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும்.

எ - து.—இங்குச் சொன்ன உடலும் புலன்களும் உள்ளமும் ஆகிய ஒரு தொகைப் பாட்டினை யான் என்று மயக்கும் மயக்கமும் இனி மற்று இதனையும் கீழ்ச்சொன்ன பனை, மக்கள், செல்வம் முதலியவற்றையும் எனது என்று மயக்கும் மயக்கமும் என இவ்விரண்டு

மயக்கத்தையும்

வானோர் ஆகிய

தேர்ந்து உணர்ந்து செலவு அற விடுக்கும் அவனே கடவுளர்க்கு எல்லாம் மேற்பட்ட முழுப் பேரின்பம் ஆகிய முத்தியைப் பெறுவன் எ - று. (6)

7. இயல்பாகு நோன்பிற்கொன் றின்மை யுடைமை

மயலாகு மற்றும் பெயர்த்து.

எ - து.—உலகத்துத் துறப்போர் இங்ஙனம் முழுதும் துறத்

தல் கடன் ஆதலால் மற்று இத்துறவிற்குச் சொல்லப்பட்ட யாதானும் ஒன்றினோடு மறந்தும் ஒரு பற்றிலாமை யாது? மற்று அதுவே மரபு ஆகும்: மற்று அது அன்றி இவற்றில் ஒன்றின்கண் மறந்தா



யினும் சிறிது ஓர் பற்று உண்டாயின் பற்றுடைமை பின்னும் பெயர்த்தும் முன்னம் மயக்கத்திற்கே காரணம் ஆகும் எ - று. (7)

8. தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர்.

எ - து.—.......... ......ன் முத்தியின்கண் தலைப்பட்டோர் ஆவார் யாது ஒன்றின் மாட்டும் யாதும் ஒரு பற்று இல்லாதவாறு திருந்தத் துறந்தவரே: இனி மற்றையார் எல்லாம் அங்ஙனம் பற்று அற மாட்டாது அறிவு மயங்கிப் பிறவி ஆகிய பெருவலையுள் பட்டுச் செல்கின்றார் எ - று. (8)

9. பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு.

எ - து.—ஒருவர் தமது உள்ளத்தால் பற்று உடையர் ஆக வேண்டும்: மற்று யாதினை எனின் முன்னம் சொன்ன முறைமையின் எப்பற்றும் அற்றோன் யாதோர் இன்பத்தைப் பற்றி நின்றான். மற்று அதனைத் தானும் உறுதற்கு மற்று இனி முன்னம் தனது உள்ளத்தினால் முயல்வது ஆக வந்து பற்றினான் அன்றே: அதன் பயன் முற்றும் துணையும் அதனை முறுக நின்று முயலுக: யாதற்கோ எனின் மறு இதனால் வரும் இன்பம் அன்றி மற்று எப்பற்றும் விடுதற்கே காரணம் எ - று. (9)

10. பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கு மற்று
நிலையாமை காணப் படும்.

எ - து.—இங்ஙனம் பற்று அற்ற இடத்து மற்று அப்பொழுதே அப்பற்று அறுதி ஆகிய நற்றுறவு தன் பிறப்பு அறுக்கும்: எனவே முத்தியை எய்தும்: மற்றும் ஏனைய எல்லாம் பற்றொடு வருதலால் அந்தந்தப் பொருள் பற்றி நின்ற நெஞ்சொடும் பிறந்தும் இறந்தும் திரிந்து உழல வேண்டுதலால் இந்த நிலையாமையே எப்பொழுதும் காணப்படும் இவனால் எனவே எஞ்ஞான்றும் முத்தி இன்பம் காண மாட்டார் என்பது பொருள் ஆயிற்று எ - று. (10)

இனி இவ்வுலகத்து மக்கள் பிறந்தோரில் சிறந்தோர் ஆகிய சான்றோர் முன்னர்த் தம் குலத்து இயல்பு ஆகிய இல்லறம் இயற்றிப் பின்னர் மற்று அதன் பயன் ஆகிய துறவறம் இயற்றுதற்கு அதனை முனிந்து நீத்துப் போந்து துறவறம் இயற்றிய பின்னர் மற்று இது துறவறத்தின் பெரும்பயன் ஆகிய முத்தி இன்பத்து ஏய்யன்று அமைதல் இயல்பு ஆகலான் இதன் பின்னரே மெய்யுணர்தல் என்றும் பெயரினன் அதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 36. மெய்யுணர்தல்.

1. ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு.

எ - து.—ஓசைமுதல் ஆகிய ஐம்புலன்களைத் தனித்தனி அறிந்து வருகின்ற செவி முதல் ஆகிய பொறி ஐந்தும் மற்று ஈண்டு அருந்தவம் இயற்றி அ ருலகு ஆளும் அமரர்க்கும் அவர் அவா எய்துதல் அரிது ஆதலால், சிறிது நாள் அச்சிற்றின்பத்தார் ஆகிய மக்கள் பிறந்தார்க்கு எவ்வாற்றானும் எய்தாது அன்றே: அஃது அன்றி இவர்க்கு அவை நிறைய எய்தியக் கண்ணும் மற்று ஈண்டு ஒழிவன ஆதலான் யாதும் ஒரு பயன் இல்லையே: யார்க்கு எனின் மெய்ப்பொருளை உணரும் உணர்வு இல்லாத விரகு இல்லாளர்க்கு எ - று. (1)

2. இருணீங்கி யின்பம் பயக்கு மருணீங்கி
மாசறு காட்சி யவர்க்கு.

எ - து.—தமது அறியாமையானது நீங்கி மற்று

அளவு இறந்த
இன்பமானது பயக்கும்: யார்க்கு எனின் மெய்ப்பொருளை வேறு ஒன்று ஆகவும் வேறு ஒன்றினை மெய்ப்பொருள் ஆகவும் இங்ஙனம் மயங்கி நின்ற மயக்க நீங்கித் தெளிந்த உள்ளத்துக் குற்றம் அற்ற நல்லறிவு உடையவர்க்கு எ - று.

இருள் நீங்கி என்பது அறியாமை நீங்கி என்றது. மருள் என்றது மயக்கம் நீங்கி என்றது. மாசறு காட்சி என்பது என்பது குற்றம். காட்சி என்பது அறிவு.

நீங்கி
மாசு
(2)

3. பிறப்பென்னும் பேதைமை நீங்கிச்
செம்பொருள் காண்ப தறிவு.

சிறப்பென்னுஞ்

எ - து.—உலகத்து மக்களும் தேவரும் பிறவும் ஆகிய பிறப்பு என்பது ஒன்று உளது என்று கருதும் அறியாமை நீங்குமாறு உலகத்தோர் நல்லன ஆகக் கருதி வருகின்ற யாவையினும் தான் சிறந்து மற்றும் தன்னில் சிறந்தது பிறிது ஒன்று இன்மையான் அதுவே சிறப்பு உடைத்து என்று மறை நூல்களும் மற்றும் பிறவும் இவை முழுது உணர்ந்த எவரும எடுத்துச் சொல்லுகின்ற மெய்ப் பொருளினை இப்படிக் காண வல்லது யாது மற்று அதுவே அறிவு ஆவது எ - று.

பேதைமை என்பது அறியாமை.

4.
(3)

பொருளல் லவற்றைப் பொருளென்
மருளானு மாணுப் பிறப்பு.

ஆயணரு

## 36. மெய்யுணர்தல்

13

எ - து.---மேற்ச் சொன்னபடியே மெய்ப்பொருளைப் பொய்ப்பொருள் ஆகவும் பொய்ப்பொருளை மெய்ப்பொருள் ஆகவும் மயங்குகின்ற மயக்கத்தினால் வந்து உளது ஆம்: யாதோ எனில் ஒரு வகையாலும் ஒரு மாட்சிமை இல்லாத பிறவியானது எ - று. (4)

5. கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி.

எ - து.—உயர்ந்தோர் மெய்ப்பொருள் தெரிதற்கு விளங்கிய நூல்களைக் கசடு அறக் கற்று அதனாலே மெய்ப்பொருளைக் கண்டோர் எய்துவர்: யாதினை எனின் மறித்து இவ்வுலகத்து வந்து பிறக்க வேண்டாத நெறியினை: எனவே அதனை எய்துவர் எ - று.(5)

6. எப்பொரு ளெத்தன்மைத் தாயினு
மெய்ப்பொருள் காண்ப தறிவு.

மப்பொருண்

எ - து.—உலகத்து யாதானும் ஒரு பொருள் மூது வேறுபாடு உடையது ஆயினும், அப்பொருளை

உண்மை நிக கருதாது மற்று அப்பொருளை மெய் என்று வல்லது யாது? மற்று அதுவே

உண்மைப் பொருள் ஆகக் காண ஒருவர்க்கு அறிவானது எ - று. (6) 7.

ஓர்த்துள்ள முள்ள துணரி னொருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு.

எ - து.—ஒருவனது உள்ளமானது ஒன்றை மற்றொன்றாகக் கருதி மயங்காது கீழ்ச் சொன்னபடியே ஓர்ந்து பார்த்து மற்று இணை இறந்த தலைமைப்பாடு ஆக உள்ளதனை உள்ளும் ஆயின் பின்பு பெயர்த்து ஆராய வேண்டா பிறவியினை எ - று.

ஒருதலை என்பது இணை இறந்த தலைப்பாடு. (7) 8. ஐயத்து ணீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வான நணியது யுடைத்து.

எ - து.—கீழ்ச் சொன்னபடியே உள்ளமானது ஓர்ந்து உணர்ந்த மெய்ப்பொருளை என்றும் இதன் தன்மை என்னை கொல் என்று உள்ள ஐயப்பாட்டினின்று நீங்கி மற்று தெளிந்த பெரியோர்க்கு இவ்வையத்தின்

அதனை அதுவே ஆகத்
நணுமை போல வான்
நணுமை உடைத்து எ - று.

(8) 9.

சார்புணர்ந்து சார்வு கெடவொழுகின்
சார்தரா சார்தரு நோய்.

மற்றழித்துச்

எ - து.—தனக்கு முத்திச் சார்வு ஆம் முதல்வனை அறிந்து பிறப்பிற்குக் காரணம் ஆகிய சார்வு கெடும்படி ஒழுகுவன் ஆயின் மறித்துச் சாரா சார்ந்து வரும் பிறவி நோய்கள் எ - று.



சார்வு என்பது உடம்பு. சார்வு கெட என்பது யான் எனது என்றும் பற்றி வருகின்ற சார்வு கேடு என்பது.

என்றும்

(9)

10. காமம் வெகுளி மயக்க மிவைமூன்றி
னாமங் கெடக்கெடு நோய்.

எ - து.— மற்று இங்குச் சொன்ன மெய்யுணர்வினால் முக்குணங் களின் விகாரம் விரிவாய் மற்று யாவரையும் மயக்கி வருகின்ற அவா

வும், சினமும், மோகமும் என்று சொல்லப்பட்ட இவை மூன்றினது பெயரும் உட்படத் தன்கண் இல்லாதவாறு முன்னம் கெடவே இவற்றின் வழி உள ஆக ஒழுகின பிறப்பு என்னும் அனைத்து நோயும் கெடும் எ - று. (10)

இனிக் கீழ்ச்சொல்லிய காமம் முதலிய மூன்றினும் காமம் என்பது ஒன்றனை அவாவுதல் அன்றே: மற்று அஃது எய்தாக்கால் வரும் வெகுளியும், அதனது முதிர்ச்சிக்கண் தனது உள்ளம் மயங்கு மயக்கமும் என்னும் இவை இரண்டும் பிறவும் நிகழ்வது ஒன்றனைக் காமித்தல் என்னும் அவாவினான் ஆதலால் கீழ்ச்சொன்ன மெய் யுணர்விற்குக் காரணம் ஆகிய விவேகம் என்னும் தெரிந்துணர்வினான் முன்னம் அனைத்து இடருக்கும் காரணம் ஆகிய அவாவினை அறுக்கவே மற்ற மெய்யுணர்வு என்னும் பேருணர்வு வந்து வெளிப்படும். ஆதலால் இவ்வுணர்வில்லோர்க்கும் இதனது நிகழ்ச்சிக்கு ஏதுவாக அதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 37. அவாவறுத்தல்.

1. அற்றவ ரென்பா ரவாவற்றார்
ரற்றாக வற்ற திலர்.

மற்றையா

எ - று.—மற்று ஈண்டு உள்ள பொருள், மாடு, பெண்டிர், புதல்வர், சுற்றம், நட்டோர் முதல் ஆகிய அனைத்தினும் உள்ள அவா அற்றனர் என்று சான்றோரால் சொல்லப்படுபவர் யாரோ எனில், மற்று எப்பற்றுக்கும் காரணம் ஆகிய அவாவினை அற்றவரே ஆசை அற்றவர் ஆவார்: மற்றையார் துறவு மேற்கொண்டு அவா அறுதார் எ - று. (1)

2. அவாவினை யாற்ற வறுப்பிற் றவாவினை
தான்வேண்டு மாற்றான் வரும்.

எ - து.—அவாவினை ஒன்றின்கண் வளராது ஒன்றின்கண் தவிர ..................செய்த வினை இறுதிக்கண் கெடும் என்பது கருதி
மற்று
ன து

அதனுல் கேடு இல்லாத தேர்ச்சி ஆகிய தெளிவு உணர்வா பின்பு ஒரு வருத்தம் இன்றித் தான் வினைதாங்கு வந்து **எய்தும் எ - று.**

## 37. அவாவறுத்தல்

15

ஆற்ற என்பது மிகவும் என்றது. தவாவினை விசாரப் என்றது.

என்பது கெடாத 3. வேண்டாமை யன்ன
(2)

விழுச்செல்வ மீண்டில்லை
யாண்டு மதுவொப்ப தில்.

எ - து.—அவா என்னப்பட்டது யாது ஒன்றினையும் விரும் பாமை ஆகிய இதனை ஒப்பது ஓர் விழுமிய செல்வம் இவ்விடத்து இல்லை: அதுவேயும் அன்றி மற்றும் எவ்விடத்தும் அதனை ஒப்பது ஒன்றும் இல்லை எ - று. (3)

4. தூஉய்மை யென்ப தவாவின்மை மற்றது
வாஅய்மை வேண்ட வரும்.

எ - து.—ஒருவன் மனத்தூய்மை என்று

சொல்லப்படுவது யாதோ எனில், யாது ஒன்றின் மாட்டும் அவாவில்லாமையே. மற்று
அவ்வவா ஆனது இல்லாமை தான் யாநிலுல்
மையை விரும்ப வந்து எய்தும் எ - று.

வருவது எனில் மெய்ம் 5.
(4)

அஞ்சுவ தோரு மறனே யொருவனை
வஞ்சிப்ப தோரு மவா.

எ - து.—இவ்வுலகின் கணத்தோடு பொருந்தி அதனை இறந்த பெரியோர்களையும் பொருள் கருதி வஞ்சிப்பதே சூழும் நெஞ்சில் அவா ஆனது: ஆதலால் இதனைப் பெரிதும் அஞ்சத் தகுவது ஒன்று ஆகவே விசாரியும்: எனவே அவாவினை என்றும் அணையற்க என்று பொருள் ஆய் என உணர்க எ - று (5)

6. அவாவென்ப வெல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றுந்
தவா அப் பிறப்பீனும் வித்து.

எ - து.—இவ்வுலகத்து நல்வினைப் பயன்களை

அவாவிச் செய்

யும் இடத்து நல்லனவும் மற்று இது ஒழிக்க கொலை, களவு, கள், காமம், குறளை, பொய், வஞ்சனை முதலிய தீயனவும் ஆய் இங்ஙனம் வஞ்சிக்கின்றது எல்லா உயிர்க்கும் எக்காலமும் பிறிது ஒன்றினும் கேடு இல்லாத பிறவியை ஈனும் வித்து: எனவே இதனைக் கருதற்குக் காரணம் மற்று இஃது ஒன்றுமே: பிறிது இல்லை எ - து. (6)

7. அவாவில்லார்க் கில்லாகுந் துன்பமஃ துண்டேற்
தவா அது மேன்மேல் வரும்.

எ - து.—அவரின் தன்மை இஃது ஆகலால் மற்று இவ்வவா ஒன்றும் தமக்கு இல்லாதார் யாவர்? மற்று அவர்கட்கு இல்லை ஆதும் துன்பமானது: ஆகலால் அஃது உண்டாம் ஆயின் துன்பம் எஞ்ஞான்றும் கெடாதே மேன்மேலும் வந்து எய்தும் எ - று. (7)



8. வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை
வேண்டாமை வேண்ட வரும்.

மற்றது

ய - து.—ஒருவர்க்கு யாதானும் ஒன்றனையும் விரும்பும் இடத்துப் பிறவாமையையே விரும்பல் ஆவது: இங்ஙனம் பிறவாமையை விரும்பும் இடத்து அவா எவ்வாறும் வருவது இல்லை: ஆதலால் அவாவினை விரும்பாது ஒழியின் பிறவாமை ஆகிய முத்தி தானே விரும்பி வந்து எய்தும் எ - று. (8)

9. இன்ப மிடையறு தீண்டு மவாவென்னுந்
துன்பத்துட் டுன்பங் கெடின்.

ஆம்

எ - து.—வீட்டு இன்பம் ஆகிய முத்தி இடையறுது நிரம்புவது: அது யார்க்கோ எனில் எனைத்து வகைப்பட்ட துன்பங்கள்

எல்லாவற்றினுள்ளும் மிகக் கொடியது ஆகிய அவா துன்பத்துள் துன்பம் கெடின் எ - று.

என்னும் பெரிய

அவா ஆனது தானும் துன்பத்தைச் செய்து எல்லாத் துன்பத் துக்கும் காரணம் ஆதலால் துன்பத்துட்டுன்பம் என்றார். (9) 10. ஆரா

வியற்கை யவா நீப்பி னந்நிலையே
பேரா வியற்கை தரும்.

எ - து.—ஒன்றினாலும் நிரம்பாத் தன்மையுடைய ஆசையை நீக்க வல்லன் ஆயின் மற்று அப்பொழுதே எஞ்ஞான்றும் இடை பெயராது ஒருபடி பட்ட முத்தியின் இயல்பினைத் தரும் எ - று. (10)

தவத்து நெறியால் பற்று அறுக்க வேண்டி ஒருப்பட்ட தாங் தோர்க்கும் மற்று அல்லாதார்க்கும் முன் சென்று அமைந்த இரு வினைகள் நீக்க முடியாமை............தனவே ஆயினும் இது பற்றித் தாம் மேற்கொண்ட நற்குண ....... . களின் வழுவா நிற்கத் தகா ....... .... . கின்றது மேலை அதிகாரம்.

## 38. ஊழ்.

1. ஆகூழாற் றோன்று மசைவின்மை
போகூழாற் றோன்று மடி.

கைப்பொருள்

எ - து.—உலகத்து யாவர்க்கும் பேனின்ற முறைமை ஆருவது ஓர் - ஆகூழினல் அவர் அவர் நெஞ்சின்கண் தோன்றும் யாது ஒரு வினையில் அதற்கு ஏற்ற மடியின்மை : இனி இவ்வாறு அன்றித் தம்மிடத்து எய்திய பொருளும் நீங்கிப் போருவது ஓர் போகூழினல் அவர் அவர் நெஞ்சில் தோன்றும் மடியானது எ - று.

அசைவின்மை என்றது மடியின்மை. (1)

## 38. ஊழ் 17

2.

துறப்பார்மற் றுப்புர வில்லா ருறற்பால
வூட்டா கழியு மெனின்.

எ - து.—தமது ஊழினல் வந்து எய்தற்பாலனவை பல பல
நுகரவும் வந்து ஊட்டாவாய்க் கழியும் ஊழ் உளது ஆயின் ; மற்று இதனல் இங்ஙனம் துறப்பார் ஆவார் மற்றுத் தாம் உறுதல் தன்மைய ஆகிய ஊழ் ஆனவை நுகர்வியாது ஒழியும் ஆயின் எ - று.

துப்புரவு என்பது நுகர்வு. உறற்பால என்பது...... (2) 3. வகுத்தார் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்த லரிது.

எ - து.—அதனல் முன்னம் செய்தார் செய்த

வினை வகையால்
துய்த்தல் அல்லது மற்றுக் கோடி பொருள் ஈட்டினார்க்கும் அது கொண்டு துய்த்தல் அரிது: எனவே அங்ஙனம் ஈட்டுதற்கு உரிய தானம் முதலிய நல்வினை முன் செய்து மற்று அது கொண்டு தான் நுகர்தற்கு வேண்டும் நல்வினை முன்னம் செய்யாரேல் ஈட்டினரே யாயினும் குறைவறத் துய்த்தல் அரிது எ - று (3)

4. நுண்ணிய நூல்பல கற்பினு மற்றுந்த
னுண்மை யறிவே மிகும்.

எ - து.—நன்னெறி பெறுதற்குக் காரணம் ஆகிய ஞானத்தைத் தரும் நுண்ணிய நூல்கள் பலவற்றையும் கற்றாரே ஆயினும், அவ்வளவே தமது ஊழாய் மற்று அதன் பயன் எய்துதற்கு ஓர் ஊழ் முன்னம் இல்லை எனில், பின்னும் தன் உண்மை அறிவே மிகும்: இந்நெறி அறிதல் அன்றிப் பின்னும் தான் அநுபவித்தற்கு அரிய முறைவழி அறிவே மிக்குச் செல்லும்: மற்று இவ்வறிவு எய்தாது என்பது பொருள் ஆயிற்று எ - று. (4)

5. பேதைப் படுக்கு மிழவூ ழறிவகற்று
மாகலூ ழுற்றக் கடை.

எ - து.—எய்திய ஆக்கமும் இழத்தற்கு எல்லை ஆகிய இழவூழ் வந்து எய்தும் எனில், மற்று அவ்வூழ் இழத்தற்கு எய்ந்த பேதைமை உளது ஆக்கும்; இனி அவ்வாறு அன்றி ஆகலூழ் வந்துற்ற இடத்தால் எய்ந்த முயற்சிக்கண் இயல்பு ஆவது ஓர் அறிவு இடம் படுத்தும்: எனவே துறவு அறிவும் பிற அறிவும் அவர் அவர் உள்ளத்து நிகழ்வது: அவை அவற்றுக்கு அமைந்த விதியானே என்பது பொருள் எ - று.

படுக்கும் என்பது உளது ஆக்கும் என்றது. அறிவகற்றும் என்பது இடம் படுத்தும் என்றது. (5)

6. நன்றாங்கா லல்லவாக்
லல்லற் படுவ தெவன்.

காண்பவ ரன்றாங்கா

எ - து.—கல்விழி யானே தமக்கு நன்று ஆம் காலத்து அவ்வ
னம் நல்லன ஆகக் கண்டு வருகின்றவர், மற்று வினை வழியானே
நன்மை அல்ல ஆம் காலத்து அல்லல் உழப்பது என்னை? எனவே
இவ்வனம் வரும் அல்லலும் அப்பொழுதைக்கு அது
ஒன்று வந்து உதவாது என்பது பொருள் எ - று.

அல்லது பிறிது
(6) 7. நல்லவை யெல்லாந்

தீயவாந் தீயவு
நல்லவாஞ் செல்வஞ் செயற்கு.

எ - து.—முன் ஓர் வழினல் வந்தாற்ற நல்லவை ஆகிய செல்
வம் எல்லாம் நில்ல தடுமாறத் தீயன ஆ! அவ்வனம் செய்வது ஓர்
விதிக்கு: மற்று இனித் தீயன ஆகிய எல்லாம் நீக்க தடுமாறியவாறே
நல்லன ஆகிய செல்வம் வந்து உளது ஆம்: மற்று இவ்வனம் தாம்
முன்னம் செய்த செயற்குத் தக்காந்த எ - று. (7)

8. இருவே றுலகத் தியற்கை திருவேறு
தெள்ளிய ராதலும் வேறு.

எ - து.—இரண்டு கூறு பட்டு இருக்கும் உலகத்தார் ஊழ் ஆம் இயற்கை: எங்ஙனம் எனில் செல்வ: உண்டாதலும் ஒரு கல்ஊழின் கூறு: கல்வியால் தெளிந்த நல்லறிவு உடையர் ஆகலும் மற்று ஒரு கல்விஇக்கு அமைந்த கூறு: எனவே முன்னமே இல்லறத்........... துன் துறவறம் இயற்றிய வழித் தெளிந்த நல்லறிவுடைய ஞானத்தார் ஆகலும் என இங்ஙனம் இரண்டு கூறுபடும் என்பது. (8)

9. பரியினு மாகாவாம் பாலல்ல வுய்த்துச்
சொரியினும் போகா தம.

எ - து.—தாம் செல்வத்தைப் பெரிதும் காதலிப்பினும் தமக்கு உள்ளவர்க்கு ஆகா ஆம்: யாவை எனில் அதற்கு எய்த ஊழ் உடைய அல்லாதன: மற்று இவ்வாறு அன்றி அகத்து இருந்த பொருளையும் புறத்துக் கொண்டு சென்று கொடுப்பினும் போகா: ஒருவாற்றால் புகுந்து எய்தும் மற்று அவ்விதியால் தம் உடையன ஆதற்கு உரிய பொருள எ - து. (9)

10. ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்.

எ - து.—உலகத்து யாவர்க்கும் அவ: பெருவலி உடையன யாவை உள! எனவே

அவர் ஊழிற் சிறந்த யாவும் இல்லை எனில், 38. ஊழ்

தமக்கு விதியினல் வருவது ஒழியத் தம் அவாவினல் வேறு ஒன்று வாக் கருதினும் அஃது இறந்து மற்று அவ்விதியினல் வருவது தானே வந்து முன்னுற்று நிற்கும் ஆதலால் எ - று. (10)

## அறத்துப் பால் முற்றும்.

இனி இவ்வாறு முடிந்த அறத்துப் பாலின் பொருள் குறிப்பு ஆவது: தாம் எடுத்துக் கொண்ட தொடர்பின் தொகுதி இனிது முடிதற்கு வணங்கி வாழ்த்திய கடவுள் வாழ்த்தும், கடல் உலகு உய்தற்குக் காரணம் ஆகிய கால மழையும், நிகழ் புயல் பருவத்து எய்துவது ஆகிய நீத்தார் பெருமையும், அது பின் வருதற்கு முன உறுப்பு ஆகிய அறன் வலியுறுத்தலும், ஈங்கு இவை பயிற்றும் இயல் பின் ஒன்றுனது இல்லறத்து இயல்பு அஞ்சக வர்க்கமும், முத்தியும் தருதற்கு இயைந்த துறவறத்து இயல்பு விளங்கிய துறவின் வினைப் பயன் ஆகிய மெய்யுணர்வு என்னும் வீட்டின்பமும், அவ்வுணர்வு எய்தற்கு இடையூறு ஆகும் அவாவினை யறுத்தலும், ஒருங்கு அவ் வாறு அறுத்தோர்க்கும் பிறர்க்கும் வந்து ஊட்டும் உறுதிகொள் ஊழும் வள்ளுவக் கடவுள் வகுத்து அமைத்து உரைத்த எள்ளறு சிறப்பின் அறத்துப் பால் முற்றும்.

வெண்பா.

பாலாகும் வேதப் பயனாகும் பாயிரநான்
கேலாகே யில்லறமு நாலைந்தா — மேலாந்

துறவுபதின் மூன்று தொடர்ந்துமொன்
றறிவுநெறி யாய்ந்துடையார் தாம்.

றெண்ப .

குருபாதம் துணை. அறம்

மறவற்க.

*இனி மற்று இங்ஙனம் கூறிய அறத்துப் பால் தனக்கும் ஆகல் அறம் ஆவது இல்லறம் அன்றே. மற்று இவ்வில்லறம் இயற்று தற்கே அருத்தி யாது எனில்,*

*ஆதியி லறநூ லாய்ந்தெடுத் துரைத்த*
*நீதியின் வழாஅ நெடும்பொரு ளாகலி*

*னருட்பா லியைந்த வறத்துப்பா லதன்பின்*
*பொருட்பால் வள்ளுவன் புகன்றனன் புவிக்கு.*

*பிள்ளை பட்டமுடையா பிள்ளை அவர்களுக்குத் அறத்துப் பால் எழுதி முகிந்தது.*

*திருவள்ளுவரில்*

நன்றுக.

கணபதியே நம. குருபாதம். நன்றுக
வடிவே துணே.



# *திருக்குறள் -*

# பொருட்பால்

## பொருட்பால் அட்டவணை.



அதிகாரம்.

அதிகாரம்.



பக்கம்.

உ

கடவுள் துணை.

# திருக்குறள்.

## பொருட்பால்.

## காலிங்கர் உரை : பரிப்பெருமாள் உரை.

### 1. இறைமாட்சி.

#### காலிங்கர் உரைத்தோடக்கம்.

*இப்பால் பொருட்............கெல்லா மலிவுற நடாத்து.........மவ்வரசர் செய்பொருள் முதலாகக்கொ.........மைப்பதன்பொருட்டாக மற்று இவை அனைத்திற்கும் மன்னவர் மாட்சிமை முற்படவேண்டும் முறைமை நோக்கி, இறைமாட்சி அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.*

#### பரிப்பெருமாள் உரைத்தோடக்கம்.

பொருட்பாலாவது பொருளின் பகுதி என்று கொள்ளப்படும். பொருள் என்றது மக்களை உடைத்தாகிய நிலம்; பகுதியாவது அந் நிலத்தை ஆளுதற்குரிய அரசாது தன்மையும், அவர் ஆளுதற்குச் செய்யும் திறன்களும், அதற்குத் துணையான அமர்த்தியர் இலக்கண மும், அவர் செய்யும் திறன்களும், அவ்விருவாராலும் உண்டாக்கப் பட்ட நாடும், அரணும், பொருளும், படையும் ஆகிய இவற்றினது திறன்களும், அறம், பொருள், இன்பம் என்னும் மூன்றற்கும் துணை யாகிய நட்பினது திறன்களும், அவ்வாறு உண்டாகிய பொருட்கும், பொருளுடையார்க்கும் கேடுவரும் திறன்களும், அந்நிலத்து உண் டான மக்களது இயல்பும், அவர் பொருள் செய்யுமாறும் கூறுதல். இவையெல்லாம் அரசியலும், அமைச்சியலும், பொருளியலும், நட் பியலும், துன்பவியலும், குடியியலும் என அடங்கும். படையியல், அரணியல் என வகுத்தார் உளரால் எனின், அவையெல்லாம் ஒருவ னால் ஆக்கப்படும் பொருள் ஆகலின், பொருளியல் என அடங்கும். துன்ப வியல் என்றது எற்றுக்கு? அதனையும் நட்பியலுள் அடக்கினர் உளரால் எனின், அவையெல்லாம் நட்கப்படாது என்னும் கருத்தி னால் கூறினர்கள் ஆயினும், அவற்றினிடைக் கிடந்த பேதைமை, புல்லறிவாண்மை என்னும் அதிகாரங்கள் நட்கப்படாததும், நட்கப் படுவதும் அன்றி, ஒருவற்குத் துன்பத்திற்குக் காரணம் ஆம் என்று கூறுதலான், துன்ப வியல் என வேண்டுமெனக. இதனுள் இறை மாட்சி முதலாக இடுக்கண் அழியாமை ஈறுகக் கூறிய அதிகாரங்கள்

இருபத்தைந்தும் பெரும்பான்மையும் அரசர்க்கு உரித்து ஆகலின் அரசியல் என்றும், அமைச்சு முதலாக அவையஞ்சாமை ஈறாகக் கூறிய அதிகாரங்கள் பத்தும் பெரும்பான்மையும் அமைச்சர்க்கு உரித்து ஆகலின் அமைச்சியல் என்றும், நாடு முதலாகப் படைச் செருக்கு ஈறாகக் கூறிய அதிகாரங்கள் ஐந்தும் பொருள் ஆதலின் பொருளியல் என்றும், நட்பு முதலாகக் கூடா நட்பு ஈறாகக் கூறிய அதிகாரங்கள் ஐந்தும் நட்பின் பகுதிய ஆதலின் நட்பியல் என்றும், பேதைமை முதலாக மருந்து ஈறாகக் கூறிய அதிகாரங்கள் பன்னிரண் டும் கேட்டுக்குக் காரணம் ஆதலின் துன்பவியல் என்றும், குடிமை முதலாகக் கயமை ஈறாகக் கூறிய அதிகாரங்கள் பதின்மூன்றும் மக்க ளது இயல்பு கூறுதலின் குடியியல் என்றும், ஆகப் பொருட்பால் கூறிய அதிகாரங்கள் எழுபதும் ஆறு பகுதியாயிற்று.

அவற்றுள் அரசியலாவது அரசர் செய்யும் திறன் கூறுதல். அஃது யாங்ஙனம் கூறினரெனில், அது கூறிய அதிகாரம் இருபத் தைந்தினும் முற்பட அரசரான் உண்டாக்க வேண்டும் பொருளும் அவர்க்கு இன்றியமையா..................

இறைமாட்சியாவது இறைவனது தன்மை கூறுதல். இவ்வதி காரத்துள் உரைக்கின்ற பொருள் அரசனை நோக்கிற்று அரசன் மக்களிற் சிறந்தான் ஆகலானும், இவ்வதிகாரம்

ஆகலானும்,
முன் கூறப்
பட்டது.

கா. 1.

ப. 1

படைகுடி கூழமைச்சு நட்பரண் ஆறு

முடையா னரசரு ளேறு.

(காலிங்கர் உரை) என்பது.—படையும் குடியும் கூழும் அமைச்சும் நட்பும் அரணும் என்னும் இவ்வாறு உறுப்பினையும் உடையான் அரசருள் ஏறு என்றவாறு.

இனி, அரசருள் ஏறு எனவே இவ்வுறுப்பாற் குறைபாடுடையார் அரசர் எனப்படுவர் ஆயினும் சிறப்புடையர் அல்லர் என்பதூஉம், அரசனையும் உறுப்பாகக் கொண்டு இவை ஆறினொடும் கூட்டி இராச்சியம் எல்லாம் ஒன்று ஆக்கி வடநூலார் கூறும் ஆற்றிற் சிறிது வேறுபடுத்து மாசனம் முதலாக நாட்டிற்கு இவ்வாறினையும் உறுப்பாக்கிக் கூறினர் என்பதூஉம் கொள்க. இனி, இங்குச்சொன்ன இறை முதலாகிய எழுவகைப் பொருளுமே இப்பொருட்பால் நடைப் பொருளென அறிக.

(பரிப்பெருமாள் உரை) என்பது.—படையும் குடியும் கூழும் அமைச்சும் நட்பும் அரணும் என்று சொல்லப்பட்ட ஆறு பொருளை யும் உடையவன் அரசருள் ஏறு போல்வான் என்றவாறு.

## 1. இறைமாட்சி

3

ஈண்டுக் குடி என்றது குடி உள்ள நாடு. உண்டாக வேண்டுவன கூறிற்று.

இஃது அரசனுக்கு
(1)

கா. 2.
ப. 2.

அஞ்சாமை யீகை யறிவூக்க மிந்நான்கு
மெஞ்சாமை வேந்தற் கியல்பு.

*(கா - உ.) எ - து.—அஞ்சாமை என்பது தறுகண் ஆண்மை. ஈண்டு ஈகை என்பது கீழ்ச்சொன்ன இல்லறத்து இயல்பாகிய கொடைநெறிக்கு அடங்காது தனது பெரும் பொருட்கும் பெருந் தன்மைக்கும் ஏற்குமாறு மற்று அந்தணர் முதலாக இழிகுலத்தார் ஆகிய புலையர் ஈறாக அனைவர்க்கும் வரம்பற வழங்கும் வண்மை என அறிக. அறிவு என்பது மற்று இத்தகுதியும் அல்லதும் தெரிந்து உணரும் உணர்வு என்றவாறு. ஊக்கம் என்பது உள்ளமானது மேம்படக் கருதும் மேற்கோள் என்றவாறு. எஞ்சாமை என்பது ஒழியாமை என்றது ; இவை நான்கும் எஞ்ஞான்றும் இடைவிடாது இருத்தலே அரசர்க்கு மரபு எ - று.*

*(ப - உ.) எ - து.—அஞ்சாமையும் ஈகையும் அறிவுடைமையும் ஊக்கமுடைமையும் இந்நான்கு குணமும் ஒழியாமை வேந்தனுக்கு இயல்பு எ - று.

இவை நான்கும் இயற்கையாக வேண்டும் என்றது. (2)

கா. 3.

ப. 6.

இயற்றலு மீட்டலுங் காத்தலுங் காத்த
வகுத்தலும் வல்ல தரசு.

(கா - உ.) எ - து.—அரசு நெறி வழுவாமல் ஆறில் ஒன்றாகிய அறநெறிப் பொருளும், மற்று இங்ஙனம் வரும் வழி அறிந்து உள ஆக்குதலும், இங்ஙனம் கூடிய பொருளைச் சோர்வு படாமல் தமது

ஆணையால் பாதுகாத்தலும், மற்று இங்ஙனம் காத்த பொருளை அகத்துளார்க்கும் புறத்துளார்க்கும் வகுக்கும் நெறி வழுவாமல் வகுத்தலும் செய்ய வல்லது யாது? மற்று அதுவே அரசு ஆவது எ - று.

(ப - உ.) எ -
யாமல் ஈட்டலும்

து.—பொருள் பெறுவழி முயறலும் அதனை அழி
அதனைச் சோர்வு படாமற் காத்தலும் அதனை
வேண்டுவனவற்றுக்கு வகுத்தலும் வல்லவன் அரசன் ஆவான் எ - று.

---

*(கா - உ.)—'காலிங்கர் உரை' என்றும், (ப - உ.)—'பரிப்பெருமாள் உரை' என்றும் படித்துக்கொள்க.

*எ - து.—இதனை 'என்பது' என்றும், எ - று.—இதனை

என்றும் இனி வருமிடங்களிற் படித்துக்கொள்க.

'என்றவாறு'

வகுத்தலாவது யானை, குதிரை, படைக்குக் கொடுத்து அவை யிற்றை உண்டாக்குதலும், அரண் செய்யவும் படைக்கலன்கள் பண்ணுதல் முதலாயினவற்றுக்கும் கொடுத்தல். இவை எல்லாம் பண்டாரம் ஆதலின் ஒருபொருளைப் பலவாக வகுத்தல் என்றார். இது பண்டாரம் கூட்டுமாறு கூறிற்று. (3)

கா. 4. ப. 3.

தூங்காமை கல்வி துணிவுடைமை யிம்மூன்று
நீங்கா நிலனாள் பவர்க்கு

(கா - உ.) எ - து.—விரையும் கருமம் தாழாது இயற்றுகையும், அருமறை முதலாதிய அறநீதி முடிவாக இங்ஙனம் தாம் கற்கத் தகும் அவற்றைக் கற்கும் கல்வியும், தாம் செய்யும் கருமத்து மனத்திட்பமும், இம்மூன்றும் ஒழியாது செலுத்தும் அதுவே மண் ஆளும் வேந்தர்க்கு இயல்பு எ - று.

(ப - உ.) எ - து.—மடியின்மையும், கல்வியுடைமையும், ஒரு பொருளை ஆராய்ந்து துணிதலுடைமையும் என்று சொல்லப்பட்ட மூன்றும் நிலன் ஆள்வார் தமக்கு நீங்கா ஆதல் வேண்டும் எ - று.

இது முதலாகச் செயற்கைக் குணம் கூறுகின்றார். உலகத்துக் குற்றமும் குணமும் ஆராயுங்கால் மயங்கக் காணாது உண்மை ஆராய்ந்து துணிதல் ஒருதலையாக நிலன் ஆள்பவர்க்கு வேண்டும் என்பதனாலும், அதுதான் கல்வியான் அல்லது ஆராய்தல் அரிது ஆகலானும், அக்கல்வி மடியின்மையான் அல்லது வாராது ஆகலானும், சிறப்பு நோக்கி முற்பட இம்முறையே கூறினார். (4)

கா. 5. ப. 5.

காட்சிக் கெளியன் கடுஞ்சொல்ல
னல்லனேன்
மீக்கூறு மன்ன னிலம்.

(கா - உ.) எ - து.—வேண்டுனர் வேண்டுழிக் காட்சிக்கு எளி யனுமாய், மாபுடைய மக்கட்கு இன்சொலாளனும் ஆவானுகின் மற்று அம்மன்னனேயே இவ்வுலகத்து வாழ்வார் யாவரும் புகழ்த் துரைப்பாா எ - று.

(ப - உ.) எ - து.—காண்டற்கு
கூறுதலும் இலனாயின், அம்மன்னவனே

எளியனுமாய்க் . கடுஞ்சொல்
உலகத்தார் உயர்த்துக் கூறு
வர் எ - று.

இஃது உலகத்தார் மாட்டு ஒழுகும் திறன் கூறிற்று. (5)

1. இறைமாட்சி

5

கா. 6.
ப. 8.

இன்சொலா லீத்தளிக்க வல்லார்க்குத் தன்சொலாற்
றன்கண் டனைத்திவ் வுலகு.

(கா - உ.) எ
யாவர்க்கும் கீழ்ச்

- து.—தன்மாட்டு மாபின் வந்து எய்தும் மக்கள் சொன்ன முறை..............லேயுமன்றி மற்றுத் தன் நெஞ்சினாலும் தண்ணளி செய்ய வல்ல அரசர்க்கு இங்ஙனம் சொல்லுகின்ற..............த்தினாலேதான்......இவ்வுலகில் வாழ்வார் யாவரும் தன் வசத்து ஒழுகுவர் எ - று.

(ப - உ.) எ - து.—இனிய சொல்லோடே கொடுத்துத் தலையளி செய்ய வல்லவனுக்குத் தன் ஏவலானே தான் கண்டாற்போல உலகம் தன் வசத்தே கிடக்கும் எ - று.

தலையளியாவது வரிசை கொடுத்தல்.

அவ்வரிசை பெற்றவர்
அரசனுக்கு நல்லர் ஆதலானே,
இருந்தாளுகக் கொண்டு இராச

தாம் இருந்த இடம் எல்லாம் அரசன்
காரியத்தைத் தப்பாமல் செய்வாரத

லால் தான் கண்டால் ஒக்கும் என்றது. இஃது அரசன் செய்யும் திறன் கூறிற்று.

அமாத்தியர்க்கு
(6) கா. 7.

ப. 9.

முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்
கிறையென்று வைக்கப் படும்.

(கா. - உ.) எ - து.—அளித்தலும் செறுத்தலும் ஆகிய செய்தியின் கூறுபாடு அறிந்து மற்று அவரவர்க்குத் தக்காங்குச் செய்யும் முறை வழுவாமல் செய்து, மற்று இங்ஙனம் காத்தலைப் புரியும் மன்னவன் யார்? அவன் உலகத்து மக்கள் யாவர்க்கும் இறையவன் என்று முன் வைத்து எண்ணப்படும் எ - று.

(ப - உ.) எ - து.—குற்றம் செய்தாரை அதற்குச் செய்யும் முறை தப்பாமல் செய்து எல்லா உயிரையும் காத்தல் செய்கின்ற மன்னவன் மக்களுக்கு நாயகன் என்று எண்ணப்படும் எ - று.

[Cf. முறையெனப் படுவது கண்ணோடா கலி. நெய்.]

துயிர்வெளவல்— கா. 8.
(7)

ப. 8.

அறனிழுக்கா தல்லவை நீக்கி மறனிழுக்கா
மான முடைய தரசு.

(கா - உ.) எ - து.—அளித்தற்குத் தகுவது ஆகிய அறநெறிப் பொருளை வழுவாது செய்து அதற்குத் தகுவது ஆகிய அறம் அல்லன வற்றையும் கடிந்து மற்று இதற்கு ஏற்ற மறத்தினையும் வழுவாது எனை



அறநெறிப் பொருட்கு ஏற்ற மானத்தை அவனே அரசன் ஆவான் எ - று.

உடையவன் யாவன்? மற்று லாத

(ப - உ.) எ - து.—அறத்திஞல் தப்பாமல் ஒழுகி அறன் அல் காமம், வெகுளி, மயக்கம் என்னும் இவை கடிந்து, மறத்திற் றப்பாத மானத்தினையும் உடையவன் அரசன் ஆவான் எ - று.

மானமும் கடி ய வேண்டுதலின் மறத்திற் றப்பாத மானம் வேண் டும் என்றார். இஃது ஒழுக்கமும் நிலைமையும் வேண்டும் என்றது. (8) கா. 9.

ப. 7.

கொடையளி செங்கோல் குடியோம்ப
லுடையாளும் வேந்தர்க் கொளி.

ஞன்கு

(கா - உ.) எ - து —அனைவர்க்கும் பொருள் வழங்கும் கை வணக்கமும், அளிக்கத் தகுவார் மாட்டு நிகழும் தண்ணளியும், அவ ரவர் குற்றமும் குணமும் தெரிந்து நடாத்தும் செங்கோலும், தனது குடைநிழற்கீழ் வாழும் குடிகளைப் பாதுகாக்கும் குறிக்கோளும் என்று சொல்லப்பட்ட இந்நான்கும் உடையவன் யாவன்? மற்று அவனே அரசர்க்கு எல்லாம் அருக்கன் எ - று.

(ப - உ.) எ - து.—கொடுத்தலும், தலையளி செய்தலும், செங் கோன்மையும், குடிகளை ஓம்புதலும் என்று சொல்லுகின்ற நான்கினை யும் உடையவன் வேந்தர்க்கு எல்லாம் விளக்கு ஆம் எ - று.

கொடுத்தலாவது தளர்ந்த
கொடுத்தல். அளித்தலாவது

குடிக்கு விதையும் எரு முதலியனவும்
அவரைக் கொள்ளும் கடமையைத்
தளர்ச்சி பார்த்து இட்டுவைத்துப் பின்பு முதல் உண்டானல் கோடல். செங்கோன்மையாவது கொள்ளும் முறைமை ஒழியக் கொள்ளாமை. குடி ஓம்பலாவது - தளர்ந்த குடிக்கு இறையை இழிப்பித்தல். இது குடிக்கு அரசன் செய்யும் திறன் கூறிற்று. (9)

கா. 10. ப. 10.

செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்
கவிகைக்கீழ்த் தங்கு முலகு.

(கா - உ.) எ - து.—நெறி அல்ல செய்வோர் ஆகிய மறமக்களும், கொடுங்கோன்மை செய்வோர் ஆகிய மற மன்னரும், தனது செவிகைப்பச் சொல்லுவன எல்லாம் வரையாது பொறுத்து ஒழுகும் மாபுடை மன்னவன் யாவன்? மற்று அவனது குடைநிழற்கீழ்த் தங்கும் இவ்வுலகு. எனவே இவ்வுலகில் வாழும் உயிரெல்லாம் ஒரு வெம்மையுறாது மற்றவன் தண்ணளி நிழற்கீழ் நிலைபெறும் என்பது பொருள் எ - று.

## 2. கல்வி 7

இதனால் மற்று அவனது பொறை முனிவரைப்போல் அன்று: மற்று அஃது எங்ஙனமோ எனின், அப்பொழுதைக்கு வரையாது நின்று, அதனை ஓர்ந்து உணர்ந்து பின் செறுப்போரைச் செறுத்தும் பொறுப்போரைப் பொறுத்தும் இங்ஙனம் ஒழுகுதலே ஆ(சி)ரியர் கருத்து என்றவாறு.

(ப - உ.) எ - து.—தன் செவி வெறுக்கும் படியாகப் பிறர் செய்த குற்றங்களைக் கேட்டு வைத்தும் அதனைப் பொறுக்க வல்ல குணமுடைய வேந்தனது குடைநிழற்கீழே கிடக்கும் உலகு எ - று.

வேறு ஒரு நிழல் தேடாது என்று ஆயிற்று. இஃது அமாத்தியர் குற்றம் செய்தார் என்று பலரும் சொல்லுங்கால், பலவாற்றாலும் பொறுக்க வேண்டும் என்றது. அன்றியும் மந்திரி, புரோகிதர் அடர்த்துச் சொல்லும் சொற்களைப் பொறுக்க வேண்டும் என்பாரும் உளர். (10)

(கா - உ.) இனி மற்று அரசியல் பொருளிற் சிறந்த செல்வமாவது கல்விச் செல்வம் ஆகலான், மற்று இதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலே அதிகாரம்.

## 2. கல்வி.

(ப - உ.) கல்வியாவது கல்வி ஆமாறும் அதனான் ஆகிய பயனும் கூறுதல், இது முதலாகப் பொருள் வரவு இயற்றும் திறன் கூறுகின்றார் ஆதலின், அஃது இயற்றுங்கால் கல்வி முற்றுற வேண்டுமென்று இதுமுற் கூறப்பட்டது.

கா. 1. ப. 5.

ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற்
கெழுமையு மேமாப் புடைத்து.

(கா - உ.) எ - து.—ஒரு பிறப்பின்கண் கல்வழிக்கு உரிய கல்விகளைத் தன் நெஞ்சத்து ஒருப்பாடுடனே தான் கற்ற கல்வியானது, அங்ஙனம் கற்ற இணையிறந்த இறைவற்கு, இம்மைக்கண் உளது ஆம் நீதிப்பொருள் ஆகிய இன்ப உறுதியே அன்றிப் பின்பு நிகழும் மறுமை ஆகிய இனிய சேம உறுதியை உடைத்து எ - று.

(ப - உ.) எ - து.—ஒருவற்கு ஒரு பிறப்பிற் கற்ற கல்விதானே எழு பிறப்பின் கண்ணும் காவல் ஆதலை யுடைத்து எ - று.

கற்ற கல்விதான் என்று கூட்டுக. இது நன்னெறிக்கண் உய்க்கும் என்றது.

வாசனை தொடர்ந்து



- பொருட்பால்

கா. 2.

ப. 10.

உடையார்மு னில்லார்போ லேக்கற்றுங்
கடையரே கல்லா தவர்.

கற்றார்

(கா - உ.) எ - து.—கற்றார்முன் சென்று கல்லாதார் கற்கும் இடத்துச் செல்வம் உடையார் முன்சென்று வறியவர் ஏக்கற்று ஒடுங்கி ஒரு பொருளை விரும்புமாப்போல, விரும்பிக் கற்றார் ஆவர். மற்றுக் கடையர் என்பது புலமக்கள் உயர்ந்தோர் முன் ஒன்றினைச் சொல்லக் கூசுமாப்போலக் கல்லாதார் ஆகிய கற்றார்முன் சொல்லத் தாமே கூசுவார் எ - று.

கடுவினையாளரும் (ப
லாத ரர்

- உ.) எ - து.—பொருள் உடையார் முன்பு பொருள் இல் நிற்குமாறு போலத் தாழ்ந்தும் கற்றாரிடத்தர் ஆவர் கல்லா தவர் எ - று.

இது எல்லாரினும் தலைவனும் என்றது.

(2) கா. 3.

ப. 3.

கண்ணுடைய ரென்பவர் கற்றோர்
முகத்திரண்டு

புண் ணுடையர் கல்லா தவர்.

(கா - உ.) எ - து.—கண்ணுடையர் என்று எடுத்து எத்திச் சொல்லப்படுவார் கற்றவரே. இனிக் கல்லாதவர் முகத்து இரண்டு புண்ணுடையர் அல்லது, மற்று யாது ஒன்றினையும் பழுது அறக் காண்பது ஓர் கண்ணுடையர் அல்லர்; மற்று அஃது எப்படியோ எனின், கண் முதலாகிய ஐம்புலன்களும் தத்தம் பொருள்............ கண்ணினால் அவற்று உண்மைத் தன்மையையும் அளவிறந்த வீடு ஆகிய நுண்பொருளையும் பழுது அறக்காண்பர்; மற்று அஃது இல்லார் புறத்தது ஆகிய முகத்தான்...........புண் கண்ணர் எ - று.

(ப - உ.) எ - து.—கண்ணுடையரென்று சொல்லப்படுவோர் கற்றோர்: கல்லாதார் முகத்திலே இரண்டு புண்ணுடையரென்று சொல்லப்படுவர் எ - று.

அறிவு கல்வியின்கண் ஆதலான் அக்கல்வி இல்லாதார்கண் புண்ணாயிற்று. இது மேற்கூறிய அதனை வலியுறுத்திற்று. (3) கா. 4. ப. 4.

தொட்டனைத் தூறு மணற்கேணி
கற்றனைத் தூறு மறிவு.

மாந்தர்க்குக்

(கா - உ.) எ - து.—ஒருவன் கல்லுதற்கு முயலும் முயற்சி யானது (எவ்வளவைத்து) மற்று அவ்வளவைத்து ஆகி வந்து ஊறு நிற்கும் மணற் கேணியின் நீரானது; அதுபோல உலகத்துப் பண்



புடையோர்க்குத் தாம் கற்கும் கல்வி முயற்சியானது எவ்வளவைத்து மற்று அவ்வளவைத்தாக வந்து ஊறுநிற்கும் அக்கல்வியின் நிகழும் அறிவு எ - று.

(ப - உ.) எ - து.—அகழ்ந்த அளவு மணற்கேணி நீருண்டாம். அதுபோல மாந்தர்க்குக் கற்ற அளவும் அறிவு உண்டாம் எ - று.

இஃது அறிவுண்டா மென்றது,

(4) கா. 5.

ப. 2.

எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டுங்
கண்ணென்ப வாழு முயிர்க்கு.

(கா - உ.) எ - து.—எண்ணென்பது இருமை இன்பமும் தமது உள்ளத்தால் தெரிந்து பிரித்து எண்ணிக் கொள்வது. எழுத்து என்பது தாம் கற்கும் கல்விக்குத் துணையுறுப்பு ஆகிய எழுத்து ஒன்று ஆயிற்று. மற்று இவ்வாறு அன்றிக் கணக்கு நிலை ஆகிய சிற்றெண்ணும் பேரெண்ணும் நிறையெண்ணும் நிலவெண்ணும் பிறவும் ஆகிய நுண்குறி எண் என்றும், மற்று இவற்றின் அறிகுறி எழுத்தாய் அடிப்படி வருகின்ற தொகை விரி எழுத்தும் இவை இரண்டும் கண் என்ப வாழும் உயிர்க்கு எ - று.

(ப - உ.) எ - து.—எண்ணென்று சொல்லப்படுவனவும் ஒழிந்த எழுத்தென்று சொல்லப்படுவனவும் ஆகிய இவ்விரண்டு பொருளும் ஒருலகின்கண் வாழும் உயிர்கட்குக் கண்ணென்று சொல்லுவர் அறிவார் எ - று.

மேற்பொதுப்படக் கூறிய கல்வி பலவற்றுள்ளும் இவை இரண்டும் சிறப்புடைத்து என்று கூறிற்று. உயிர் என்றது மக்களை, இவையறிவார் மக்கள் ஆதலின். (5)

## கா. 6.

## ப. 1.

கற்கக் கசடறக் கற்பவை கற்றபி
னிற்க வதற்குத் தக.

(கா - உ.) எ - து.—முதற்சொன்ன எண்ணும் எழுத்தும் இவை இரண்டும் துணை உறுப்பாகக் கொண்டு தாம் கற்கும் அவற்றை மாசு அறக் கற்று உணர்க. இங்ஙனம் தெளியக் கற்றபின். கல்விக்குத் தகும் ஒழுக்கத்தின் கண்ணே நிலைநிற்க எ - று.

(ப - உ.) எ - து.—கற்கப்படுவனவற்றை குற்றம் கற்ற பின்பு அக்கல்விக்குத் தக ஒழுகுக எ - று.

அறக் கற்க.

• கல்வி பல வகைத்து. அவை

எல்லாவற்றுள்ளும் கற்கப்படு வனவற்றைக் கற்று அக்கல்வியிற் கூறினது தப்பாமற் செய்க. அது

• 2



கல்வியாற் பயன் என்றவாறாயிற்று. இது கற்கவும் வேண்டும்: அதனைக் கடைப்பிடிக்கவும் வேண்டும்

என்றது. (6) கா. 7.

ப. 9.

தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்.

(கா - உ.) எ - து.—தாம் கசடு அறக்கற்று யானது கொண்டு எவ்வாற்றானும் தாம் இன்புறுவது

உணர்ந்த கல்வி
அல்லது தமக்கு

உளதாய கல்வியைக் குறித்து உலகத்தார்
தால் பெரிதும் இன்புறக் கண்டு பின்னும்

யாவரும் தம்து உள்ளத்
மேன்மேலும் அதனையே
வற்புறுத்தல் ஆசைப்படுவர் மாக அறக் கற்ற
பெரியோர் எ - று.

(ப - உ.) எ - து.—தாம் இன்புறுதற்கு

ஏதுவாகிய கல்வியை உலகம் இன்புறுதல் கண்டால்
அதற்கு இன்புறுவர் கற்றறிந்தவர்கள் எ - று.

அழுக்காறு செய்யாது இன்புறுதல்
கல்வியானே வருமென்றது.

அறமாதலின், அதுவும்
(7) கு.ர. 8.

ப. 8.

உவப்பத் தலைக்கூடி யுள்ளப் பிரித
லனைத்தே புலவர் தொழில்.

(கா - உ.) எ - து.—தாம் பிறர் ஒருவருடன் கூடுங்காலம் எல்லாம் தம்மை அவர் பெரிதும் உவக்குமாறு அவரிடத்துக் கூடி மற்று யாதானும் ஒருவழி வரையாது பிரிய வேண்டிற்று ஆயினும் மற்று அவர் தம்மை எப்பொழுதும் சிந்திக்குமாறு பிரிதல் அதுவே கல்வியாற் சிறந்த அறிவினை உடையோர் தொழில் எ - று.

(ப - உ.) எ - து.—உவக்குமாறு கூடி அவர் நினைக்குமாறு பிரிதல் போலே, கற்றோர் செய்யும் தொழிலும் ஆம் எ - று.

இன்பம் நுகரினும் வினைசெய்யினும் தமக்குஞ் பம் பயக்கச் செய்தல் கல்வியான் ஆம் என்றது.

பிறர்க்கும் இன்

(8) கா. 9.

ப. 7.

யாதானு நாடாமா லூராமா லென்னொருவன்
சாந்துணையும் கல்லாத வாறு.

(கா - உ.) எ - து.—இங்ஙனம் கற்று உணர்ந்த பெரியோர்க்கு வேறு யாதானும் ஒருநாடும் யாதானும் ஒரூரும் முன்னம் தாம் பயின்ற நிலம்போலத் தமது நாடும் தமது ஊரும் ஆம். அதனால்

3. கல்லாமை. 11

மக்கள் பண்பு உடையான் ஒருவன் தனது துணையும் கல்லாது ஒழிகின்ற முறைமையா ஆக்கும் யாவர்க்கும் எ - று.

யாக்கை இறந்துபடும்
யிருக்கின்றதோ ஆசு

(ப - உ.) எ - து.—யாதோரிடத்துச் செல்லினும் அதுவே தன்து நாடும் ஊரும் போலாம். ஆதலால் ஒருவன் சாந்துணையும் கல்லாது ஒழுகுதல் யாதினைக் கருதியோ எ - று.

இஃது எல்லாராலுங் கைக்கொள்ளப்படுவர் என்றது. (9)

கா. 10.

ப. 6.

கேடில் விழுச்செல்வங் கல்வி யொருவர்க்கு
மாடல்ல மற்றை யவை.

(கா - உ.) எ - து.—உலகத்துச் சிறந்தார் ஒருவர்க்கு எஞ்ஞான்றும் கேடு படாத விழுமிய செல்வம் யாதோ வெனிற் சிறந்த நூல்களைக் கற்கும் கல்வியே : அதனால் மற்றைப் பல செல்வ மெல்லாம் செல்வமென்று சொல்லப்படுவன அல்ல எ - று.

மாடு என்பது பொருள்.

வது

(ப - உ.) எ - து.—ஒருவனுக்குக் கேடில்லாத சீரிய கல்வி : மற்றவை எல்லாம் பொருள் அல்ல எ - று.

பொருளா

இஃது அழியாத செல்வம் கல்வி என்றது.

(10)

(கா - உ.) கல்வியாற் சிறந்த பெரியோரது பெருந்தன்மை இது வாகலான் மற்று இதன் பின்னரே கல்லாதாரது நிலைமை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 3. கல்லாமை.

(ப - உ.) கல்லாமையாவது கல்லாமையான் உளதாகும் குற்றம் கூறுதல் : மேற் கல்வி வேண்டு மென்றார், அஃது இல்லாதார்க்கு உளதாகும் குற்றம் என்னை என்றார்க்குக் கூறியது ஆகலான் அதன் பிற் கூறப்பட்டது.

கா. 1. ப. 1.

*அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய*
*நூலின்றிக் கோட்டி கொளல்.*

(கா - உ.) எ - து.—சூதுக் கருவிக்கு நிலையறிந்து இயற்றிய வரையினுற் சதிரப்பட்ட பலகை யின்றி, வட்டுக் கொண்டு சூதாடிய தன்மை போலும், இவ்வாறு அனைத்து வகைப்பட்ட நெறியினும் நிறைவுற்ற நூல்கள் யாதானும் ஒன்றினும் தமக்கு ஒரு முயற்சி



யின்றி வறிதே இவ்வாற்றாற் சிறந்த சான்றோருழைச் சென்று கல்வி வினோதம் கொள்ளக் கருதுகின்ற கருத்து எ - று.

தாமும்

(ப - உ.) எ - து.—அரங்கு அமைவின்றி வட்டாடினாற்போலும் : நிரம்பிய நூல்களைக் கற்றலின்றி வார்த்தை சொல்லுதல் எ - று.

அரங்கு - கோட்டம். வட்டாடல் - உண்டை யுருட்டுதல். கோட்டி கொளல் - சொல் சொல்லுதல். *"புல்லா வெழுத்திற் பொருளில்

வறுங்கோட்டி" என்றாற்போல. இலக்கணம் அறியாதான் வார்த்தை சொல்லிற் றப்பும் என்றது. (1)

கா. 2.

ப. 7.

நுண்மா ணுழைபுல மில்லா னெழினலம்
மண்மாண் புனைபாவை யற்று.

(கா - உ.) எ - து — நுண்ணியதாய் மாட்சிமைப்பட்டு எஃகுதலை யுடைத்தாயுள்ள ஞானத்தைத் தருவதாகிய நூலினைக் கற்றிலாதான் எழில்.......... புனைந்த பாவையைப்போல உறுப்பு அழகு உண்டு உணர்வு இல்லை எ - று.

நுழைதல் என்பது எஃகுதல் : புலம் என்பது அறிவு.

(ப - உ.) எ - து.—நுண்ணிதாய் மாட்சிமைப்படசியையுடைய கல்வி இல்லாதான் அழகு மண்ணினனே செய்த பாவையினது அழகை ஒக்கும் எ - று.

ஆராய்ச்
நன்றாகச்

அறிவிற்கு மாட்சியாவது பொருளைக் கடிதிற் காண்டலும் மறவாமையும் முதலாயின. இஃது அழகியர் ஆயினும் மதிக்கப்படார் என்றது. (2)

கா. 3.

ப. 4.

கல்லாதா னொட்பங் கழியநன் றாயினுங்
கொள்ளா ரறிவுடை யார்.

(கா - உ.) எ - து.—இடப்படு நூல்களை இனிதாகக் கற்றிலா தானது அறிவு மிகவும் நன்றாயினும் அதனை ஓரறிவாகக் கைக்கொள் ளார்: யாரெனிற் கல்வியாற் சிறந்த அறிவுடையோர் எ - று.

ஒட்பம் என்றது ஒள்ளிமை.

(ப - உ.) எ - து.—கல்லாதானது ஒண்மை மிகவும் நன்று யிருப்பினும், அதனை ஒண்மையாகக் கொள்ளார் அறிவுடையார் எ - று.

ஒண்மை - சாமர்த்தியம்; அறிவெனினு மமையும். இஃது ஒள் ளிய ராயினும் மதிக்கப்படா ரென்றது. (3)

---

*நாலடியார் - மேன்மக்கள் - ௯.

3. கல்லாமை 13 கா. 4.

ப. 3.

கல்லா தவரு நனிநல்லர் கற்றார்முற்
சொல்லா திருக்கப் பெறின்.

(கா - உ.) எ - து.—கசடற நூல்களைக்
றைற் பெரிதும் நல்லர் என்று கொள்ளலாம்

கற்றிலாதோரும் அறிவி
: எப்பொழுது எனின்
மற்று அக்கசடறக் கற்ற மாசற்றார் முன் தமது நாவுரை நடையைக்
காட்டா திருக்கப்பெறின் எ - று. நனி என்பது மிகுதி.

(ப - உ) எ - து.—கல்லாதவரும் ஓரிடத்து மிகவும் நல்லர்
ஆவார்கள், கற்றவர்கள் முன்பு உரையாடா திருக்கக் கூடுமாயின்
எ - று.

சொல்லா தொழிய அறிவாரில்லா
தார்க்கு உபாயம் இது என்றது.

யாம் என்றவாறாயிற்று. கல்லா
(4)

கா. 5.

ப. 8.

உளரென் னும் மாத்திரைய
களரனையர் கல்லா தவர்.

ரல்லாற் பயவாக்

(கா - உ.) எ - து.—கல்லாதார் வெறும் பிணம் ஆதலன்றிச் சிறிது உயிரோடு நடைபெறுதலே யுடையரென்று சொல்லிக்கொள்ளும்

அளவின்றி மற்று வித்தியது ஒன்று விளைதல் சிறப்பில்லாத களர்த் தரையே ஒப்பவர்க்குக் கல்வியினால் விளையும் மறுமை ஆக்க முமில்லை எ - று.

(ப - உ.) எ - து.—உளர் என்னும் அளவினை

யுடையார் அல் லது பயன் படாத களர் நிலத்தை யொப்பர் கல்லாதவர் எ - று.

இது பிறர்க்குப் பயன் படார் என்றது.

(5) கா. 6.

ப. 9.

நல்லார்கட் பட்ட வறுமையி
கல்லார்கட் பட்ட திரு.

னின்னாதே

(கா - உ.) எ - து.— கல்வியிற் சிறந்த

நல்லறிவாளரிடத்து உள

தான வறுமையினும் சால இன்னாதே கல்வியின் விளங்கு நல்லறி வில்லாதார் கைப்பட்ட செல்வமானது: அது கொண்டு தாம் இனிது நுகர்தலும் தம் சுற்றம் ஓம்பலும் நட்டோர்க்குப் பகுத்தலும் வறியவர்க்கு உதவலும் மற்றும் பிற நல்லறம் செய்தலும் என்னும் இவை முதலிய இனிய பயன் கோடலின்றிச் சிறிதே உண்டு வறிது உயிர் வாழும் தன்மையர் ஆகலாற் குற்றங்கள் பலவும் உடையர் எ - று.



(ப - உ.) எ - து.—கல்லார் மாட்டுண்டாகிய வறுமைபோலப் பிறர்க்கு இன்னாமையைச் செய்யும் செல்வமும் எ - று.

கல்லாதார் மாட்டு உண்டாகிய இது செல்வம் என்றது.

உண்டாயிற் பிறரைத் துன்புறுவிக்கும் கா. 7. (6)

ப. 5.

கல்லா வொருவன் றகைமை
சொல்லாடச் சோர்வு படும்.

தலைப்பெய்து

(கா - உ.) எ - து.—உலகத்துக் கற்றிலா ஒருவன் தனது செல்வத் தகைமையும் பிறவும் கொண்டு என்ன பயன்? மற்றுக் கற்று வல்ல சான்றோருழைச் சென்று தலைப்பட்டு உரையாடவே அவை யனைத்தும் சோர்வு படும் எ - று.

(ப - உ.) எ - து.—கல்லாத ஒருவனது பெருமை கற்றவன் கிட்டி உரையாட மறையும் எ - று.

இது கல்லாதார்க்குப் பெருமை இல்லை என்றது.
(7)

கா. 8.
ப. 8.

கல்லாதான் சொற்கா முறுதல் முலையிரண்டு
மில்லாதாள் பெண் காமுற் றற்று.

(கா - உ.) எ - து.—கற்றிலாதான் மற்று அக்கற்றவர் முன்னர்த் தானும் சில சொல்லுதலைக் காதலித்தல் எத்தன்மைத்தோ எனில், முலையிரண்டும் முன்னமே தனக்கு இல்லாதாள் ஆகிய பேடியானவள் மற்று அம்முலை வனப்புறாஉம் திருவுடையாட்டியது பெண்மை கொண்டு இன்புறுதற்குத் தானும் காதலித்தல் அத்தன்மைத்து எ - று.

(ப - உ.) எ - து.—கல்வி இல்லாதான் சொல்லுதற்கு ஆசைப் படுதல் இரண்டு முலையும் இல்லாதாள் பெண்மைக்குக் காமுற்றாற் போலும் எ -

று.

இது தன்னுசை யல்லது பிறர்க்குப்
'சொன்னலும் விரும்புவா ரில்லை'—

பொருந்ாது என்றவாறு
(8) கா. 9.

ப. 6.
மேற்பிறந்தா ராயினுங் கல்லாதார்
கற்ற ரனைத்திலர் பாடு.
கீழ்ப்பிறந்துங் .



(கா - உ.) எ - து.—உலகத்துக் கல்லாதார் ஆகிய மக்கள் உயர்குடிப் பிறந்து ஒள்ளியர் ஆயினும், மற்றுக் கீழ்க்குடிப் பிறந்தும் கற்றாரைப் போல்வதோர் பெருந்தன்மை என்றும் இலர் எ - று.

(ப - உ.) எ - து.—உயர்ந்த குலத்திற்
இல்லாதார் இழிகுலத்துப் பிறந்த கற்றாரோடு

பிறந்தாராயினும் கல்வி
ஒத்த பெருமை இலர்

எ - று.

இது குலம் உடையாராயினும் மதிக்கப்படார்

என்றது. (9)

கா. 10.

ப. 10.

விலங்கொடு மக்க ளனைய
கற்றாரோ டேனை யவர்.

ரிலங்குநூல்

(கா - உ.) எ - து.—இவ்வுலகத்துப் பிறந்த விலங்குச் சாதிக்கும் மக்கட்கும் வேற்றுமை போல, விளங்கிய நூல்களைக் கற்றுணர்ந்த சான்றோரோடும் மற்றைக் கல்லாதாரோடும் வேற்றுமை உடைத்து எ - று.

(ப - உ.) எ - து.—விலங்குச் சாதியோடும் மக்களோடும் உள்ள வேறுபாடு உடையர்: விளங்கின நூல்களைக் கற்றவர்களோடு கல்லாதவர் எ - று. இது கல்லாதவர் விலங்கு என்றது. (10)

(கா - உ.) இனி இங்ஙனம் கல்லாத மக்களும் மற்று என் செயற்பால தெனின், கற்றுணர்ந்த சான்றோருழைச் சென்று மற்று அவர் உரைக்கும் கல்வி நெறிப்பாட்டைப் பலநாளும் பயிலக் கேட்க; மற்று இங்ஙனம் கேட்கவே இவரும் இனிய உணர்வினர் ஆவர் என்பதனால் மற்று இதன் பின்னரே அறிவிக்கின்றது மேலையதிகாரம்.

## 4. கேள்வி.

(ப - உ.) கேள்வியாவது கேள்வியினான் ஆய பயன் கூறுதல். நூல்களைக் கற்க மாட்டாதார் அதனைக் கற்றார் மாட்டுக் கேட்டலும் அறிவுக்குக் காரணமாம் என்பதனால் அதன்பிற் கூறப்பட்டது.

கா. 1.

ப. 1.

கற்கில னாயினுங் கேட்க வதுவொருவற்
கொற்கத்தி னூற்றாந் துணை.

(கா - உ.) எ - து.—இவ்வுலகத்துள் ஒருவன் கற்கும் நெறியி னாற் கற்கப் பெற்றிலனாயினும் கற்றுணர்ந்த சான்றோருழைச் சென்று வழிப்பட்டுப் பயிலக்கேட்க................வாப்பிறந்தோ



னுக்கு நாகினுட் சென்று விழாது மறுமை நெறிச் செல்லுதற்குப் பெரியதொ ருறுதித் துணை என்றவாறு. ஒற்கமென்றது நாகமென் றது.

பா - ம். “ அஃதொருவற்கு ”.

(ப - உ.) எ - து.—கற்க மாட்டானாயினும் கற்றோர் மாட்டே கேட்க ; அக்கேள்வி ஒருவன் தளர்ச்சிக்கண் தாங்குவது ஒரு துணை யாம். இது கேள்வி வேண்டுமென்றது. (1)

கா. 2.

ப. 4.

இழுக்க லுடையுழி யூற்றுக்கோ
ஒழுக்க முடையார்வாய்ச் சொல்.

லற்றே

.

(கா - உ). எ - து.—மற்று யாதானும் ஒருவழித் தமது கால் வழுக்குதலுடைய இடத்துத் தமது கையகத்து உற்றதோர் ஊன்று கோல் உதவியது எத்தன்மைத்து........ ............யே கல்வி ஒழுக்கத்தையுடைய சான்றோர் வாய்ப்பிறக்கும் சொற்கள் எ - று.— சொல் என்பது கேள்வி.

(ப - உ.)
ஊன்று கோல்

எ - து.—வழுக்குதல் உண்டாயின இடத்து உதவும் போலும் ஒழுக்க முடை யார் கூறும் சொற்கள் எ - று.

இது கேட்பது ஒழுக்கமுடையார் மாட்டென்பது கூறிற்று. (2)

கா. 3.

ப. 10.

கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியாற்
றோட்கப் படாத செவி.

(கா - உ.) எ - து.— இவ்வுலகத்துப் பயின்று வருகின்ற வழக்குச் சொல்லளவே யாண்டும் எப்பொழுதும் கேட்டு வரினும் மற்று எஞ்ஞான்றும் கேளாத்தகைமைப் பாட்டன: யாவை எனின், சான்றோருழைச் சென்று தாம் கேட்கும் கேள்வியாகின்ற கூரிய கடைக் கோலான் இரண்டாவது துளை யிடப்படாத செவிகள் எ - று.

(ப - உ.) எ - து.—ஓசை மாத்திரம் கேட்டனவாயின் அது வும் கேளாத செவிபோலும், கப்படாத செவி எ - று.

நல்லோர் கூறும் சொற்களாற் றுளைக்

இது கேள்வியில்லாதார் செவிடென்றது.

(3)

கா. 4.

ப. 7.

செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வ
செல்வத்து ளெல்லாந் தலை.

மச்செல்வஞ்

4. கல்லாமை

17

(கா - உ.) எ - து.—உலகத்துச் செல்வங்கள் பலவற்றுள்ளும் சிறந்த செல்வம் யாதெனின், செவிச்செல்வம் ஆகலான், ஒருவன் கேட்பனவற்றுள் தனது செவியினூன் மறுமை ஆக்கம் இனிதுறக் கேட்கும் கேள்வியே தலைச்செல்வம் எ - று.

(ப - உ.) எ - து.—செல்வத்துள் வைத்துச் செல்வமாவது செவியுணர்வுடைமை யாகிய செல்வம்: பயன் படும் இடத்து மற்றுள்ள செல்வம் எல்லாவற்றினும் தலையாம் ஆதலான் எ - று. (1)

கா. 5. ப. 5.

நுணங்கிய கேள்விய ரல்லார்

வணங்கிய

வாயின ராத லரிது.

(கா - உ.) எ - து.—கல்வியாற் சிறந்த சான்றோர் நுண்ணிய வாகிய கேள்வியை யுடையவர் அல்லது மற்று

உரைக்கும்

ஏனையோர்

பலரிடத்தும் தாழ்ந்த சொல்லின ராதல் பெரிதும் அரிது எ - று.

நுணங்கிய என்பது நுண்ணிமை என்பது.

(ப - உ.) எ - து.—நுண்ணிதாகிய கேள்வியுடையர் தாழ்ந்த சொற்கூறும் நாவுடைய ராத லில்லை எ - று.

அல்லாதார்

இது கேள்வி யுடைய ராயின் பிகை சொல்லா

றென்றது. (5) கா. 6.

ப. 6.

பிழைத்துணர்ந்தும் பேதைமை
தீண்டிய கேள்வி யவர்.

சொல்லா ரிழைத்
[துணர்ந்

(கா - உ.) எ - து.—இவ்வுலகின்கண் தப்பியும் குறிக்கொண்டும் இருவாற்றானும் பேதைமை நிகழும் சொற்களைச் சொல்லுவது இலர்: மற்று யாரோ எனின், யாம் சான்றோருழைச் சென்று நல்லன கேட்க வேண்டு மென்று கருதிக் கொண்டு பலநாளும் கேட்டுத் தொக்க தொகையாக் கேள்வியை உடையவர் எ - று.

(ப - உ.) எ - து.—ஒரு பொருளைத் தப்ப உணர்ந்தாலும் அறியாமை யாயின சொல்லார்: ஆராய்ந்துணர்ந்த நிரம்பிய கேள்வியை உடையார் எ - று.

இது கேட்டறிந்தார் அறியாமை சொல்லார்
என்றது. (6) கா. 7.

ப. 9.

செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்க
ளவியினும் வாழினு மென்.

(கா - உ.) எ - து.—சான்றோரால் தம்

செவியிற் சொல்லுவ தாகிய கேள்விச் சுவையை நுகர்ந்தறியா மாந்தர் ஆகலான், வெறும்

8



வாயுணவினையே ஓர் உணவாக மதித்திருக்கின்றவர் மாய்ந்தால் சேதமும், இருந்தால் வரும் இலாபமும் என் உலகோர்க்கு எ -

வரும்

று.

(ப - உ.) எ - து.—செவியால் நுகரும் இன்பத்தை அறியாது வாயால் நுகரும் இன்பத்தை அறியும் மக்கள் செத்தால் வரும் தீமை யாது? வாழ்ந்தால் வரும் நன்மை யாது உலகத்தார்க்கு? எ - று.

இது கேள்வி யில்லாதார் பிறர்க்குப் பயன்படா ரென்றது. (7) கா. 8.

ப. 2.

செவிக்குண வில்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கு மீயப் படும்.

(கா - உ.) எ - து.—செவிக்கு அமுத மாகிய னது சான்றோருழைக் கிடையாத போழ்தின்கண் கும் உணவு அளிக்க அடுக்கும் எ - று.

கேள்வி யுணர்வா
சிறிதே வயிற்றுக்

(ப - உ) எ - து.—செவிக்கு உணவாகிய
பொழுது வயிற்றுக்குச் சிறிது உணவு கொடுக்கத்

கேள்வி இல்லாத
தரும் எ - று.

சிறிது உணவு என்றார், பெருக உண்ணின் கேள்வியை விரும்பாது காம நுகர்ச்சியை விரும்பு மாதலான். மேற் கேள்வி வேண்டு

மென்றார்: இஃது ஒருகால் கேட்டுவிட அமையுமோ என்று ஐயுற்றார்க்கு, எல்லாக் காலமும் கேட்க வேண்டுமென்று கூறப்பட்டது. (8)

கா. 9.
ப 8.

செவியுணவிற் கேள்வி யுடையா
ரவியுணவி
னான்றாரோ டொப்பர் நிலத்து.

(கா - உ.) எ - து.—இவ்வையகத்துத் தம் செவிக்கு அமுதமாகிய கேள்வியினை உடையார் யாரை ஒப்பாரெனின், அவியுணவினர் ஆகிய அமரரோடு ஒப்பாகி ஈண்டு மக்களில் இவர்க்கு ஓர் நிகர் இல்லை எ - று.

(ப -
யவர்கள்

உ.) எ - து.—செவிக்கு உணவுபோன்ற கேள்வி உடை நிலத்தின் கண்ணே இருப்பினும் அவியை உணவாக உடைய தேவரோடு ஒப்பர் எ - று.

இஃது எல்லாரானும் நன்கு மதிக்கப் படுவரென்றது. (9) கா. 10.

ப. 3.

எனைத்தானு நல்லவை கேட்க
வனைத்தானு
மான்ற பெருமை தரும்.

(கா - உ.) எ - து.—எவ்வளவைத்தேனும் சிறிது என்று இகழாது சான்றோருழைச் சென்று நல்லவற்றிலே சிலகேட்டுக் கொள்க. 5.



அது சிறிதே யாயினும் ஒருவர்க்குப் பெரிய உபதேசமாய் முடியும் ஆகலான் அமைந்த பெருமைய ஆகிய முத்தியைக் கொடுக்கும் எ - று.

(ப - உ.) எ - து.—யாது ஒன்று ஆயினும் நல்ல நூல்களைக் கேட்க: அக்கேள்வி அவ்வளவிற்றே ஆயினும் நிரம்பின பெருமை யைத் தரும் எ - று.

இஃது எல்லாக் காலமும் கேட்டில ராயினும் நல்லது கேட்க வேண்டும் என்றது.

கேட்கும் காலத்து
(10)

(கா - உ.) இனிமற்று உலகத்து அரசர்க்கும் பிறர்க்கும் இக்கல்வியும் கேள்வியும் சிறந்த ஞானத்தைப் பயக்கும் ஆகலான் மற்று இதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது பேலே அதிகாரம்.

## 5. அறிவுடைமை.

(ப - உ.) எ -
னது என்பதூஉம்

து.—அறிவுடைமையாவது அறிவாவது இன் அதனுடைய பயனும் கூறுதல். இது கல்வியும் கேள்வியும் உடையர் ஆயினும் கேட்ட பொருளை உள்ளவாறு அறிந்து உணர்தல் வேண்டுமாதலின் அதன்பிற் கூறப்பட்டது.

கா. 1. ப. 1.

அறிவுடையா ரெல்லா முடையா
ரென்னுடைய ரேனு மிலர்.

ரறிவில்லா

(கா - உ.) எ - து.—கற்றும் கேட்டும் கசடு அற்ற அறிவுடையோரை மற்று எல்லாம் உடையரென்று உணரப்படும் ஆகலான் மற்று அங்ஙனம் தெளிந்த அறிவிலாதார் வேறு யாதானு.........

........................

(ப - உ.) எ - து.—அறிவினை உடையார் ஆயினும் எல்லாம் உடையர், அறிவில்லாதார் உடையர் ஆயினும் இலர் எ - று.

யாதொன்றும் இலர்
எல்லாப் பொருளும்

ஆதலான் அறிவுடைமை வேண்டுமென்றது.

(1) கா. 2.

ப. 3.

உலகந் தழீஇய தொட்ப மலர்தலுங்
கூம்பலு மில்ல தறிவு.

(கா - உ.) எ - து........................
மலர்தலும் குவிதலும் என்னும் இரண்டும் இல்லது யாது: மற்று அதுவே அறிவாவது எ - று.



தழீஇயது என்பது பெரியவர்

தழுவியென்றது—ஒட்ப.........

(ப - உ.) எ - து.—ஒருவனுக்கு ஒள்ளிமை யாவது உலகத்தோடு பொருந்தினது. அதனை நீர்ப்பூப் போல மலர்தலும் குவிதலும் இன்றி ஒரு தன்மையாகச் செலுத்தல் அறிவாவது எ - று.

இஃது உயர்ந்தாரோடு நட்புப் பண்ணுதலும்

அறிவு என்றது.(2)

கா. 3.

ப. 2.

எவ்வ துறைவ துலக முலகத்தோ
டவ்வ துறைவ் தறிவு.

(கா - உ.) எ - து.—இவ்வுலகத்து நீதிப்பொருள் உடையர் ஆகிய நற்பெருங் குலத்தோர் எவ்வகையது ஆகிய நயத்தோடு ஒழுகுவது மற்று அவ்வகை..........யென்றும் குறிக்கொண்டு நடப்பதே அறிவாவது எ - று.

உலகம் என்பது உயர்ந்தோர்.

(ப

ரோடு

- உ.) எ - து.—யாதொரு வாற்றான் ஒழுகும் உலகம்: அவ டத் தானும் அவ்வாற்றான் ஒழுகுதல் அறிவாவது எ - று.

அறிவு என்பது எத்தன்மைத்து என்றார்க்கு முற்பட
ரோடு பொருந்த ஒழுகுதல் அறிவு என்று கூறப்பட்டது.

உயர்ந்தா
(3) கா. 4.

ப. 4.

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு
மெய்ப்பொருள் காண்ப தறிவு.

மப்பொருண்

(கா - உ.) எ - து.—யாதானும் ஒருபொருளைக் கீழ்ச்சொன்ன தம்மாபின் உயர்ந்தோர் மாட்டுக் கேட்பினும் கேட்க: மற்று வினை இழிந்தோரிடத்துக் கேட்பினும் கேட்க: தாம் கேட்கின்ற பெரும் பொருளின்கண் சிறிதும் குல வேற்றுமை இல்லாமையான் அவர் உரைக்கும் பெரும்பொருளின் உண்மையைத் தெரியக் காண்பதும் மற்று வினைய சிறுபொருளை விரும்பாது விடுதலுமே அறிவினது இயல்பு எ - று.

(ப - உ.) எ - து.—யாதொரு பொருளை யாவர் சிலர் சொல்லக் கேட்பினும் அப்பொருளினது உண்மையை ஆராய்வதே அறிவாவது எ - று.

யாவர் சிலர் நட்டார் ஆயினும் பகைவர் ஆயினும் இது வாற்றால் தெளியாது ஆராய்ந்து துணிதல் அறிவு என்றது.

கேட்ட

## 5. அறிவுடைமை

21

கா. 5.
ப. 5.

எண்பொருள வாகச் செலச்சொல்லித்
றுண்பொருள் காண்ப தறிவு.

தாம்பிறர்வாய்

(கா - உ.) எ - து.—தாம் சொல்லும் சொல்லின் நுண்ணி மையை மற்று எப்பெற்றியோரும் நெஞ்சினல் தேர்ந்து உணரும் பொருளாகவும் சொல்லி மற்று அதுவேயும் அன்றி அதனைக் கேட்

யோர் செவிக்குப் பெரிதும் இனிது ஆகவும் சொல்லிப் பின்னும் தாம் பிறர் வாய்ச்சொற்களில் தீர்ந்த நுண்ணிய பொருளையும் அங் ஙனம் காண வல்லது யாது? மற்று அதுவே அறிவாவது எ - று.

ச ளோ

(ப - உ.) எ - து.—அறிதற்கு அரிய பொருள ஆகிய எளிய பொருள ஆம்படி பிறர் இயையச் சொல்லிப் பிறர்

சொற்
சொல்
லும் சொற்களின் நுண்ணியதாய பொருளை அவர் சொல்லுமாற்றனே காண்பது அறிவாவது எ - று.

இது சொற்பொருள் காண்டல் அறிவு என்றது.

கா. 6.

ப. 8.

அறிவுடையா ராவ தறிவா ரறிவிலா
ரஃதறி கல்லா தவர்.

(கா - உ.) எ - து.—உலகத்து அறிவுடையோர் என்று சொல்லத் தகுவார் யாரோ எனின், கீழ்ச்சொன்னவழி வேற்றுமைகள் எல்லாவாற்றானும் தெரிந்து தமக்கு இருமை ஆக்கமும் ஆவதனை அறிந்து ஒழுகுவாரே: ஆதலால் அதனை அங்ஙனம் தெரிந்து அறிய வல்லாதார் யாவர்? மற்று அவரே பெரிதும் அறிவிலாதார் எ - று.

(ப - உ.) எ - து.—அறிவுடையார் ஆவார் பிற்பயக்குமது அறிவார்: அறிவில்லாதார் ஆவார் அதனை அறியாதார் எ - று.

மேற்சொல்லிச் சொல்லாதன எல்லாம் தொகுத்துக் இத்துணையும் அறிவு இலக்கணம் கூறப்பட்டது.

கூறிற்று.
(6)

கா. 7.

ப. 7.

அஞ்சுவ தஞ்சாமை பேதைமை யஞ்சுவ
தஞ்ச லறிவார் தொழில்.

\

(கா - உ.) எ - து.—கீழ்ச்சொன்ன இருவகை மாபின் புறத்தன எல்லாம் பெரிதும் அஞ்சத்தகும் அன்றே : மற்று அதனை அஞ்சாமை பேதைமை எனவே அதன்கண் சேறலே அறியாமையாவது. இனி அஞ்சத் தகுவதனைப் பெரிதும் அஞ்சுவது அறிவார் தொழில் எனவே அதனிற் செல்லாது மாபிற் சேறலே அறிவுடையாரது செய்தி எ - று.



(ப - உ.) எ - து.—அஞ்சத் தகுவதனை

அஞ்சாது ஒழிதல் ஒருவற்கு அறிவின்மையாவது.
வார் தொழிலாவது எ - று.

அஞ்சத்தகுவதனை அஞ்சுதல் அறி

மேல் அஞ்சாமை வேண்டுமென்றார்;
வனைவற்றுக்கு அஞ்சுதல் அறிவு என்றார்.

ஆயினும் அஞ்சவேண்டு
(7)

க.ர. 8.

ப. 9.

அறிவற்றங் காக்குங் கருவி
முள்ளழிக்க லாகா வரண்.

செறுவார்க்கு .

(கா - உ.) எ - து.—அரசர்க்கு ஆனை குதிரை தேர் காலாள் என்னும் காற்பெரும் சிறையும் அரண் அன்று : தமக்கு இங்ஙனம் சிறந்த அறிவு யாது? அதுவே தமக்கு ஓர் இடையூறு வரும்வழி பாதுகாக்கும் படையாவது : அதுவும் அன்றிப் பின்னும் பகைவேர் தர்க்கும் உள்புக்கு அழித்தல் அரிதாய அரண் ஆவதும் அதுவே எ - று.

(ப - உ.) எ - து.—ஒருவனுக்குக்
வது : அறிவு பகைவரால் உள்புகுந்து

குற்றம் காக்கும் கருவியா
அழிக்கல் ஆகாத அரணும்
அதுதானே எ - று.

இது
திமையைக்

தனக்குள்ள குற்றத்தை மறைக்கும் என்றும்,
காக்கும் என்றும் அறிவாற் பயன் கூறிற்று.

பிறரால்

(8) கா. 9.

ப. 10.

எதிரதாக் காக்கு மறிவினார்க் கில்லை
யதிர வருவதோர் நோய்.

(கா - உ.) எ - து.—மேல்வரும் காரியத்தின் நலமும் தீங்கும் சீர் தூக்கி நல்லனவற்றின் வழி இடம் படுத்தித் தீயனவற்றைத் தெறும் வழி நோக்கியும் இங்ஙனம் அவை அவை கருமத்தைப் பெற வந்த இடத்து மயங்குதல் அன்றியே எதிரதாக் காத்து ஒழுகும் அறிவுடையார்க்கு எஞ்ஞான்றும் இல்லை, தமது உள்ளம் துணுக்குற வருவது ஓர் இடர் எ - று.

(ப - உ.) எ - து.—துன்பம்
என்று நினைத்துக் காக்கும் அறிவை
ஒரு துன்பமும் இல்லை எ - று.

வருவதற்கு முன்னே வரும்
உடையார்க்கு நடுங்க வருவது முன்னே
தாக வாராது

வினையான் வரும் துன்பமும் முற்படக் காக்கின்
என்பது.
கடி
(9)

6. குற்றங்கடிதல் 23

கா. 10.

ப. 6.

சென்ற விடத்தாற் செலவிடா
நன்றின்பா லுய்ப்ப தறிவு.

தீதொரீஇ

(கா - உ.) எ - து.—..............வேக முடைமை னெஞ்சிற்கு இயல்பு ஆகலான் அங்ஙனம் அஃது ஓடியவழி ஓட விட்டுக் கெடாது மற்று அதனை ஒழித்தல் அவ்வுள்ளத்தை நன்மை..........

(ப - உ.) எ - து.—உள்ளம் சென்ற இடத்தே உடம்பையும் செல்ல விடாது தீமையை நீக்கி நன்மைப் பகுதியிலே செலுத்துவது அறிவாவது எ - று.

இது காம நுகர்ச்சியின்கண் பழியும் வாராமல் செலுத்துவது அறிவு என்றது.

பாவமும் பொருட்கேடும்

(10)

(கா - உ.) ஆகலான் மக்கட்கு அறிவுடைமையின் பேறுவது இங்ஙனம் குற்றத்தின் ஒரூஉவுதலும் குணத்தின் கடத்தலும் அன்றே: அதனான் இதன்பின் அதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 6. குற்றங்கடிதல்.

(ப - உ.) எ - து.—குற்றங் கடிதலாவது

காமக் குரோத லோப மத மானம உவகை எனறும
ஆறு குறறமும கடிநது ஒழுகுதல வேண்டும் என்று
அதன்பிற் கூறப்பட்டது.

கா. 1.

ப. 2.

செருக்குஞ் சினமுஞ் சிறுமையு மில்லார்
பெருக்கம் பெருமித நீர்த்து.

(கா - உ.) எ - து.—செருக்கு முதலாகச் சொன்ன மூன்று குற்றமும் தம..........................ாக்கமானது பெரிய மேம்பாட்டுத் தன்மையின் உடைத்து எனவே மற்று வனை ஆக்கத்தை ஒன்றுகக் கருதார் உயர்ந்தோர் எ - று.

(ப - உ.) எ - து.—பிறர்மனை நயத்தலும் வெகுளியும் சிறியார் செய்வன செய்து ஒழுகலும் இல்லாதார் ஆக்கம் தலையெடுக்கும் நீர்மையை உடைத்து எ - று.

பிறர்மனை நயத்தல் செருக்கினால் வருதலின் செருக்கு என்றார். சினம் குரோதத்தால் வருதல், சிறியார் செய்வன செய்தலாவது காமநுகர்ச்சியும், சூதும், கள்ளும், வேட்டையும் முதலானவற்றின்

மிக்கொழுகுதல். இதனை வடநூலார் இந்திரிய சயமின்மை என்பர். இவை பெரியாரால் கடியப்படுதலின் சிறுமை என்றார். இவை மூன்று குற்றமும் இல்லாதார் ஆக்கம் உடையார் என்றதனாலே இவை உடை

யார்க்குக் கேடு வரும் என்றவாறாயிற்று. பிறர்மனை நயத்தலாற் கெட்டான் இராவணன். வெகுளியாற் கெட்டான் சௌமேதயன். நகர்ச்சியாற் கெட்டான் சச்சந்தன்.

கா. 2.

ப. 3.

இவறலு மாண்பிறந்த மானமு மாணு
வுவகையு மேத மிறைக்கு.

(கா - உ.) எ - து.—பலர்க்கும் உபகரிக்குமதை உபகரியாது உலோபித்தலும் மற்றும் நன்மையின் நீங்கிய மானக் கேடும் தகாதவற்றைக் காத்தலும் என்னும் இவை மூன்றும் குற்றமே வேந்தர்க்கு எ - று.

இவறல் என்பது உலோபித்தல். இறத்தல் - கடத்தல்.

(ப - உ ) எ - து.—உலோபமும் நன்மையைக் கடந்த மான மும் நன்மையைத் தராத மகிழ்ச்சியும் இம்மூன்றும் குற்றம் ஆம்

அரசாகரு எ - று.

பொதுப்படக் கூறுது அரசர்க்கு என்றமையாற் பெரும்பான்மையும் அரசர்க்கு வேண்டுமென்பது கருத்து. உலோபம் இரண்டு வகைத்து: தனக்கு முறைமை அல்லாத பொருளை விரும்புதலும் உண்டான பொருளை விடாமையும்: அஃது ஆமாறு பின்பே கூறப்படும். மாண்பு இறந்த மானம் ஆவது தொடங்கின வினை நன்மை பயவாது ஆயினும் அதனை விடாதொழிதல், இதனாற் கெட்டான் துரியோதனன். மாணு உவகையாவது எளியாரை அடர்க்கையாற் பிறந்ததொரு மகிழ்ச்சியால் வலியார் மாட்டும் சொல்லுதல். இதனாற் கெட்டான் வாதாபி. (2)

கா. 3. ப. 5.

பற்றுள்ள மென்னு மிவறன்மை
மெண்ணப் படுவதொன் றன்று.

யெற்றுள்ளு

(கா - உ.) எ - து.—எய்திய செல்வம் யாவர்க்கும் ஈயாது இறுகப் பற்றுதலை நெஞ்சினால் நினைக்கக் கடவது அன்று என்று ஈதலுடையவன் தகுதியாகிய நன்மையை யற்று யாதானும் ஒரு நன்மையுள்ளும் வைத்து எண்ணப் படுவதற்கு ஓர் இணையில்லை ஆகலான் இவறுதல் பெரிதும் குற்றம் என்று பொருள் ஆயிற்று எ - று.

(ப - உ.) எ - து.—கூடிய பொருளை விடாமையாகிய உலோபம் யாதொன்றனுள்ளும் எண்ணப்படுவது ஒன்று அன்று எ - று.

இது தனக்கும் பிறர்க்கும் பயன்படாமையால் பொருளாக மதிக்கப்படாதென்றது.

கா. 4.
ப. 4.

செயற்பால செய்யா திவறியான் செல்வ
முயற்பால தன்றிக் கெடும்.

(கா. - உ.) எ - து—.தனக்கு எய்திய பொருள் கொண்டு அதனாற் செய்தற்பாலன ஆகிய நல்வழக்கம் செய்யாது உலோபியவனது செல்வமானது கெடுவுழிப் பின் ஒருகால் இவனுக்கு உய்தற் பகுதியாம் குறியின்றிச் செலவறக் கெட்டு விடும் எ - று.

(ப - உ.) எ - து.—செய்யும் முறைமை செய்யாதே ஈட்டுதற்கு விரும்பினவனும், அவனது செல்வமும் உய்யும் பகுதி இன்றிக் கெடும் எ - று.

கெடும் என்பதனை இரண்டிடத்தும் கூட்டுக.

இது பிறர்பொருளை விரும்பினால் வரும் குற்றம் கூறிற்று. இதனாற் கெட்டான் புரூரவா என்றவாறு.

(4) கா. 5.
ப. 8.

வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை
வைத்தூறு போலக் கெடும்.

யெரிமுன்னர்

(கா - உ.) எ - து.—சிறிதேனும்
குற்றமானது வந்தெய்துவதன் முன்னமே
உற்றுணர்ந்து தம்பால் வாராமல் பரிகரிக்க மாட்டா
னது செல்வமானது மற்று எரி முன்னர்ப்பட்ட
வைக்கோல் போர் போலக் கெடும் எ - று.

(ப - உ.) எ - து.—துன்பம் வருவதன் முன்னர் அதற்குத் தக்கது அறிந்து காவல் செய்யாத அரசனது செல்வம் எரியின் முன்னர்க் கிடந்த வைத்திரள் போலக் கெடும் எ - று.

முந்துற்றுக் காவல் செய்ய வேண்டுவன
மென்றது.

செய்யாமையும் குற்ற கா. 6.
(5)

ப. 7.

காதல காத லறியாமை யுய்க்கற்பி
னேதில வேதிலார் நூல்.

(கா - உ.) எ - து.—பொன்னும் யானையும்

*நாடும் மற்றும் பிற வும் ஆகிய பொருள்களில்*
*யாவை சிலவற்றைத் தாம் காதலித்தார்,*
*அதைத்தானும் பிறர் ஒருவரும் அறியாதபடி தம் அகத்துள் அடக்கிச் செலுத்த வல்லவர் ஆயின் தாம் விரும்பின பொருள் எய்தும்: இதுவும் அன்றிப் புறத்தனவாகியே போம்: யாவை எனின், மற்றுத் தாம் தாற்பரித்த பொருளைத் தலையழிதற்கு எதிலார் எண்ணிய எண்ணங்கள் எ-,று.*

4



(ப-உ.) எ-து.—*காதலிக்கப் பட்டவற்றின் மேற்செல்லுங் காதலைப் பிறர் அறியாமல் செலுத்துவனுயின், பகைவர் இவனைக் கொள்ளுமாறு சிந்திக்கும் சிந்தனை இவன் மாட்டுச் செல்லாது அயலாம் எ-று.*

*நூல் என்பது அவ்வேதிலாாது சித்தம். அதனாலேயே சிந்திக்கின் நூல் என்றார். இது மேற்கூறிய குற்றமே அன்றி அறம் பொருள் இன்பத்துக்கு மாறுகாத பொருள்கள் மேற்செல்லும் ஆசையைப் பிறர் அறியின் அதுவே வாயிலாக வஞ்சிப்பர் ஆதலான் அக்காதலை அடக்காமையும் குற்றமென்று கூறப்பட்டது. வத்தராயன் யானை பிடிக்கப்போய்ச் சிறைப்பட்டான்.* (6)

கா. 7. ப. 9.

*தினைத்துணையாங் குற்றம் வரினும்*
*பனைத்துணையாக்*
*கொள்வர் பழிநாணு வார்.*

(கா - உ.) எ - து.—குணப்பயன் அறியும் குணமுடையோர் தினை அளவாகிய சிறிது குற்றம் ஒருகால் வருவதாயினும், அதனைப் பனை அளவாகும் குற்றமாகக் கொள்வர்: குற்றத்துக்கு நாணும் அறிவுடையோர் எ - று.

(ப - உ.) எ - து.—தினை அளவு குற்றம் வந்ததாயினும் இவ வளவிற்று என்று மேற்கூறியவே அன்றி உளதாகும் குற்றமும் கடிய வேண்டுமென்றது எ - று. (7)

கா. 8. ப. 1.

குற்றமே காக்க பொருளாகக் குற்றமே
யற்றந் தரூஉம் பகை.

(கா - உ.) எ - து.—இவ்வுலகத்து அரசருள்ளார் தமக்கு ஒரு குற்றம் நிகழாமல் கருதிப் பரிகரித்துக் கொள்க: மற்று இதுதானே பொருளாகக் கொண்டு ஒழுகின் மற்று அக்குற்றம் தானே, தமக்கு ஆபத்தைத் தருவதாகிய பகை எ - று.

(ப - உ.) எ - து.—தமக்குப் பொருளாகக் குற்றம் காக்க: அக்குற்றம்தானே இறுதியைத் தரும் பகையாம்

வாராமல்
ஆதலான்
எ - று.

இது குற்றம் கடிய வேண்டு மென்றது.

(8) கா. 9.

ப. 10.

தன்குற்ற நீக்கிப் பிறர்குற்றங் காண்கிற்பி
னென்குற்ற மாகு மிறைக்கு.

## 7. பெரியாரைத் துணைக்கோடல்

27

(கர - உ.) எ - து.—முன்னம் தனது குற்றமுள்ளன பலவும் தான் அறிந்து நீக்கித் தான் தூயனாய்ப் பின்பு பிறரது குற்றங்களை நோக்கிப் அக்குற்றங்களை ஒழிப்பதாக நினைக்குமாகின் பின்பு என்ன குற்றம் உளதாகும் அரசர்க்கு எ - று.

(ப - உ.) எ - து.—தன்
மாட்டுள்ள குற்றத்தை ஆராய

மாட்டுள்ள குற்றத்தை நீக்கிப் பிறர்
வல்லனாயின் அரசனுக்கு என்ன குற்
றம உளதாம எ - று.

இது
மாட்டுள்ள

தன் மாட்டுள்ள குற்றத்தை நீக்குதலே அன்றிப்
குற்றங்களும் கடிய வேண்டு மென்றது.

பிறர்
(9) கா. 10.

ப. 6.

வியவற்க வெஞ்ஞான்றுந் தன்னை நயவற்க
நன்றி பயவா வினை.

(கா - உ.) எ - து.—வேந்தனானவன் எஞ்ஞான்றும் தன்னைத் தானே, பெருமிதம் கருதற்க. மற்று இதுவும் அன்றித் தனக்கு இருமைக்கும் நன்மை பயவா....................தொழிக எ - று.

(ப - உ.) எ - து.—எல்லா நாளும் தன்னைப் தொழிக : வியக்தாலுயினும் அவ்வியப்பினானே வினையைச் செய்யாதொழிக எ - று.

பெரியனாக வியவா
நன்மை பயவாத்

செய்யின் கேடுதரும் என்றவாறுயிற்று.
இதனாற் கெட்டான் கார்த்த வீரியார்ச்சுனன்.

இதனை மதமென்ப.

(கா - உ.) இனித்தாமே இங்ஙனம் குற்றம் கடிந்து ஒழுகினும் மற்று அக்குற்றமும் குணமும் தெரிந்துணரும் கற்றுணர்ந்த பெரியோர் இவ்வாறு தமக்குத் துணையாக வேண்டும் என்று உண்டாகலான் மற்று அதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 7. பெரியாரைத் துணைக்கோடல்.

(ப - உ.) பெரியாரைத் துணைக்கோடலாவது தம்மின் முதிர்ந்த அறிவுடையாரைத் தமக்குத் துணையாகக் கொள்ளுதல், அரசன் குற்றம் அற்றானாயினும் தன்னின் முதிர்ந்த அறிவுடையாரைத் துணையாகக் கொண்டு வினைசெய்ய வேண்டுதலின் அதன்பிற் கூறப்பட்டது.

கா. 1.

ப. 1. அரியவற்று ளெல்லா மரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்.



(கா - உ.) எ - து.—மேற்சொன்ன கல்வியும் கேள்வியும் அறிவுடைமையும் குற்றங் கடிதலும் பிறவும் ஆகிய செயற்கரிய எல்லாவற்றுள்ளும் பெரிதும் அரிது யாது எனின், முழுதும் உணர்ந்த பெரியோரை ஓம்பித் தமக்குத் துணையாகக் கோடல் எ - று.

தல்

(ப - உ.) எ - து.—செய்தற்கு அரியன எல்லாவற்றினும் அரிது தம்மின் முதிர்ந்த அறிவுடையாரை விரும்பித்

செய்
தமக்
குச் சுற்றமாகக் கூட்டிக் கொள்ளுதல் எ - று.

பெரியார் என்றது மந்திரி புரோகிதரை:
:தல் அரிது என்றது.

அவரைத் தேடிக் கூட்டு கா. 2.

(1)

ப. 4.

சூழ்வார்கண் ணாக வொழுகலான்
சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்.

மன்னவன்

(கா - உ.) எ - து.—மறைமுதல் ஆக இராச நீதிக்கு அடுத்த முறை நெறியும் நெறி அல்லதும் பிரித்து ஆராயினும், பெரியோரைத் தனக்கு அவற்றை விளக்கக் காட்டும் கண்ணாகக் கொண்டு ஒழுக வேண்டுதலான் உலகத்து மன்னனானவன் அங்ஙனம் அவற்றைப் பழுதறத் தேரும் பெரியோரைத் தான் ஆராய்ந்து கைக்கொள்க எ - று.

(ப - உ.) எ - து.—அரசன் தன்னைச் சூழ்ச்சியாற் கொள்ள நினைப்பத் தானும் சூழ்ச்சியாற் கொள்ள வல்லனாதல்: காரியம் எண்ண வல்லார் தனக்குக் கண்ணாக ஒழுகலானே எ - று.

பகைவர் சூழ்ச்சியால் தேற்றுமையால் அவரைத் தோள்வலி யாற் கோடல் அரிதாம் ஆகலாற் சூழ்வார் கண்ணாக ஒழுக வேண்டும் என்றது. (2)

கா. 3. ப. 3.

அறனறிந்து மூத்த வறிவுடையார்
திறனறிந்து தேர்ந்து கொளல்.

கேண்மைத்

(கா - உ.) எ - து.—இவ்வாறு பெரியோரை இவ்வரசர்க்குத் துணைகொள்ளும் இடத்துப் பல அறநூல்களாலே அறநெறிகளை அறிந்து முதிர்ந்த உணர்வுடைய
டினை அறிந்து மற்று இதற்குக்
கொள்க எ - று.

பெரியோரது நட்பின் திறப்பாட் (ப - உ.)
குறைபடாதவாறு தெரிந்து கைக் வுடையாரது

எ - து.—அறத்தின் பாடு
கேண்மையை அவரவர்

அறிந்து முதிர்ந்த அறி
செய்தியாகிய திறன்களை

அறிந்து ஆராய்ந்து கொள்க எ - று.

## (3) 7. பெரியாரைத் துணைக்கோடல்

29 கா. 4.

ப. 10.

தம்மிற் பெரியார் தமரா வொழுகுதல்
வன்மையு ளெல்லாந் தலை.

(கா - உ.) எ - து.—குலத்தானும் குணத்தானும் கல்வியானும் தம்மின் சிறந்த பெரியோரை இவ்வரசர்க்குத் துணையாகக் கொண்டு ஒழுகுதலே வன்மையுள் எல்லாம் தலைப்பாடுடைய வலிதாவது எ - று.

(ப - உ.) எ - து.—தம்மின் மிக்க
குத் தமராகி ஒழுகுதல் வலியானவை
வலி எ - று.
அறிவை உடையார் தமக்
எல்லாவற்றினும் தலையான

இவர்கள் உண்டாகவே யானை குதிரை படையினல் வலியினும் மிக வலியுடையவ னுவன் என்றது.

உண்டான

பிரதிபேதம் : " தபோதனர் தம்மோடே

கட்பாக ஒழுகுதல் தமக்கு உள்ள வரிசை
றும் உண்டு.

எல்லாவற்றினும் தலை" என்றவாறு என் கா. 5.
(4)

ப. 6. இடிக்குந்
துணையாரை யாள்வாரை யாரே
கெடுக்குந் தகைமை யவர்.

(கா - உ.) எ - து.—மறந்தும் உணர்ந்தும் தகாதன செய்யு மிடத்து நமக்கு இது இயல்பல்ல என்று கழறி நெருக்கும் பெரியோரை ஆள்வாரை மற்று யாரேதான் வந்து கெடுக்கும் தகைமைப் பாட்டினை உடையார்? யாரும் இல்லை எ - று.

(ப - உ.) எ - து.—குற்றம் கண்டால் கழறும் தன்மை உடையாரைத் தமக்குத் தமராகக் கொள்ள வல்லவரைக் கெடுக்கும் தகைமை உடையர் இவ்வுலகத்து யார்? எ - று.

இது கேடில்லை என்றது: இதனானும் தம்மிற் பெரியாராக மதித்து வைக்கப்படு மென்று கண்டு கொள்க.* (5)

கா. 6.

ப. 9. இடிப்பாரை யில்லாத வேமரா
மன்னன்
கெடுப்பா ரிலானுங் கெடும்.

(கா - உ.)
மிடத்துக் கழறி

எ - து.—தனக்குத் தகாதன காரியங்கள் செய்யு நெருங்கும் பெரியோரைத் தனக்கு இல்லாததனுன்

நல்லுறுதி பெருத வேந்தன் மற்றுத்
இல்லை யாயினும் தனது மறவியாலும்
தானே கெடும் எ - று.
தன்னைக் கெடுப்பார் ஈண்டு
செல்வச் செருக்கினுலும் 30

திருக்குறள் - பொருட்பால்

(ப - உ). எ - து.—கழறுவாரை இல்லாத காவல் இல்லாத அரசன் தன்னைப் பகைவர் வந்து கெடுப்பார் இல்லை யாயினும் கெடும்: தான் வேண்டியவாறு ஒழுகி. எ - று. (6)

கா. 7.

ப. 5.

தக்கா ரினத்தனுய்த் தாமுெழுக
செற்ருர் செயக்கிடந்த தில்.

வல்லானைச்

(கா - உ.) எ - து.—தமது அறிவு மிகுதியால் தகாதனவற்றுக்கு இடிக்கத் தகும் சான்றோர் இனத்தனாய்க் கொண்டு இங்ஙனம் தான் ஒழுக வல்லவனை வேறு பகைவரால் செய்து முடிப்பக் கிடந்தது யாதும் இல்லை எ - று.

(ப - உ.) எ
அவரோடு ஒக்க

- து.—தகுதி உடையார்க்கு இனவனாய்த் தானும் ஒழுக வல்லானைப் பகைவர் செய்யக் கிடந்தது ஒரு நெறி இல்லை எ - று.

தகுதியுடையார்க்கு இனவன் ஆதலாவது, தன்னோடு ஒத்த வரிசை அவர்க்கு உண்டாக்குதலும் தன்னைக் கண்டாற் போல அவரை உலகத்தார் மதிக்கப் பண்ணுதலும். ஒக்க ஒழுகுதலாவது—ஒத்த சூழ்ச்சி உடையனாதல். இவனைப் பகைவரால் வெல்ல ஒண்ணாதென்றது. (7)

கா. 8. ப. 8.

பல்லார் பகைகொளலிற் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர்கை விடல்.

(கா - உ.) எ - து.—தான் தனியனாயிருந்து அளவிறந்த பலரோடும் பகை கொள்வதனினும் நூறு மடங்கு குற்றத்தை உடைத்து இங்ஙனம் தெரிந்துணர வல்ல பெரியோரைத் துணையாப் பெற்று வைத்தும் அவரது தொடர்ச்சியைத் தாம் கைவிடுதல் எ - று.

(ப - உ.) எ - து.—பலரோடு பகைகொண்டான் எவ்வளவு துன்பமுறும்: அதனினும் பத்து மடங்கு துன்பமுறும் பெரியாரைத் துணையாகக் கொள்ளா தொழியின் எ - று.

இஃது இடுக்கண் வருமென்றது.

(8)

கா. 9. ப. 7.

முதலிலார்க் கூதிய மில்லை மதலையாஞ்
சார்பிலார்க் கில்லை நிலை.

(கா - உ.) எ - து.—முன்னம் தமக்கு கெஞ்சுறுகியாகிய முதற் பொருள்............மற்று அஃது அடியாக............பொலிந்து வரும்

8. சிற்றினஞ்சேராமை 31 லாபம்

யாதும் இல்லை யென்றார் : மற்று அதுபோலத் தமது

நீங்கி தளரா

மல் தாங்கும் தாணுவாகிய சார்வில்லாதார்க்கு நிலைஇல்லை எ - று.

(ப - உ.) எ - து.—முதல் இல்லார்க்கு இலாபம் இல்லை யாயி னாற் போலத் தாங்குதலாகிய சார்பு இல்லாதவர்க்கு நிலைநிற்றல் இல்லை எ - று.

பெரியாரைத் துணையாகக்
கூறுகின்றார் ஆதலின் முற்படக்
கூறினார்.

கொள்ளாதார்க்கு வரும் குற்றம்
பொருட்கேடு உண்டாம் என்று கா. 10.

(9)

ப. 2.

உற்றநோய் நீக்கி யுறு அமை முற்காக்கும்
பெற்றியார்ப் பேணிக் கொளல்.

(கா - உ.) எ - து.—வேந்தானவர் தாம் யாதானும் ஒரு வழி யால் உற்றது ஓர் இடரு............காக்கும் தன்மையார் ஆகிய பெரி யோரைப் பேணித் துணையாகக் கொள்க எ - று.

(ப

துன்பம்

- உ.) எ - து.—அரசற்கு உற்ற நோயை விடுவித்துப் பின்பு உறுமல் முன்பே காக்க வல்ல தன்மை உடையாரை விரும்பிக் கொள்க எ - று.

மேற் பெரியா ரென்று பொதுபடக் கூறினர் :
யைக் கூட்டுமாறு கூறிற்று.

அவருள் மந்திரி
(10)

(கா - உ.) இனி இங்ஙனம் தமக்கும் பெரியோர்............துணை யாகக் கொண்டோர்க்கும் மற்று இதுவேயும் அன்றித் தீவினையுளர் ஆகிய சிறியோரைச் சேர்ந்து ஒழுகாமையும்
வேண்டுமாகலின் மற்று
அதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 8. சிற்றினஞ்சேராமை.

(ப - உ.) சிற்றினம் சோமையாவது காமுகரும் சூதாடிகளும் பெண்டிரும் முதலாயினாரைச் சேர்ந்து ஒழுகினால் வரும் குற்றமும் சோமையால் வரும் நன்மையும் கூறுதல். பெரியார் துணையானு லும் சிறியார் இனத்தராய் ஒழுகின் அது தீமை பயக்கும் என்று அதன்பின் கூறப்பட்டது.

கா. 1. ப. 1.

## சிற்றின மஞ்சும் பெருமை

சிறுமைதான்
சுற்றமாச் சூழ்ந்து விடும்.

(கா - உ.) எ - து.—தமது நீதி நெறிக்குத் சிற்றினத்தை மருவுதற்கு அஞ்சுவர் பெரியோர்:

தகாதோர் ஆகிய
இனி மற்று அவ



சோடு ஒரு தன்மையாகிய சிறியோர் தமது கிளைஞர்

ஆக விசாரித்துக் கைக்கொண்டு விடுவர் என்பது பொருள் எ - று.
யார்

(ப - உ.) எ - து.—சிற்றினத்தாரை அஞ்சுவர் பெரியார்: அவர்களைச் சுற்றமாகக் கொண்டுவிடுவர் எ - று.

சிறி

இது பெருமை வேண்டுவார் கொள்ளார்
என்றது. (1) கா. 2.

ப. 6.

மனந்தூய்மை செய்வினை தூய்மை
யினந்தூய்மை தூவா வரும்.

யிரண்டு

(கா - உ.) எ - து.—உலகத்துப் பெரியோர் தமது மனம் தூய்மை உடைத்தாகலும் தம் செய்வினை தூய்மையாகலும் என இவை இரண்டும் தாம் இணங்கும் இனத்தின் தூய்மை காரணம் ஆக வரும் எ - று.

(ப - உ.) எ - து.—மனம்
நன்று ஆதலும் இரண்டும் இனம்

நன்று ஆதலும் செய்யும் வினை
நன்று ஆதலைப் பற்றி வரும் எ - று. டும்

இனிச் சேரமையால் வரும் நன்மை கூறுவார்
நன்றும் என்று கூறினர்.

(2) கா. 3.

ப. 8.

மனநலத்தா ஞுகு மறுமைமற் றஃது
மினநலத்தி னேமாப் புடைத்து.

(கா - உ.) எ - து.—தத்தம் மனத்தினது தூய்மையினாலே உள்தாகும் மறுமை. இனம் ஆன மற்றது தானும் இனத்தினது நன்மையினாலே பெரிதும் சேமத் திட்பம் உடைத்தாம் எ - று.

(ப - உ.) எ - து.—மன நன்மையானே மறுமைப் பயன் நன்றாம். இம்மனத்தின் நன்மையும் இன நன்மையாலே தீத்தொழிலிற் செல்லாமைக் காத்தலை உடைத்தாம் எ - று.

இது மறுமைக்குத் துணையாம் என்றது.

(3)

பா - ம். 'மனநலத்தி ஞுகு மறுமை யதுவும்'.

கா. 4.

ப. 7.

மனந்தூயார்க் கெச்சநன் றுகு
மினந்தூயார்க்

இல்லைநன் ருகா வினை.

(கா - உ.) எ - து.— உலகத்து மனம் தூயோர்க்கு மக்கட் பேறு முதலிய நன்மை உள ஆம்; மற்று அதனுடன் இனம் தூயார்க்கு நன்று ஆகாத காரியம் யாதும் இல்லை: எனவே அவர்க்கு எல்லா நன்மையும் உள, எ - று.

I

8. சிற்றினஞ்சேராமை 33

எச்சம் என்றது மக்கட்பேறு முதலிய

என்றது.

(ப - உ.) எ - து.—மனம் நல்லார்க்குத் தமக்குப் பின்பு நிற்கும் மக்கள் முதலான பொருள்கள் நல்லவாம்: இனம் நல்லார்க்கு நன்றாகாதது ஒரு வினையும் இல்லை எ - று.

இது மேலதற்குப் பயன் கூறிற்று.

(4)

கா. 5.

ப. 9.

மனநல நன்குடைய ராயினுஞ்
இனநல மேமாப் புடைத்து.

சான்றோர்க்

(கா - உ.) எ - து.—மனம் தூய்மை மிகவும் உடையர் ஆயினும் சால்புடையோர்க்கு மற்று அதனுடனே இனத்தினது நன்மை உளதாலல் தமக்குப் பெரிதும் இம்மை மறுமைக்கு ஏமாப்பு உடைத்து எ - று.

(ப - உ.) எ - து.—மன நன்மை மிகவும் உடையவர் ஆயினும் இனம் நன்மை உடைமை சான்றோர்க்குக் காவல் ஆதலை உடைத்து எ - று.

இனம் நன்று அல்ல ஆயின் பிறரால்
இகழ்ச்சி வாராமல் காக்கும் என்றது.

இகழப்படுவர் ஆதலான்

(5) கா. 6 .

ப. 10.

மனநல மன்னுயிர்க் காக்க மினநல

மெல்லாப் புகழுந் தரும்.

(கா - உ.) எ - து.—மனத்தின்
வருகின்ற உயிர்கட்கு ஆக்கம் ஆகும் :
அன்றி எல்லாப் புகழையும் கொடுக்கும்

தூய்மை உலகத்து மன்னி
மற்று இனநலம் அதுவேயும்
எ - று.

(ப - உ.) எ - து.—மனநன்மை நிலைபெற்ற ஆம். அதுபோல இனநன்மை எல்லாவற்றானும்

உயிர்க்கு ஆக்கம்
வரும் புகழினைத்
தரும எ - று.

இஃது எல்லாப் புகழும் தரும் என்றது.

(6) கா. 7.

ப. 3.

மனத்தானா மாந்தர்க் குணர்ச்சி யினத்தானா
மின்னா னெனப்படுஞ் சொல்.

(கா - உ.) எ - து.—தமது மனத்தின் நன்மை எவ்வளவு மற்று அவ்வளவும் உளது ஆம் மக்கட்கு அறிவானது : மற்று இதனுடனே மனத்தின் தூய்மை எவ்வளவு மற்று அவ்வளவும் நன்மைகளை உடையர் என்று யாவராலும் எடுத்து உரைக்கப்படும் புகழ்ச்சியை எ - று.

5



(ப - உ.) எ - து.—மாந்தர்க்கு அறிவு மனத்தினானே உண்டாம். ஆயினும் தாம் சேர்ந்த இனத்தினானே இனியர் அல்லர் என்று பிறர் பழிக்கப்படும் சொல் உண்டாம் எ - று.

இது பிறர் பழிக்கப்படுவர் என்றது.

(7) கா. 8.

ப. 5.

மனத்து ளதுபோலக் காட்டி யொருவர்க்
கினத்துள தாகு மறிவு.

(கா - உ.) எ - து.—ஒருவர்க்கு அறிவு உளதாவது மனத்தின் கண் ஆகலான் மற்று அம்மனத்து உளதாவது போலத் தோற்றியும், பின்னும் தாம் மருவி வருவது ஓர் இனத்தினதுவே உளதாகும் அறிவானது எ - று.

(ப - உ.) எ - மனத்து உள்ளது

து.—ஒருவனுக்கு உண்டாகும் அறிவு முற்பட போலத் தோன்றித் தான் சேர்ந்த இனத்தின் உண்டான அறிவாகும் எ - று.

மேல் மனத்தினனே அறிவு உண்டாம் என்றார். அதன்பின் இனத்தினனே திரியும் என்றார். அது மாறுபட்டாற் போலப்பட்டது நோக்கி இது கூறப்பட்டது. இத்துணையும் சேர்ந்ததனால் வரும் குற்றம் கூறிற்று. (8)

கா. 9. ப. 4.

நிலத்தியல்பா னீர்திரிந் தற்றாகு மாந்தர்க்
கினத்தியல்ப தாகு மறிவு.

(கா - உ.) எ - து.—நிலத்தின் நிறம் முதலிய வேறுபாட்டுத் தன்மையால் நீரானது தன் தன்மை வேறுபட்டு மற்று அந்நிலவியல்

பினை உடைத்தாம். அதுபோல உலகத்து வாழும் தம் இனத்தின் தன்மையது ஆகும் தமது அறிவு எ

மக்களுக்கும் தத்
- று.

(ப - உ.) எ - து.—நிலத்தின் இயல்பாலே நீர் நிறம் திரிந்து நிலத்தின் நிறம் ஆகுமாறு போல மாந்தர்க்குத் தமக்கு இயல்பாகிய அறிவும் தாம் சேர்ந்த இனத்திற்கு இயல்பாகிய அறிவு ஆம் எ - று.

நீர் திரிந்து ஆகும் அற்று என்று கூட்டுக. இது தமது அறிவு திரியு மென்றது. (9)

கா. 10. ப. 2.

நல்லினத்தி னூங்குந் துணையில்லைத் தீயினத்தி
னல்லற் படுப்பதூஉ மில்.

11



(கா - உ.) எ - து.—உலகத்து ஒருவர் இணங்கும் இன வேற்றுமையான் வரும் புகழும் பழியும் இவை ஆகலான் நல்லினத்தின் மேலாயிருப்பது ஒரு துணையும் இல்லை: தீயினத்தின் துன்பம் தரும் பகையும் இல்லை எ - று.

(ப - உ.) எ - து.—நல்லினத்தின் மிக்க துணையா யிருப்பதும் இல்லை. தீயினத்தின் மிக்க அல்லற் படுப்பதுவும் இல்லை எ - று.

இது சேராமைக்குக் காரணம் கூறிற்று. (10)

(கா - உ.) இனி மற்று இங்ஙனம் பெரியோரைத் துணைக்கோட

லும், சிற்றினம் சேராமையும் ஆகிய நன்மைக் கூற்றினது மருவுதல் செய்வழி அவர் நலமும் தீங்கும் தெரிந்து செய்ய வேண்டுதலான் அவ்வகையினை உணர்த்துவான் வேண்டி மற்று அதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

# 9. தெரிந்து செயல்வகை.

(ப - உ.) தெரிந்து செயல்வகை யாவது வினை செய்யுங்கால் அதனை எண்ணிச் செய்ய வேண்டும் என்பது கூறுதல். அறிவுடையரைக் குற்றம் கடிந்து மந்திரி புரோகிதரைத் துணையாகக் கொண்டு சிற்றினம் சேராது ஒழுகும் அரசனும் வினைசெய்யும் காலத்து முன்பே எண்ணிச் செய்ய வேண்டுதலின் அவையிற்றின் பிற்கூறப் பட்டது.

கா. 1. ப. 4.

அழிவதூஉ மாவதூஉ மாகி வழிபயக்கு
ம்ஊதியமுஞ் சூழ்ந்து செயல்.

(கா - உ.) எ - து.—யாவரோடும் யாதானும் ஒரு காரியம் செய்யும் இடத்து..............தோன்றுகியும் இங்ஙனம் வேறுபட்டிருக்கும் அதனால் அவற்றை ஆராய்ந்து அழிவது விடுத்தும் ஆகுவது கைக்கொண்டும் செய்யுங்கால் மற்று அது அப்...........டைமையும் தேர்ந்து பின்பு அக்கருமம் செய்க எ - று.

(ப - உ.) எ - து.—வினைசெய்து முடித்தற்கு அழியும் பொருளும் அது செய்து முடித்தால் உளதாகும் அப்பொருளினால் பின்பு உண்டாம் அப்பயனும் எண்ணிப் பின்பு வினைசெய்க எ - று.

வழிபயக்கும் ஊதியம் ஆவது முன்பு நன்றாகத் தோற்றிப் பின்பு தீது ஆகாத வினை. இது முதலாக எண்ணுமாறு கூறுகின்றார் ஆகலின் முற்பட இவை மூன்றும் எண்ணுதல் வேண்டு மென்பது கூறிற்று. (1)



கா. 2.

ப. 3.

எண்ணித் துணிக கருமந் துணிந்தபின்
னெண்ணுவ மென்ப திழுக்கு.

(கா - உ.) எ - து.—யாதானும் ஒன்றினை ஒருவர் செய்யும் காலத்து மற்று அதனைக் கீழ்சொன்னங்குச் சூழ்ந்து வாய்ப்பது அறிந்து செய்யத் துணிக. மற்று அவ்வாறு செய்யத் துணிந்தபின் செயற்பாட்டு நிகழ்ச்சிக் கண்ணே புகுந்து நின்று இதனை எண்ணுவேம் என்று நினைக்கின்றது பெரிதும் குற்றம் எ - று.

(ப - உ.) எ - து.—ஒரு வினையைச் செய்யத் துணிக: துணிந்த பின்பு எண்ணுவேம் என்றல் தப்பு ஆம் ஆதலான் எ - று.

காரியம் நின்ற நிலை அறிந்தாலும் எண்ணுது என்றது.

துணிதல் ஆகாது

(2)

கா. 3.

ப. 10.

வகையறச் சூழா தெழுதல்
பாத்திப் படுப்பதோ ராறு.

பகைவரைப்

(கா - உ.) எ - து.—உலகத்து வேந்தானவர் தாம் செய்யும் கருமங்களின் கூறுபாட்டினைச் செலவு அறத் தோராது துடங்குதல் யாது - ஆமோ என்னின், தம் பகைவர் ஆகின்ற வித்தினைப் படாமல் விளைத்தற் பொருட்டுப் பாத்தி கட்டி மற்று அதனுள் விளைவிப்பது ஓர் நெறி எ - று.

(ப - உ.) எ - து.—மேற்சொன்ன வகை எல்லாம் போக்கு அறச் சூழாதே போர் கருதி எழுதல் பகைவர் ஆகிய விதையை விளை நிலத்தின் கண்ணே இடுவது ஒரு நெறி எ - று.

இது பகைவர்க்கு ஆக்கம் உண்டாம் என்றது. (3)

கா. 4.

ப. 8.

செய்தக்க வல்ல செயக்கெடுஞ்
செய்தக்க
செய்யாமை யானுங் கெடும்.

(கா - உ.) எ - து.—யாதானும் ஒரு காரியம் செய்யத் தொடங்கும் இடத்து அரசியல்பிற்கு நீதியல்லது செய்யின் கேடு வரும்: மற்று அஃது அன்றி அரசியல்பிற்கு நீதியாம் அவற்றைச் செய்யாமையாலும் கேடுவரும்: மற்று அதனால் தகாதனவற்றைச் செய்யாமையும் தகுவன செய்தலும் என்னும் இரண்டினாலும் கேடு இன்றிப் பெரிதும் ஆக்கம் எய்தும் எ - று.

## 9. தெரிந்து செயல்வகை 37.

(ப
கெடும்:

- உ.) எ - து.—செய்யத் தகாதனவற்றைச் செய்தலானும் செய்யத் தகுவனவற்றைச் செய்யாமையானும் கெடும்.

இது மேற்கூறுதன எல்லாம் தொகுத்துக்

கூறிற்று. (4) கா. 5.

ப. 1.

தெரிந்த வினத்தோடுந்
தேர்ந்தெண்ணிச் செய்வார்க்
கரும்பொரு ளியாதொன்று மில்.

(கா - உ.) எ - து.—யாதும் ஒரு கருமம் செய்யும் இடத்து அதனைத் தெரிந்து செய்யும் திறமையரேனும் மற்று அதனைக் கல்வி

யால்
லும்

தெரிந்த கல்லினத்துடனே உசாவிக்கொண்டு தமது நெஞ்சா
தெரியத் தேர்ந்து கொண்டு இங்ஙனம் செய்யும் அரசர்க்கு

இனிச் செயற்கு அருமையுடைய பொருள்
மற்று இவர்க்கு யாவையும் செய்தல் எளிது

யாது ஒன்றும் இல்லை:
எ - று. டிக்

(ப - உ.) எ - து.—அமாத்தியர் பலருள்ளும் ஆராய்ந்து கூட்
கொள்ளப்பட்ட மந்திரிகளாகிய இனத்தோடே கூடச் செய்யும்
வினையை ஆராய்ந்து அதனைச் செய்யுமாறு எண்ணிச்
வனுக்குப் பெறுதற்கு அரியது ஒரு பொருளும் இல்லை

செய்ய வல்ல
எ - று.

இனம் என்றார் மந்திரிகள் பலர் வேண்டும் என்றற்கு. இதனது
எண்ணுதற்கு ஆவாரையும் கூறி எண்ணிச் செய்யவேண்டும் என்பதும்
கூறிற்று. (5)

கா. 6. ப. 6.

எள்ளாத வெண்ணிச் செயல்வேண்டுந்
கொள்ளாத கொள்ளா துலகு.

தம்மொடு

(கா - உ.) எ - து.—அரசாரனோர் தாம் யாதானும் ஒரு கருமம் செய்யும் இடத்து............தன ஆகிய நற்கருமங்களே தம் மனத்தோடு தெரியத் தேர்ந்து செய்ய வேண்டும். மற்று இங்ஙனம் செய்யார் மனத்தொடு கொள்ளாதனவற்றைச் செய்ய விரும்புவாராயின், உயர்ந்தோர் ஆகிய நல்வினைத்தோர் கண்ணுற்றுத் தெரியும் இடத்து அதனைச் சிறிதும் கைக்கொள்ளார் எ - று.

எள்ளாத என்பது இகழாமை.

(ப - உ.) எ - து.—முடியும் ஆயினும் பிறரால் இகழப்படாதவற்றை எண்ணிச் செய்தல் வேண்டும். தமக்குத் தகாத செய்திலை உலகத்தார் கொள்ளார் ஆதலான் எ - று.

இது பிறரால் இகழப்படாதன செய்யவேண்டும் என்றது. (6) 98

திருக்குறள் - பொருட்பால்

கா. 7.

ப. 2.

தெளிவில் லதனைத் தொடங்கா
மேதப்பா டஞ்சு பவர்.

ரிளிவென் னு

(கா - உ.) எ - து —இங்ஙனம் தாமும் சான்றோரும் தம்முள் கூடியாயினும் தனித்தாயினும் தெளிந்து சிறந்த கருமஞ் செய்யும் அத்துணை அல்லது மற்றுத் தெளிவில்லதனைச் செய்யத் துடங்கார். யாதெனின் மற்று அவர் இது செய்தார் என்று பிறர் கருதல் நமக்கு ஓர் இளிவாம் என்னும் குறைபாட்டை காணுவர் எ - று.

(ப - உ.) எ - று.—ஆராய்ந்து அறிதல் இல்லாத வினையைச் செய்யத் தொடங்கார். இகழ்ச்சியாகிய குற்றப்பாட்டிற்கு அஞ்சும் அவர்கள் எ - று.

ஒருவினை செய்ய நினைக்கும் காலத்து நின்றநிலை என்றது.

அறியவேண்டும் கா. 8.
(7)

ப. 1

ஆக்கங் கருதி முதலிழக்குஞ் செய்வினை
யூக்கா ரறிவுடை யார்.

(கா - உ.) எ - து.—இங்ஙனம் தெரிந்த அறிவினர் தம்வயின் மேல் ஆவதோர் ஆக்கம் கருதித் தமது பழகிய பொருளும் கெதையு மாறு செய்யும் கருமத்தில் ஒருப்படார் எனின் மற்று ஆக்கமும் முதலும் அழிவின்றிச் சிறக்கும் தகுதியை அறியும் அறிவுடையார் எ - று.

(ப - உ.) எ - து.—தனக்கு ஆக்கம் உண்டாக வேண்டி முன்பு உண்டான முதலும் இழக்க வரும் வினையைச் செய்யார் அறிவுடையார் எ - று.

இது மேற் பிற்பயக்க வேண்டும் வினை செய்ய பிற்பயவாத வினை செய்யலாகா தென்றது.

வேண்டும் என்றார். (8) கா. 9.

ப. 7.

நன்றாற்ற லுள்ளுந் தவறுண்
பண்பறிந் தாற்றாக் கடை.

டவரவர்

(கா - உ.) எ - து.—அந்தணர் முதலிய குடிப்பிறந்தோர்க்கும் பிறர்க்கும் ஆசாரனவர் தாம் பல நன்மைகளைச் செய்யும் இடத்துக் குற்றம் உண்டாம் : மற்று எப்பொழுது எனின், அவை செய்கின்ற இடத்து மற்று அவரவர் மாபு அறிந்து தக்காங்குக் குறிக்கொண்டு நீதியைச் செய்யா இடத்து எ - று.

10. வலியறிதல் 39

(ப - உ.) நன்மை செய்யும் இடத்திலும்
ரவர் குணம் அறிந்து செய்யாத இடத்து எ -

குற்றம் வரும். அவ
று.

இதுவும் ஓர் எண்ணம் கூறிற்று :

(9) கா. 10.

ப. 9.

ஆற்றின் வருந்தா வருத்தம் பலர்நின்று
போற்றினும் பொத்துப் படும்.

(கா - ஃ.) எ - து.—அரசராவார் தமது நீதியால் முயன்று ஈட்டாத நெடும்பொருளைச் சான்றோர் பலரும் கூடி மற்று இது நன்று என்று கொண்டாடினும் சாலக் குற்றப்படும் எ - று.

பொத்துப்படும் என்றது குற்றப்படும் என்றது.

(ப - உ.) எ - து.—மேற்கூறிய நெறியினானே பலர் நின்று காப்பினும் குற்றப்படும் எ - று.

முயலாத பொருள்

எண்ணிச் செய்யாதது தப்பும் என்றது.

(10)

(கா - உ.) இனி மற்று இங்ஙனம் தெரிந்து செய்வுழியும் கருமத்தி.........வேட்கை சொல்லுதல் மரபு அன்று என்று

சிறந்த

.வினும் தத்தம் வலியறிந்து இயற்றுக்கால்................என்பதனுல் மற்று இதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 10. வலியறிதல்.

(ப - உ.) வலி அறிதலாவது தனக்குள்ள வலியும் பிறர்க் குள்ள வலியும் அறிதல். செய்யத் தக்க வினையை எண்ணினும் அதனைச் செய்து முடிக்குங்கால் வலி அறிந்து செய்ய வேண்டுத லின் அதன்பிற் கூறப்பட்டது.

கா. 1. ப. 1.

வினைவலியுந் தன்வலியு மாற்றான்
துணைவலியுந் தூக்கிச் செயல்.

வலியுந்

(கா. - உ.) எ - து.—தான் செய்யும் கருமத்தின் வலியும் தனது விரப்பாட்டின் வலியும் தனக்கு எதிர் மாற்றான் வலியும் தனக்கு உதவும் படைத் துணைவலியும் மாற்றார்க்கு உதவும் படைத் துணை வலியும் மாற்றார்க்கு உதவும் படைத்துணை வலியும் இவை இரண்டினையும் சீர் தூக்கிக் கொள்க. எனவே மற்று இவை மாற்று ளிலும் தனக்கு மிக உளவாயின் அவனெடு தான் வினைசெய்வானுக. அல்லது வட்பின்கண் பொருந்துவது பொருள் எ - று.

(ப - உ.) எ - து.—செய்யும் வினையினது வலியும் தனக்கு உண்டான வலியும் பகைவனது வலியும் தனக்கும் பகைவர்க்கும் துணை ஆயினார் வலியும் எண்ணிப் பின்பு செய்க எ - று.

இது வலி அறியும் இடம் கூறிற்று.

(1) கா. 2.

ப. 2.

உடைத்தம் வலியறியா ருக்கத்தி
யிடைக்கண் முரிந்தார் பலர்.

னூக்கி

(கா - உ.) எ - து.—தமது பொருள் வலியும் துணைவலியும் முதலிய பல வரம்பினைக் கருதாராய் வறிதே ஒரு கருமத்தை நெஞ்சிற் ........ தானே தாமும் அதன்மேற் சென்று பின்பு அக்கருமம் முடிக்க மாட்டாது இடையிலே தொடங்கிய கருமத்தை முரிந்து ஒழிந்தார் இவ்வுலகத்து அனேகர் எ - று.

(ப - உ.) எ - து.—தம்முடைய வலியறியாது மனமிகுதியாலே வினைசெய்யத் தொடங்கி முடிவதன் முன்னே கெட்டார் பலர் எ - று.

வலியறியாதார் கெடுவர் என்றது.

(2) கா. 3.

ப. 3.

ஒல்வ தறிவ தறிந்ததன் கட்டங்கிச்

செல்வார்க்குச் செல்லாத தில்.

(கா - உ.) எ - து.—உலகத்து வேந்தரானோர் தாம் யாதானும் ஒரு கருமம் செய்யும் இடத்துத் தமக்கு இயல்வது அறிந்து மற்று அக்கருமமிலெ விளங்குமாறு செய்யத் துணிந்தபின் அதனைச் சோர விடாது அதன்கண்ணே நிலைநின்று மற்றது முடியுமாறு அங்ஙனம் சென்று முடிப்பார்க்குச் செல்லப்படாதது யாதும் இல்லை எ - று.

ஒல்வது என்பது இயல்பு என்றது.

(ப - உ.) எ - து.—தனக்கு இயலும் திறன் இது என அறிக; அறிந்தபின் அவ்வளவிலே நின்று லாதது இல்லை எ - று.

ஒழுகுவானாயின் அவனுக்கு இய

இது வலி அறிந்தாலும் அமைந்து ஒழுகவேண்டும் என்றது. (3) கா. 4.

ப. 8.

அளவறிந்து வாழாதான் வாழ்க்கை
வில்லாகித் தோன்றா கெடும்.

யுளபோல

(கா - உ.) எ - து.—தமது பொருள் முதலியவற்றின் எல்லை யைக் குறிக்கொண்டு எய்தற்குத் தக்காங்கு செய்யாதான் ஒழுக்க



மானது முன்னம் சில உள்போலக் காட்டி

இல்லையாய் விடும் ; மற்று
அங்ஙனம் கெடும் இடத்தும் தோற்றம்
இல்லவாய்க் கெட்டு விடும்
எ - று.

(ப - உ.) எ - து.—தன் வருவாய் அளவு அறிந்து வாழாதான் வாழ்க்கைகள் உள்ளன போலத் தோன்றி அதன்பின் இல்லையாகித் தோன்றாது கெடும் எ - று.

தோன்றாக் கெடும் என்பது பின்பும் ஆக்கம் இன்றிப் போகும் என்றது. இது மேற்கூறியவாறு செய்யாதார் கெடுவர் என்றது. (4)

கா. 5.

ப. 10.

உளவரை தூக்காத வொப்புர வாண்மை
வளவரை வல்லைக் கெடும்.

(கா - உ.) எ - து.—ஒருவன் தனக்கு உள்ள எல்லையைச் சீர் தூக்காத உபகார நடையும் அதற்கு மூலம் ஆகிய செல்வத்து எல்லை யும் இரண்டும் வளத்தினது பெருமை இன்றி விரையக் கெடும் எ - று.

வல்லைக் கெடும் என்பது விரையக் கெடும்

என்றது.

(ப - உ.) எ -
னது செல்வத்தின்

து.—தன் அளவை நினையாதே ஒப்புரவு செய்வா
அளவு விரையக் கெடும் எ - று.

மேல் முதலிற் செலவு குறைய வேண்டும் என்றார். அவ்வாறு செய்யின் ஒப்புரவு செய்யுமாறு என்னை என்றார்க்குக் கூறப்பட்டது. ஒப்புர வாண்மை என்று ஒப்புரவிற்கே போக்குவாரும் உளர். (5)

கா. 6 .

ப. 5.
நுனிக்கொம்ப ரேறினா ரஃதிறந்
துயிர்க்கிறுதி யாகி விடும்.

தூக்கி

(கா - உ.) எ - து.—நின்றதோர் பசுமரத்தின் இளந்தலைக் கொம்பின் மேலே போய் ஏற்றார் மற்று அதனை அறிந்து பின்னும் ஊம் செய்வாராயின், தமது உயிர்க்கு இறுதியாகி விடும் எ - று.

ஊக்கின் என்பது ஊம் செய என்றது.

(ப - உ.) எ - து.—ஒரு மரத்தின் நுனிக்கொம்பில் ஏறினவன் தன் அளவு அறிந்து வைத்துப் பின்னும் மேலே செல்வனாயின் அது தன் உயிர்க்கு இறுதியாகி விடும் எ - று.

•

. மீள

இஃது அரசன் தன்னால் செல்லலாம் அளவும் சென்றால் வேண்டும் என்றது. இதுவும் ஒரு வலியறிதல்.

பின்பு
(6)
6



கா. 7.

ப. 6.

பீலிபெய் சாகாடு மச்சிறு மப்பண்டஞ்
சால மிகுத்துப் பெயின்.

(கா - உ.) எ - து.—உலகத்தின் கொய்ய ஆக நிகழ்கின்ற பொருள்களின் ஒன்று ஆய பீலியைப் பண்டம் ஆக உள்ளுச் சொரிந்து வைத்த சகடமும் அது கொண்டு நடக்கும் இடத்துத் தனக்கு அச்சு முறிந்து கெடும் : எப்பொழுது எனின், அப்பண்டம் கொண்டு ஓர் ஒழிவு இன்றி நடக்கும் உரத்து அளவு அறியாது மற்று அதனைச் சால மிகுத்து உள்ளுறச் சொரிந்து செலுத்தின் எ - று.

(ப - உ.) எ - து.—பீலியை அடைந்த சகடமும் அச்சு முறியும் அப்பீலியை மிகவும் நெருங்க இடின் எ - று.

அரண் வலிது என்றார்க்குப் படைமிகின் அரண் நில்லாது என்றற்குக் கூறிற்று ; எனவே பகைவர் மேலே நெருங்கிச் செல்லினும் அளவு அறியாது செல்லின் கெடும் இடனும் உண்டாம் என்றது. (7)

## கா. 8.

## ப. 9.

ஆகா றளவிட் டி தாயினுங் கேடில்லை
போகா றகலாக் கடை.

(கா - உ.) எ - து.—பொருள் தமக்கு உளதாகின்ற வழியினது அளவு பெரிதும் சிறிதேயாயினும் அதனான் வருவது ஒரு கேடில்லை : என்னை எனின், மற்று அப்பொருள் தான் வினியோகப்படுதலும் பிறர்க்கு உபகரித்தலும் ஆகப் போகிற வழியால் அதனை விட்டு அகலாத இடத்துத் தனக்கு வலியாகியது சிறிதே பொருள் ஆயினும் அதுவே அமையும் எ - று.

(ப - உ.) எ - து.—பொருள் வரும் வழி சிறிது ஆயினும் கேடில்லை யாம் : அது போம் வழி பெருகாது ஆயின் எ - று.

இது முதலுக்குச் செலவு குறைய வேண்டும்

என்றது. (8) கா. 9.

ப. 4.

அமைந்தாங் கொழுகா னளவறியான்
வியந்தான் விரைந்து கெடும்.

றன்னை

(கா - உ.) எ - து.—யாதானும் ஒரு பொருள் மூற்றுப்பெற்றது பாங்கு: மற்று ஆங்கு அதற்கு ஏறக் கடவானுமாய் மற்றுத் தன்

மிதி வரம்பினை உணராதானுமாய் வறிதே தன்னைப் பெரிதும் மேலாக .......... மற்று அம்மதிப்புக்குத் தக்காங்கு நடக்க வேண்டினதால் விரைந்து கெடும் எ - று.



(ப - உ.) எ - று.—அமைவு உடையனாய் ஒழுகுதலும் இன்றித் தன்வலி அளவும் அறியாதே தன்னை மதித்தவன் விரைந்து கெடுவான் எ - று.

மேற் கூறியவாறு செய்யாதார் கெடுவர் என்றது. (9) கா. 10.

ப. 7.

ஆற்றி னளவறிந் தீக வதுபொருள்
போற்றி வழங்கு நெறி.

(கா - உ.) எ - து.—பொருள் வரலாற்றினது சிறுமை பெருமை அளவு அறிந்து அதற்குத் தக்காங்கு அரசர் யாவர்க்கும் ஈந்து ஒழுக; மற்று அங்ஙனம் செய்யின், அஃது அப்பொருளினைக் காக்கும் இடம் காத்து வழங்கும் வழி வழங்கும் முறைமையாவது: எனவே யாவரும் தத்தம் பொருள் வரலாற்றுக்குத் தக்காங்குக் காக்குமிடம் காத்தும் ஈயுமிடம் ஈத்தும் சேறலே கடன் எ - று.

(ப - உ.) எ - து.—வருவாய் அளவு அறிந்து கொடுக்க; பொருள் உண்டாக்கும் நெறி அது ஆதலான் எ - று.

இனிப் பொருளினது வலி அறிதல் கூறுகின்றார் முதற்குத் தக்க செலவு செய்ய வேண்டும் என்றது.

ஆதலின்,

(10) யும்

(கா - உ.) இனி மற்று இங்ஙனம் பொருள் வலியும் துணைவலி முதலாக வலியனைத்தும் தேர்ந்து அறிந்தனனாயினும், வேந்தன் மற்று அவை செய்யுமிடத்து, அவையவையிற்றுக்கு ஏற்ற காலம் அறியாக்கால் கருமம் சிதையும் ஆகலின், மற்று அதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 11. காலமறிதல்.

தல்.

(ப - உ.) காலம் அறிதலாவது வினைசெய்தற்கு வலியறிந்தாலும் வினைசெய்யும் காலம் அறிந்து

ஆம் காலம் அறி
செய்ய வேண்டு
தலின் அதன்பின் கூறப்பட்டது.

கா. 1.

ப. 9.

அருவினை யென்ப வுளவோ கருவியாற்
கால மறிந்து செயின்.

(கா - உ.) எ - து.—வேந்தர்க்குச்
கள் என்பனவும் சில உளவோ இல்லை.

செய்தற்கு அரிய கருமங்
மற்று எப்பொழுது எனின்,
தாம் தொடங்குவதோர் கருமம் கடைபோவதற்கு ஏற்கும் உபாயத்
துடனே அடுத்த காலத்தைக் குறிக்கொண்டு செய்வாராயின் எ - று.

கருவி என்றது உபாயம் என்றது. சாதுரங்கம் என்றுமாம்.

(ப - உ.) எ - து.—அருவினை என்று உளவோ? முடிக்கலாம் கருவியோடே கூடக் செய்ய வல்லாராயின் எ - று.

சொல்லப்படுவனவும்
காலத்தை அறிந்து

இது முடியாத வினையில்லை என்றது.

(1) கா. 2.

ப. 8.

பருவத்தோ டொட்ட வொழுகல் திருவினைத்
தீராமை யார்க்குங் கயிறு.

(கா - உ.) எ - து —மற்று இவ்வாறு தாம் தொடங்கும் கருமத்திற்கு ஏற்கும் காலத்தோடு இயைய ஒழுகவே அது தமது செல்வத்தை நீங்காமல் பிணிக்கும் கயிறு ஆம் எ - று.

ஒட்ட என்பது இயைய
என்றது. ஆர்க்கும் என்பது

என்பது. தீராமை என்பது ஒழியாமை
பிணிக்கும் என்றது.

(ப - உ.) எ - து.—காலத்தொடு பொருந்த ஒழுகுதல் யத்தை நீங்காமல் கட்டுவது ஒரு கயிறு ஆம் எ - று.
செல்

இனிக் காலம் அறிந்ததனல் பயன் கூறுவர் கெடாது என்றார்.

முற்படச் செல்வம் கா. 3.
(2)

ப. 7.
எய்தற் கரிய தியைந்தக்கா
செய்தற் கரிய செயல்.

லந்நிலேயே

(கா - உ.) எ - து.—தாம் செய்வது ஓர் கருமத்திற்கு எற்கு மாறு கிட்டுதற்கு அரிய பருவமானது வந்து கிட்டிய காலத்துப் பின் சென்று கழியாமல் பருவத்தே செய்தற்கு அரியனவற்றைச் செய்து கொள்க எ - று.

(ப - உ.) எ - து.—பெறுதற்கு அரிய காலம் வந்தால் அப் பொழுதே தன்னல் செய்தற்கு அரியவாகிய வினைகளைச் செய்து முடிக்க எ - று.

இது காலம் வந்தால் அரிது என்று மாறாது என்றது.

செய்ய வேண்டும் கா. 4.
(3)

ப. 2.

காலங் கருதி யிருப்பர் கலங்காது
ஞாலங் கருது பவர்.

(கா - உ.) எ - து.—தாம் செய்யக் கருதிய கருமத்திற்கு அடுத்த காலம் அப்பொழுது இல்லெனில், ஆறு மற்று அது வரும்வழி அத



னைக் குறிக்கொண்டு அமைந்திருப்பர் : யாரோ எனின், வையம் தமது கையகத்து ஆய நெறி தளாரமல் ஆளக் கருதும் அரசர் எ - று.

(ப - உ.) எ - து.—வினைசெய்யும் காலம்வரும் அளவும் நினைத்து அசைவு இன்றி இருப்பர் : ஞாலத்தைக் கொள்ளக் கருதுபவர் எ - று.

இது காலம் வரவு பார்த்து இருக்குங்கால் புலப்படாமல் இருக்க வேண்டும் என்றது.

பின்பு செய்யும் வினை
(4) கா. 5.

ப. 3.

ஊக்க முடையா னொடுக்கம் பொருதகர்
தாக்கற்குப் பேருந் தகைத்து.

(கா - உ.) எ - து.—ஒரு கருமம் செய்ய நெஞ்சின்கண் மேற்கோள் உடையனாகிய வேந்தனானவன், மற்று அதற்கு அடுத்த பருவம் வந்து எய்தும் துணையும் மற்று அதன்கண் முயலாது ஒடுங்கியிருக்கின்ற ஒடுக்கமானது எத்தன்மைத்தோ எனின், மேற்கொண்டு நிற்கின்ற பொரு.............. யாவை பொட்டெனத் தலை யொடு தலை முட்டுதற் பொருட்டுச் சிறிது நீங்கிச் செவ்வி பார்த்து நிற்கும் தகைமைத்து எ - று.

(ப - உ.) எ - து.—மனம் மிகுதி உடையவன் காலம் வரவு பார்த்து ஒடுங்குதல் போரைக் கருதின தகர் வலிபெறத் தாக்குதற் பொருட்டுப் பெயர்த்தாற் போலும் எ - று.

இது காலம் வரும் அளவும் பொறுத்தால் வலிமிகும் என்றது.(5)

கா. 6 .

ப. 5.

செறுநரைக் காணிற் சுமக்க
காணிற் கிழக்காந் தலை.

விருவரை

(கா - உ.) எ -
கா(ண்)க்கால் சுமக்க,
தலை எ - று.

து.—பகைவரைக் கண்ட பொழுது இறுவரை
இறுவரை காணின் கிழாக விடவற்று ஆகும்

சுமக்க என்கை பொறுத்தல் என்றது.
கீழ்ப்படுத்தல் என்றது.

(ப - உ.)

கிழக்காம் தலை என்றது ஞலே சுமக்க :

எ - து.—பகைவரைக் கண்ணிஞலே காணின்
இறுவரை காணின், தலை கீழாகி விடலாம் எ -

தலையி
று.

பகைவரைக் கண்டு வாளாதே இருப்பது ஆண்மை அல்ல என்று கருதவேண்டா : அவரைக் கண்டால் தலையிலே கொண்டாற் போலத்

தாழ்ச்சி செய்து பின்பு அவர் இகழ்ச்சியாலே தலையினின்று விட்டாற் போல வினை செய்யலாம் என்று கூறப்பட்டது.

விழ
(6) 46 • திருக்குறள் - பொருட்பால்

கா. 7.
ப. 10.

ஞாலங் கருதினுங் கைகூடும் காலங்
கருதி யிடத்தாற் செயின்.

(கா - உ.) எ - து.—வேந்தரானோர் சில நாள் ஆண்டிருத்தலே அன்றி இவ்வுலகம் முழுவதும் ஒருவர் தாமே ஆளக் கருதினும் கை கூடும்: எங்ஙனமோ எனின், தான் செய்யும் காரியத்துக்கு ஏற்ற பருவத்தைக் குறிக்கொண்டிருந்து மற்றது வந்து எய்திய பொழுது பழுதுபடாமல் பருவத்தின் கண்ணே வினைசெய்யின் எ - று.

(ப.- உ.) எ - து.—உலகம் எல்லாம் பெறுதற்கு நினைத்தானாயினும் பெறலாம், காலத்தைக் குறித்து இடன் அறிந்து செய்வனாயின் எ - று.

இஃது எல்லாப் பொருளும் எய்தும் என்றது. இனி இடன் அறிதல் கூறுகின்றார் ஆதலின் இனி அது பின் கூறப்பட்டது. (7)

கா. 8.

ப. 4.

பொள்ளென வாங்கே புறம்வேரார் காலம்பார்த்
துள்வேர்ப்ப ரொள்ளி யவர்.

(கா - உ.) எ - து.—தாம் செய்யும் கருமம் வாய்க்கும் பருவம் வருகாலம் தம்மேல் வியர்க்க வினைசெய்ய முயலார், மற்று என் செய்வர் எனின், அக்காலத்தைக் குறிக்கொண்டு நெஞ்சு புழுங்கி நிற்பார் அறிவுடை அரசர் எ - று.

வேர்ப்பர் என்றது நெஞ்சு புழுங்கி நிற்பர் என்றது. புறம் வேரார் என்றது - உடம்பு வேரார் என்றது.

(ப - உ.) எ - து.—கதுமென அவ்விடத்தே உடம்பு வேரார்: தமக்குச் செய்யுங் காலம் வரவு பார்த்து மனம் வேர்ப்பர் ஒள்ளியார் எ - று.

வேர்ப்பு - பொருமையால் வருவது ஒன்று. பகைவர் வற்றைச் செய்தாலுங் காலம் பார்க்க வேண்டும் என்றது.

பொருத

(8) கா. 9.

ப 6.

கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்

குத்தொக்க சீர்த்த விடத்து.

(கா - உ). எ - து.—தரம் பருவம் வாய்க்கும் அளவும் உள்

கருதிய கருமம் முடிவதற்கு முரு ஒடுங்கி இருக்கும் குருகின் தன்மை

போலேயும் முடிவதற்கு குருகு எறியும் தன்மை அரசர்க்கு எ - று.

ஒரு பருவம் வாய்த்த இடத்து மற்று அக் போலவும் காலம் கருதி இருக்க வேண்டும்;

(ப-உ.) எ-து.—காலம் பார்த்து இருக்கும் இடத்துக் கொக்குப்போல ஒடுங்கி இகழ்வின்றி இருக்க: வினை செய்தற்குச் சேர்த்த காலம் வந்த விடத்துக் கொக்குக் குத்துமாறு போலத் தப்பாமல் செய்க எ-று.

இது காலம் வரும் அளவும் இகழ்ச்சியின்றி இகழ்ந்தார் போல இருத்தல் வேண்டும் என்பதூஉம், காலம் வந்தாற் றப்பாமல் விரைந்து செய்ய வேண்டும் என்பதூஉம் கூறிற்று. (9)

கா. 10. ப. 1.

## பகல்வெல்லுங் கூகையைக் காக்கை
## வேந்தர்க்கு வேண்டும் பொழுது.

யிகல்வெல்லும்

(கா-உ.) எ-து.—கூகையாகிய புள்ளினை எறியும் இடத்துத் தனக்கு வாய்த்த காலமாகிய பகற்பொழுதின்கண் சென்று அடர்த்து வெல்லும் காக்கையானது. மற்று அங்ஙனமே வெல்லும் காக்கையை எறியும் இடத்துத், தனக்கு வாய்த்த காலமாகிய இருட்பொழுதின் கண் சென்று அடர்த்து வெல்லும் கூகையானது. இனி இவை போலத் தம்மில் தாம் மாறுபட்டுப் பொரும் மன்னவர்க்கும் தமக்குச் செயமாகிய வாய்ப்புடைக்காலம் அறிந்து அடர்த்தலே இயல்பு எ-று.

(ப-உ.) எ-து.—இராப்பொழுது வெல்லும் கூகையைக் காக்கை பகற்பொழுது வெல்லும். ஆகலான் மாறுபாட்டை வெல்லும் அரசற்குக் காலம் வேண்டும் எ-று.

இது காலம் அறிதல் வேண்டும் என்றது. (10)

(கா-உ.) அரசர் தாம் செய்வினைக்கு அடுத்த காலம் அறிந்தாலும் வினை இயற்றும் இடத்து இதுவும் இயைய வேண்டுதலான் மற்று இதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

# 12. இடனறிதல்.

(ப - உ.) இடன் அறிதலாவது - வினை செய்யும் இடன் அறிதல். காலம் அறிந்தாலும் இடன் அறிந்து செய்ய வேண்டுதலின் அதன்பின் கூறப்பட்டது.

கா. 1.

ப. 2.

சிறுபடையான் செல்லிடஞ் சேரி

னுறுபடையா

னூக்க மழிந்து விடும்.

(கா - உ.) எ - து.— உலகத்து ஒரு வேந்தன் சிறுபடையாளன் ஆயினும் மற்றை மிகுபடையாட்சி வேந்தனவன் மற்று அவனது செலவு பயின்ற இடத்தைத் தான் மதியாது சென்று கிட்டுமாயின் தனது வலி அழிந்து கெட்டுவிடும் எ - று.



(ப - உ.) எ - து.—சிறுபடை உடையவனுக்கு இயலும் இடத்தே பெரும்படை உடையவன் பொருந்துவன் ஆயின் மனமிகுதி கெட்டு விடும் எ - று.

இஃது இகழ்ந்து செல்லின் வெற்றி இல்லையாம் என்றது. (1) கா. 2.

ப. 8.

முரண்சேர்ந்த மொய்ம்பி னவர்க்கு
மரண்சேர்ந்தா
மாக்கம் பலவுந் தரும்.

(கா-உ.) எ-து.—மாறுபாட்டோடும் பயின்ற வலியினையுடைய மன்னவராயினும், மற்று அவர்க்குத் தாம் பயின்ற நிலம் ஆகிய அரணினையுடைய நிலத்தைப் பொருந்தியதனால் உளதாம் ஆக்கமானது வென்றி முதலிய நன்மைகளையும் கொடுக்கும் எ-று.

முரண் என்பது மாறுபாடு. மொய்ம்பு என்பது வலி:

(ப-உ.) எ-து.—பகை கொள்ளும் வலியுடையவர்க்கும் ணைச் சேர்தாகின்ற ஆக்கம் பல பயனையும் தரும் எ-று.

அர இது பகைவரிடம் அறிதலே அன்றித்
அறிய வேண்டுமென்று அது கூறிற்று.

தமக்கு அறிந்த இடமும்
(2) கா. 3.

ப. 4.
சிறைநலனுஞ் சீரு மிலரெனினு மாந்த
ருறைநிலத்தோ டொட்ட லரிது.

(கா - உ.) எ - து.—மதில் சிறை முதலாகிய நால்வகை வாய்ப்பும் யானை முதலிய படை வாய்ப்பும் இலர் ஆயினும் மற்று அம்மன்னவர் முதலாக மறத்தொழிலாளர் முன் பயின்ற நிலத்துப் பகை வேந்தர்க்குச் சென்று கிட்டுதல் அரிது எ - று.

(ப - உ.) எ - து.—அரண் மிகுதியும் பெருமையும் இலர் ஆயினும், மாந்தர் உறை நிலத்தின் கண் பொருந்துதல் அரிது எ - று.

இது, மாந்தர் உறைவிடத்துச் செல்லுங்கால் வேண்டும் என்றது.

அறிந்து செல்ல கா. 4.
(3)

ப. 7.

ஆற்றரு மாற்றி யடுப விடனறிந்து
போற்றார்கட் போற்றிச் செயின்.

(கா - உ.) எ - து.—பெரும்படை வேந்தனோடு போர் ஆற்றாத சில படையாளரும் அவரோடு போர் ஆற்றிப் பொருகளத்து அடுவர்; அதுவும் எங்ஙனம் எனின், தமக்குச் சென்று நிலையுள்ள இடத்தை



அறிந்து மற்று அப்பகைவரிடத் தாற்றலும் பெரிதும் வினைசெய்ய வல்லாராயின் எ - று.
குறிக்கொண்டு

ஆற்றரும் என்பது வருபகை வேந்தனோடு

போர் ஆற்றுதவரும் எனறது.

(ப - உ.) எ - து.—வலியிலாதாரும் வலியுடையாராய் வெல்வர் பகைவர் மாட்டு வினைசெய்யும் இடம் அறிந்து தம்மைக் காத்து வினை செய்வாராயின் எ - று.

இது வலியிலாதாரும் வெல்வர் என்றது.

(4) கா. 5.

ப. 5.

நெடும்புனலுள் வெல்லு முதலை
னீங்கி னதனைப் பிற.

யடும்புனலி

(கா - உ.) எ - து.—நெடிய ஆழமுடைய
சென்ற நிலம் ஆகலின், மற்று அவ்விடத்து யானை

புனல் தனக்குச்
புலி மனித்தர் மற்
றும் அனைத்துப் பகையும் வெல்லும் முதலையானது: மற்று அது தான் பயின்ற நிலம் அல்லாத கரைமீது படின், எறும்பும் அதனை அடும் ஆகலான், அரசர் முதலாக அனைவர்க்கும் இடம் அறிதல் பெரிதுமன் எ - று.

(ப - உ.) எ - து.—நெடிய நீரின்கண் பலவற்றையும் முதலை வெல்லும்: அது நீரினின்று நீங்குமாயின் அதனைப் பிற எல்லாம் வெல்லும் எ - று.

இது மேலதற்குக் காரணம் கூறிற்று. இவை ஐந்தும் இடம் அறிய வேண்டும் என்பது கூறிற்று. (5)

கா. 6.

ப. 6.

அஞ்சாமை யல்லாற் றுணைவேண்டா
வெண்ணி யிடத்தாற் செயின்.

வெஞ்சாமை

(கா - உ.) எ - து.—இவ்வாறு எண்ணவேண்டும்

காரியம் அனைத்

தும் ஒன்று ஒழியாமல் எண்ணிக்கொண்டு, பின் அதனது இடத்தோடு உட்படுத்தி வினைசெய்யின், தம் வீரப்பாடானது வேறு படைத்

துணையி.................கு வேண்டா எனவே, தமது இடமும் தறு கண்மையும் எண்ணமுமே சாலும் எதிர்த்தோரை வெல்லுதற்கு எ - று.

எஞ்சாமை என்பது ஒழியாமை என்றது.

(ப - உ.) எ - து.—தப்பாமல் எண்ணி இடத்தோடு பொருந்த வினைசெய்ய வல்லனாயின், வேறு துணை ஆவாரைத் தேட வேண்டுவது இல்லை: அஞ்சாமையே வேண்டுவது எ - று.

இடம் அறிந்தால் துணை இன்றியும் வெல்வர் என்றது. (6). 7

கா. 7.

ப. 10.

எண்ணியா ரெண்ண மிழப்ப ரிடனறிந்து
துன்னியார் துன்னிச் செயின்.

(கா - உ.) எ - து.—போர்வினை செய்தற்கு எண்ணி வந்த பகை வரானவர் எண்ணமும் பழுதுபடுவர்: எவ்விடத்து எனின், நமக்கு இடமாவது இது என்று எண்ணிக்கொண்டு வினை செய்வாராயின், மற்று அப்பகைவர்க்கு எண்ணமே உள்ளது: இவர்க்கு எண்ணமும் இடமும் இரண்டும் உண்டு எ - று.

இடன் அறிந்து துன்னியார் என்றது இது நமக்கு இடம் என்று அறிந்து பொருந்தி வாழ்வார் என்றது. துன்னி என்றது மற்று அவ்விடத்துக் கூடி நின்று என்பது.

(ப - உ.) எ - து.—தன்னைக் கெடுத்தற்கு எண்ணினவர்கள் தங்கள் எண்ணம் இழப்பர்கள்: வினை செய்யும் இடம் அறிந்து கட்டோரவர்கள் மனம் பொருந்திச் செய்வாராயின் எ - று.

இஃது இடம் அறிந்தாலும், செய்வோர் அமைதியும் வேண்டும் என்றது. இனி அமாத்தியர் இலக்கணம் கூறுகின்றார் ஆகலின் இது பின் கூறப்பட்டது. (7)

கா. 8.

ப. 9.

கடலோடா கால்வ ணெடுந்தேர் கடலோடு
நா வாயு மோடா நிலத்து.

(கா - உ.) எ - து.—நிலத்து ஓடுதற்கு உரியன ஆகிய கால் உர முடைய பெருந்தோரனவை தமக்கு நிலம் அல்லாத கடலுள் ஓட மாட்டா : மற்று அக்கடல் மீது ஓடும் கடுஞ்செலவு உடைய நாவாய் களும் தமக்கு இடம் அல்லாத தரைமீது ஓடவும் மாட்டா : எனவே அரசர் முதலாக அனைவர்க்கும் தத்தம் இடம் அறிந்து இயற்றுதலே உறுதி உடைத்து எ - று.

(ப - உ.) எ - து.—கால் வலிய நெடுந்தேர் கடலின்கண் ஓடாது : கடலின்கண் ஓடும் நாவாயும் நிலத்தின்கண் ஓடாது எ - று.

இஃது இடத்திற்கு ஆம் கருவி பண்ண வேண்டும் என்றது. (8) கா. 9.

ப. 3.

காலாழ் களரியி னரியடுங் கண்ணஞ்சா
வேலாழ் முகத்த களிறு.

தும்

(கா - உ.) எ - து.—தன் சினம் தணியாத தறுகண்மை உடைத்தாய் மேலவர் எறியவும் கீழவர் குத்தவும் பிறவும்

பெரி
ஆகிய - 13. தெரிந்து தெளிதல்

51 வேல் அழுக்கிய வடு அறுத முகத்தை

உடைய கடுங்களிருனது
தனது கால் உள்ளழுந்துமக ளரிடம் புக்குக்
மிடத்து நரி குறுகி மத்தத்தைக் கவ்விப் பறித்து

கொடுந்துயர் உறு
நுகர்ந்து அதனைப்

படுவினை செய்யும்: அதனல் உறுபகை அஞ்சாத்
ராயினும் இடம் அறிய வேண்டும் எ - று.

தறுகண் மன்னவ

(ப - உ.) எ - து.—கண்ணஞ்சாத வேல் அழுந்தப்பட்ட முகத்
தினையுடைய களிற்றைக் கால் வீழப்பட்ட களரின்கண் நரி கொல்ல
வற்றும் எ - று.

களர் - போரிற் புறமான கழி. மேலதற்குக்
காரணம் கூறிற்று.(9)

கா. 10.

ப. 1.

தொடங்கற்க
மிடங்கண்ட

வெவ்வினையு மெள்ளற்க முற்று
பின்னல் லது.

(கா - உ.) எ - து.—உலகத்து மன்னர் முதலாக மாந்தர் யாவரும் ,,அவையிற்றுக்கு இயைந்த இடம் கண்டபின் அல்லது போர்த் தொழில் முதலாய எல்லாத் தொழிலினும் யாதானும் ஒன்று தொடங்

குவது செய்யற்க: மற்றும் இது நமக்கு எளிது எனக்கொண்டு யாவையும் இகழ்வது செய்யற்க; மற்று அதனால் எவ்வினையும் இடம் குறிக்கொண்டே இயற்றுக எ - று.

(ப - உ). எ - து.—முடியும்
வினையும் தொடங்கா தொழிக:

இடம் கண்டால் அல்லது யாதொரு
எளிது என்று இகழ்வதும் செய்யா
தொழிக எ - று.

இஃது இடன் அறிதல் வேண்டும் என்பதூஉம், சிறிது என்று இகழலாகாது என்பதூஉம் கூறிற்று.

பகைவர் இடம்
(10)

(கா - உ.) இனிப் பெரியாரைத்

துணைக்கோடல் தொடங்கி
மற்று வலியறிதல், காலமறிதல், இடன் அறிதல் காறும் எஞ்சாமல் தெரிந்து பின் ஒன்றினைத் தேறுதலே கடன் என்பதனால் மற்று இதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 13. தெரிந்து தெளிதல்.

(ப - உ.) தெரிந்து தெளிதலாவது அமாத்தியரை ஆராய்ந்து தெளிதல். காரியம் தப்பாமல் எண்ணி அதற்கு ஆம் காலமும் இடனும் அறிந்தாலும் அது செய்து முடிக்கும் அமாத்தியரையும் எண்ணிக் கொள்ள வேண்டுதலின் அவற்றின் பின் கூறப்பட்டது.

கா. 1.

ப. 9.

அறம்பொரு ளின்ப முயிரெச்ச நான்கின்
திறந்தெரிந்து தேறப் படும்.

(கா - உ.) எ - து.—மறை முதலாகிய நூல் யாவற்றினும் சொன்ன அறம் பொருள் இன்பம் வீடு என வகுத்த நால்வகை யாக லின், அவற்றுள் அறமானது பாவம் அனைத்தையும் பற்று அறுப்பது என்றும், இருமை இன்பம் எய்துவிப்பது என்றும், அவற்றுள் பொருளானது பலவகைத் தொழிலினும் பொருள் வருமேனும் தமக்கு அடுத்த தொழிலின் ஆகிய பொருளே குற்றம் அற்ற நற் பொருள் என்றும், மற்று இனி இன்பமாவது கற்பின் திருந்திய பொற்புடை யாட்டி இல்லறத் துணையும், இயல்புடை மக்களும் இரு தலையானும் இயைந்த இன்பமும், மற்றும் இவற்றுள் உயர்ந்த வீடாவது பேதமையுற்ற பிறப்பு இறப்பு என்னும் வஞ்சப் பெருவலைப் பட்டு மயங்காது நிலைபெற நிற்கும் வீடு இது என்றும், இங்ஙனம் இவை நான்கின் திறம் தெரிந்து, பின் தமக்கு அடுத்தது ஒன்றினைத் தலைத்தேறித் தெளிய அடுக்கும் அரசர்க்கு எ - று.

உயிரெச்சம் என்பது முத்தி என்றது.

பரி. பா - ம். ' உயிரச்சம் '.

மும்

படும்

(ப - உ.) எ - து.—அறமும் பொருளும் இன்பமும் உயிரச்ச என்னும் நான்கினையும் கூறுபடுத்து ஆராய்ந்து பின்பு தேறப் எ - று.

மேற்கூறிய குற்றமும்
வேண்டியாதல், பொருளை

குணமும் ஆராய்தலே யன்றி அறத்தை
வேண்டியாதல், இன்பத்தை வேண்டி
யாதல், அச்சம் உளதாம என்றுதல் அரசன் மாட்டுத் திமையை நினை யாமையை ஆராய்ந்து பின்பு அவரைத் தேறப்படும் என்று கூறப் பட்டது (1)

தேரான் பிறனைத் தெளிந்தான்
தீரா விடும்பை தரும்.

வழிமுறை

(கா - உ.) எ - து.—தான் பிறன் ஒருவனோடு மருவுதற்கு முன்னமே அவனது குற்றமும் குணமும் தெரிந்து ஆராயாது வறிதே பிறன் ஒருவனை நமக்கு இவன் துணை என்று நம்புதலைச் செய்த லாவது மற்று அதன்பின் முறையே வேறு ஒன்றானும் தீராத மாபு கேட்டைக் கொடுக்கும் எ - று.

(ப - உ.) எ - து.—பிறனை ஆராயாதே வழிமுறை என்று தெளிந்தவனுக்குத் தீர்தல் இல்லாத துன்பம் உண்டாக்கும் அத்தெளிவு எ - று.

வழிமுறை என்றது தன்
யின் உள்ளார் அமாத்தியராய்ப்

வழியின் உள்ளார்க்கு அவன் வழி
போந்த முறைமை. குலத்தின் உள்

13. தெரிந்து தெளிதல்

53

ளார்க்கு அமாத்தியர் ஆயினார் வழியின் உள்ளாரைத்
தேறலா மென் பது வியாதன் மதம். அது குற்றம்

என்று இது கூறப்பட்டது. (2) கா. 3.

ப. 10.

தேறற்க யாரையுந் தோராது
தேறுக தேறும் பொருள்.

தேர்ந்தபின்

(கா - உ.) எ - து.—யாதொரு காரியம் தேர்ந்து செய்யும் இடத்தும் யாரையும் அவரது குணமும் குற்றமும் ஓர்ந்து உணராது தேறுதலைச் செய்யற்க. மற்று அவரைத் தேர்ந்து உணர்ந்த பின்னும் தன்னுடன் பிறந்தார் சுற்றத்தாரேனும் அவர் அவரால் கொள்ளலாகும் கருமம் கொள்க; மற்று ஆகாதன கொள்ளற்க எ - று.

(ப - உ.) எ - து.—யாவரையும் ஆராயாது தெளியாது ஒழிக; ஆராய்ந்த பின் அவரால் தேறப்படும் பொருளைத் தேறுக எ - று.

மேல் காலு பொருளையும் ஆராய வேண்டுமென்றார்: அக்காலினும் ஒரோர் பொருளில் தேற முடியாரை அவரவர் பொருளிலே தெளிக: எல்லாப் பொருளினும் தெளிக எ - று. (3)

கா. 4.

ப. 2.

அற்றாரைத் தேறுத லோம்புக
பற்றிலர் நாணார் பழி.

மற்றவர்

(கா - உ.)
ஒழுகுவாரைக்

எ - து —உலகத்துச் சிலரொடு நண்பும் நயமும் அற்று
கண்டால் தாமும் அவரைத் தேறுதலைப் பரிகரிக்க:

என்னை
விலர்:

எனின்.......... னில்லையர் ஆகலான் பாங்கினல் தம்மொடு பரி
மற்று அதுவேயும் அன்றிப் பழி அஞ்சுதலும் இலர் எ - று.

(ப - உ.) எ - து.—ஒழுக்கம்
அவர் ஓரிடத்தும் பற்று உடையரும்

அற்றாரைத் தேறுதல் தவிர்க:
அல்லர்: பழிக்கும் நாணார் ஆத
லான எ - று.

அரசனோடு ஒத்த மறைத்த குற்றம் உடையாரைத் தேறலாம்; அவர் தம் குற்றம் மறைக்குமாறு போல அவர் குற்றமும் மறைப்பர் ஆதலான் என்பது மகேச்சுரர் மதம். அது குற்றம் என்று இது கூறப்பட்டது. (4)

கா. 5. ப. 6.

பெருமைக்கு மேனைச் சிறுமைக்குந் தத்தங்
கருமமே கட்டளைக் கல்.

கும்
(கா - உ.) எ - து.—உலகத்துப் பெரியோரது பெருந்தன்மைக் சிறியோரது சிறு தன்மைக்கும் உள்ள ஏற்றத் தாழ்வுகளை ஒருவர்



தேறி அறிய வேண்டுங்கால் வேறு ஒன்றும் வேண்டுவது இல்லை: மற்று என்னை எனின் அவர் அவர் செய்யும் செய்தி வேற்றுமை தானே அவரது தகுதி மாற்று அறியும் கருவி ஆகிய உரைகல்லும் நிறை தூக்கிய கட்டளைக் கல்லும் எ - று.

(ப - உ.) எ - து.—ஒருவனைப் பெரியன் ஆக்குதற்கும் சிறியன் ஆக்குதற்கும் வேறு தேட வேண்டா: அவர் அவர் செய்ய வல்ல கருமம் தானே படிக்கல் லாம்: அதற்குத்தக ஒழுக எ - று.

ஒரு காரியத்தில் முற்பட விட்டு அவன் செய்யவல்ல அளவு கண்டு பின்னைப் பெரியன் ஆக்க அமையும் என்பது நாரதர் மதம். இது குற்றம் கூறுமையால் யாவர்க்கும் உடம்பாடு என்று கொள்ளப் படும். (5)

கா. 6. ப. 3.

காதன்மை கந்தா வறிவறியார்த்
பேதைமை யெல்லாந் தரும்.

தேறுதல்

(கா - உ.) எ - து.—ஒருவரோடு ஒருவர் வைத்த காதலுடை மையே மூலமாக உலகத்து அறிவது அறியாதாரைத் தெளிதல் யாது: மற்று அது தானே ஒருவற்க்கு அனைத்து அறிவு கேட்டை

யும் கொடுக்கும் எ - று.

காதன்மை கந்தா என்பது ஒருவர் மாட்டு ஒருவர் வைத்த காத லுடைமையே மூலமாக எ - று.

(ப - உ.) எ - து.—அன்புடைமையே பற்றாக அறிவுடையர் அல்லாதாரைத் தேறுதல் எல்லா அறியாமையும் தரும் எ - று.

அரசற்கு அன்புடையாரைத் தேறலாம் என்பது பாராசர் மதம். இஃது இவ்வளவினால் தேறல் ஆகாது என்றது. (6)

கா. 7. ப. 8.

குணநாடிக் குற்றமு நாடி யவற்றுண்
மிகைநாடி மிக்க கொளல்.

(கா - உ.) எ - து.—ஒருவுரைச் சீர்தூக்கிக் கொள்ளும் இடத்து இவர் மாட்டுக் குணம் எத்துணை உள வென்றும் குற்றம் எத்துணை உள வென்றும் தெரிந்து மற்று அதன் பின்னர் அவற்றுள் மிகுதலுடையனவற்றைத் தெரிந்து, இதின் குணம் மிக்கனவாயின் தெளிந்து கொள்க: அல்லது குணம் மிகுதி இல்லையாயின் தெளிய வேண்டா எ - று.

(ப - உ.) எ - து.—ஒருவனுக்கு உள்ள குணத்தையும் ஆராய்ந்து குற்றத்தையும் ஆராய்ந்து அவற்றுள் மிக்கதனை அறிந்து அவற்றுள்



ளும் தலைமையானும் பன்மையானும் மிக்கதனை

அறிந்து கொள்க எ - று.

இது கௌடில்யர் மதம். காரியம் பல ஆதலின் அது செய்வாரும் பலர் வேண்டும் ஆதலால் அவரெல்லாரையும் நற்குணத்தாராகத் தேடுதல் அரிது என்பதனால் இது கூறப்பட்டது. (7)

கா. 8. ப. 1.

அரியகற் றாசற்றார் கண்ணுந் தெரியுங்கா
லின்மை யரிதே வெளிறு.

(கா - உ.) எ - து.—இவ்வுலகத்துப் பலரானும் கற்றற்கு அரியன ஆகிய திருந்திய நூல்களை நிரையக் கற்று மற்று அதனானே இருமைக் குற்றமும் நீங்கினார் மாட்டும் பற்றி ஆராயும் காலத்துக் குற்றம் இல்லாமைச் சான்றோர் ஆதல் அரிது எனவே கீழ்ச்சொல்லிய ஆங்கே தெரிந்து தெளிக என்பது பொருள் ஆயிற்று எ - று.

(ப - உ.) எ - து —கற்றற்கு அரியனவற்றைக் கற்றுக் குற்றம் அற்றார் மாட்டும் ஆராயுங்கால் குற்றமின்மை இல்லை எ - று.

கல்வி யுடையார் உள்ளும் புறம்பும் தூயாரைத் தேறலாம் என்பது துரோணாசாரியர் மதம்: அவ்வளவில் தேறலாகாது என்று இது கூறப்பட்டது. (8)

கா. 9. ப. 5.

தேரான் றெளிவுந் தெளிந்தான்க ணையுறவுந்
தீரா விடும்பை தரும்.

(கா - உ.) எ - து.—முன்னம் ஒருவனை ஒருகால் தேறானாய் மற்று அவனை விரைந்து தெளிகின்ற தெளிவும், இனி இவ்வாறு அன்றித் தான் தெரிந்து தெளியற்க என்றும் பின்பு ஐயுறுதல் தம் குற்றம் ஆதலான் இங்ஙனம் தெளிந்தான்............ஐயுறவும் என்றும் இவ்விரண்டும் தன் நெஞ்சுள் ஆறா அருந்துயரம் தரும் எனவே ஒருவரை முன்னுறத் தெரியாதே.......... எஞ்ஞான்றும் செய்யற்க எ - று.

(ப-உ.) எ-து.—ஆராயாது தெளிதலும் தெளிந்த பின்பு ஐயுறு தலும் தீர்தல் இல்லாத துன்பத்தினைத் தரும் எ-று.

முன்பு ஒரு வினை செய்து அறியாதாரைத் தேறலாம். அவர்கள் வறியர் ஆதலான் என்பது உத்தவாசாரியார் மதம். அது குற்றம் என்று இது கூறப்பட்டது. (9)

கா. 10. ப. 7.

குடிப்பிறந்து குற்றத்தி னீங்கி வடுப்பரியு
நாணுடையான் கட்டே தெளிவு.



(கா-உ.) எ-து.—மற்று இவ்வுலகத்துத் தாமும் அருங்குடிப் பிறந்த அரசர் ஆதலான் தம்மொடும் அருந்துதற்கு அமைந்தோனாகி நற்குடிப்பிறந்து மறந்தும் ஒரு குற்றம்வரின் அதனை விரைந்து அறுத் தற்கு அமைந்த மானம் உடையோன் யாவன்? மற்று அவன் கண் ணதே தாம் தெரிந்து தெளியும் தெளிவு எ-று.

ஈண்டுப் பரியும் என்பது அறுக்கும் என்றுயிற்று.

(ப-உ.) எ-து.—உயர் குடிப்பிறந்து காம வெகுளி முதலான குற்றத்தினின்று நீங்கித் தனக்கு வரும் பழியை அறுக்க வல்ல நாணம் உடையான் கண்ணே தெளிதல் எ-று.

இது சுக்கிரர் மதம். இதுவும் உடம்பாடு படும்.
என்று கொள்ளப்
(10)

(கா-உ.) இனி மற்று அரசரானோர் இங்ஙனம் சிலரைத் தெரிந்து தெளிந்த பின் மற்று அவரைக் கொண்டு தம் கருமத்தை ஆளுதல் வேண்டும் என்பதனான் மற்று இதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலே அதிகாரம்.

## 14. தெரிந்து வினையாடல்.

(ப - உ.) தெரிந்து வினையாடலாவது வினை செய்வாரும் அவரால் செய்யப்படும் வினையும் பல ஆதலின், அவ்வவரால் செய்யப்படும் வினைகளை அறிந்து அவரை இட்டுச் செய்வித்தல். மேல் வினை செய்வாரை ஆராய்ந்து கூட்ட வேண்டும் என்றார்: அவரால் செய்யப்படும் வினையும் ஆராய்ந்து செய்ய வேண்டும் என்பதனால் அதன் பின் கூறப்பட்டது.

கா. 1.

ப. 3.

*நன்மையுந் தீமையு நாடி நயம்புரிந்த*
*தன்மையா னாளப் படும்.*

(கா - உ.) எ - து.—இவ்வுலகத்து வேந்தர் ஒருவனைக் கொண்டு ஒருவனை ஆட்சிசெய்யும் இடத்துக் கீழ்ச்சொல்லிப் போந்த முறைமையானே அவரது நன்மைக் கூறும் தீமைக் கூறும் தெரிந்து மற்று அவற்றுள் நல்லொழுக்கம் மிக்கு வரும் தன்மைக் கண்ணே வினை ஆட்சி செய்ய அடுக்கும் எ - று.

பரி. பா - ம். " நலம்புரிந்த ".

(ப - உ.) எ - து.—நன்மையானவற்றையும் தீமையானவற்றையும் ஆராய்ந்து தீமையை ஒருவி நன்மையின் கண்ணே பொருந்தின தன்மை யுடையவனைச் செய்வானாகப்படும் எ - று.

இது பெரும்பான்மையும் அற ஆராய்ச்சிக்குக் கிற்று.

கடவாரை நோக். 14. தெரிந்து
(1)
வினையாடல் 57.
கா. 2.

ப. 7.

இதனை யிதனு லிவன்முடிக்கு
மென்றாய்ந்

ததனை யவன்கண் விடல்.

(பரி - உ.) எ - து.—இக்கருமத்தை இதனால் இவன் பற்றி முடிக்க வல்லான் என்று ஆராய்ந்து தெளிந்த பின் மற்று அக்கருமத்தை அவனிடத்து விடுக என்னவே, இனிச் சிறிதும் அல்லவாம் என்று கருதாது ஆங்கு அமைந்து ஒழுக எ - று.

(ப

செய்து

- உ.) எ - து.—இக்கருமத்தினை இக்கருவியாலே இவன் முடிக்க வல்லன் என்று ஆராய்ந்த பின் அக்கருமத்தினை அவன்கண் விடுக எ - று.

இது பெரும்பான்மையும் சேனுபதியை நோக்கிக் கூறப்பட்டது.

கா. 3.

(2)

ப. 6.

விளைக்குரிமை நாடிய பின்றை யவனை
யதற்குரிய னாகச் செயல்.

(கா - உ.) எ - து.—வேந்தன் ஒருவனைத் தனது கருமத்திற்கு இனி இவனும் உரியன் என்பதோர் உரிமை ஆராய்ந்து அமைந்த பின்பு யாது செய்யத் தகுவது எனின், மற்று அவனை எவ்வாறு பேணி ஆக்கினால் உரிமையாம்; மற்று அவ்வாறு அனைத்தும் ஆக்கிய பின்பு மற்று அதற்கு உரியனாகச் செய்க எ - று.

(ப - உ.) எ - து.—..........யாராய்ந்த பின் அவனை அவ்வினை செய்தற்கு உரியனாகப் பண்ணுக எ - று.

ஒழிந்த காரியங்களில் வினை செய்வாரை ஆக்குமாறு கூறிற் று.(3) கா. 4. ப. 2.

செய்வானை நாடி வினைநாடிக் காலத்தோ
டெய்த வுணர்ந்து செயல்.

(கா - உ.) எ - து.—மேற்சொன்ன வகையானே வினை செய்யத் தகுந்த...........து வென்றதனையும் ஆராய்ந்து மற்று அதனை அதற்கு ஏற்ற காலத்துடன் அடுக்குமாறு குறிக்கொண்டு செய்க அரசர் எ - று.

(ப - உ.) எ - து.—வினை செய்வானையும் ஆராய்ந்து அவ்வினையி னது இயல்பையும் ஆராய்ந்து அது முடியுங் காலத்தோடே பொருந்த அறிந்தபின் அவ்வினையை அவன் செய்வானாகப்படும் எ - று.

மேல் வினையினது இயல்பு கூறினர்: இது பொதுவாகக் கூறிற்று.
செய்விக்குமாறு கா. 5.
(4)

ப. 1.

அறிந்தாற்றிச் செய்கற்பாற் கல்லால் வினைதான்
சிறந்தானென் றேவற்பாற் றன்று.

(கா - உ.) எ - து.—மற்று இங்குச் சொன்ன முறையே யாம் இவற்கு இது முடிக்குவம் என்று அறிந்து, மற்று அவ்வினை முடியும் அளவும் ஒழுக நடத்தி அங்ஙனம் செய்ய வல்லோற்கு அல்லது வறிதே இவன் நமக்குப் பெரிதும் நட்பிற் சிறந்தான் என்று ஒரு வினையை நீ இது செய்வாயாக என்று ஏவுதற்குத் தகாது; அதனால் இவ்வினைக்கு இவன் தூயன் என்று ஏவும் இத்துணை அல்லது சுற்றமும் தொடர்பும் பிறவும் நோக்கி வினைக்கு ஏவுதல் என்றும் தகாது எ - று.

(ப - உ.) எ - து.—வினைதான் உள்பாடு அறிந்து செய்யும் காலத்து உற்ற துன்பத்தையும் பொறுத்துச் செய்ய வல்லார்க்கு அல்லது தமக்குச் சிறந்தான் என்று ஒருவனை ஏவும் பகுதி உடைத்தன்று எ - று.

இது வினையினது இயல்பு கூறிற்று.
(5)

கா. 6. ப. 4.

அன்பறிவு தேற்ற மவாவின்மை யிந்நான்கு
நன்குடையான் கட்டே தெளிவு.

(கா - உ.) எ - து.—கட்டார் சுற்றத்தார் ஆயினும் ஆக: அன்றிப் பிறரே ஆயினும் ஆக: யாவன் ஒருவன் தன்மாட்டு அன்பும், காரியா காரியங்கள் தேறித் தெளிய வல்ல அறிவும், தமது உயிரும் பொருளும் அவனுழைப் பெரிதும் தேறலாவதோர் தேற்றமும், மற்றும் நெறி யல்லனவற்றின் கண்ணே அவாவின்மையும் என்று இங்ஙனம் சொல்லப்பட்ட நான்கும் குறைவின்றிப் பெரிதும் உடையான் யாவன் மற்று அவன் கண்ணதே யாகத் தெளிந்து வினைசெய்யும் திறம் எ - று.

(ப - உ.) எ - து.—அன்புடைமையும் அறிவுடைமையும் ஒரு பொருளை ஆராய்ந்து துணிவுடைமையும் அவாவின்மையும் என்னும் நான்கு குணத்தினையும் முழுதே உடையவன் கண்ணதே எல்லாப் பொருளின் கண்ணும் தெளிதல் எ - று.

இது பெரும்பான்மையும் காரிய ஆராய்ச்சிக்கு அதிபதியை நோக்கிற்று. (6)

## 14. தெரிந்து வினையாடல்

59

கா. 7.
ப. 5.

வாரி பெருக்கி வளம்படுத் துற்றவை
யாராய்வான் செய்க வினை.

(கா - உ.) எ - து.—பொருள் வருவாயும் பலவாற்றானும் பெருக்கி மற்று அது வளப்படி வருகின்ற பொருள்களையும் சிதறாமல் ஒரு வகைப்படுத்தி இரண்டுக்கும் இடையூறு வந்துற்ற காலத்து மற்று அவ்விடையுறுதலை அழிந்து போமாறு சிந்தித்துத் தெளிய வல்லான் யாவன் மற்று அவன் செய்க அரசர்க்குக் கருமம் எ - று.

(ப - உ.) எ - து.—பொருள் வருவதற்கு இடம் ஆனவற்றை முன்பு நின்ற நிலையிற் பெருக்கி அவ்விடங்களில் உண்டாகும் பயனை முன்பு நின்ற நிலையால் உண்டாக்கி அவ்விடத்து உற்ற மிகுதி குறைவுகள் ஆராய வல்லவன் வினை செய்வானாக எ - று.

பொருள் வருவதற்கு இடமாவது நிலம் முதலான இடம். அதனைப் பெருக்குதலாவது காடு கெடுத்து நாடு ஆக்குதல் முதலாயின. வளம் படுத்தலாவது பயிர் எற்றுங்கால் வான் பயிர் எற்று வித்தலும் பாழான இடங்களிலே குடியேற்றி ஆயம் பொருள் உண்டாக்குதலும். இது பெரும்பாலும்..........செய்வானை நோக்கிற்று. (7)

கா. 8. ப. 10.

**எனைவகையாற் றேறியக் கண்ணும் வினைவகையான்**
**வேறாகு மாந்தர் பலர்.**

(கா - உ.) எ - து.—உலகத்து அரசர் ஒருவரை எனைத்து வகையானும் தெளிந்த இடத்தும், மனனும் கரும வகையிற்றல் வேறுபட்டு நிற்கும் மாந்தர் உலகத்துப் பலர் உளர் ஆகலின், அதனால் தாம் பிறர்க்குச் செய்யும் கருமத்தின்கண் வரும் பொருள் முதலாகிய பேறு கண்ட இடத்துத் தமது நெறியினைத் தோராது புரிய நிற்கும் புல்லிமை யுடையோரும் உளர் ஆகலாற் பெரிதும் தெரிந்து வினை அடைக்க வேண்டும் எ - று.

(ப - உ.) எ - து.—..............................................
..................................................................
..................................................................
......................
........எ - று. (8) கா. 9.

ப. 9.

நாடோறு நாடுக மன்னன் வினைசெய்வான்
கோடாமை கோடா துலகு.

(கா - உ) எ - அருமைத்தாகலான்,

து.—யாவரையும் கருமத்தின் கண் தெளிதல் தான் தெளிந்தவர் மாட்டும் அவர் தனது வினை



செய்யுமிடத்தும் அதனை இகழாது பெரிதும் ஆராய்ந்து போதுக அரசனவன் : அது என்னையோ எனின், இங்ஙனம் ஆராயவே மற்று அவ்வினை செய்வோன் தனது இயல்பினானும் அச்சத்தானும் நெறிகோடான் ஆகலான் கோடாமையாலே அவ்வினைவழி யடிப் பட்டு வருகின்ற உலகம் கோடாது: எனவே உலகத்து மக்கள் அனைவரும அரசன் சூழ்ச்சி அறிந்து அருநெறிக்கண் நிற்பார் எ - று.

(ப - உ.) எ - து.—வினை செய்வான் கோடா தொழிய உலகம் கோடாது செவ்வையிலே நிற்கும் ஆதலால் தோறும் ஆராய்க மன்னவன் எ - று.

அவன் செயலை நாள் இது
பெ ன்றது.

வினை செய்வான் செயலை நாள்தோறும் ஆராய வேண்டு முறை செய்வான் என்றதனால் அற ஆராய்ச்சி செய் வாரை நோக்கிற்றே ஆயினும் ஏனை அமாத்தியர்...........செய்தல் தொழிலுடையாராதலால்....................... (9)

கா. 10.

ப. 8.

வினைக்கண் வினையுடையான் கேண்மைவே றாக
நினைப்பானை நீங்குந் திரு.

(கா - உ.) எ - து.—தனது காரியத்தின் கண் சூழ்ச்சி பெரிதும் உடையோன் யாவன் அவனது நட்பினை யாதானும் ஒருவாற்றான் வேறுபடக் கருதும் வேந்தனை நீங்கிப் போம் செல்வம்: ஆகலான் அது நோக்கி அவனொடு பெரிதும் நட்புடையன் ஆதல் அரசற்கு இயல்பு எ - று.

(ப - உ.) எ - து.—வினையிடத்து வினை செய்ய வல்லவனது நட்பை வேறாக நினைக்கும் அரசனைத் திருமகள் நீங்குவள் எ - று.

இது வினை செய்ய வல்லாரை அருள் பண்ண வேண்டு மென் பதூஉம், அவருடன் மாறுபட லூஉம் கூறிற்று.

ஒழுகிற் பொருள் கேடுவரும் என்ப
(10)

(கா - உ.) இனி மற்று இவ்வாறு அரசர் தமக்குத் தொழில் செய்யும் மாக்களை ஆணைகடந்த தருவதாயினும் மற்று இவரினும் இவர் வினைவழிக் கொணர்ந்து ஈட்டிய தம் பொருள் இனிது நுகர் தற்கு உரியர் ஆகிய சுற்றம் தழாக்கால் பொருளினான் ஆகிய பயன் இலாது ஆகலான மற்று இதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 15. சுற்றந்தழால்.

(ப - உ.) சுற்றம் தழாலாவது அரசன் தனது சுற்றத்தினோடு பொருந்தி ஒழுகுதல். மேல் அமாத்தியர் மாட்டு அரசன் ஒழுகும் திறன் கூறினார்: இனிச் சுற்றத்தார் மாட்டு அரசன் ஒழுகும் திறன் கூறுகின்றார் ஆகலின் இதன் பின் கூறப்பட்டது.



கா. 1.

ப. 2.

கொடுத்தலு மின்சொல்லு மாற்றி னடுக்கிய

சுற்றத்தாற் சுற்றப் படும்.

(கா - உ.) எ - து.—பொருள் மும் இவர்க்கு நடத்த வல்லவன் பயின்ற சுற்றத்தினாற் சூழப்படும் எ

வழக்கமும் இன்சொல் வழக்க ஆயின் மற்று அவன் பெரிதும்

- று.

(ப - உ.) எ - து.—வேண்டும் அளவு கொடுத்தலும் இன்சொல் கூறுதலும் செய்வான் ஆயின் தனக்கு முன்னாகியும் பின்னாகியும் வருகின்ற சுற்றத்தாலே சூழப்படுவான் எ - று.

இஃது ஒழுகும் திறன் கூறிற்று.

• (1) கா. 2.

ப. 1.

சுற்றத்தாற் சுற்றப் படவொ ழுகல்
செல்வந்தான்
பெற்றத்தாற் பெற்ற பயன்.

(கா - உ.) எ - து.—அரசனானவன் தான் பெருஞ் செல்வம் பெற்றதனால் பின்பு பெற்ற பயன் யாதோ எனின் அதனை வழங்குமாறு வழங்கி அங்ஙனம் சுற்றத்தால் சூழப்படுமாறு செய்து ஒழுகலே அரசர்க்கு இயல்பு எ - று.

(ப - உ.) எ - து.—சுற்றத்தாலே சூழப்பட்டு ஒழுகுவது வத்தைப் பெற்ற அதனான் உண்டாய பயன் எ - று.

செல்

இது சுற்றந் தழுவ ஒழுக வேண்டும் என்றது.

(2) கா. 3.

ப. 6.

விருப்பறாச் சுற்ற மியையி னருப்பறா
வாக்கம் பலவுந் தரும்.

(கா - உ.) எ - து.—தம் மாட்டு உள்ளத்தால் விரும்புதலை அருச் சுற்றமானது தம் பொருள் கொண்டு நுகரின் மற்று அது மேன் மேலும் வந்து அரும்பித் தோன்றுதல் அறாத செல்வம் பலவற்றையும் கொடுக்கு மெனவே அவர் நுகர்தலின் மறுமைப் பயனும் மற்று ஈண்டு அவரால் ஆகும் ஆக்கம் பலவுள ஆகலின் இருமைப் விரிவாகிய ஆக்கம் பலவும் தமக்கு எய்தும் எ - று.

பயனின் (ப - உ.)
ஒழுகுமாயின்

எ - து.—அன்பு அருச் சுற்றம் ஓரிடத்தே பொருந்தி அது கிளப்புஅரு ஆக்கம் ஆகிய பலவற்றையும் தரும் எ - று.

பிள்ளைகளை வேறு வேறு இடத்து நிறுத்த வேண்டும் என்பது சில ஆசாரியர் மதம். அதனை மறுத்து மக்களை ஓரிடத்தே கொண் 62



டிருக்க வேண்டும் என்பதூஉம் அதனானே குலம் உம் கூறிற்று.

வளரும் என்பதும் கா. 4.
(3)

ப. 5.

அளவளா வில்லாதான் வாழ்க்கை குளவளாக்
கோடின்றி நீர்நிறைந் தற்று.

(கா - உ.) எ - து.—அரசர்க்கு வரம்பாகிய செல்வமான து இவ் வ்ரறு சுற்றம் சூழ்தல் இவை இன்றித் தனித்துடைய அரசர் வாழ்க்கையானது எத்தன்மைத்தோ எனின் மற்று அது உலகில் குளச் சூழலானது சூழ்ந்து நின்று பாதுகாக்கும் வந்துநிறைந்த அத்தன்மைத்து எ - று.

கரை இன்றி நீர்

அளவு என்பது தனக்கு வரம்பாகிய செல்வம் என்றது. அளா வுதல் என்பது சுற்றத்தொடு விசாரிக்க என்றது. குளவளா என்றது குளம் சூழல் என்றது. கோடின்றி என்றது கரை இன்றி என்றது.

(ப

வானது

- உ.) எ - து.—கலக்கப் படுவாறு கலப்பின்றி ஒழுகு வாழ்க்கை குளமாகிய வள்வு கரை இன்றி நீர் நிற்கதாற் போலும் எ - று

இது சுற்றம் தழுவிக் கொள்ளாக்கால்
செல்வம் காவல்படாது என்றது. இத்துணையும் கூறிற்று.

சுற்றத்தார் எல்லாரோடும் தழுவும் திறன் கா. 5.
(4)

ப.

4.

பற்றற்ற கண் ணும் பழமைபா ராட்டுதல்
சுற்றத்தார் கண்ணே யுள.

(கா - உ.) எ - து.—அரசரானவர் வையம் காவல் கொண்டு வாழும் காலம் வாழ்தலேயும் அன்றி மற்று அவர்

பற்றிக் அற்ற இடத்தும் பழமையை
பற்று நிற்றலும் சுற்றத்தார் மாட்டே

மேற்கொண்டு அவரைக் கைவிடாது
உளவாம் எ - று.

(பு - உ.) எ - து.—பொருள் அற்ற கண்ணும் பழமையைத் தொண்டாடி விடா தொழிதல் சுற்றத்தார் மாட்டே உளவாம் எ - று.

இஃது இல்லாத காலத்தும் விடார் என்றது.

கா. 6.

தமராகித் தற்றுறந்தார் சுற்ற மமராமைக்

பு. 9.

காரண மின்றி வரும்.

(கா. - உ.) எ - து.—தாவர் முதலிய மூத்தோர் யாவர், மற்று இவர் தாம் தகாதன செய்யின் தகாது என்று அடித்தலும், கல்லாது

இகழின் கல்லென்று கழறலும் செய்தால் தமக்கு இவை உபதேசம் என்றும் கொள்ளாது செய்யின் மற்று அச்சுற்றத்தாராது பொருந்தாமையால் தம்மைக் கைவிடுதல் காரணம் இன்றி வரும் எ - று.

தமராகி என்றது தமக்கு உரியராகி என்றது. தற்றுறந்தார் என்பது தன்னைத் துறந்தார் என்பது. கல்லுதலாவது அடித்துச் சொல்லுதல், அமராமை என்பது பொருந்தாமை.

(ப - உ.) எ - து.—முன்பு தமக்குத் தமராகி வைத்துத் தன்னை விட்டுப் போனவர்கள் சுற்றமாதல், தான் அவர் மாட்டு அமராமைக்குக் காரணம் இன்றி ஒழுக வரும் எ - று.

காரணம் இன்றி ஒழுகுதலாவது அவனுடைய சுற்றத்தோடு மேனி ஒழுகுதலும் அதுபோல்வனவும். இது விட்டுப்போன புத்திரனைக் கூட்டிக் கொள்ளுமாறு கூறிற்று. (6)

கா. 7.

ப. 10.

உழைப்பிரிந்து காரணத்தின் வந்தானை வேந்த
னிழைத்திருந் தெண்ணிக் கொளல்.

(கா - உ.) எ - து.—தன் முதுகுரவர் மாட்டினின்று நீங்கி மற்று யாதானும் ஒரு காரணத்தினால் தன் மாட்டு வந்தான் ஒருவனை மற்று அம்மன்னனானவன் யாது செயற்பாலதோ எனின், அவன் தன்மையைப் பல படியும் ஆராய்ந்து அமைத்து பின்னையும் கடிதின் தேருது கசடற விசாரித்துத் தரும் எனின் தம் சுற்றத்தோடு ஒக்கத் தழீஇக் கொள்ளினும் கொள்க: அல்லவெனின் அது செய்யா தொழிக எ - று.

உழைப்பிரிந்து என்பது தன் முதுகுரவர் மாட்டினின்று நீங்கி எ - று.

(ப - உ.) எ - து.—தன்னிடத்தினின்று நீங்கி ஒரு காரணத்தால் வந்தவனை அரசன் இனிமை செய்து வைத்துப் பின்பு காரியமானபடி எண்ணி அதற்குத் தக்கபடிக் கூட்டிக் கொள்க எ - று.

எண்ணிக் கோடலாவது அவன் வந்த காரணத்தை எண்ணுதலும், ஒருவனாகின் அதற்குத் தக்கவும் பலர் உண்டாகில் அதற்குத் தக்கவும் எண்ணுதலும். இது மீண்டு வந்த இராஜ புத்திரனோடு செய்யும் திறன் கூறிற்று. (7)

கா. 8. ப. 8.

காக்கை கரவா கரைந்துண்ணு மாக்கமு
மன்னநீ ரார்க்கே யுள.



(கா - உ.) எ - து.—காக்கைகளானவை யாதானும் பலி முதலிய இரை பெற்றால் பலவும் அறியாமல் கரந்து ஒழுகாது என்செய்யும் எனின் தம் இனத்தையும் விளித்துக் கொண்டே நுகரும்; அதனால் அரசர்க்குச் சுற்றம் ஆகின்ற ஆக்கமும் அத்தன்மை யார்க்கே

உளவாவது எ - று.

(ப - உ.) எ - து.—காக்கை ஓரிரை பெற்றால் அதனை மறை யாது தன் இனமாயின எல்லாவறறையும் அழைத்து உண்ணும்; அதுபோலச் செல்வம் பெற்றால் அதனைத் தன் சுற்றத்தார் எல்லா ரோடும் நுகர்வார்க்கே ஆக்கம் உளதாவது எ - று.

இது மக்கள் பலர் உண்டானால் எல்லார்க்கும் பகுத்து உண்ணக் கொடுக்க வேண்டும் என்றது. இவை மூன்று பாட்டானும் அன்பு அறாத மக்கட்குச் செய்யும் திறன் கூறிற்று. (8)

கா. 9. ப. 7.

பொதுநோக்கான் வேந்தன் வரிசையா னோக்கி
னதுநோக்கி வாழ்வார் பலர்.

(கா - உ.) எ - து.—கிழ்ச்சொன்ன முறைமையின் பொதுப்பட அணைத்தலேயும் அன்றிப் பின்னும் பிறர் குலமும் ஒழுக்கமும் குண மும் கல்வியும் முதலிய மேம்பாட்டு வேற்றுமையானும் குறிக் கொண்டு அணைப்பனாயின், மற்று அம்மாபு நோக்கித் தாமும் அங்ங னம் ஒழுகுவர் உலகத்தோர்; எனவே இதனைப் படிமாபு ஆகக் கொண்டு யாவரும் தம்தம் சுற்றம் ஓம்புவார் எ - று.

பரி. பா - ம். 'வாழ்வார் பலர்'.

(ப - உ.) எ - து.—எல்லோரையும் பொதுவாகப் பாராதே ஒரு வனைத் தலைமையாலே அரசன் பார்ப்பானாயின், அத்தலைமையை நோக்கி வாழ்வார் பலர் எ - று.

மக்கள் பலர் உண்டானால் எல்லாரையும் ஒக்கப் பார்க்காமல் ஒருவனை இளவாசு ஆக்க வேண்டும் என்றது.

பாராது, நீஇ
(9)

கா. 10.

ப. 3.
பெருங்கொடையான் பேணன்
மருங்குடையார் மாநிலத் தில்.

வெகுளி யவனின்

(கா - உ.) எ - து.—உலகத்து வேந்தனானவன் இனமும் வரிசையும் அறிந்து அணைத்தலே அன்றி, மற்றும் யாவரும் வந்து தன்னோடு மருவும் பெருங் கொடையான............னைப்போலச் சுற்றம் உடையார் மற்று இனி இடம்படு ஞாலத்து யாவரும் இல்லை எ - று.

16. பொச்சாவாமை 65

பேணன் வெகுளி என்பது சினத்தைக் கொண்டிரான் மருங்குடையார் என்பது சுற்றம் உடையார் என்றது.

என்பது.

(ப - உ). எ - து.—மிகக் கொடுக்க வல்லனைச் சினத்தையும்

விரும்பான் ஆயின், அவனின் மிக்க துணை
இன்கண் இல்லை எ - று.
உடையார் பெரிய உல

மேற் கூறியவாறு அன்றி இவ்வாறு
செய்யின், துணை உடையன் ஆம் என்றது : இது
கூறினர்.
செய்தல் அருமையின் வேறு வகுத்துக்
(10)

(கா - உ.) இனி மற்று இங்ஙனம் உலகத்துப்
பலரையும் தம்
சுற்றம் ஆக மருவும் பண்புடை வேந்தர்க்குப் பலரையும் இகழ்தல் செய்யாமை இயல்பு ஆகலான், மற்று இதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 16. பொச்சாவாமை.*

(ப - உ.) பொச்சாவாமை யாவது மறவி இன்றி ஒழுகுதல்: அஃது எவ்விடத்து எனின், தனது சோர்வு பார்த்துப் பிறர் வஞ்சம் செய்யும் இடங்களினும், பொருள் - இன்பங்கள் செய்ய வேண்டும் இடங்களினும் மறத்தல் இன்மை. பொச்சாப்பு எனினும், மறவி எனினும், இகழ்ச்சி எனினும் ஒக்கும். மேல் அமாத்தியர் மாட்டும், சுற்றத்தார் மாட்டும் ஒழுகும் திறன் கூறினர்; அதனால் பயன் உண்டாவது தன்னைத் தான் கடைப்பிடித்து ஒழுகின் என்று அதன்பின் கூறப்பட்டது.

கா. 1.

ப. 7.
பொச்சாப்புக் கொல்லும் புகழை
நிச்ச நிரப்புக்கொன் ருங்கு

யறிவினை

(கா - உ.) எ - து.—உலகத்துத் தாம் பிறரை இகழும் இகழ்ச்சி யாவது, மற்று அது தம் புகழினைத் தலையழிக்கும்: என்போல எனின், ஒருவாது அறிவுடைமையைச் சிலர் மாட்டு நாள் தோறும் சென்று இரக்கும் இரப்பானது தலையழித்தாற் போல எ - று.

பொச்சாப்பு என்பது இகழ்ச்சி. நிரப்பு என்பது இரப்பு.

(ப - உ.) எ - து.—மறவியாகின்றது புகழைக் கொல்லும்; றைத் தேட்டுண் அறிவைக் கொல்லுமாறு போல எ - று.

அற்

புகழ்பட வாழுங்கால் தன் அளவை மறந்து கொடுப்பன் ஆயின் தான் கருதின புகழும் முடியச் செல்லாது அளவிலே நின்று சாம்,

* பொய்ச்சாவாமை என்று கவிங்கர் உரை வட்டில்

9

உள்வது.

இயற்கையாகிய அறிவு நல்குரவினால் சாமாறு போல என்றவாறு ஆயிற்று. இது கொடையில் கடைப்பிடித்தல் வேண்டும் என்றது. இவை மூன்றினானும் பொருளிற் கடைப்பிடித்தல் கூறிற்று. (1)

# கா. 2.

# ப. 2.

இகழ்ச்சியிற் கெட்டாரை யெண்ணுக தாந்தம்
மகிழ்ச்சியின் மைந்துறூஉம் போழ்து.

தாம்

(கா - உ.) எ - து.—இவ்வுலகத்து வேந்தருள் முற்காலத்துப் பிறரை இகழ்ந்து வலி செய்யும் பொழுது ..........எ - று.

இதற்குப் பாரதத்தில் நூற்றுவரையும் இராமாயணத்து இராவணனையும் பிறரையும் எண்ணிக் கொள்க. மைந்துறூஉம் போழ்து என்பது வலியினைச் செய்யும் பொழுது என்றது.

(ப - உ.) எ - து.—குறித்து உணரும் உணர்ச்சி இன்மையானே முன்பு கெட்ட அரசரை நினைக்க: தாமும் தம்முடைய மகிழ்ச்சியாலே வலிதாயிருக்கும் பொழுது எ - று.

இதனால் சொல்லியது வலியாரைப் பகைவர் வெல்லுங்கால் அவரைச் சோர்வு பார்த்துக் களவினால் கொல்வார் : ஆதலால் தன் வலியை நினையாது பகை உண்டாகும் என்று நினைத்துக் கோயிலும் அந்தப்புரமும் நீர் விளையாட்டு ஆடும் இடமும் இளமரக்காவும் வேட்டையாடும் காடும் உண்பனவும் பூசுமவையும் இகழாது சோதித்துக் கொள்க. (2)

கா. 3. ப. 10.

முன்னுறக் காவா திழுக்கியான் றன்பிழை
பின்னூ றிரங்கி விடும்.

(கா - உ.) எ - து.— யாம் பிறரை அவமதிப்பின், பின்பு எமக்கே பலாலும் கேடு வந்து எய்தும் என்று முன் சோவித் தேர்ந்து பரிகரியாது பிறரை அவமதி பண்ணினன் யாவன் : மற்று அவன் தன் பழி

பின் எண்ணிறந்த பலவாவதும் செய்து மற்றும் துயர் ஆற்றாது பெரிதும் சோகித்துக் கெட்டுவிடு மென்றவாறு. பின்னூறு என்பது - நூறு வகையால் இரக்கத்தைத் தரும் எ - று.

(ப - உ.) எ - து.—எகிரது ஆகவே பழிவரும் வழியைக் காவாதே அதனை இகழ்ந்து தப்பச் செய்தவன், அத்தப்பினால் வரும் குற்றத்துக்கு இரங்கிவிடும் எ - று.

தன்பழி முன்னுறக் காவாதா னென்று கூட்டுக. மேற்கூறியவாறு செய்யாதார் முன்பே செய்யப் பெற்றிலேம் என்று இரக்குவர் என்றது. (3)

## 16. பொச்சாவர்மை

67

கா. 4.

ப. 3.

அச்ச முடையார்க் கரணில்லை யாங்கில்லைப்
பொச்சாப் புடையார்க்கு நன்கு.

(கா - உ.) எ - து.—அச்சம் உடைய அரசர்க்குப் புறத்து எல்லாம் அரண் உடையரோ ஆயினும், ஒன்றும் இல்லையானவாறு எவ்வண்ணம்: மற்று அவ்வண்ணமே இல்லை: யாது எனின் பிறரை எளியர் என்று அவமதிப்பினை அகத்துடையார்க்கு நன்மைகள் ஒன்றும் இல்லை: தீமைகளே எ - று.

•

(ப - உ.) எ - து.—அச்சம் உடையார்க்கு அவ்வச்சம் தீர்க்க வல்லது ஓர் அரண் இல்லை: அதுபோலப் பொச்சாப்பு உடையார்க்கு வருவது ஒரு நன்மை இல்லையாம் எ - று.

அச்சம் புகுந்துழி எல்லாம் புகுதும் ஆதலின் அதனைக் காப்பது ஓர் அரண் இல்லை என்றார்—மறந்தார் செய்வதோர் பொருளில்லை, ஆதலின் நன்மை இல்லை என்றார். இது பொச்சாப்பு உடையார்க்குக் காவல் இல்லை என்றது. (4)

கா. 5.

ப. 8.

இறந்த வெகுளியிற் றீதே சிறந்த
வுவகை மகிழ்ச்சியிற் சோர்வு.

(கா - உ.) எ - து.—அரசராய் உள்ளார் தமக்கு அடாத வழிச் சினக்கின்ற மிகுசினம் போல மிகவும் தீது என்பது யாதோ எனின்,

தமது மனச் செருக்கினாலே யாவர் மாட்டும் இன்புற்றிராது உவகையைச் சோர விடுக்கின்ற சோர்வு எ - று.
மிக்க

இறந்த வெகுளி என்பது மிகுந்த சினத்தை என்றது.

(ப - உ.) எ - து.—மிக்க வெகுளியுடைய தாகலினும் தீது மிக்க உவகையால் உண்டான மகிழ்ச்சியால் தன்னை மறந்திருத்தல் எ - று.

இது காமத்தின் கண்ணும் வெகுட்சியின் பிடித்தல் கூறிற்று.

கண்ணும் கடைப் கா. 6.
(5)

ப. 9.

இழுக்காமை யார்மாட்டு மென்றும்
வாயி னதுவொப்ப தில்.

வழுக்காமை

(கா - உ.) எ - து.—உலகத்து மன்னரானவர் ஒருவர் மாட்டு ஒருவரை இகழாமையாகிய குணம் உளதாயினும் ஒரு படிப்பட நிற்றல் யாவர்க்கும் அரிது: மறறு இங்ஙனம் வழுவாமை வாய்ப்பின் அதனை ஒப்பதோர் நன்மை உலகத்து யா தும் இல்லை எ - று.

இழுக்காமை என்பது வழுக்காமை: இகழாமை என்றுமாம்.

(ப - உ.) எ - து.—யார் மாட்டும் எல்லா நாளும் தப்புச் செய்யாமை தப்பாமல் வாய்க்குமாயின் அதனை ஒக்க நன்மை பயப்பது பிறிது இல்லை எ - று.

இது முறை செய்யுங்கால் கடைப்பிடித்துச் என்றது.

செய்ய வேண்டும் கா. 7.
(6)

ப. 1.

பொச்சாப்பார்க் கில்லை புகழ்மை யதுவுலகத்
தெப்பானூ லோர்க்குந் துணிவு.

(கா - உ.) எ - து.—தத்தம் கோட்பாட்டால் பெறும் பயன் வேறுபடுத்து அமைக்கும் அறுவகைச் சமயத்தோர்க்கும் அவை கடந்த அப்பாலோர்க்கும் பிறரை அவமதி பண்ணி இகழாது ஆற்றல் உடையராதலே தத்தம் பெறுபயனுக்கு உறுதி நெறி யென்பது, தாம் கற்ற நூல்களில் வேறு பயன் அன்றியும் பிற நூல்களிலும் இக் குற்றம் நன்று என்பார் யாரும் இல்லை எ - று.

(ப - உ.)
இல்லையாய் :

எ - து.—பொச்சாப்பு உடையார்க்குப் புகழுடைமை அஃது உலகத்து வழங்குகின்ற அறுவகைப்பட்ட நூலோர்க்கும் துணிவு எ - று.

இது பொச்சாப்பு ஆகாது என்றது.

(7) கா. 8.

ப. 5.

உள்ளிய தெய்த லெளிதுமன்
றுள்ளிய துள்ளப் பெறின்.

மற்றுந்தா

(கா - உ.) எ - து.—அரசன் தான் கருதிய நன்மையைக் கருதி யார்க்குப் பெறுதல் மிகவும் எளிது: எப்பொழுது எனின் இவ்வுல கத்து ஒருவரும் தன்னை அவமதி பண்ணாது மதித்தல் வேண்டித் தான் கருதிய......... ருலகத்தார் செய்யும் வினையின், வித்தியது வினைதலோடு ஒக்கும் ஆதலால் பிறர் மாட்டு இகழ்ச்சி.................. நன்மை கருதுவார் எ - று.

(ப - உ.) எ - து.—தான் நினைத்த பொருளைப் பெறுதல் பின்பும் அதனை மறவாதே நினைக்கக் கூடுமாயின் எ - று.

எளிது. இனிப் பொருளின்கண் மறவாமை

ததனை மறவாமை வேண்டும் என்றார்.

கூறுவார் முற்பட நினைத்
(8) கா. 9.

ப. 4.

புகழ்ந்தவை
இகழ்ந்தார்க்

போற்றிச் செயவேண்டுஞ் செய்யா
கெழுமையு மில்.



(கா - உ.) எ - து.—தொல்கலேயும் தொல் சான்ரேரும் இவை இவை நல்ல என்று புகழ்ந்தவற்றை நீரும் குறிக்கொண்டு செய்தலே விரும்புமின் : என்னே எனின் இங்ஙனம் செய்யாது அவற்றை இகழ்ந் தவர்க்கு இம்மை ஆக்கமும் அன்றி மறுமை ஆக்கமும் இல்லே எ - று.

எழுமை என்பது மறுமை.

(ப - உ.) எ - து.—உயர்ந்தோரால் புகழப்பட்டவையிற்றைக் கடைப்பிடித்துச் செய்தல் வேண்டும்: அவற்றைச் செய்யாது இகழ்ந்தவர்களுக்கு எழு பிறப்பினும் நன்மை இல்லையாம் ஆதலான் எ - று.

இஃது அறத்தின்கண் இகழாமை கூறிற்று.

(9) கா. 10.

ப. 6.

அரியவென் ருகாத வில்லைபொச் சாவாக்
கருவியாற் போற்றிச் செயின்.

(கா - உ.) எ - து.—இவை இவை செய்தற்கு அரியன என்று தம்மால் செயற்படாது இருப்பன யாவும் இல்லை: எப்பொழுது எனின் உலகத்து நல்லோரையும் நல்லனவற்றையும் இகழ்ந்து அவமதி பண்ணுமை யாகின்ற இந்தச் சாதனம் ஆகிய உபாயத்தினைக் குறிக்கொண்டு செய்யுங் காலத்து எ - று.

(ப - உ.) எ - து.—செய்தற்கு அரிய என்று செய்தல் ஆகாதன இல்லை: மறவாமையாகிய கருவியாலே பாதுகாத்துச் செய்வனாயின் எ - று.

இது வினை

செய்யுங்கால் மறவாமை வேண்டும் என்றது. (10)

(கா - உ.) இனி மற்று இவ்வாறு அவரவர் குணத் தன்மைக்குத் தக்கார்க்கு அளிக்க வல்ல அரசர்க்கு அல்லது செங்கோல் ஆகிய நீதி நடாத்தும் நெறியிலக்கணம் நிகழாமையால் மற்று இதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 17. செங்கோன்மை.

(ப - உ.) செங்கோன்மையாவது செவ்விதாகிய முறை செய்தலுடைமை. குற்றமும் குணமும் தூக்கிப் பார்த்தலால் கோல் என்றார். அது கோடாமையால் செங்கோல் ஆயிற்று. மேல் அமாத்தியர் மாட்டும் சுற்றத்தார் மாட்டும் தன் மாட்டும் செய்யும் திறன் கூறினார். இஃது உலகத்தார் மாட்டுச் செய்யும் திறன் கூறுகின்றது ஆகலின் அதன்பிற் கூறப்பட்டது.

கா. 1.

ப. 1. .

ஓர்ந்துகண் ணோடா திறைபுரிந்
தேர்ந்துசெய் வஃதே முறை.

தியார்மாட்டுந்

(கா - உ.) எ - து.—வேந்தனைவன்
யல்லாமையும் ஆராய்ந்து யாவர் மாட்டும்

தனக்குத் தகுதியும் தகுதி
காதல் காரணமாகக் கண்
ணோட்டம் செய்யாது நெறியினை விசாரித்து.
அதன்கண் தங்கிச் செய்யும் செய்கை யாது மற்று
அதுவே செங்கோலாகிய நீதி எ - று.

கண்

ஓர்ந்து என்பது ஆராய்ந்து என்றது. புரிந்து
தங்கி என்றது.

என்பது அதன்

(ப - உ.) எ - து:—ஒருவன் செய்த குற்றத்தை ஆராய்ந்து கட்டோர் என்று கண்ணோடாது தலைமையைப் பொருந்தி யாவர் மாட்டும் குற்றத்திற்குத் தக்க தெண்டத்தை காலும் நூல் முகத்தான் ஆராய்ந்து செய்வது முறை என்று சொல்லப்படும் எ - று.

யாவர் மாட்டும் என்றது தன் சுற்றம் ஆயினும் எ - று. புரிதலாவது சுற்றம் என்று கண்ணோடாத அரசனாயிருத்தல். செங்கோன்மையாவது இத்தன்மைத்து என்று கூறிற்று.

இறை
இது
(1)

கா. 2.

ப. 6.

இயல்புளிக் கோலோச்சு மன்னவ
பெயலும் விளையுளுந் தொக்கு.

னாட்டிற் (கா
கண்ணே

- உ.) எ - து.—சிறிதும் கோடாமல் குறிக்கொண்டு மாபின் செங்கோல் நடாத்தும் வேந்தனது நாட்டிடத்து உள:

யாவை எனின் பருவத்து வந்து உதவும் மழையும் பலவளம் ஆகிய விளைச்சலும் என்னும் இவை முழுவதும் குறைவு அறக்கூடி எ - று.

பரி. பா - ம். ‘னாட்டட்’.

(ப - உ.) எ - து.—நூல் சொல்

முறைமையை நடத்த வல்ல அரசனது
விளைதலும் கூட எ - று.

சொன்ன முறையினனே
நாட்டாம் மழை பெய்தலும் மேற் கூறிய
என்றது.
முறை செய்ய மழையும் விளைவும் உண்டாம் கா.
(2)

3.

ப. 7.

அந்தணர் நூற்கு மறத்திற்கு மாதியா
நின்றது மன்னவன் கோல்.

(கா - உ.) எ - து.—உலகத்து அனைத்து நீதியையும் வழுவுஅற உணர்த்துவது மறைநூல் அன்றே: அதனால் அவ்வருமறை யாகிய நூலிற்கும் மற்று அதன் வழி நடைபெற்று வருகின்ற அறம்

## 17. செங்கோன்மை

71

அனைத்திற்கும் இவ்வுலகத்து ஆதியாக நிலை பெற்றது யாதோ எனின், வேந்தனவன் மற்று அவ்வற நெறி கோடாமல் பாதுகாக்கின்ற செங்கோல் ஆகிய நீதி எ - று.

மற்று அறநூல் என்றும் நூல் என்றும் இங்ஙனம் ஒன்று சொல்லாது அந்தணர் நூல் என்றது, அரசர் நெறியாகிய செங்கோ லும் நால் வருணத்தார் நடையுள் ஒரு நடை ஆகலானும், அவை யாவையும் பிறவும் துறவுமாகிய அனைத்தினையும் பழுதுஅற உரைப் பது பார்ப்பார் ஓதியும் ஓதுவித்தும் இங்ஙனம் விளங்க நடைபெற்று வருகின்ற வேதம் ஆகலான் என்றவாறு.

(ப - உ.) எ - து.—அந்தணாது ஆகிய வேதத்திற்கும், அதனுல் கூறப்பட்ட அறத்திற்கும் முதலாய் நின்றது அரசன் செய்யும் முறைமை எ - று.

ஓதுவாரும் அறம் செய்வாரும் முறை செய்யும் அரசன் நாட் டகத்து உளராவார்: ஆதலான் முதல் ஆயிற்று. இது கல்வியும் அற மும் வளரும் என்றது. (3)

கா. 4.

ப. 3.

கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல்
களைகட் டதனொடு நேர்.

பைங்கூழ்

(கா - உ.) எ -
தொழிலினல் சாலக்

து.— தகுதி ஆராயாது உலகத்துக் கொலைத்
கொடியராய் உள்ளாரை அரசனானவன் தக்
காங்கு செறுத்தல் ஆகிய
பாழ்பட நெருக்குவதாகிய
னோடு ஒக்கும் எ - று.
நீதி யாதினை ஒக்கும் எனின், பசும்பயிர்
களையினைக் கண்டு பறித்து எறிந்த அத

(பரி. உ.) எ - து.—கொடுமை செய்தாரைக் கொலையினானே அரசன் ஒறுத்தல் குற்றம் அன்று: பைங்கூழ் வளர்தற்குக் கவர் களை களைந்ததனோடு ஒக்கும் எ - று.

கொடியாரவர்கள் பலர்: ஆறலைப்பார், சூறை கொள்வார் இவர்கள் போல்வார். பிறரைக் கொல்லாதாரைக் கொல்லுதல் நீதி அன்று ஆயினும் கொடியாரைக் கொல்ல வேண்டும் என்றது. (4)

கா. 5. ப. 8.

வேலன்று வென்றி தருவது மன்னவன்
கோலது கோடா தெனின்.

(கா - உ.) எ - து:—வேந்தர்க்கு வேலே
கொடுப்பது: மற்று மன்னனானவன் மாயினைக்

அன்று வெற்றியைக்
கோடாமல் நடத்தும்.

கோலானது வென்றியைக் கொடுக்கும்: மற்று கோடாதவாறு நடத்துமாயின் எ - று.

அது சிறிதும்

(ப - உ.) எ - து.—அரசனுக்கு வென்றி தருவது அவன் கை வேல் அன்று; முறை செய்தல் அதனைக் கோடச் செய்யா தொழியின் எ - று.

இ.ற ெ சங்கோன்மை செய்ய வெற்றி உண்டாம் என்றது. (5) கா 6.

ப. 9.

இறைகாக்கும் வையக மெல்லா மவனை

முறைகாக்கு முட்டாச் செயின்.

(கா - உ.) எ - து.—இவ்வையகத்து வாழும் மக்கள் முதலாகிய உயிர்கள் அனைத்தையும் மன்னனானவன் ஒன்றினை ஒன்று நலியாமல் பாதுகாத்து ஒழுகும்: இனி மற்று அம்மன்னவன்..... ......செங்கோலாகிய நீதியானது நிறையைக் காத்து நிற்கும்: மற்று இதனை இடை முறியாமல் பரிகரித்துச் செய்யுமாயின் எ - று.

(ப - உ.) எ - து.—வையகம் எல்லாவற்றையும் அரசன் காக்கும்: அவ்வாசனை அவன் தான் செய்யும் அதனைத் தப்பாமல் செய்யின் எ - று.

இது தனக்குக் காவல் ஆம் என்றது.

முறைமை காக்கும் :

(6)

கா. 7 .

ப. 5.

குடிதழீஇக் கோலோச்சு மாநில
னடிதழீஇ நிற்கு முலகு.

மன்ன

(கா - உ.) எ - து.—தனது கோற்கீழ்
மக்களைக் குலையாமல் அணைத்துக் கொண்டு

வாழும் குடியாகிய குல
செங்கோல் நடாத்தும்

பூபாலனைத் தமது ஆக்கத்திற்கு எல்லாம் அடியாக
பெற்று வாழும் அனைத்து உயிர்களும் எ - று.

அடைத்து நிலை

அடிதழீஇ என்றது தமது ஆக்க நிலைக்கு அவனே முதலாக நிற்க என்றது.

(ப - உ.) எ - து.—குடியைப் பொருந்தி செலுத்துகின்ற பெரிய நில மன்னனது அடியைப்

முறைமையைச்
பொருந்தி நிற்கும்
உலகு எ - று.

இது முறைமை செய்யும் அரசன் கண்ணது றது.

ஆம் உலகம் என் கா. 8.
(7)

ப. 10.

எண்பதத்தா னோடி முறைசெய்யா மன்னவன்
றண்பதத்தாற் றானே கெடும்.

17. செங்கோன்மை 78

(கா - உ.) எ - து.—விசார வழியால் ஆராய்ந்து செங்கோல் நடத்தாத மன்னவன் மற்று இனித் தான் செய்யும் தண்ணிய வழியாலே தானே கெட்டு விடும் எ - று.

எண்பதத்தான் என்பது

பதத்தான் என்பது தண்ணிய

எண்ணு நெறியால் என்றது. தன்
நெறியினுன் என்றது.

(ப - உ.) எ - து.—எளிய காலத்தோடே நூல் முறைமை செய்யாத அரசன் தனது தண்பதத்தாலே இன்றியும் தானே கெடும் எ - று.

ஆராய்ந்து
கெடுப்பார்

எண்பதம் ஆவது வந்தவர்கள் தம் குறையைச்

சொல்லுதற்கு
எளிய காலம். தண்பதம் ஆவது குறையைச் சொல்லுதற்குத் தாழ்க்கும் காலம். இரு காலும் தப்பாமல் கேட்டுச் செய்ய வேண்டும் என்பதூஉம் முறை செய்யாக்கால் வரும் குற்றமும்

கா. 9.
கூறிற்று. (8)

ப. 4.

வானோக்கி வாழு முலகெல்லா
கோனோக்கி வாழுங் குடி.

மன்னவன்

(கா - உ.) எ - து.—மழை நமக்கு உளது என்று அதனைக் குறிக்கொண்டு அஞ்சாது வாழும் உலகமானது: மற்று இது போல மன்னவன் செங்கோல் நமக்கு எளிது என்று அதனைக் குறிக்கொண்டு அஞ்சாது வாழும குடிமக்களும எ - று.

(ப - உ.) எ - து.—உலகத்து உயிர் எல்லாம் மழையை நோக்கி இன்புறு நிற்கும்; அதுபோலக் குடிகளும் அரசன் செங்கோன்மையை நோக்கி இன்புறுவர் எ - று.

இது முறை செய்தல் குடி மக்கட்கு கூறிற்று.

இன்றியமையாது என்பது கா. 10.

(9)

ப. 2.

குடிபுறங் காத்தோம்பிக் குற்றங் கடிதல்
வடுவன்று வேந்தன் றொழில்.

(கா - உ.) எ - து.—தமது அகம் காவல் குடிகட்கே இயல்பு ஆனது: அதனால் தனது கோல் கீழ் வாழும் குடிமக்களைப் புறம் காவல் காத்து மற்று அப்பாதுகாவற்கு இடையில் சோர்வு வாமல் செலுத்தும் இடத்துக் குடிமக்கட்குச் சோர்வு முதலிய குற்றம் உள தாயின் அதனைக் கடியுமாறு கடிந்தொழுகுதல் கொடுங்கோன்மை அன்று: அரசர்க்குச் செங்கோன்மை முறைமை எ - று.

10



(ப - உ.) எ - து —குடிகளை நலியாமல் காத்து ஓம்புதற்காகக் குற்றம் செய்தாரை ஒறுத்தல் குற்றம் அன்று: அரசனது தொழில் எ - று.

ஓம்ப என்று பிரிக்க. பிறர்க்கு இன்னா செய்தல் அறம் அல்ல என்றார் ஆகலின், ஈண்டுக் கூறுகின்றது அறம் அல்லவாம் பிற என்று ஐயுற்றார்க்கு இது கூறப்பட்டது. (10)

(கா - உ.) இனி இங்குச் சொன்ன இருவாற்றானும் அன்றிப் பிறவாற்றான் அடாதது அது கொடுங்கோன்மை ஆதலான் மற்று இதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலே அதிகாரம்.

## 18. கொடுங்கோன்மை.

(ப - உ.) கொடுங் கோன்மை யாவது கொடுங் கோன்மையால்

வரும் குற்றம் கூறுதல். அது முறை செய்யாமையும் பிறர் நலியா மல் காவாமையும், முறைகெடச் செய்தலும், குடிகளுக்குத் தண் டனை ஆராயாது செய்தலும், அல்லவை செய்தலும், குடிகளை இரத்த லும் எனப் பலவகைப்படும். இதுமேல் கூறிய செங்கோன்மையின் மாறுபட்டு வருதலின் அதன் பின் கூறப்பட்டது.

கா. 1.

ப. 2. நாடோறு நாடி முறைசெய்யா மன்னவ

னாடோறு நாடு கெடும்.

(கா - உ.) எ - து.—ஒரு மாத்திரைப் பொழுதும் இடைப் படாமை நாள்தோறும் ஆராய்ந்து செங்கோன்மை செய்து ஒழுகாத மன்னவன் தன் நாடானது நாள்தோறும் கெட்டுச் செல்லும் எ-று.

இனி இவ்வாறு அன்றி அரசனும் நாள்தோறும் கெட்டுச் செல் லும் எ - று.

(ப - உ.) எ - து.—குற்றமும் குணமும் நாள்தோறும் ஆராய்ந்து அதற்குத் தக முறை செய்யாத அரசன் நாடு நாள்தோறும் கெடும் எ - று.

இது நாடு கெடும் என்றது.

(1) கா. 2.

ப. 6.

கூழுங் குடியு மொருங்கிழக்குங் கோல்கோடிச்
சூழாது செய்யு மரசு.

(கா - உ.) எ - து.—இவ்வாறும் அன்றிப் பின்னும் தனது நாட்டுள் வாழும் குடிகளையும் அக்குடிகளால் உளவாகும் உணவு பொருள்

## 18. கொடுங்கோன்மை

களையும் உடனே இழப்பன்: யாவன் எனின் நெறியும் செறியல்ல தும் தோராது கோல் கோடி மற்று இங்ஙனம் செய்யும் அரசனவன் எ - று.

(ப - உ.) எ - று —பொருளையும் பொருள் தரும் குடியையும் கூட இழப்பன், முறை கோடி ஆராயாமல் செய்யும் அரசன். இஃது ஆராயாது செய்வதனால் வரும் குற்றம் கூறிற்று எ - து. (4)

கா. 3.

ப. 10.

வேலொடு நின்றா னிடுவென்
கோலொடு நின்றா னிரவு.

றதுபோலுங்

(கா - உ.) எ - து.—தான் கைப்பற்றிய
ருன் ஒரு மூர்க்கன் அதனை ஓங்கி வேலே!

மூவிலை வேலொடு நின்
குடி-நின் கொணர்ந்திடு
பலி என்றதனை ஒக்கும்: யாது எனின், தான் கைக்கொண்டு செலுத்து கின்ற கொடுங்கோலோடு நின்ற மூர்க்கனாகிய அரசன் மற்று ஒரு வினை நீ! எமக்கு இத்துணைப் பொருள் தரவேண்டுமென்று இரக்கும் இரவானது எ - று.

மற்றும், உலகத்துச் சிலர் தாம் வேறு பலி வேண்டுதலும், இடு பலி அடுதலும் முறைமை யாகலான், அதுபோல அரசரும், தாம் பெறு கடன் வேண்டுதலும், இடுகடன் இடுதலும் முறைமை யாக லான், இவ்வாறு அன்றி ஒருவன் வந்து வலியின் அடர்த்தலும், பிறர் அஞ்சி வந்து ஒன்று இடுதலும் போலும் ஆறில் ஒன்று ஆகிய செங்கோல் நெறி அன்றி அயிதம் கொள்ளும் கொடுங் கோன்மையும் என்பது பொருள் ஆயிற்று என அறிக.

(ப - உ.) எ - து —தனியிடத்தே வேலொடு நின்றவன் நின் கையில் உள்ளன தா என்றாற் போலும் முறை செய்தலை மேற்கொண்டு நின்றவன் குடிகள் மாட்டு இரத்தல் எ - று.

கோலொடு நிற்றல்—செவ்வை செய்வாரைப் போன்று நிற்றல். நிச்சயித்த கடமைக்கு மேல் வேண்டு கோளாகக் கொள்ளினும் வழி யில் பறிப்பாரோடு ஒக்கும் என்றது. (3)

கா. 4.

ப. 9.

அல்லற்பட் டாற்று தழுதகண் ணீரன்
றே
செல்வத்தைத் தேய்க்கும் படை.

(கா - உ.) எ - து.—கொடுங்கோல் மன்னன் செய்யும் கொடு வினையால் குடிகள் சாலத் துயரம் உற்று அது பொறுக்க மாட்டாது அழுத கண்ணீர் அதுவே அரசனவன் அங்ஙனம் ஈட்டிய பெரும் பொருளைத் தேய்க்கும் வழிக்குக் கருவியாகலான் இவ்வினையாளர்க்கு வேறு ஓர் பகைவினை வேண்டா எ - று.



(ப - உ.) எ - து.—நீதி அல்லன செய்தலானே அல்லல் பட்டு அதற்கு ஆற்றாது அழுத கண்ணீர் அன்றே, அரசன் செல்வத்தைத் தேய்க்கும் படையாவது எ - று.

இஃது அவ்வரசன் தான் கெடும் என்றது. இவை இரண்டும் அல்லவை செய்ததனுலே இம்மை மறுமை இழப்பர் என்று கூறின. (4)

கா. 5.

ப. 5.

முறைகோடி மன்னவன் செய்யி
யொல்லாது வானம் பெயல்.

ஹறைகோடி

(கா - உ.) எ - து.—உலகத்து வேந்தனானவன் நீதி வழுவி நெறி அல்லன செய்யுமாயின், கொண்டலானது பருவம் கோடி மற்று ஈண்டு மழை பெய்தலைச் செய்யாது எ - று.

முறைகோடி என்பது நீதி வழுவி என்றது. மழைத்துளி என்றது. ஒல்லாது என றது அதனைச் றது. வானம் என்பது கொண்டல் என்றது.

உறை என்பது
செய்யாது என்

(ப - உ.) எ - து.—முறைமை கோட மன்னவன் செய்வனாயின், மழையானது துளி விடுதலைத் தவிர்ந்து பெய்யா தொழியும் எ - று.

இது முறைமை கோடினால் வரும் குற்றம் கூறிற்று. (5)

கா. 6. ப. 7.

கொலைமேற்கொண் டாரிற் கொடிதே யலைமேற்
டல்லவை செய்தொழுகும் வேந்து. [கொண்

(கா - உ.) எ - து—அதனைப் பிறர் நோவுக்கு இரங்காது கொலைத்தொழிலை என்றும் கொண்டொழுகும் கொடுவினையாளரினும் சாலக் கொடிதே: யாது எனின், தன்கோல் கீழ் வாழும் குடிகளை அவர்கள் நோவு அறியாது அலைத்தலை என்று கொண்டு முறை அல்லன வற்றைச் செய்து அங்ஙனம் ஒழுகும் வேந்தனானவன் எ - று.

(ப - உ.) எ - து.— ..................................................
(மணக்குடவருரை) கொலைத்தொழிலை மேற்கொண்டவரினும் கொடி யன் அலைத்தல் தொழிலை மேற்கொண்டு நீதி அல்லாதன செய்து ஒழுகுகின்ற அரசன் எ - று. (6)

கா. 7. ப. 8.

துளியின்மை ஞாலத்திற் கெற்றற்றே வேந்த
னளியின்மை வாழு முயிர்க்கு.

(கா - உ.) எ - து.—பருவத்து வந்து பெய்யும் மழையில்லாமை இவ்வையகத்துக்குப் பெருமையில்லாதது எத்தன்மைத்து; மற்று

18. கொடுங்கோன்மை , 37

அத்தன்மைத்து : யாது எனின் வேந்தனது

தண்ணளி இல்லாமை யாகிய கொடுங்கோன்மை மற்று ஈண்டு வாழும் உயிர்கட்கு எ - று. (ப - உ.)........... ..........................

....................

(ம - உ.) எ - து.—உலகத்திற் பல்லுயிர்க்கும் மழை இல்லையானால் வரும் துன்பம் எத்தன்மைத்து ஆகின்றது அத்தன்மைத்து, அரசன் அருளிலன் ஆதல் அவன் கீழ் வாழும் மக்கட்கு எ - று. (7)

கா. 8.

ப. 1.

மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை யஃதின்றேன்
மன்னுவா மன்னர்க் கொளி.

(கா - உ.) எ - து.—மன்னயானவர் தமக்குத் தமது ஒளி நிலை பெறுதலாவது செங்கோன்மை நிலை பெறுதல்: மற்று அஃது இல்லெனின் மன்னர்க்கு நிலையாவாம், ஒளிகளானவை எ - று.

மன்னுதல் என்பது நிலை பெறுதல்; மன்னுவாம் என்றது நிலையாவாம் என்றது. ஒளி என்பது குலமும் குணனும் கல்வியும் உணர்வும் மாபும் பிறவும் ஆகிய ஒளிகள் ஆன பெறு பொருள்களென அறிக.

(ப - உ.) எ - து.—அரசர்க்கு ஒளி நிலை பெறுதல் செங்கோன்மையான் ஆம்: அஃது இல்லையாயின் அரசர்க்கு ஒளி நிலையாதாம். முறை செய்யாமையால் வரும் குற்றம் கூறுவார் முற்படப் புகழ் இல்லையாம் என்றார் எ - று. (8)

கா. 9. ப 4.

ஆபயன்
காவலன்

குன்று மறுதொழிலோர். நூன்மறப்பர்
காவா னெனின்.

(கா - உ.) எ - து.—உலகத்து முன்னிரைப் பசுக்களானவை கறவையும் கன்றுமாகப் பயன்பட்டு வருகிற பயனும் குன்றும்: மற்று அதுவேயும் அன்றி அறுவகைத் தொழிலுக்கு உரியர் ஆகிய அந்தணரும் அருமறை ஓதலும் மறந்து விடுவர்: என்னை எனின்

வையம்

காவாது

காவலன் ஆகிய மன்னவன் செங்கோல் முறையால் கொடுங்கோன்மை செய்து ஒழுகின் எ - று.

பாது (ப - உ.)
வேதப் ஓதார்.

எ - து.—(ம - உ.) பசுக்கள் பால் குறையும் : அரசன் காவானாயின் எ - று.

அந்தணர்

இது காவாமையால் வரும் குற்றம் கூறிற்று.

(9) கூ.ர. 10.

இன்மையி னின்னா துடைமை
ப. 3. மன்னவன் கோற்கீழ்ப் படின்.

முறைசெய்யா



(கா - உ.) எ - து.—உலகத்தோர்க்கு மிகவும் இன்னாதது யாதோ எனின், இல்லாமை அன்றோ : மற்று அதனினும் சால இன்னாதது

உடைமை : அது எவ்விடத்து எனின் முறைமை செய்யாத ன்து கொடுங்கோலிடத் தகப்பட்ட குடிகட்டு எ - று.
மன்னவ

(ப - உ.) எ - து.—(ம - உ.) நல்குரவினும் செல்வம் துன்பம் ஆகும். முற்றை செய்யாத அரசனது கொடுங்கோலின் கீழே குடி இருக்கின் எ - று.

இது பொருளுடையாரும் துன்பம் உறுவர் என்றது. இவை மூன்றும் முறை செய்யாமையாலே வரும் குற்றம் கூறின. (10)

(கா - உ.) இனி மற்றுக் கொடுங்கோன்மை குற்றம் என்று கடிந்து ஒழுகும் குணமுடைய வேந்தன் செய்ய வேண்டுவது ஒன்று உண்டு: அது யாதோ எனின், முறை செய்வுழியும் உயிர்கள் அஞ்சத் தக்கன ஆகிய வினை செய்யற்க என்பதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 19. வெருவந்த செய்யாமை.

(ப - உ.) வெருவந்த செய்யாமையாவது பிறர்க்கு அச்சம் செய்யாமையும், தனக்கு அச்சம் செய்யாமையும். தான் முறை செய்வாரைப் போன்றிருந்து, அதனை உலகத்தார் வெருவுமாறு செய்வனுயின், அதுவும் கொடுங்கோலொடு ஒக்கும் என்று அதன்பின் கூறப்பட்டது.

கா. 1. ப. 5.

வெருவந்த செய்தொழுகும் வெங்கோல னாயி
னொருவந்த மொல்லைக் கெடும்.

(கா - உ.) எ - து.—அரசன் செங்கோல் நீதி செலுத்தும் இடத்து உயிர்கள் பெரிதும் அஞ்சத் தக்கனவற்றைச் செய்து ஒழுகுமது கொடுங்கோல் போலும் தன்மையது உடைத்து: மற்று அதனால் அவனது பெருஞ்செல்வம் கடிதில் தலை அழியும்; என்வே ஒருவரைத் தண்டிக்கும் காலத்தும் இதற்குத் தகுதி என்று முன் னோர் சொன்ன முறைநூல் வழியால, மற்றவன் மனம் பொருந்தக் காட்டிய வழக்குடையின் ஆதலே மன்னர்க்கு இயல்பு எ - து.

ஒருவந்தம் என்பது பெருஞ்செல்வம் என்றது.

(ப - உ.) எ - து.—அரசன் அச்சம் வருவன செய்து ஒழுகும் வெங்கோலை உடையனாயின், அவன் ஒருதலையாக விரைந்து கெடுவன் எ - று.

இது நாடும் நகரமும் பொறுப்பினும் என்றது.

தெய்வத்தினால் கெடுவன்

(1)

## 19. வெருவந்த செய்யாமை

79

கா. 2.

ப. 1.

தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தா

லொத்தாங் கொறுப்பது வேந்து.

(கா - உ.) எ - து.—மற்று இப்படி யாகலான் அவை அவை செய்யத்தக்க பரிசு ஆராய்ந்து மற்று ஒருதலைச் சென்று ஒதுங்காத தன்மையான், ஒன்றினும் ஏற்றத் தாழ்வு இன்றி ஒத்து நிற்கும் பரிசே ஒறுக்க வேண்டுவதனை ஓர்ந்து ஒறுப்பது வேந்தாவது; எனவே அது செய்யாவிடத்து எல்லாம் நல்லனி செய்தலே அரசர்க்கு அழகு எ - று.

(ய - உ.) எ - து.—குற்றத்துக்குத் தக்கவை யாராய்ந்து ஒருவர் ஒருவர்மேற் செல்லாமை காரணமாக உலகத்தார்க்குப் பொருந்து மாறு ஒறுப்பவன் அரசன் எ - று.

இது செங்கோன்மை யன்றோ எனின், ஒக்கும்: முறை செய் யுங்கால் அரசன் வெகுட்சி உடையனாய் உலகத்தார் அஞ்சுமாறு செய்யாது இம்முறை செய்யாக்கால் ஒருவரொருவரை அடர்ப்ப ரென்று உலகத்தார் தாமே இசையச் செய்ய வேண்டும் என்றற்கு வேறுபடுத்துக் கூறப்பட்டது. இவ்வாறு செய்தல் வெருவந்த செய் யாமை என்றது. (2)

கா. 3. ப. 2.

**கடிதோச்சி மெல்ல வெறிக நெடிதாக்க**
**நீங்காமை வேண்டு பவர்.**

(கா - உ.) எ - து.—இவ்வாறு ஆகலான் ஒருவரைத் தண்டம் செய்யும் இடத்து முன்னம் அவர் அஞ்சுமாறு கடிது செய்வார் போல் காட்டிப் பின் மெல்லெனச் செறுத்து விடுக. மற்று யார் எனின், தமது நெடிய செல்வம் இடையறாது வேண்டும் அரசர் எ - று.

பரி. பா - ம். ' கடிதோச்சி '.

(ப - உ.) எ - து.—கடிது ஆகச் செய்வாரைப் போன்று மெல் லிது ஆகச் செய்க: நெடிது ஆகி வேண்டுபவர் எ - று.

வருகின்ற ஆக்கம் நீங்காமைய்ய

இது குற்றத்துக்குத் தக்க தண்டத்தினும் குறையச் செய்ய வேண்டும் என்றது. இனி வெருவந்த செய்ததனல் உளதாகும் குற்றம் கூறுகின்றனர். (3)

கா. 4.

ப. 7.

கடுஞ்சொல்லன் கண்ணில
நீடின்றி யாங்கே கெடும்.

னுயி னெடுஞ்செல்வு



(கா - உ.) எ - து.—யாவர் மாட்டும் கடிய சொல்லினை யுடை-

யனுமாய்க் கண்ணோட்டம் இல்லனும் ஆயின் அவ்வரசற்கு நெடுஞ் செல்வமானது நீட்டித்தலின்றி அவை அவை செய்யும் காலத்தே கெட்டு விடும் எ - று.

கண்ணிலனாயின் என்பது - கண்ணோட்டம் இலன் என்றது.

(ப - உ.) எ - து.—கடிய சொல்லை யுடையனுமாய்க் கண்ணோட்டமும் இலன் ஆயின், அவனது தொன்று தொட்டு வருகின்ற செல்வம் பின்பு நிற்றல் இன்றி அக்காலத்தே கெடும்.

இது குறைகலே அன்றி முழுதும் கெடுவன் என்றது. (4) கா. 5.

ப. 9.

அருஞ்செவ்வி யின்னா முகத்தான்
பேய்கண்ட தன்ன துடைத்து.

பெருஞ்செல்வம்

(கா - உ.) எ - து. — அரசர் முறை செய்யும் இடத்து உவக்கைச் செவ்வியும் கண்ணோட்டமும் அரியன் ஆகிய இன்னா முகத்தானது பெரிய செல்வமானது எதனை ஒக்கும் எனின், பேயினது கோக்கம் தாக்கிய உருவானது எத்தன்மை உடைத்து மற்று அத்தன்மைத்து ஆம்: எனவே பேய் தாக்கிய உருவு பெண்ணுருவு ஆயினும் ஆண் உருவு ஆயினும் உருவு ஒன்று இருந்து உள் ஒய்ந்து விடும்: அது போல இங்கும் செல்வம் உள்ளது போன்று இருந்து உள் உடைந்து விடும் எ - று.

(ப -
இன்னாத

உ.) எ - து.—காண்டற்கு அரிய காலத்தினையும் முகத்தினையும் உண்டயவனது பெரிய செல்வம்

கண்டால்
பேயைக்
கண்டால் ஒக்க அச்சம் தருதல் உடைத்து எ - று.
இது செல்வத்தை வாங்குவார் இன்மையின் என்றது.

படை சோரது கா. 6.
(5)

ப. 8.
கடுமொழியுங் கையிகந்த தண்டமும் வேந்த
னடுமுரண் டேய்க்கு மரம்.

(கா - உ.) எ - து.—யாவர் மாட்டும் இன்சொல் வழக்கம் இன்றி வெஞ்சொல் விடுத்தலும், செய்யும் நீதியைக் கடந்து தண்டம் செய்தலும் இவை இரண்டும் மன்னவன் மாற்றாரைக் கொல்லும் வலியாகிய பொருள்வலி, படைவலி, துணைவலி, மற்று அரண்வலி, தன்வலி முதலிய அனைத்து வலியையும் பொடிபடத் தேய்த்து விடும் அரம் எ - று.

கை என்பது ஒழுக்கம் : ஆவது நீதி.

19. வெருவந்த [illegible]யாமை 
(ப -

தண்டம்

உ.) எ - து.—கடுஞ்சொல் கூறுதலும், குற்றத்தின் மிக்க செய்தலும் அரசனது ஆகிய பகைவரை வெல்லும் வலி யைத் தேய்க்கும் அரம் எ - று.

இது வலியைக் கெடுக்கும் என்றது.

(6) கா. 7.

ப. 4.

இறைகடிய னென்றுரைக்கு மின்னாச்சொல் வேந்த
னுறைகடுகி யொல்லைக் கெடும்.

(கா - உ.) எ - து.—மற்று இம்மன்னவன் சாலக் கடியன் என்று மக்கள் யாவரும் சொல்லுகின்ற இன்னாத சொல்லினை யுடைய வேந்தனது நாடும் ஊரும் விரையக் கெட்டுவிடும், முன் சொல்லியவையும் இன்றியும் எ - று.

உறை என்பது உறைவிடம்.

(ப - உ.) எ - து.—தன் கீழ் வாழ்வார் அரசன் கடியன் என்று கூறப்பட்ட இன்னாத சொல்லை யுடைய வேந்தன் அவன் தான் உறையும் இடம் வெகுளப்பட்டு விரைந்து கெடும் எ - று.

இவனை நாடும் நகரமும் பொறுது என்றது.

(7) கா. 8.
ப. 8.

கல்லார்ப் பிணிக்குங் கடுங்கோ
லதுவல்ல
இல்லை நிலக்குப் பொறை.

(கா - உ.) எ - து.—கல்லாதார் ஆகிய மூர்க்கரை அரசனானவன் தனது அன்பினால் பிணித்துக் கொள்ளும் நீதி கேடு யாது? மற்று அது அல்லது இல்லை இந்த நிலத்து வாழ்கின்ற உயிர்கட்குக் கிலேச மாம்: பிறிது ஒன்றும் இல்லை எனவே மற்று அது உயிர்கட்கு வெருவந்த செய்தலுள் ஒன்று எ - று.

(ப. உ.) எ - து.—கடுங்கோலன் ஆகிய அரசன் அறிவில்லாரை அமைச்சராகக் கூட்டிக் கொள்ளும்; அவ்வரசன் அல்லது நிலத்துக் குப் பாரம் வேறு ஒன்று இல்லை எ - று.

அறிவில்லாதார் அமாத்தியர் ஆனால் அவரானே உலகம் அச்சம் உறும் அதற்காகக் கடுங்கோல் அரசன் அவரைக் கூட்ட அவனை நிலம் பொறுது என்றது. (8)

கா. 9. ப. 10.

செருவந்த போழ்திற் சிறைசெய்யா மன்னன்
வெருவந்து வெய்து கெடும்.

11

(கா - உ.) எ - து.—முன்னமே மதிற்சிறை முதலிய வன்சிறை நான்கும் வில்லாளும் வேலாளும் தோலாளும் தூர்க்க ஆளும் உளவாகிய வியூகச் சிறையும் உடையரேனும் மற்று அச்சிறை நீங்கிச் செருதொழில் புரியச்சென்ற தேயத்துப் புறத்திறை மன்னரால் போரழிவு வந்த காலம் நோக்கிய இடத்து இயையும் சிறை பலவும் செய்து கொள்ளாத மன்னவனானவன் முனையெதிர் நடைபோக்கு முற்றிய காலத்து வெருவுதல் கடிதின் கெட்டுவிடும் எ - று.

பரி. பா - ம். 'சிறை செய்யா வேந்தன்'.

(ப - உ.) எ - து.—தனக்குக் காவல் அமைத்துச் செய்யாத வேந்தன் செருவந்த றுக் கடிது கெடும் எ - று.

ஆனவற்றை முன்னே காலத்து அச்சம் உற்

இது தனக்கு அச்சம் வருவன செய்யலாகாது என்றது. (9) கா. 10. ப. 6.

இனத்தாற்றி யெண்ணாத வேந்தன்
சீறிற் சிறுகுந் திரு.

சினத்தாற்றிற்

(கா - உ.) எ - து.—வேற்றரசரோடு வினை செய்யும் இடத்தும், அத்தனையும் முன்கோலித் தன்னோடு எண்ணுதற்கு உரிய இனத்தோடு எண்ணிச் செலுத்தாத மன்னனானவன் சினத்து வழிபற்றிக் கன்றி எழுவனேல் சிறுகும் செல்வம் : எனவே அரசன் உரிமை அழிவன் என்பது பொருள் எ - று.

(ப - உ.) எ - து.—பிறர் செய்த குற்றத்தை தனக்கு இனம் ஆயினாரோடு அமைந்து ஆராயாத அரசன் சினத்தின் நெறியானே சீறுவன் ஆயின் செல்வம் குறைபடும் எ - று.

இனம் என்றது மந்திரி புரோகிதரை. இது செல்வம் குறைபடும் என்றது. (10)

(கா - உ.) மற்று இக்கொடுங் கோன்மையாகிய நீதி கேடும், மற்று இத்தன்மைத்து ஆகிய வெருவந்த செயலும் என்னும் இரண்டு குற்றமும் இல்லாத குணவேந்தன் கண்ணதே கண்ணோட்டமும் ஆகலான் மற்று இதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேல அதிகாரம்.

கா - ஏடு. (நன்றாக. வேணுவனேசன் துணை. வடிவாள் துணை.)

## 20. கண்ணோட்டம்.

(ப - உ.) கண்ணோட்டமாவது கண்ணுற் காணப்பட்டாரை அருள் செய்தல். குற்றம் செய்தாரை ஒறுக்குங்கால் உலகத்தார் இசைய ஒறுக்க வேண்டும் என்றாராயினும், அவ்வாறு செய்து அவ

20. கண்ணோட்டம்

வைத் தமது கண் முன்னாகக் கண்டால் அதனைப் பொறுத்தலும் வேண்டும் என்று அதன்பிற் கூறப்பட்டது. இது பெரும்பான்மையும் முன்பு கண்டு பழகினார் மேற்று.

## கா. 1.

### ப. 1.

கண்ணோட்ட மென்னுங் கழிபெருங் காரிகை
யுண்மையா னுண்டிவ் வுலகு.

(கா - உ.)
மிகவும் பெரிய்

எ - து.—கண்ணோட்டம் என்று சொல்லப்பட்ட நன்மையானது அரசர் முதலிய பெரியோர் மாட்டு உளதாய் வருதலால் உளது இவ்வுலகத்து உயிர்களின் வாழ்க்கை எ - று.

எனவே மற்று இவர்கள் மாட்டு அஃது இல்லையாயின் உயிர்க்கும் துன்பம் வருவது பொருள் என அறிக.
பல

(ப - உ). எ - து.—கண்ணோட்டம் ஆகிய பெரிய அழகு அரசன் மாட்டு உண்டானபடியாலே, உலகநடை உண்டாகின்றது. இஃது இல்லையாயின் உலகம் கெடும். ஆதலாற் கண்ணோட்டம் வேண்டும் என்றது. செங்கோன்மை கூறுகின்றவழிக் கண்ணோடாது முறை செய்க என்று கூறி ஈண்டுக் கண்ணோடுக என்று கூறுதல் மாறுபடக் கூறுதலாம் பிற எனில், அற்று அன்று: அது முறை செய்யும் திறன் கூறிற்று. இஃது உலகத்தார் பலர் ஆதலால் குற்றம் செய்வார் மிகுந் திருப்பர். அதற்கு எல்லாம் தண்டம் செய்யின் உலகம் என்பது ஒன்று இல்லையாம்: அதற்காகப் பொறுக்க வேண்டுவன பொறுக்க வேண்டும் என்று கூறிற்று. (1)

கா. 2. ப. 5.

கண்ணோட்டத் துள்ள துலகிய
லஃதிலார்
ருண்மை நிலக்குப் பொறை.

(கா - உ.) எ - து.—கீழ்ச் சொன்ன பரிசே கண்ணோட்டத்தின் கண்ணே உள்ளது உலகத்து உயிர்களது நடை: ஆதலான் மற்று அதனைத் தங்கண் இல்லாதோர் உளதாயிருத்தலின் நிலத்துக்குப் பாரம்: எனவே இக்குள்ள உயிர்கட்கு பெரியதோர் கிலேச பாரம் என்பது பொருள் எ - று.

(ப - உ.) எ - து.—உலக நடை கண்ணோட்டத்தின் கண்ணது ஆதலான், அஃது இல்லாதார் உளராதல் இந்த நிலத்துக்குப் பாரம்

ஆம எ - று.

இது கண்ணோட்டம் இல்லாதாரை நிலம் பொறுது என்றது. (2)



கா. 3.
ப. 2.

ஒறுத்தாற்றும் பண்பினார்
கண்ணுங்கண் ணோடிப்
பொறுத்தாற்றும் பண்பே தலை.

(கா - உ.) எ - து.—தம்மை ஒருவர் உணர்த்தும் உணாது ஒரு காலத்து ஒறுத்தாராயினும், அவரவர் மாட்டுத் தாம் கண்ணோட்டம் உடையாராய் மற்று அவர் செய்த பிழையினைத் தாம் பொறுத்து மற்று அதனை ஒழுகச் செய்யும் இயல்பே தலைமைப்பாடு ஆவது எ - று.

(ப - உ.) எ - து.—தம்மை ஒறுத்துச் செய்யும் இயல்பினை உடையார் மாட்டும் தலையான குணம் எ -
கண்ணோடிப் பொறுத்துச் செய்யும் குணமே று.

அன்றியும் ஒறுத்துச் செய்ய வேண்டும்
மாட்டும் என்றும் ஆம்.
இயல்பினை உடையார் செய்தாரையே அன்றித்
வேண்டும் என்றது.
உம்மை சிறப்பும்மை. பிறர்க்குக் குற்றம்
தமக்குக் குற்றம் செய்தாரையும் பொறுக்க கா. 4.
(3)

ப. 3.

பெயக்கண்டு நஞ்சுண் டமைவர்
நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்.

(கா - உ.) எ - து.—ஒருவர் தமக்கு இன்னுமையால் கொணர்ந்து இடக் கண்டு வைத்தும் அவரிட்ட நஞ்சினைத் தாம் உண்டு உயிர் வாழ்க்கை சமைந்து விடுவர்: யார் எனின், பெரியோரால் விரும்பத் தக்க உய்பார் உலகினுள் சிறப்புடைய உத்தர குருவினைத் தாம் எய்தி இனிது வாழ்ந்திருக்க வேண்டும் அவர் எ - று.

பெயக் கண்டு என்பது கொணர்ந்திடக் கண்டும் என்றது.

(ப - உ.) எ - று.— நஞ்சு பெய்தது கண்டும் அதனை மாற்றாது உண்டு அமைவர்: எல்லாராலும் விரும்பத் தக்க நாகரிகத்தை வேண்டி விரும்புவார்கள் எ - று.

நாகரிகம் - அறம், பொருள், இன்பத்தின் நற்குணங்கள் பலவும் உடைமை. மருமையாற் கண்ணோட்டம் ஆயிற்று. இது பொறுத் தலே அன்றித் தமக்குச் செய்யும் தீமைக்கும் உடன்படுவர் புகழ் வேண்டுபவர் என்றது. (4)

கா. 5.

ப. 9.

கண்ணுக் கணிகலங் கண்ணோட்ட மஃதின்றேற்
புண்ணென் றுணரப் படும்.

(கா - உ.) எ - து.—எல்லா உறுப்பிற்கும் அணிகலம் அணிய ஏரம் : மற்றுக் கண்ணுக்கு அணிவது ஓர் அணிகலன் இல்லை என்று 20.



இங்ஙனம் கருதற்க: என்னை எனின், கண்ணுக்கு அணியும் கலன் ஆவது கண்ணோட்டம் ஆகலான்: அஃது ஒருவர்க்கு இல்லை எனில் மற்று அது வெறும்புண் என்றே அறிய அடுக்கும் எ - று.

அதனைத் தசை என்னது புண் என்றது என்னை எனின் ஈரம்
புலராத இளம் தசை யாகலான் அவர்க்கு அது நோயுறுத புண்
எனறவாறு.

(ப - உ.) எ - து.—கண்ணிற்கு அழகு செய்யும் அணிகலன் ஆவது கண்ணோட்டம் உடைமை: அஃது இல்லையாயின் அவையிற் றைப் புண் என்று அறியப்படும் எ - று.

இது கண்ணோட்டம் இல்லாத கண்ணுக்குப் பெயர் கூறிற்று (5)

கா. 6.

ப. 7.

பண்ணென்னும் பாடற் கியைபின்றேற் கண்ணென்
கண்ணோட்ட மில்லாத கண். [ணுங்

(கா - உ.) எ - து.—இலக்கண முறையான் இசை அறியாது மயக்க மாக்தர் தமது இயற்கைச் செவியினாற் கேட்டு மற்று இது மிகவும் இனியது ஓர் பண் என்றார் ஆயினும், அதனை யாம் பண் என்று சொல்லோம்: என்னையோ எனின், பாடல் தூக்காகிய இசைத் தொடர்பின் கண் தான் வந்து மேவி நின்று அவ்விசை நூல் யாப் பிற்கு இனிது இயைபு இன்றி நிற்குமாயின்; மற்று அதுபோல கண்டு நுண்ணுணர் வில்லோர் கண் என்றாராயினும் அதனைக் கண் என்று சொல்லோம், கண்ணோட்டம் இல்லாத கண்ணினை எ - று.

(ப - உ.) எ - து.—பண் என்ன பயன் உடைத்து ஆம்? பாட லொடு பொருந்தாது ஆயின். அதுபோலக் கண் என்ன பயன் உடைத்து ஆம் கண்ணோட்டம் இல்லாத காலத்து? எ - று.

பாடல் ஆவது பாடுதல் தொழில். அஃதாவது மந்தம், உச்சம், சமம், குடிலம் முதலாயின. அதனொடு பொருத்தம் இன்மையாவது எடுத்துக்கொண்ட பண், இவ்விடங்களில் ஒவ்வாது நின்று கேட் டார்க்கு இன்பம் பயவாமை. இது பிறர்க்கு இன்பம் பயவாது என்

கா. 7.

ப. 10.

மண்ணோ டியைந்த மரத்தனையர்
டியைந்துகண் ணோடா தவர்.

கண்ணோ

(கா - உ.) எ - து.—வண்ணம் எழுதா வகைத்து உருவாகிய
மண்மேல் எழுதிய கற்பகதரு முதலிய முதலிய மரத்தைப் போல்
பவர்; யார் எனின், செய்ய வாயும் செவ்வரிக் கண்ணும் கரிய குழ



லும் வெளிய நகையும் பிறவும் ஆகிய வகையமை உறுப்பின் வனப்பு
வேற்றுமை தகை பெற உடைய தன்மையரேனும் கண்ணுறுப்புக்கு
நுண்ணுறுப்பு ஆகிய கண்ணோட்டம் இல்லாத கடுவினை யாளர் எ - று.

(ப - உ.) எ - து.—சுதை மண்ணோடு கூடிச் செய்த மரப்பாவை
யோடு ஒப்பர்; ஒருவன் கண்ணோடு தம் கண் கலந்த பின்பும் கண்
ணோட்டத்தைச் செய்யாதவர் எ - று.

கண் காணுமை பாவைக்கும் ஒக்கும். இது
என்றது.

மகன் அல்லன் கா. 8.

(7)

ப. 8.

உளபோன் முகத்தெவன் செய்யு
கண்ணோட்ட மில்லாத கண்.

மளவினற்

(கா - உ.) எ - து.—முகத்து உளபோலத் தோன்றி அங்ஙனம் வரும் பொருட்களைக் கண்டதே யாயினும் அதனால் என்ன பயன்?

மற்றவர்க்கு இரங்க வேண்டும் அளவினால் குறிக்கொண்டு வது ஓர் கண்ணோட்டம் இல்லாத கண்ணானது எ - று.

கண்ணோடு

(ப - உ.) எ - து.—அவரவர் வாழ்வு காரணமாகக் கண்ணோடு தலைச் செய்யாத கண்கள் முகத்து உளபோன்று தனக்கு என்ன பயனைத் தரும் எ - று.

அளவு என்றது தகுதியை. இது தனக்கும் பயன் படாது என்றது.

(8) கா. 9.

ப. 4.

கருமஞ் சிதையாமற் கண்ணோட
குரிமை யுடைத்திவ் வுலகு.

வல்லார்க்

(கா - உ.) எ - து.—தாம் செய் கருமம் வாய்த்தற் பொருட்டாக யாவர் மாட்டும் கண்ணோட வல்லா..............................
வழிச் செல்லுதல் உடைத்து இவ்வுலகு எ - று.

சிதையாமல் என்பது அழியாதவாறு என்றது.

(ப - உ.) எ - து.—தம் கருமத்திற்கு அழிவு வாராமல் கண்ணோட வல்லவர்களுக்கு இவ்வுலகம் உரிமையாதலை உடைத்து எ - று.

நற்குணமாவது கண்ணோட்டம் ஆயினும் அரசர்க்குப் பொருட்கேடு வாராமல் கண்ணோட வேண்டும் என்று எய்தியது விலக்கிக் கூறிற்று. உரிமை யிருந்ததென்று பாடம் ஆயினும் அமையும். (9)



கா. 10.

ப. 6.

கண்ணோட்ட மில்லவர் கண்ணிலார்
கண் ணுடை
கண்ணோட்ட மின்மையு மில்.
[யார்

(கா - உ.) எ - து.—இனிப் பல் சொல்லினென்? உலகத்துப் பிறர் மாட்டுக் கண்ணோட்டம் இல்லாதவர் யாவர்? மற்று அவரோ கண் இல்லாதோர் ஆவார்: மற்று இனிக் கண்ணுடையர் ஆவார் கண்ணோட்டம் இல்லாமையும் இல்லை எ - று

(ப - உ.) எ - து.—கண்ணோட்டம் இல்லாதார் கண்ணிலரே: கண்ணுடையார் கண்ணோட்டம் இன்மையும் இலார் ஆதலான் எ - று.

உம்மை ஐயத்தின் கண் வந்தது. கண் உண்டாயின் நோக்குமாயின் வந்து நிலைமையைக் கண்டு கண்ணோடும்: ஆதலான் கண்ணோட்டம் இல்லாதவர் கண்ணிலர் என்று மிகுத்துக் கூறிற்று. (10)

(கா - உ.) இனி மற்று இங்ஙனம் கண்ணோட்டம் உடைய அரசர்க்குத் தம் கண் எதிர் அணுகாதார்க்கு உள்ள இடர்களும் நோக்கு குறிக்கோடலும் அரசியல் ஆகலான் மற்று இதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 21. ஒற்றாடல்.

(ப - உ.) ஒற்றாடல் ஆவது ஒற்றரை ஆளவேண்டும் என்பதும் அவர் ஒற்றும் திறனும் கூறுதல். பெரியாரைத் துணைக்கோடல் முதலாகக் கண்ணோட்டம் ஈறாகத் தன் அரசிலிருந்து செய்ய வேண்டுவன கூறினர்: இது செய்யுங்கால் அவர் அவர் செய்கையை ஒற்றானே அறிய வேண்டுதலானும் இனி அவர் பிற நாடு கொள்ளுங்கால் செய்ய வேண்டுவன கூறுகின்றார் ஆதலின் அந்நாட்டு இயல்பும் அறிந்து வினை செய்ய வேண்டுதலானும் இவ்வதிகாரம் வேண்டப்பட்டது. மேலதனோடு இயையும் அது.

கா. 1. ப. 1.

ஒற்று முறைசான்ற நூலு
மிவையிரண்டுந்

தெற்றெனக மன்னவன் கண்.

(கா - உ.) எ - து.—ஒற்றரைக் கொண்டு ஒற்று ஆட்டலும் அரசியற்கு உரித்தாகிய உரைசான்ற கலைநூல்களும் என்னும் இவை இரண்டும் சாலத் தெளிவுற்று நிற்க மன்னவனிடத்து எ - று.

தெற்று என்றது தெளிவுற என்றது.



(ப - உ.) எ - து.—ஒற்றினையும்
தெளிய அறிக மன்னவன், இவை

உரை அமைந்த நூலினையும்
இரண்டும் கண்கள் ஆகலான்
எ - று.

மறைந்தவை காணுங்கால் ஒற்றானுதல், நூலினானுதல் காண வேண்டுமாதலின், அதற்காக இரண்டினையும் தெளிய அறிக. ஐயம் ஆகிய பொருள் உண்மை தோற்றுது என்று ஆயிற்று. ஈண்டு நூல் கூறியது எற்றுக்கு எனில் அரசனுக்குக் கல்வி இன்றியமையாது என்றற்கு. இஃது ஒற்று வேண்டும் என்றது. (1)

கா. 2. ப. 10.

ஒற்றினு னொற்றிப் பொருடெரியா
கொற்றங் கொளக்கிடந்த தில்.

மன்னவன்

(கா - உ.) எ - து.—தனது நாட்டகத்து வாழ்வாரது வன்மை மென்மையும் வேற்றரசர் நாட்டுள்ள வன்மையும் மென்மையும் ஒற்று ளரை உழலவிட்டு மற்று அவர்களான் ஒற்றுவித்துப் பின்னும் அவர் உருப்பதன் கண் பொருட் கருத்தும் தெரிந்து உணர வல்லாத மன்ன னவன் அரசியல் திறமை கோடற்கு இயைபாவது யாதும் இல்லை எ - று.

(ப - உ.) எ - து.—ஒற்றாலே மன்னவன் கொள்ளக் கிடந்தது ஒரு ஒற்றிப் பொருளை விசாரியாத வெற்றி இல்லை எ - று.

இஃது ஒற்று இன்மையால் வரும் குற்றம் கூறிற்று. (2) கா. 3.

ப. 5.

எல்லார்க்கு மெல்லா நிகழ்பவை
வல்லறிதல் வேந்தன் றொழில்.

யெஞ்ஞான்றும்

(கா - உ.) எ - து.—ஒற்றுமை பெரிதும் குற்றம் ஆகலான் அகத் தோரும் புறத்தோரும் அருகலரும் ஆகிய அனையவர்க்கும் நிகழ்வன ஆகிய நலம் தீங்குகளை நாடோறும் நாடோறும் ஒற்றுவித்து விரை வின் உணர்தல் வேந்தனது செய்தி எ - று.

(ப - உ.) எ - து.—பகைவர் ஆகியும் நட்டோர் ஆகியும் மத்திமராகிய உதாசினர் ஆகியும் இருக்கின்ற அரசர்க்கும் அவர் சுற்றத்திற்கும் தன் சுற்றத்திற்கும் அறம் பொருள் இன்பங்களைப்பற்றி நிகழ்பவை எல்லாவற்றையும் நாடோறும் பிறர் அறிவதன் முன்னம் தான் அறிதல் வேந்தனது தொழில் எ - று. (3)

கா. 4. ப. 7.

ஒற்றொற்றித் தந்த பொருளையு மற்றுமோ
ரொற்றினா லொற்றிக் கொளல்.



(கா - உ.) எ - து.—இவ்வாறு செய்யும் இடத்து ஒற்றன் ஒற்றிக் கொணர்ந்து உரைத்த உரை பொருட்டன்னையும் அவன் அறியாமல் வேறேயும் ஒரு ஒற்றினால் ஒற்றுவித்து ஒத்தது ஆயின் கொள்க: இல்லை ஆயின் அது செய்யற்க எ - று.

(ப - உ.) எ - து.—ஓர் ஒற்றன் அறிந்து சொன்ன பொருளைப் பின்னையும் ஓர் ஒற்றினாலே ஒற்றி அறிந்து பின்பு அதனது உண்மை கொள்க எ - று.

ஒற்றர் தங்களிலே மாற்றரசர் மாட்டும் பொருள் பெற்று மாறுபடச் சொல்லுவாரும் உளராதலான், அவர் சொன்ன பொருளைப் பின்பும் ஒருவனை விட்டு ஆராய வேண்டும் என்றது. (4)

கா. 5. ப 8.

ஒற்றொற் றுணராமை யாள்க
சொற்றொக்க தேறப் படும்.

வுடன்மூவர்

(கா - உ.) எ - து.—இவ்வாறும் இன்றி இன்னமும் ஒற்றரைக் கொண்டு யாவர் மாட்டும் உள்ள நன்மை தீமைகள் ஒற்றுவிக்கும் இடத்து ஒருவரை ஒருவர் அறியாமல் ஆண்டு அவ்வாறு பலரையும் கொண்டு ஒற்றுவித்த இடத்துத் தனித்தனி தனக்கு உரைத்த மூவர் சொல்லும் ஒக்குமாயின் மற்று அவை அரசன் தெளிய அடுக்கும்; எனவே மூவர் சொல்லிற் குறைபடின், தெளிய அடாது எ - று.

(ப - உ.) எ - து.—ஒற்றரை விடுங்கால், ஒருவரை ஒருவர் அறியாமல் விடுக: மூவர் சொல் உடன் கூடின், அது தெளியப்படும் ஆதலான் எ - று.

இஃது இருவர் சொன்னாலும் தெளியப்படாது: மூவர் சொன்னது தெளிவு என்றது. இவை இரண்டும் ஒற்றரை ஆளும் திறம் கூறின. (5)

கா. 6. ப. 2.

கடாஅ வுருவொடு கண்ணஞ்சா தியாண்டு
முகாஅமை வல்லதே யொற்று.

(கா - உ.) எ - து.—அறவோர் வேடமும் துறவோர் வேடமும் வறியோர் வேடமும் பிறவும் ஆகிய நல்லுருவு கொண்டு ஒற்று ஆடுமிடத்து அமைச்சரும் பிறரும் ஆகிய அறிவுடையாளருள் யாவரேனும் தன்னைக் கண்டு ஐயுற்று இவ்விடை வந்து எய்திய நீ யாரோ தான் என்று வினவுதல் செய்யாதபடி உறு வேடத்தோடு திரிதலும் மற்று இங்ஙனம் திரியும் இடத்தும் ஐயுற்றுக் கைப்பற்றியும் சிறைப் படுத்தியும் வருத்தம் செய்யும் இடத்துச் சிறிது நெஞ்சு அஞ்சாது

12

நிறை உரம் செய்தலும் மற்றுத் தான் வகைந்து

உட்கொண்ட மறை பொருளினை வேறு ஓரிடத்தும் சோர விடாமையும் வல்லது யாது ? மற்று அதுவே அரசர்க்கு ஒற்று ஆவது எ - று.

மற்றும் தனது தந்தை தாயார் நட்டோர் மாட்டும் சோர விடாமை ஒற்றெண அறிக.

சுற்றம் என்னும் இவர்

(ப - உ.) எ - து.—வினவப்படாத வடிவோடே கூடிக் கண் ணஞ்சுதலும் இன்றி அறிந்த பொருளை எவ்விடத்திலும் சோர்வின் றியே அடக்க வல்லவன் ஒற்றன் ஆவன் எ - று.

வினவப்படாத வடிவு ஆவது வணிகரும் பார்ப்பாரும் ஆகிய ஒற்றற்குத் தகை எவ்விடத்துஞ் சோர்வு இன்றியே அடக்க வல்ல வன் ஒற்றன் எ - று. (6)

கா. 7.

ப. 3.

துறந்தார் படிவத்தா ர ாகி யிறந்தாராய்ந்
தென்செயினுஞ் சோர்வில தொற்று.

(கா - உ.) எ - து.—துறந்தோர் வேடம் முதலாகப் பல வேடங் களினுலும் ஒற்று ஆராயும் இடத்துப் பிறர் தன்னையும் பற்றி ஆராய்ந்து கட்டுதல் கடுத்தல் எற்றுதல் எறிதல் முதலிய இடரால் இடர்ப்படுத் திக் கடாவினும் தன் தன்மையிற் சிறிதும் சோர்வு படாதது யாது! மற்று அதுவே அரசர்க்கு ஒற்று ஆவது எ - று.

(ப - உ.) எ - து.—தவம் செய்வார் வேடத்தார் ஆகி, நாட்டு எல்லையைக் கடந்துபோய், அங்கு உள்ள செய்தியை ஆராய்ந்த இடத்து, அகப்படாமல் துன்பம் ஆயினும் இன்பம் ஆயினும் செய்யி னும் தனது உள்ளகத்தைச் சோர விடாதவன் ஒற்றன் ஆம் எ - று.(7)

கா. 8. ப. 6.

வினைசெய்வார் தஞ்சுற்றம் வேண்டாதா
கனைவரையு மாராய்வ தொற்று.

றென்றுங்

(கா - உ.) எ - து.—இராச காரியம் செய்வாரையும் அரசனது சுற்றத்தாரையும் பகைவரையும் இங்குச் சொன்ன மூவரையும் மற்றும் உள்ளோரையும் கசடு அற ஆராய வல்லது ஒற்று எ - று.

(ப - உ.) எ - து.—தனக்குக் காரியமானவை பார்த்துச் செய் வாரையும், தனக்குச் சுற்றமாய் இருப்பாரும் தம்மை வேண்டாது ஆகிய அனைவரையும் ஆராய்ந்து அறிவான் ஒற்றன் எ - று.

மேல் எல்லார்க்கும் நிகழ்பவை ஒற்ற
தன் காரியத்திற் செய்வார் செய்கின்ற

பகையுமாய் இருப்பாரையும் ஒற்ற வேண்டும்
டும் ஒற்ற வேண்டும் இடம் கூறின.

என்றது. இவை இரண்
(8)

கா. 9.

ப. 9.

சிறப்பறிய வொற்றின்கட் செய்யற்க
செய்யிற்
புறப்படுத்தா னாகு மறை.

(கா - உ.) எ - து.—இங்ஙனம் அகத்தும் புறத்தும் அருமையும் பெருமையும் நட்பமும் ஒட்பமும் ஓர்ந்து உணர்ந்த இடத்தும் ஒற்றர்க்கு அரசர் செய்யும் சிறப்புப் பலவும் உள அன்றே: அவற்றுள் யாதானும் ஒரு சிறப்பினையும் பிறர் அறியுமாறு தாம் செய்யாது ஒழிக: செய்வாராயின் அங்ஙனம் அவரால் தாம் அரிதின் பெற்ற மறையுரையினை அவ்வுரைப் பொருள் ஆகிய வினை முடிவதன் முன் னரே தாமே புறத்து வெளிப்படுத்தினர் ஆவர் எ - று.

(ப - உ.) எ - து.—ஒற்றர்க்குச் சிறப்புச் செய்யுங்கால் பிறர் அறியாமல் செய்க: பிறர் அறியச் செய்தானாயின், அவர் ஒற்றி வந்த பொருளைப் புறத்து விட்டானாம் எ - று.

இஃது ஒற்றர்க்குச் சிறப்புச் செய்யுங்கால் செய்ய வேண்டும் என்றது.

பிறர் அறியாமல் (9) கா. 10.

ப. 4.

மறைந்தவை கேட்கவற் றாகி
யறிந்தவை
ஐயப்பா டில்லதே யொற்று.

(கா - உ.) எ - து.—வேந்தரிடத்தும் பிறரிடத்தும் மிகவும் மறைபொருள் ஆகிய வினைச் சூழ்ச்சிகளை விரைவியும் விடுத்தும் கட்பினும் சகையினும் பிறவினும் தெரிந்து விளங்கக் கேட்டுணர வல்லனும் ஆகி அங்ஙனம் அறிந்தவை தம்பால் சிறிதும் ஐயப்பாடு இன்றித் தெளிவுற உரைக்கும் திறமை யுள்ளது யாது? மற்று அதுவே அரசர்க்கு ஒற்று ஆவது எ - று.

(ப - உ.) எ - று.—பிறரால் மறைக்கப்பட்டவற்றைக் கேட்டு அறிய வல்லன் ஆகி அறிந்தவையிற்றை ஐயம் தீர அறிய வல்லன் ஒற்றன ஆவான எ - று.

இவை மூன்றினாலும் ஒற்றன் இலக்கணம்

கூறிற்று. (10)

(கா - உ.) இனி மற்று இங்ஙனம் ஒற்றரைக் கொண்டு உறுதி வினைப்பண்பு உணர்ந்த அரசனானவன், அவ்வுறுதி வினை வாய்ப்பின் அக்காலம் கழிவதன் முன்னரே கீழ்ச்சொல்லிப் போந்த காலம் அறி



தல், இடன் அறிதல் என்னும் கருத்தினைக் கூறு வழுவாமல் குறிக் கொண்டு மற்று அவ்வினை மாட்டுப் பெரிதும் மேற்செலவு உடையனாக வேண்டுதலான், மற்று அதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 22. ஊக்கம் உடைமை.

(ப - உ.) ஊக்கம் உடைமை யாவது ஒரு வினை செய்யுங்கால் அதனது அருமையை ஓராது இவ்வாறு செய்யக் கடவேன் என்று கருதும் கருத்து உடைமை. பிறர் நாடு கொள்ளுங்கால் அவ்விடத்து உள்ள செய்தி ஒற்றரான் அறிந்த பின்பு அதனை அறிந்து கொள்ளக் கடவேன் என்று நினைக்கும் கருத்து வேண்டுதலின் அதன் பின் கூறப்பட்டது.

கா. 1.

ப 1.

உடைய ரெனப்படுவ தூக்கமஃ தில்லா

ருடைய துடையரோ மற்று.

(கா - உ.) எ - து.—உலகத்து அரசாரனோர் எனைத்து வகைப் பட்ட பொருள்களையும் உடையரேனும் அவற்றுள் எல்லாம் பலரா லும் எடுத்துரைக்கப்படுவது சிறந்த ஊக்கம் உடைமையே ஆகலான் அஃது இல்லாதார் வேறு தமக்கு உடையதாக வகுத்து எண்ணப் பட்ட உடைமை உடையரேனும் யாதும் இல்லை எ - று.

(ப - உ.) எ - து.—ஒன்றை உடையர் என்று சொல்லப்படுவது ஊக்கம் : அஃது இல்லாதார் மற்று உடைமை யாகிய பொருள் எல்லாம் உடைய ராகார எ - று.

இஃது ஊக்கம் உடைமை வேண்டும் என்றது.

(1) கா. 2.

ப. 3.

வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்

உள்ளத் தனைய துயர்வு.

(கா - உ.) எ - து.—குளத்தின்கண் நின்ற வெள்ளம் எத்தன் மைத்து: மற்று அத்தன்மைத்து நீர்ப்பூத் தண்டின் நீளமாகுது: மற்று அதுபோல மன்னர் தமது நெஞ்சு ஒருப்பாடு எத்தன்மைத்து: மற்று அத்தன்மைத்து ஒருவர்க்கு உரியவாகப் பெரியோரான் உரைக் கப்பட்ட உயர்வு பொருள் அனைத்தும் எ - று.

(ப - உ.) எ - து.—புகுந்த நீரினது அளவினது பூக்களது வளர்ச்சி: அதுபோல மாந்தரது உள்ளத்தின் அளவினது ஆக்கம் எ - று.

ஆக்கம் - அனைய மலர் நீட்டம் : ஆக்கம் என்றது.

இதனுனே வரும் கா. 3.

(2)

ப. 7.

சிதைவிடத் தொல்கா ருரவோர் புதையம்பிற்
பட்டுப்பா டூன்றுங் களிறு.

(கா - உ.) எ - து.—நெஞ்சு ஊக்கம் உடைய அரசரானவர், தமது விதி வகையான் யாதானும் ஒருவாற்ருன் தமது ஆக்கம் அழியு மிடத்துத் தளர்வுருர் : அது என்போல எனின், ஒருவன் எய்த அம்பானது தன் மெய் அழுந்தப்பட்டு வைத்தும் பின்னும் தனது பெருந் தன்மையை உரைத்து நிற்கும் அண்ணல் யானையானது மற்று அது எ - று.

சிதைவு இடத்து என்றது ஆக்கம் அழிவு இடத்து என்றது. ஒல்கார் என்றது தளரார் என்றது : உரவோர் என்றது அறிவுடையோர் என்றது.

(ப - உ.) எ - து.—தளர்ச்சி வந்த இடத்துத் தளரார் உள்ளம் மிகுதி உடையார் : மெய் புதைந்த களிறுபோல எ - று.

அம்பினுள் பட்டும் பாடு ஆற்றும்

இது உயிர்க் கேடு வரினும் தளரார் என்றது.

(3) கா. 4.

ப. 5.

உள்ளுவ தெல்லா முயர்வுள்ளன்
தள்ளினுந் தள்ளாமை நீர்த்து.

மற்றது

(கா - உ.) எ - து.—அரசர் தாம்
லாம் மேம்படு கருமம் சிந்திக்க : மற்று
நீர்மை உடைத்து எ - று.
செய்வதாகச் சிந்திப்பது எல்
அது பிழைப்பினும் பிழையாத

உயர்வுள்ளல் என்றது உயர்வினை உள்ளுக என்றது : தள்ளி னும் என்பது பிழைப்பினும் என்பது : தள்ளாமை நீர்த்து என்பது பிழையாத நீர்மை உடைத்து என்றது.

(ப - உ.) எ - து.—நினைப்பன எல்லாம் உயர்வையே நினைக்க : அந்நினைவு முடியாமல் தப்பினும் முயன்று பெற்றதனோடு ஒக்கும்
று.

இது தப்பினும் பழிக்கப்படாது என்றது.

(4) கா. 5.

ப. 9.

உள்ள மிலாதவ ரெய்தா ருலகத்து
வள்ளிய மென்னுஞ் செருக்கு.



(கா - உ.) எ - து.—யாதானும் ஒரு கருமத்தின் கண்ணும் தமது நெஞ்சு ஊக்கம் இல்லாத அரசரானோர் என்றும் எய்துவிலர்: யாதினை எனின் இவ்வுலகத்து வாழ்வார் பலரினும் யாம் சாலச் செய் கருமத்தின்கண் வளவியேம் என்று உள்ள மனச் செருக்கினை எ - று.

(ப - உ.) எ - து.—உள்ளம் மிகுதி வண்மை உடையேம் என்னும் களிப்பினைப்

இல்லாதார் உலகின்கண்
பெறார் எ - று.

இஃது ஊக்கம் இல்லாதார்க்கு ஈய மாட்டார் என்றது. (5) கா. 6.

ப. 6.

உரமொருவற் குள்ள வெறுக்கையஃ
மரமக்க ளாதலே வேறு.

தில்லார்

(கா - உ.) எ - து.—ஒருவர்க்கு உணர்வுடைமை யாவது யாதோ எனின் ஓர்ந்து உற்ற கருமத்தின்கண் பெரிதும் நெஞ்சு ஊக்கம் உடையர் ஆதலே செல்வம்: அஃது இல்லாதார், மாமானது மக்களுக்குள் காண்டது எத்தன்மைத்து அத்தன்மைத்து எ - து.

உரம் என்பது அறிவுடைமை. வெறுக்கை என்பது செல்வம் என்றும் வெறுப்பு என்றும் சொல்லுவாரும் உளர்.

(ப - உ.) எ - து.—ஒருவனுக்கு அறிவாவது உள்ளம் மிகுதி உடைமை. அஃது இல்லாதாரை மாம் என்று சொல்லப்படும்: மக்கள் வடிவே மாத்தின் வேறாகித் தோற்றுகின்றது எ - று.

அறிவும் இதுதானே என்றது.

(6) கா. 7.

ப. 8.

ஆக்க மிழந்தேமென் றல்லாவா ருக்க
மொருவந்தங் கைத்துடை யார்.

(கா - உ.) எ - து.—தம் மாட்டு முன்னமே உளது ஆகிய பெருஞ் செல்வத்தைப் பின்பு ஒருகால் இழந்தோம் என்று கொண்டு அலம் வருதல் இலர்: யார் எனில், பின்னும் ஊக்கம் உடைமை ஆகிய பெருஞ் செல்வத்தைத் தம் இடத்து உடையவர் எ - று.

ஒருவந்தம் பெருஞ் செல்வம் கைத்துடையார் என்பது தம்மிடத்து உடையவர் என்றது.

(ப - உ.) எ - து.—செல்வத்தை இழந்தேம் வார் அல்லர், உள்ளம் மிகுதியை ஒருதலையாகத்

என் று அலம் வரு
தம்மாட்டு உடை
யார் எ - று.

இது பொருட்கேடு வரினும் தளரார் என்றது.
(7)

22. ஊக்கம் உடைமை

95

கா. 8 .
ப. 2.

உள்ள முடைமை யுடைமை
நில்லாது நீத்து விடும்.
பொருளுடைமை

(கா - உ.) எ - து.—மற்று ஆகலான் ஊக்கம் உடைமையே ஒருவர்க்குச் செல்வம் ஆனது: மற்று இவ்வுலகத்துப் பொருளானது நிலையாது: முன்னை வினை வழியினால் தமக்கு வரும் பொருள்

வருதலும் கெடும்பொருள் வருதலும் யாவாலும் ஒழித்தற்கு அரிது ஆகலான், மற்று உணர்வு ஊக்கம் ஆகின்றது அவ்விரு -ாலும் சிறந்து ஆகலான் இதனை ஒப்பது ஓர் ஆக்கம் வேறு இல்லை எ - று.

(ப - உ.) எ - து.—ஒருவனுக்கு உடைமையாவது அறிவு உடைமை: மற்றப் பொருள் முதலாகிய செல்வம் நில்லாது தன்னை விட்டு நீங்கும் எ - று. (8)

கா. 9. ப. 10.

பரியது கூர்ங்கோட்ட தாயினும் யானை
வெரூஉம் புலிதாக் குறின்.

(கா - உ.) எ - து.—சாலப் பரியதும் ஆய்க் கூரிய கோட்டினை உடையதும் ஆய் இருந்ததே ஆயினும், யானையானது மிகவும் அஞ்சும்: எவ்விடத்து எனின், ஒரு புலி வந்து தன்னொடு பொரத் தாக்குறுவதான இடத்து: மற்று அத்தன்மைத்து மன்னர்க்கும்: பொரும்படை ஆண்மையும் வருபடைத் துணையும் மற்றும் பிறவும் பெரியர் ஆகிய மாற்று அரசர் வந்துற்றனர் ஆயினும், மற்று இவரை நோக்கிச் சிறியரே ஆயினும், நெஞ்சு ஊக்கம் என்னும் நிலைமையே அரசர்க்கு இயல்பு எ - று.

(ப - உ.) எ - து. — யானை பரிய உடம்பினதாய்க் கூரிய கோட்டையும் உடையதாயினும் புலி பொருமாயின் அதற்கு அஞ்சும் எ - று.

ஊக்கம் இலாதார் பெரியாராயினும் கெடுவார் என்றது. (9) கா. 10.
ப. 4.

ஆக்க மதர்வினாய்ச் செல்லு மசைவிலா
ஊக்க முடையா னுழை.

(கா - உ) எ - து —ஒருவனுக்கு இருமைக்கும் உரிய ஆக்கமானது தானே வழிதேடிச் சென்று எய்தும்: யாவர் மாட்டு எனின், சிறிது அசைவும் இல்லாத நெஞ்சு ஊக்கத்தை உடையார் மாட்டு; ஆகலான் ஊக்கம் உடைமை உளதாயின் அல்லது தமக்குரிய தாளாண்மை உள ஆகா எ - று.

அதர் என்பது வழி என்றது.



(ப - உ.) எ - து.—அசைவு இல்லாத ஊக்கம் உடையான் மாட்டு ஆக்கம் தானே வழிகேட்டுச் செல்லும் எ - று.

நினைத்தனானே ஆக்கம் உண்டாமோ என்றார்க்கு, இது கூறப்பட்டது. (10)

(கா - உ) இனி மற்று இந்நெஞ்சு ஊக்கம் உடையோர்க்கு அல்லது மடியின்மை நிகழாது: ஆகலான் மற்று இதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 23. மடியின்மை.

(ப - உ.) மடியின்மையாவது சோம்பல் இன்மை. செய்யும் காரியம் உயர நினைத்தாலும் அதனைச் செய்து முடிக்குங்கால், சோம்பாமை வேண்டும் என்று அதன் பின் கூறப்பட்டது.

கா. 1. ப. 10.

மடியில்லா மன்னவ னெய்து மடியளந்தான்
றாஅய தெல்லா மொருங்கு.

(கா - உ.) எ - து.—தனது நெஞ்சு ஊக்கத்துக்குத் தக்க முயற்சி உடையனுய்த் தனது இடத்து ஒரு நாளும் மடிப்பது ஓர் மடி இல்லாத மன்னவன் யாவன்? அவன் எய்தும்: யாதினை எனின், முன் ஒரு நாள் அசுரேசனிடத்துச் சென்றுற மூவடி வேண்டி அளந்தவன் ஆகிய திருமால் அடியில் தாவிக் கொண்ட அனைத்து உலகினையும் ஒரு வழிப்படப் பெறும் எ - று.

(ப - உ.) எ - து.—மடி இல்லாத மன்னவன் எய்துவன், அடியினுன் அளந்தானுல் கடக்கப்பட்ட உலகம் எல்லாம் கூட எ - று.

இது மடியின்மையால் வரும் பயன் கூறிற்று. (1)

கா. 2. ப. 4.

குடிமடிந்து குற்றம் பெருகு
மாண்ட வுஞற்றி லவர்க்கு.

மடிமடிந்து

(கா - உ.) எ - து.—தன்கோல் கீழ்வாழும் குடிகளும் தத்தம் வினைச்செயலைச் செய்யாது மடிந்து பின்னும் தமக்கும் குற்றம் பெருகும்: யார்க்கு எனின், மடியின்கண் தங்கியதனுலே மாட்சிமை உடைய முயற்சி இல்லா மன்னவர்க்கு எ - று.

குடி மடிந்து என்பது குடிகள் வினைமடிந்து என்றது. மடிந்து என்பதனைச் சுற்றத்தார் மாய்ந்து என்பாரும் உளர். மடிந்து என்பது மடியின் கண்ணே மடிந்து என்றது.

குடி
மடி



(ப - உ.) எ - து.—குடியும் கெட்டுக்
பின் கண்ணே ஒன்றி மாட்சிமைப் பட்ட

குற்றமும் மிகும்: மடி
முயற்சி இல்லாதார்க்கு
எ - று.

இது குடி கெடுதலே அன்றிக் குற்றம் உண்டாம்
என்றது. (2) கா. 3.

ப. 5.

இடிபுரிந் தெள்ளுஞ்சொற் கேட்பர்
மாண்ட வுஞற்றி லவர்.

மடிபுரிந்து

(கா - உ.) எ - து.—பிறர் இடித்தலைச் செய்து
இகழ்ந்து உரைக்கும் சொல்லினைக் கேட்பார்: யார்
எனின், மடியின்கண் தங்கி மற்று அதனுனே
மாட்சிமைப் பட்ட முயற்சி இல்லாத மன்னவர் எ -
று.

(ப - உ.) எ - து.—நட்டோரால் கழறுதலையும் பெற்று ஏதிலார்
இகழ்ந்து சொல்லும் சொல்லையும் கேட்பர், மடியை மாட்சிமைப் பட்ட முயற்சி இல்லாதார் எ - து.

விரும்பிச் செய்து

இது பிறரால் இகழப்படுவர் என்றது.

(3) கா. 4.

ப. 6.

மடிமை
கடிமை

குடிமைக்கட் டங்கிற்ற ஜென்ஞர்க்
புகுத்தி விடும்.

(கா - உ.) எ - து.—தனக்கு உரிய அரசர் வாழ்க்கைக்கு உரியனவற்றை முயலாது மடிந்து ஒழுகும் மடித்தன்மையும், தன்கோல் கீழ்வாழும் குடிகளது குணமும் குற்றமும் ஆராயாமல் மடித்தலும், மற்று......................பருவம் வழுவாமல் ஆங்கு உழவு முதலிய முயற்சியின் மடித்தலும் தனது பகை வேந்தர்க்குத் தான் ஏவல் கேட்டுப் பணிந்து ஒழுகும் அடிமைப் படுத்தி விடும் எ - று.

(ப - உ.) எ - து.—குடிப்பிறந்தார் மாட்டே மடிமை தங்குமாயின் அது தன் பகைவர்க்கு அடிமை யாக்கி விடும் எ - று.

இது கீழ்ப்படுத்தலே அன்றி அடிமையும்

ஆக்கும் என்றது. (4) கா. 5.

ப. 2.

மடிமடிக் கொண்டொழுகும் பேதை பிறந்த
* குடிமடியுந் தன்னினு மூந்து.

(கா - உ.) எ - து.—மடித்தல் ஆகிய இதனைத் தன் மாட்டுக் கொண்டு ஒழுகும் மடவோன் ஆகிய மன்னவன் தான் மாய்தலேயும் அன்றித் தன்னினும் முந்துறத் தனது குடி முழுது மாயும் எ - று.

* மடி மடிக்கொண்டு ஒழுகும் என்பது மேல் வைத்துக்கொண்டு என்றது.

மடியாகிய இதனைத் தன்

13



(ப - உ.) எ - து.—நெஞ்சத்து மடியினாலே வினையின் கண் மடித்தலைச் செய்து ஒழுகா நின்ற அறிவிலி பிறந்த குடி தனக்கு முன்பே கெடும் எ - று.

மடி உடையார்க்கு உளதாகும் குற்றம் என்னை கூறப்பட்டது.

என்றார்க்கு இது (5) கா. 6.

ப. 9.

குடியாண்மை யுள்வந்த குற்ற
மொருவன்
மடியாண் மை மாற்றக் கெடும் .

(கா - உ.) எ - து.—குடிகளைத் தான் ஆண்டு ஒழுகும் இடத்து அவர்க்கு வந்து எய்திய வடுப்பாடு மற்று அம்மன்னவன் தனக்கு வந்த வடுப்பாடு மற்று இங்ஙனம் வந்த மடி ஆட்சியைத் தவிர்க்கவே கெட்டு விடும் எ - று.

(ப - உ.) எ - து.—குடி ஆள்தலை குற்றமானது, ஒருவன் மடி ஆள்தல் கெடும் எ - று.
உடைமையின் கண் வந்த
உடைமையைக் கெடுக்கக் றம்.

குற்றம் என்பது குடிக்கு வேண்டுவன செய்யாமை வரும் இது மடி இல்லார்க்குப் போக்கலாம் என்றது.

குற்
(6)

கா. 7 .
ப. 1.

மடியை மடியா வொழுகல் குடியைக்
குடியாக வேண்டு பவர்.

(கா - உ.) எ - து.—தாம் யாதானும் ஒரு கருமம் செய்யக்

கருதிய காலத்துத் தம் மனத்து ஒரு மடி வந்துற்ற இடத்து அதற்கும் இடம் கொடாது அம்மடியை மடியா ஒழுகல் வல்லவர் மற்று அவரே, தமது நாட்டு வாழும் குடிகளைக் குலம் தழீயாது (?) குடி நெருங்கி வாழ வேண்டும் அரசர் எ - று.

(ப - உ.) எ - து.—மடி செய்தலை மடித்து குடியை உயர் குடியாக வேண்டுவார் எ - று.

ஒழுகுக: தம்

இது மடியாமை வேண்டும் என்றது. (7)

கா. 8.

ப. 3.

குடியென்னுங் குன்றா விளக்க மடியென்னு

மாசூர மாய்ந்து விடும்.

(கா - உ.) எ - து.—அரசர் குலம் என்று எடுத்து உரைக்கப் பட்ட கெடாத விளக்கானது..................வந்து பாக்கவே தனது ஒளி மறைந்து பின்னும் கெட்டு விடும் எ - று.



மடி

(ப - உ.) எ - து.—குடி என்னு நின்ற குறைவு இல்லாத ஒளி, என்று சொல்லப்படுகின்ற மாசு மறைக்கத் தோன்றுது எ - று.

இது முன்பே தோற்றம் உடைத்த ராய றது.

குடியும் கெடும் என் கா. 9.

(8)

ப. 7. படியுடையார் பற்றமைந்தக்
மாண்பய மெய்த லரிது.

கண்ணு மடியுடையார்

(கா - உ.) எ - து.—மண் ஆளும் வேந்தரானவர் தம்மினும் வலி யர் வேந்தரைப்பற்றி வாழ்தல் முற்றும் பெற்ற இடத்தும், மடி யுடைய மன்னர் ஆயின் மாட்சிமை உடைய அரசர் வாழ்க்கைப் பயன் எய்தல் அரிது எ - று.

(ப - உ.) எ - து.—நில வேந்தர் பல பொருளினுலும் அமைந்த இடத்தும் மடி உடையாராயின் மாட்சிமைப்பட்ட பொருளைப் பெறு தல் இல்லை எ - று.

இது செல்வம் உண்டாயினும் கெடும் என்றது.

(9)

கா. 10.

ப. 8.

நெடுநீர் மறவி மடிதுயி லன்குங்
கெடுநீரார் காமக் கலன்.

(கா - உ.) எ - து.—விரைந்து எழ வேண்டும் கருமத்தை நீள விடுவதோர் கெடுநீர்மையும் குற்றத்தின்கண் பற்றிய மறவியும் அதற்கு உரிய மடிமையும் கருமம் இயற்றக் காமுறாது கண் துயில்தலும் இந் நான்குமே கெடுதல் தன்மையர் ஆகிய அரசர் ஆசைப்பட்டு அணிந்து கொள்ளும் அணிகலம் ஆவது; மற்று இது அன்றி அரசர்க்கு உரிய நன்கலம் ஆகிய கடகமும் கண்டமாலையும் ஆரமும் கடுக்கும் அணிதல் இலர் எ - து.

(ப - உ.) எ - து.—விரைந்து செய்யும் வினையை நீட்டித்தலும் செய்ய நினைத்ததனை மறத்தலும், அதனைச் செய்தற்குச் சோம்புதலும், அதனைச் செய்யாது உறங்குதலும் இவை நான்கும் கெடும் தன்மையார் காதலித்து ஏறும் மரக்கலம் எ - று.

தம்மைக் காதலித்து ஏறினாரை நடுக்கடலுள் தள்ளும் மரக்கலம் போறலின் கலம் எனப்பட்டது. துயிலும் மறவியும் நெடுநீர்மையும் மடியினோடு ஒத்த இயல்பின ஆகலான் இவையும் ஒருவாற்றால் கூற வேண்டுதலின் ஈண்டுக் கூறப்பட்டது. இத்துணையும மடியினால் வரும் குற்றம் கூறிற்று. (10)



(கா - உ.) இனி மற்று இங்ஙனம் ஊக்கம் உடைமையும் மடியின்மையும் உடைய வேந்தர்க்கு என்றும் தொழிலுக்கு அடுத்த தாளாண்மை இயல்பு ஆகலான் மற்று இதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 24. ஆள்வினை யுடைமை.

(கா - உ.) ஆள்வினை யுடைமையாவது முயற்சி யுடைமை. செய்யும் காரியம் உயர நினைத்துச் சோம்புதல் இல்லாயிருந்தாலும் அதனை முடியுமாறு முயல வேண்டுதலின் அதன் பின் கூறப்பட்டது.

கா. 1.

ப. 2.

அருமை யுடைத்தென் றசாவாமை
பெருமை முயற்சி தரும்.

வேண்டும்

(கா - உ.) எ - து.—அரசரானோர் தமக்குச் சிறந்த கருமம் செய்யும் இடத்துப் பெரிதும் செய்தற்கு அருமை உடைத்து என்று கண் சோம்பி இராமையை விரும்ப வேண்டும்: அதனால் அம்முயற்சியானது மிகவும் பெரிய மேம்பாட்டினைத் தரும் எ - று.

(ப - உ.) எ - து.—ஒரு வினையைச் செய்தல் அருமை உடைத்தென்று முயலாமையைத் தவிர்தல் வேண்டும்: முயற்சி தனக்குப் பெருமையைத் தரும் ஆதலால் எ - று.

இது வினைசெய்து முடித்தல் அருமை ஆகாது என்றது.

உடைத்தென்று தவிர்தல்

(1)

கா. 2.

ப. 10.

தாளாண்மை யென்னுந் தகைமைக்கட்
வேளாண்மை யென்னுஞ் செருக்கு.

டங்கிற்றே

(கா - உ.) எ - து.—அரசர்க்கு ஆள்வினை யுடைமை என்னும் அத்தகுதிப் பாட்டின்கண் தங்கியது: யாது எனின் யாவர்க்கும் உகப்ப வழங்கும் உபகாரம் என்று எடுத்துரைக்கப் பட்ட பெரிய செருக்கு எ - று.

(ப - உ.) எ - து.—முயற்சி யாகிய நன்மையின்

கண்ணே கிடக் கது : பிறர்க்கு உபகரித்தல் ஆகிய பெருமிதம் எ - று.

இஃது அறம் செய்தலும் இதனானே ஆகும்

என்றது. (2)

கா. 3. ப. 1.

இன்பம் விழையான் வினைவிழைவான் றன்கேளிர்
துன்பந் துடைத்தூன்றுந் தூண்.

24. ஆள்வினையுடைமை

(கா - உ.) எ - து.—என்றும் தனக்கு ஓர் இன்ப நுகர்ச்சியை விரும்பான் ஆகிக் கருமத்தின்கண் ஆள்வினை யுடைமையையே விரும்பு வான் யாவன்? மற்று அவனே கேளிர் ஆகிய சுட்டோர்க்கும் சுற் றத்தார்க்கும் சான்றோர் முதலிய அனைவோர்க்கும் தாளாண்மை நிலை பெறுத்தித் துன்பத்தைத் துடைத்து என்றும் தூண் எ - று.

(ப - உ). எ - து.—தன் உடம்பிற்கு இன்பத்தை விரும்பாது வினை செய்தலை விரும்பும் அவன் தன் கேளிர்க்கு உற்ற துன்பத்தை நீக்கி அவர் தளராமல் தாங்குவது ஒரு தூண் ஆவான் எ - று.

ஆதலால் வருத்தம் பாராது முயல வேண்டும் என்றது. (3)

கா. 4.

ப. 3.

வினைக்கண் வினைகெட லோம்பல்
தீர்ந்தாரிற் றீர்ந்தன் றுலகு.

வினைக்குறை

/

(கா - உ.) எ - து.—அரசாரனோர் தமக்குத் தகுவது ஆகிய கரு மம் செய்ய முயலும் இடத்து அதற்குப் பழுது வாராமல் பாது காத்து..................வினை குறைபாடு நீங்கிய பெரியோர் மாட்டே தெளிவுற நிலை பெற்றது இவ்வுலகம் எ - று.

(ப - உ.) எ - து.—வினைசெய்யும் காலத்து

வினை கெடுதலைத்

தவிர்க. வினைக்குறையை முடித்தாரினின்றும்

இல்லை எ - று.

உலகம் விடப்பட்டது

இது தொடங்கின வினையைக் குறைபட
விடலாகாது என்
றது.
(4)
கா. 5.
ப. 5.

தாளாண்மை யில்லாதான்
வேளாண்மை பேடிகை
வாளாண்மை போலக் கெடும்.

(கா - உ.) எ - து.—தனது ஆண்மைக்கு உரிய முயற்சியின்
இல்லாத மன்னவனது கைவண்மை எத்தன்மையதோ எனின்,
உறையகத்து இருந்த வாளாண்மை போலக் கெடும்
எ - று.

இனி மற்று இவ்வாறும் அன்றி, ஆண்மகன் அல்லாத பேடி
கைப்பற்றின வாள் ஆட்சிபோல ஆள்வினை முயற்சியும் மாற்றார் மேல்
வழக்கும் அன்றிக் கெட்டு நின்றாற் போலப் பொருவில் முயற்சியும்
யோசித்து வழக்கமும் இன்றிக் கெடும் எ - று.

வேளாண்மை என்பது யாவர்க்கும் வழங்கும் கைவண்மை.
பேடிகை என்பது வாளினது உறை என்றது. வாளாண்மை என்
பது வாள் ஆட்சி என்றது.

(ப - உ.) எ - து.—முயற்சி
படை கண்டால் அஞ்சும் அவன்
கெடும் எ - று.
இல்லாதான் பிறர்க்கு உபகரித்தல்
கையில் வாள் பிடித்தாற் போலக்

இஃது அறம் செய்ய மாட்டான் என்றது.

(5)

கா. 6.

ப. 4.

மடியுளாண் மாமுகடி யென்ப
மடியிலான்
றாளுளா டாமரையி னள்.

(கா - உ.) எ - து.—தனக்கு ஏற்ற கருமத்தின்கண் முயலாது மடிப்பாலுடைய மடியானது, மற்று இது அளித்தான் யார் எனின் வறுமை கெறியில் பெரியள் ஆகிய மூதேவி என்று சொல்லுப் சான்றோர் : மற்ற மடியானது தன்னிடத்து இல்லாதோனது தாளாண்மை இடத்தாள் திருமகள் எ - று.

(ப - உ ) எ - து.—வினை செய்யுங்கால் சோம்புவானது சோம்பலின் கண்ணே மூதேவி உறைவாள் : அதின்ச் சோம்பு இன்றி முயலுவான் முயற்சிக் கண்ணே திருமகள் உறைவாள் என்று சொல்லுவார் எ - று.

இது வினையை மடியின்றிச் செய்ய வேண்டும் என்றது. (6)

கா. 7. ப. 8.

தெய்வத்தா ஞகா தெனினு முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்.

(கா - உ.) எ - து.—இவ்வுலகத்து ஒருவர்க்கு விதியினுல் சில காலம் ஆக்கம் இலது ஆயினும் இருந்ததே ஆயினும் பின்பு குறிக் கொண்டு முயல்வான் ஆயின், அம்முயற்சி தானும் விதியினுல் விளை வது ஆகலின், மற்று இதுவும் தம் மெய்வருத்தத்தால் உள்ள பலத் தின் இறுதிக்கண் கொடுக்கும் எ - று.

தெய்வத்தான் என்றது விதியினுல் என்றது.

(ப - உ.) எ - து.—புண்ணியம் இன்மையான் ஆக்கம் இன்று ஆயினும் ஒரு வினையின் கண்ணே முயல்வன் ஆயின், முயற்சி தம் உடம்பினுன் வருந்திய வருத்தத்து அளவு பயன் கொடுக்கும் எ - று.

இது புண்ணியம் இன்மை ஆயினும் பயன்படும்

என்றது. (7)

கா. 8. ப. 6.

முயற்சி திருவினை யாக்கு முயற்றின்மை
யின்மை புகுத்தி விடும்.

## 24. ஆள்வினையுடைமை 108

(கா - உ.) எ - து.—இங்ஙனம் முயல்கின்ற முயற்சியானது செல்வத்தை உளது ஆக்கும்: மற்று அம்முயற்சி இல்லாமையானது அவர்க்கு வறுமையைக் கொடுக்கும் எ - று.

(ப - உ.) எ து.—முயற்சி செல்வத்தினை லாமை வறுமையை உண்டாக்கி விடும் எ - று.

உண்டாக்கும். முய

செல்வமும் நல்குரவும் இதனனே வரும் என்றது. (8) கா. 9.

ப 7.

பொறியின்மை யார்க்கும் பழியன்
தாள்வினை யின்மை பழி.

றறிவறிந்

(கா - உ.) எ - து.—தாம் ஒரு கருமத்தை முயவின், அது விதி வழி இடத்தால் தமக்கு ஆக்கம் இல்லாமை மன்னவர்க்கும் மற்று யாவர்க்கும் பழி ஆவது அன்று; மற்று யாதோ பழி ஆவது எனின், தமக்குச் செய்யத் தருவதாகத் தாம் அறியும் கருமம் யாது அதனையே குறிக்கொண்டு அறிந்து மற்று அதன்கண் முயல்வது ஓர் முயற்சி இல்லாமையே ஒருவர்க்குப் பழி ஆவது எ - று.

பொறி இன்மை என்பது விதி இல்லாமை என்றது.

(ப -
ஆகாது.

உ.) எ - து.—யாவர்க்கும் புண்ணியம் இன்மை அறிவன அறிந்து முயற்சி இன்மையே குற்றம்

குற்றம்
ஆவது
எ - று.

அறிவு - காரிய அறிவு.
வது உண்டோ என்றார்க்குக்

புண்ணியம் இல்லாதார் முயன்றால் வரு
கூறப்பட்டது. (9)

கு.ர. 10.

ப. 9.

ஊழையு முப்பக்கங் காண்ப
ருலைவின்றித்
தாழா துஞற்று பவர்.

(கா - உ.) எ - து.—தமது விதி தன்னையும் புறத்து இடுவர் ாஞம்: யாது எனின் தமக்குத் தருவது ஆகிய கருமம் செய்யும் இடத்துக் காலத்தாழ்வு வாராமல் பருவத்தோடு வினை முயலும் மேவர்தர் எ - று

ஊழையும் உப்பக்கம் காண்பர் என்றது விதி கிடுவர் என்றது.

தன்னையும் புறத்

(ப - உ.) எ - து.—ஒரு வினையை மனத்தில் தளர்வு இன்றியே நீட்டியாமல் முயலுமவர், அது பயன்படாமல் விலக்குகின்ற தீ வினையை முதுகு புறம் காண்பர் எ - று.

இஃது ஊழ் தன்னையும் வெல்வர் என்றது.
(10)

.



(கா - உ.) இனி மற்று இவ்வாறு அரசாரனோர்க்கு ஆள் வினையுடைமை அமைந்து ஒழுகவும் கெடும் பொருள் இழுக்கம் (?) முதலிய இடுக்கண் வந்துழிச் சிறிதும் நெஞ்சு அழிவுறாமை தமக்கு உளதாக வேண்டுதலான் மற்று இதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 25. இடுக்கண் அழியாமை.

(ப - உ.) இடுக்கண் அழியாமையாவது - யாதானும் ஒரு துன்பம் வந்துற்ற காலத்து அதற்கு அழியாமை. வினை - செய்யுங்கால் அதனை முடிவு செய்வதன் முன்னம் சில இடையூறு வரும்; வந்தால் அதனைப் பொறுத்துச் செய்கின்ற வினையை முற்ற முயல வேண்டும் என்று அதன்பின் கூறப்பட்டது.

கா. 1.
ப. 1.

இடுக்கண் வருங்கா லகுக வதனை
யடுத்தூர்வ தஃதொப்ப தில்.

(கா - உ.) எ - து.—உலகத்து அரசாரனோர் தமக்கு யாதானும் ஒரு வழியால் இடுக்கண் வந்த இடத்துக் கலங்காது மகிழ்ந்திருக்க: என்னை எனின், மற்று இவ்விடுக்கணினை அடர்த்து மேற்பட்டு நின்று

நக வல்லனுயின், இதனை ஒப்பது ஓர் இன்பம் பிறிது யாதும் இல்லை எ - று.

நகுக என்றது மகிழ்ந்திருக்க என்றது. என்றது அவ்விடுக்கணினை நெருக்கி மீது

அதனை அடுத்தூர்வது
போய் நிற்க வல்லது
என்றது.

(ப - உ.) எ - து.—தனக்குத் துன்பம் வந்த காலத்து இகழ்ந்து நகுக. அத்துன்பத்தை மேன்மேலும் அடர்க்க அந்நகுதல் போல்வது பிறிது இல்லை எ - று.

அதனை
வல்லது

இஃது இடுக்கணுக்கு அழியாமை வேண்டும் என்றது. (1) கா. 2.

ப. 6.

வெள்ளத் தனைய விடும்பை யறிவுடையா
ருள்ளத்தி னுள்ளக் கெடும்.

(கா - உ.) எ - து.—அளவு பட்டது அன்றிக் கடல் போன்ற இடுக்கண் ஆயினும், அறிவுடையாளர் ஆகிய அரசர் தம் அறிவினால் உள்ளத்து உணர்ந்து யாம் முன்செய்த வினைப்பயனே எய்திய இன்ப மும் இடரும் ஆகலான், இவை இனிப் பகுத்துக் கோடல் பிறர்க்கு அரிது என்று, இங்ஙனம் உண்மை உணரவே எய்திய இடுக்கண் தானே கெட்டு விடும் எ - று.

## 25. இடுக்கண் அழியாமை

105

(பு - உ.) எ - து.—வெள்ளம் போன்ற துன்பம் அறிவுடையவன் நெஞ்சினானே

வினைப்பயன் என்று நினைக்கக் கெடும் எ - று.

கண்

இது பலவாய் ஒருங்கு வரினும் அறிவுடையான் கெடும் என்றது.

உற்ற இடுக் கா. 8.

(2)

ப. 3.

இடும்பைக் கிடும்பை படுப்ப

ரிடும்பைக்

கிடும்பை படாஅ தவர்.

(கா - உ.)

இடும்பைக்குத்

எ - து.—யாதானும் ஒருவாற்றான் வந்து எய்திய தாம் பெரிதும் இடும்பையைச் செய்வார் : யார்

எ்னின் அங்ஙனம் எய்திய இடும்பைக்கு இங்ஙனம் சிறிதும் இடுக்கண் உறாத இகல் வேந்தர் எ - று.

தெளிந்து தாம்

(ப - உ.) எ - து.—துன்பத்துக்குத் துன்பத்தைச் செய்வர் : அத்துன்பத்துக்குத் துன்பம் உறாதவர் எ - று.

இது பொறுக்க வேண்டும் என்றது.

ஆகக் கூறப்பட்டன.

இவை மூன்றும் போது

(3) கா. 4.

ப. 9.

இன்பத்து ளின்பம் விழையாதான் றுன்பத்துட்

டுன்ப முறுத லிலன்.

(கா - உ.) எ - து.—இன்பம் வந்து எய்திய இடத்து அவ்வின்
-பத்தை ஒரு பொருளாகக் கொண்டு விரும்பாத வேந்தனானவன்,
வினைத்துன்பம் வந்து எய்திய இடத்தும் தான் சிறிதும் துயர் உறு
தல் இலன் : இவ்விரண்டும் இயல்பு என்னும்
திட்பம் உடையவன் எ - று.

(ப - உ.)
அதனால் வரும்

எ - து.—இன்பம் நுகரும் அதனை
துன்பம் நுகரும் இடத்து வருத்தம்

விரும்பாதவன்,
உறுதல் இலன்
எ - று.

இன்பம் நுகரும் இடத்து அதனை விரும்பாமையாவது அவ்
விடத்துத் தான் அழுந்து நில்லாமை. இது காமத்தால் வரும் துன்
பத்திற்கு அழியாதாரைக் கூறிற்று. (4)

கா. 5.
ப. 4.

முடுத்தவா யெல்லாம் பகடன்ன னுற்ற
விடுக்க ணிடர்ப்பா டுடைத்து.

(கா - உ.) எ - து.—தான் சென்று முகம்

மடுத்த இடத்து எங்கும் வருனது எத்தன்மைத்து, மற்று இத்தன்மைப்பட்ட அஞ்சா

14



(மன்ன)வன் தன்னை வந்து உற்ற இடுக்கணானது இடர்ப்பாடு உடைத்தாம் இத்துணையாம் எ - று.

தான் பெரிதும்

பகடன்னான் என்பதனைக் களிறு அன்னான் என்று உரைத்தலும் ஒன்று.

(ப - உ.) எ - து.—இடுக்கண் வந்து உற்ற இடத்து எல்லாம் பகடு போலத் தளர்வு இன்றிச் செலுத்த வல்லவனை உற்ற துன்பம் இடர்ப்படுதலை உடைத்து எ - று.

இது தளர்வில்லாதவன் உற்ற துன்பம் கெடும் என்றது. (5) கா. 6.

ப. 5.

அடுக்கி வரினு மழிவில்லா னுற்ற
விடுக்க ணிடுக்கட் படும்.

பல
(கா - உ.) எ - து.—நாளும் நாளும் ஒன்று இரண்டு அன்றிப் அடுக்கி வரினும் தனது அறிவுடைய நெஞ்சத்தான் அழிவு உறு

தல் சிறிதும் இலனாகிய அரசனானவன், தன்னை வந்துற்ற இடுக்கணு னது தான் பெரிதும் இடர்ப்படும்: அது அன்றி அவனை இடர்ப்படுத் தல் எஞ்ஞான்றும் இல்லை எ - று.

(ப - உ.) எ - து.—மேன்மேலே துன்பம்

வந்தன ஆயினும் மனன் அழிவு இல்லாதவன் உற்ற இடுக்கண் தான் இடுக்கப் படும் எ - று.

இது மனன் அழிவு இல்லாதான் உற்ற னும் கெடும் என்றது.

துன்பம் மேமேல் வரி கா. 7.
(6)

ப. 7.

இலக்க முடம்பிடும்பைக் கென்று
கையாறுக் கொள்ளா தா மேல்.

கலக்கத்தைக்

(கா - உ.) எ - து.—பற்று இவ்வுடம்பானது என்றும் இடும்
பைக்கு இலக்கம் என்று இங்ஙனம் தெளிந்து இது வந்த இடத்து
மனம் கலங்குவதோர் கலக்கத்தைத் தமது ஒழுக்க
தாகக் கொள்ளார், உணர்வினும் தறுகண்மையினும்
ஞேர் எ - று.

நெறிக்கு உரிய . (ப - உ.) எ - து.—உடம்பு
பெரிய அரசரா இத் தமக்கு உற்ற துன்பத்தைத்
மேல் ஆயினர் எ - று.

இடும்பைக்கு இலக்கு என்று கரு
துன்பம் ஆகக் கொள்ளார் கற்று

மேல் என்றமையால்
அழியாதாரைக் கூறிற்று:

தவம் செய்யுங்கால் வரும் துன்பத்திற்கு
அதுவும் ஒருவினை ஆதலான். (7)

25. இடுக்கண் அழியாமை 107.

கா. 8.

ப. 8.

அற்றேமென் றல்லற் படுபவோ
ரேம்புத றேற்ற தவர்.

பெற்றேமென்

(கா
கொண்டு

- உ.) எ - து.—யாம் கைப்பொருள் அற்றேம்
அல்லல் படுவார்களோ? படார் அன்றே: யார்

என்று
எனின்

பெரும்பொருள் பெற்றேம் என்று கொண்டு அதனைப் பேணித்
தலை அறியாது பலர்க்கு உபகாரம் செய்யும் அரசர் எ - று.

பிடித்

(ப - உ.) எ - து.—பொருள் அற்றேம் என்று இரங்கித் துன்
பம் உறார்கள்: அதனைப் பெற்றேம் என்று போற்றி வைத்தலை நன்று
என்று தெளியாதவர் எ - று.

தெளிவு - துணிவு. இது பொருட்கேட்டினுல்
திற்கு அழியாதாரைக் கூறிற்று.

வரும் துன்பத்
(8)

கா. 9.

ப. 2.

இன்பம் விழையா னிடும்பை
றுன்ப முறுத லிலன்.

யியல்பென்பான்

(கா - உ.) எ - து.—மற்று இவ்வாறும் அன்றி ஓர் இன்பம் வந்த இடத்து அதனை விரும்பானுமாய், இடும்பை வருதல் இயல்பு என்று கருதும் இறைவன் எஞ்ஞான்றும் ஒருவாற்றானும் துயரம் உறுதல் இலன் எ - று.

பரி. பா - ம். " இன்பம் விழையாது ".

(ப - உ.) எ - து.—இன்பது உறுதலை விரும்பாது இடும்பை உறுதலை இயல்பாகக் கொள்ளுமவன் துன்பம் உறுதல் இலன் எ - று. இடுக்கணை இயல்பாகக் கொள்ள வேண்டும் என்றது. (9)

கா. 10. ப. 10.

இன்னாமை யின்ப மெனக்கொளி னாகுந்தன்
னொன்னார் விழையுஞ் சிறப்பு.

(கா - உ.) எ - து.—தனக்கு ஓர் இன்பம் வந்த இடத்து அதனையும் செய்தியின் வந்த சிற்றின்பம் ஆகலான் இன்னாத் தன்மையது என இங்ஙனம் கருதிக் கொள்வான் ஆயின் மற்று அது தெவ்வரும் தன்னை விரும்பும் சிறப்பு உடைத்தாகும் எ - று.

அன்றியும் உலகத்து இனிமை செய்தோர் இனியர் ஆதலும் மற்றும் இன்னாமை செய்தோர் இன்னாதார் ஆகலும் இயல்பு அன்றே: அதனான் ஒருவர் தம் கருத்தால் இன்னாமை செய்யினும் அதனை இவர் எமக்கு இதின் (அடுக்கும்) எனக்கருதிக் கொள்வாராயின் தாம்

(கா - உ.) இப்படி இயல்நெறி வேந்தர்க்கு இறைமாட்சி முதலாக இடுக்கண் அழியாமை ஈறாக இராச தன்மம் ஆகிய நீதிப்பொருளின் இயல்பு உணர்த்தி, இனி மற்று இதன் பின்னரே அமைச்சியல் பொருள் உணர்த்துகின்றது மேலை அதிகாரம்.

## 26. அமைச்சு.

(ப - உ.) அமைச்சாவது அமைச்சர் செய்யும் திறன் கூறுதல். அஃது யாங்ஙனம் கூறினர் எனின், அது கூறிய அதிகாரம் பத்திலும் முற்பட அமைச்சர்க்கு இன்றியமையாக் குணங்கள் எல்லாம் ஓர் அதிகாரத்தாலும், வாத மண்டலத்திலிருந்து செய்ய வேண்டுவன நாலதிகாரத்தாலும், புறமண்டலத்தில் போம் தூதர் இலக்கணம் ஓர் அதிகாரத்தாலும் அவர் செய்யும் திறன் நான்கு அதிகாரத்தாலும் கூறினர் என்று கொள்ளப்படும். மேல் அரசர் செய்யும் திறன் கூறினர், இனி ஒரு வினையைச் செய்து முடிக்குங்கால் அமைச்சர் வேண்டுதலின் அதன்பின் கூறப்பட்டது. அமைச்சாவது - அமைச்சன் இலக்கணம் கூறுதல்.

கா. 1. ப. 1.

வன்கண் குடிகாத்தல்
டைந்துடன் மாண்ட

கற்றறித லாள்வினையோ
தமைச்சு.

(கா - உ.) எ - து.—வன்கணதாகிய தறுகண்மையும் தன்னர் சன் கோல்கீழ் வாழும் குடிகளது வன்மை மென்மை வழக்கு அறி தலும் காத்தல் ஆகிய நாடு காவலும் காடு காவலும் நாடிச் செலுத் தலும் கற்றறிதல் ஆகிய பொருள்நூல் கற்று உணர்ந்து அறிதலும் ஆள்வினை என்னும் அரசியல் முயற்சியும் அமைச்சு இயல் முயற்சியும் இவை ஐந்தும் ஒருதலைப்பட ஆராய்ந்தவன் அமைச்சன் ஆவன் எ - று.



(ப - உ.) எ - து.—அஞ்சாமையும் குடிப்பிறத்தலும், இந்திரியங் களைக் காத்தலும், நூல் முகத்தான் அறிதலும், முயற்சியும் என்ற ஐந்தும் கூட மாட்சிமைப் பட்டவன் அமைச்சன் ஆவன் எ - று.

இவை அமைச்சன் ஆவதன் முன்னே வேண்டும் கூறப்பட்டன.

ஆதலின் முன்
(1)

கா. 2.
ப. 2.

மதிநுட்ப நூலோ டுடையார்க்
கதிநுட்பம்
யாவுள் முன்னிற் பவை.

(கா - உ.) எ - து.—தம் பிறவிக்கண்ணே இயற்கையாக் வித்து வழி வாய்ந்த மதியின் கூர்மையைப் பின்னும் தெளியக் கற்று உணர்ந்த செயற்கைத் தன்மை நூலோடு கூட உடையவர் ஆகிய நுண்ணறிவாளர்க்கு மற்று அவை இரண்டு உடன் சிறந்த கூர்மையிற் கூரியன யாவை உளவோ? யாவும் இல்லை அன்றே முன்னிய நெஞ்சிற்கு வேறு முன் நிற்பவை எ - று.

(ப - உ.) எ - து.—மேற்கூறிய நூற் கல்வியோடு கூட நுண்ணிது ஆகிய மதியினையும் உடையார்க்கு அதனினும் நுண்ணிய மாற்றரால் எண்ணப்பட்டு எதிர் நிற்கும் வினை யாவை உள? எ - று.

மேற்கூறியவற்றோடு மதியும் வேண்டும் என்றது. (2)

## கா. 3.
## ப. 5.

## கருவியுங் காலமுஞ் செய்கையுஞ் செய்யு
## மருவினையு மாண்ட தமைச்சு.

(கா - உ.) எ - து.—யாது ஒரு காரியங்கள் இயற்றுதற்கு மற்று அதற்கு அடுத்த கருவிகளும், மற்று அவ்வவை செய்தற்கு அடுத்த காலங்களும் தாம் பொருள்களைச் செய்யும் செய்கை வேற்றுமையும் மற்று அத்தொழில் வேற்றுமையால் செய்யும் அரிய கருமங்களும் திருவகைப்பட மாட்சிமைபடத் தெளிந்து அமைத்ததே அமைச்சு ஆவது எ - று.

(ப-உ.) எ-து.—செய்ய வேண்டும் அரிய வினையும் அதற்கு ஆம் கருவியும் அதற்கு ஆம் காலமும் அதனை இடையூறு படாமல் செய்து முடித்தலும் இந்நான்கும் மாட்சிமைப் பட்டவன் அமைச்சன் ஆவான் எ-று.

செய்தற்கு அரிய வினையாவது - மறுமண்டலம் கோடல்: கருவியாவது - யானை, குதிரை முதலிய படை: காலம் ஆவது நிழலும் நீரும் உள்ள காலம். செய்தலாவது மடியின்றிச் செய்தல். (3)



கா. 4.

ப. 7.

செயற்கை யறிந்தக் கடைத்து முலகத்
தியற்கை யறிந்து செயல்.

(கா-உ.) எ-து.—இவ்வாறு நூல்வழிச் செய்கைப் பொருள் அனைத்தும் தெளிய அறிந்ததன் பின், உலகத்தோடு ஒத்த நடை ஆகிய இயற்கைப் பொருளினையும் எய்த அறிந்து யாதானும் ஒரு கருமம் செய்க எ-று.

(ப-உ.) எ-து.—செய்யத் தகுவன அறிந்த இடத்தும் அது செய்யுங்கால், உலகத்து நடை அறிந்து செய்க எ-று.

உலக நடையாவது அரசன் சீலமும்
யும் அறிதல். இவையிற்றை அறியாது
வாறு ஆயிற்று.

பரிவாரத்துள்ளார் நிலைமை
செய்யின் குற்றம் என்ற . கா. 5.
(4)

ப. 6.

பிரித்தலும் பேணிக் கொளலும்
பிரிந்தார்ப்
பொருத்தலும் வல்ல தமைச்சு.

(கா - உ.) எ - து.—தம் அரசர்க்குப் பகை வேந்தரானோர் இருவருள் ஒருவரைப் பிரிக்கவல்..................மற்று அவர் தம்மைப் பிரித்தலும் தம்மாட்டு விரும்பி அணைத்துப் பாதுகாத்தலும், தம்

அரசர் மாட்டு நின்றும் பிரிந்தார் உளர் ஆயின், அவர் தம்மையும் யாதானும் ஒரு-வழியால் பொருந்தச் செய்தலும் பின்னும் இவை ..................வல்லது யாது அதுவே அமைச்சு ஆவது எ - று.

(ப-உ.) எ - து.—மாற்று அரசரிடத்து உள்ளாரையும் அவர்க்கு நட்பு ஆகிய அரசரையும் அவரிடத்தினின்றும் பிரித்தலும், அவ்வாறு பிரிக்கப்பட்டாரை விரும்பித் தம்மிடத்துக் கோடலும், தம்மிடத்தினின்றும் பிரிந்தாரைக் கூட்டிக்கொள்ளலும் வல்லவன் அமைச்சன் ஆவான் எ - று. (5)

கா. 6. ப. 8.

அறிகொன் றறியா னெனினு முறுதி
யுழையிருந்தான் கூறல் கடன்.

(கா - உ.) எ - து.—அரசானவர் ஒன்றோ காரியானைத் தாமே அறியினும்,..................கற்குரியன் ஆகிய

காரியக்
அமைச்

சன் பெயர்த்தும் ஐயம் அற ஆராய்வது முறைமை: இனி ஒன்று அரசன் இவை அறியானாயின்...................தானே.........உறுதிப் பாட.........ஆராய் எ - று.

## 26. அமைச்சு

111

அரிது ஒன்றறியான் என்பது ஒன்றோ
அறியினும் அறியான் ஆயினும் ன்றது.

உழையிருந்தான் என்பது அரசர் அருகு இருந்தான
என றது.

பரி. பா - ம். "அறிகொன் றறியா னெனினும்".

(ப - உ.) எ - து.—அரசன் அமைச்சன் கூறிய பொருளை அறிக; அவன் ஒன்று அறியான் ஆயினும் அவனுக்கு உறுதியாயினவற்றை அருகு இருந்த அமைச்சன் சொல்லுதல் கடன் எ - று.

அரசன் கேளான் என்று சொல்லாது ஒழிதல் துணையும் அமைச்சர் இலக்கணம் கூறப்பட்டது.

ஆகாது. இத்
(6) கா. 7.

ப. 3.

அறனறிந் தான்றமைந்த சொல்லானெஞ்
திறனறிந்தான் றேர்ச்சித் துணை.

ஞ்ரான்றுந்

(கா - உ). எ - து.—இராச தன்மத்து இயல்பு அறிந்த அறிவினை உடையனுமாய், அதற்கு ஏற்ற சமைவு என்கிற நிறைவினை உடையனுமாய், மற்று அரசன் விருப்புற்றுக் கேட்குமாறு அரிய சொல்லாளனுமாய், நாட்டகத்தும் புறவிடத்தும் வாழ்வோர் வினைத் திறம் அனைத்தும் செறிபட அறிந்து அறிவு நிறைவு ஓர்ப்புக் கடைப்பிடி என்னும் நாற்பெருங் குணனும் நன்குற அமைந்த அமைச்சனே அரசனது கருமத்திற்கு அமைந்த துணை ஆவான் எ - று.

(ப - உ.) எ - து.—அறத்தினையும் அறிந்து சிரம்பி அமைந்த சொல்லையும் உடையனாய் எல்லாக் காலத்தினும் செய்யும் திறன்களையும் அறிய வல்லவன் அமைச்சன் ஆவான் எ - று.

தேர்ச்சித் துணை
டார். எஞ்ஞான்றும்
னும்.
ஆதலின் தேர்ச்சித் துணை என்று பெயர் இட்
என்றது நிகழ் காலத்தினும் எதிர் காலத்தி கா. 8.
(7)

ப.

10.

பழுதெண்ணு மந்திரியிற் பக்கத்துத்
தெவ்வ

ரெழுபது கோடி தலை.

(கா - உ.) எ - து.—இவ்விலக்கணத்தான் அன்றி அரசர்க்கு உரியவனும் பொருள் கருமத்தைப் பழுதுபட எண்ணும் மந்திரியினும் அரசன் பக்கத்தின்கண் பகைவர் பலர் புடை சூழ்ந்திருத்தல் யாது மற்று அதுவே மிகவும் தலையானது; மற்று அது எங்ஙனமோ எனின், பலரே ஆயினும் பகைவர் என்று அறிதலால் பரிகரிக்கவும் கூடுமன்: மற்று உழை இருந்துழி உரைத்தற்கு உரியான் ஒருவன் உணர்வு முதலிய குணம் இலனாயின், மற்று அவன் உரைக்கும் உரை



யினை நம்பி ஒழுகும் அரசனும் கெடும்: அவ்வரசன் கெட்டு விடும் எ - று.

ஆளும் நாடும்

பரி. பா - ம். "கோடி யுறும்".

பது

(ப - உ.) எ - து.—குற்றப்பட எண்ணும் அமைச்சனில் எழு கோடி மடங்கு நல்லர், உட்பகையாய்த் தன் அருகில் இருப்பர் எ - று.

இவனைப் போல் அவர்கள் செறுக்க மாட்டார் என்றவாறு. இவை இரண்டும் மந்திரிகள்

ஆகாதார் இலக்கணம் கூறின. (8)

கா. 9. ப. 9.

முறைப்படச் சூழ்ந்து முடிவிலவே செய்வர்
திறப்பா டிலாஅ தவர்.

(கா - உ.) எ - து.—நெறிபடவே எண்ணியும், தாம் எண்ணிய வுண்ணமே முடியச் செய்ய மாட்டார் : மற்று யார் எனின், அரசியல் திறப்பாடு அமைவுற அறியும் அறிவிலாத அமைச்சர் எ - று.

(ப - உ.) எ - து.—அடைவு பட எண்ணியும் தம்மால் முடிதல் இல்லாதவற்றைச் செய்யா நிற்பர், வினை செய்யும் திறன் இல்லாதார் எ - று.

இஃது எண்ண வல்லாராய் வினைசெய்ய மாட்டாதாரும் உளர் என்று கூறிற்று.

(9)

கா. 10.
ப. 4.

தெரிதலும் தேர்ந்து செயலு மொருதலையாச்
சொல்லலும் வல்ல தமைச்சு.

(கா - உ.) எ - து.—அரசனது ...லும், அங்ஙனம் தெரிந்த பின்னும்

காரியமும் வேறுபட்டுத் தெரித
காரியத்திற் சிறந்ததனை ஓர்ந்து

பார்த்துச் செய்தலும் மேற்செய்யும் கருமங்களை ஐயுறாது ஒரு பட்ட அரசர்க்குச் சொல்லுதலும் வல்லது அமைச்சு எ - று.

வழிப்

(ப - உ.) எ - து.—ஒரு வினையை நன்றோ தீதோ என்று ஆராய் தலும் அதனைச் செய்ய நினைத்தால் முடியுமாறு எண்ணிச் செய்த லும், ஐயம் ஆகிய வினையைத் துணிந்து சொல்லுதலும் வல்லவன் அமைச்சன் ஆவான் எ - று. (10)

(கா - உ.) இனி, இவ்வாசர்க்குக் கூறிய அமைச்சாரனுக்கு சொல்வன்மையைத் தோற்றுவிக்கிறது மேலே அதிகாரம்.

## 27. சொல்வன்மை.

(ப - உ.) சொல் வன்மையாவது வார்த்தை சொல்ல வல்லவன் ஆதல். அரசர்க்குக் கல்வி இன்றியமையாதது போல அமைச்சர்க்கு இஃது இன்றியமையாமையின் அதன்பின் கூறப்பட்டது.

கா. 1.

ப. 3.

கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க்
வேட்ப மொழிவதாஞ் சொல்.

கேளாரும்

(கா - உ.) எ - து —பலவகைப்பட்ட நூல்களையும் பாடம் ஓதி அவற்றின் பொருள் பயன் தெளியக் குரவரை வழிப்பட்டுக் கேட்ட குற்றம் அற்ற சான்றோரையும் தம் மாட்டுப் பிணித்துக் கொள்ளும் தகுதியை உடையனுமாய்ப் பின்னும் அங்ஙனம் பொருந்தக் கேளாது புவியிடைத் திரியும் புல்லறிவாளரும் யாமும் இவ்வாறு கேட்டு ஒன்று அறிய வேண்டும் என்னும் விருப்பம் உளது அமைச்சாது சொல்வன்மை எ - று.

ஆகச் சொல்லுமது

(ப - உ.) எ - து.—வினவினாைப் பிணித்துக்கொள்ளும் தகைமையவாய் வினவாதாரும் விரும்புமாறு சொல்லுதல் சொல்லாவது எ - று.

கேட்டார் என்பதனைக் கேள்வியுடையார் எனினும் அமையும்; சொல்லக் கேட்டார் எனினும் அமையும். கேளாமையும் அவ்வாறே கொள்ளப்படும். இது நயம்படக் கூறவேண்டும் என்றது. (1)

கா. 2.

ப. 4.

வேட்பத்தான் சொல்லிப் பிறர்சொற்
மாட்சியின் மாசற்ருர் கோள்.
பயன்கோடன்

(கா - உ.) எ - து.—இவ்வாறு தாம் விரும்பச் சொல்லுவதும் செய்து மற்று அதுவேயும் அன்றிப் பிறர் சொல்லினது பொருட் பயனும் தேர்ந்து உள்ளத்துக் கோடல் யாது: மற்று அதுவே அறிவு உடைய அமைச்சாது கோட்பாடு எ - று.

(ப - உ.) எ - து.—தாம் சொல்லுங்கால் பிறர் விரும்புமாறு சொல்லிப் பிறர் சொல்லுங்கால் அதற்கு பயனைத் தெரிந்து கொள்ளு தல் மாட்சியிற் குற்றம் அற்ருர் கோட்பாடு எ - று.

இது நயம்படக் கூறுதலே அன்றிப் பிறர் சொல்லும் சொல் அறிந்து சொல்லவும் வேண்டும் என்றது. (2)

15



கா. 3.
ப. 2.

விரைந்து தொழில்கேட்கு ஞால நிரந்தினிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின்.

(கா - உ.) எ - து.—அரசர்க்கு ஆயினும் பிறர்க்கு ஆயினும் அவர் அவர்க்குப் பொருந்த உணர்ந்து செவிக்கு இனிது ஆகச்சொல் லுதல் வல்லர் ஆகிய அமைச்சரை அரசர் பெறுவாராயின், அரசர் ஏவாமல் தானே விரைந்து தொழில் கேட்டு ஒழுகுவர் இவ்வையகத்து வாழ்வ ரார் எ - று.

(ப - உ.) எ - து.—சொற்களைச் சேர்த்து இனிது ஆகச் சொல்ல வல்லாரைப் பெற்றாராகில், உலகத்தார் தாமே விரைந்து செய்யும் தொழில் யாது என்று கேட்பர் எ - று.

இஃது இனிது ஆகச் சொல்ல வேண்டும் என்றது. (3)

கா. 4. ப. 9.

திறனறிந்து சொல்லுக சொல்லை யறனும்
பொருளு மதனி னூஉங் கில்.

(கா - உ.) எ - து.—அரசர்க்கு அமைச்சரானோர் ஒன்று சொல் லுங்காலத்து அமைவு உடையாராய்ச் சொல்லும் திறப்பாட்டினை அறிந்து கீழ்ச்சொல்லிப் போந்த இல்லறம் முதலிய அறமும் மற்று இக்குச் சொல்லுகின்ற பொருள் நெறியும் மற்று உம்மையான் மேல் சொல்லுவதாகிய இன்ப நெறியும் எல்லாம் அவரவர் மரபின் திறப் பாடு அறிந்து சொல்லுக. இத்துணை அல்லது இதனின் மேக்குப் ப்பயன் யாதும் இல்லை எ - று.

(ப - உ.) எ
லுக : அதனின்

- து.—சொல்லைச் சொல்லும் திறன் அறிந்து சொல்
மேற்பட்ட அறனும் பொருளும் இல்லை எ - று.

திறன் அறியவே புறம் கூறுமையும் பயன் இல சொல்லாமையும் பொய் கூறுமையும் உள ஆம்: ஆகலின் அறன் ஆயிற்று: அரசர் மாட்டும் ஏனையோர் மாட்டும் தகுதி அறிந்து சொல்லுதலால் பொருளும் ஆயிற்று: என்னை? அதனானே ஆக்கமும் கேடும் ஆதலான். இஃது அறனும் பொருளும் பயக்கும் என்றது. (4)

கா. 5. ப. 1.

சொல்லுக சொல்லிற் பிறிதோர்சொ

லச்சொல்லை

வெல்லுஞ்சொல் லின்மை யறிந்து.

(கா - உ.) எ - து.—அமைச்சர் ஒன்று சொல்லும் இடத்து மற்று அச்சொல்லினைப் பிறர் ஒருவர் சொல் வெல்லுதல் இன்மையைக் குறிக்கொண்டு சொல்லுக: அல்லாக்காற் சொல்லற்க எ - று.

பரி. பா - ம். " சொல்லுக சொல்லைப் ".

## 27. சொல்வன்மை

115

(ப - உ) எ - து —சொல்லைச் சொல்லுக: தான் சொல்ல நினைத்த சொல்லைப் பிறிது ஒரு யாதலை அறிந்த பின்பு எ - று.

சொல்லாய் வெல்லும் சொல் இல்லை

சொல் வன்மையாயின பலவற்றுள்ளும் தேர்லாவகை தல் சிறப்புடைத் தாகலின் இது முன் கூறப்பட்டது.

சொல்லு
(5)
கா. 6.

ப. 6.

பலசொல்லக் காமுறுவர் மன்றமா சற்ற
சிலசொல்ல றேற்ரு தவர்.

(கா - உ.) எ - து.—இவ்வாறு சொல்லுத...........வெவ்வாறு சொன்னால் பொருள் ஆம் என்னும் கருத்தினால் பலவற்றையும் சொல்ல ஆசைப்படுவார் யார் எனின்...............மற்ற செலச் சொல்லி அமைதலைத் தெள்...............எ - று.

பொருளைச்

பர்:

(ப - உ.) எ - து.—பல சொற்களைச் சொல்லக் காதலியா நிற் குற்றம் அற்ற சில சொற்களைத் தெளியச் சொல்லுதலை அறிய மாட்டாதார எ - று.

மன்ற - தெளிய. இது சுருங்கச்

சொல்லவேண்டும் என்றது.(6) கா. 7.

ப. 10.

நாநல னென்னு நலனுடைமை யந்நலம்
யாநலத் துள்ளதூஉ மன்று.

(கா - உ.) எ - து.—அரசர்க்கு அமைச்சராய் அமைந்தோர்க்குத் தமது நாவில் பிறக்கும் சொல்நலம் ஆகின்ற இந்நலம் உடைமை யாவது: மற்று அது வேறு யாவை சில நன்மையின் கண்ணும் உள் ளது ஒன்று அன்று: எனவே இதற்கு மற்றும் ஒரு யாக எடுத்து உரைத்தல் அரிது என்பது பொருள் எ

நன்மை உவமை
- து. நலம்

(ப - உ.) எ - து.—நாவினது நலம் என்று சொல்லப்படுகின்ற ஒருவற்கு உடைமையாவது: அந்நலம் எல்லா நலத்துள்ளும் உள்ளது ஒரு நலன் அன்று: மிக்கது என்றவாறு. இஃது எல்லா அழகினும் மிகுத்த அழகு என்றமையான் இன்பமும் பயக்கும் என் றது. 'சொல்வலே வேட்டுவன்' என்றாரும் உளர். (1)

கா. 8. ப. 8.

சொலல்வல்லன் சோர்வில னஞ்சா னவனை
யிகல்வெல்லல் யார்க்கு மரிது.

(கா. -
நங்காமல்

உ.) எ - து.—இங்ஙனம் ஏற்றத்தாழ்வு என்னும் குற்றம் சொல்லுதல் வல்லுனமாய் மற்று இங்ஙனம் சொல்லிச்



சொல்லும் இடத்து மறக்கும் ஒரு சொற் சோர்வுபாடு இலனுமாய் அரசனைக் கழற வேண்டும் இடத்துக் கழற்றுரை கூறக் கண்ணஞ்

சானுமாய் இருப்போன் யாவன் மற்று அவ்வமைச்சனை வர்க்கு மாறுபடக் கூறி வெல்லுதல் அரிது எ - று.

மற்று ஒரு

(ப - உ.) எ - து.—ஒருவன் சொல்ல வல்லனுமாய் அதனைச் சோர்விடுதலும் இல்லானுய் அஞ்சாது சொல்லுதலும் உடையவன் ஆயின் அவனை மாறுபாட்டின்கண் வெல்லுதல் யாவர்க்கும் அரிது எ - று.

இம்மூன்று பகுதியிலும் என்பதனால் அவனைச் வார் இல்லை எ - று.

சொல்லில் வெல்

(8)

கா. 9. ப. 7.

இணருழ்த்து நாறு மரத்தனையர் கற்ற
துணர விரித்துரையா தார்.

(கா - உ.) எ - து.—நறுமலர்ப் பூங்கொத்து உடைய ஆகிய சண்பகம் புன்னை முதலிய போலத் தானும் பெரிதும் இணர்கொண்டு மலரப் பெற்று வைத்தும் அவை போல மணம் நாறப் பெறுத பிற

மரத்தை ஒப்பர்: யார் எனின், தாம் கற்ற சொல் மலரினைக் கேட்ட அரசர் முதலானவர்க்கு மற்று அதன் பொருள் நயம் மணம் தோன்ற விரித்துச் சொல்ல மாட்டாத அமைச்சர் எ - று.

சொல்மலர் எவ்விடத்துப் பெறுதும் எனின் குரவர் முதலான அரசர் சொல் திருவாய்மலர்த்தார் என்னும் வழக்கத்துள் கண்டு கொள்க. இணர் என்பது பூங்கொத்து. ஊழ்த்தல் என்பது மலர் தல் என்பது.

பரி. பா - ம். "நாறு மலரனையர்".

(ப - உ.) எ - து.—இணர் பூவை ஒப்பர், கற்றதனைப் பிறர்

ஆக மலர்ந்தும் நாற்றப். இல்லாத அறிய விரித்து உரைத்துச் சொல்ல மாட்டாதார் எ - று.

இது சுருங்கச் சொல்லுதலே யன்றி வேண்டும் இடத்து விரித்தும் சொல்ல வேண்டும் என்றது.

(9) கா. 10.

ப. 5.

ஆக்கமுங் கேடு மதனால் வருதலாற்
காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு.

(கா • உ.)
விழுத்தல் ஆகிய

எ - து.—அரசர் வாழ்க்கையாகிய ஆக்கமும் அஃது
கேடும் அமைச்சாது சொல்லினுனே வந்து விளையும்



ஆகலான்
சொல்லத்

மற்றைச் சொல்லின்கண் ஒரு சோர்வு படாமல்
தகுவதனைக் குறிக்கொண்டு சொல்லுக எ - று.

காத்துச்

(ப • உ.) எ - து.—ஆக்கமும் கேடும் சொல்லினால்
அச்சொல்லின்கண் சோர்வைப் போற்றிக் காக்க எ - று.

வருதலால்

இது சோர்வு படாமல் சொல்ல வேண்டும் என்றது. (10)

(கா - உ.) இனி உலகத்தில் யாவரேனும் யாதானும் ஒன்றினை இனிது இயற்றும் இடத்துத் தாம் கருதிய கருத்துரையினும் செயலினும் தூயதாக வேண்டுதலான் இதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 28. வினைத்தூய்மை.

(ப - உ.) வினைத்தூய்மையாவது செய்யும் வினை குற்றம் பயவாமல் செய்தல். மேற்சொல்லுங்கால் சொல்வதையும் பிறர் விரும்புமாறு சொல்ல வேண்டும் என்றார்: அது செய்யும் வினையும் அவ்வாறு செய்ய வேண்டுதலின் அதன்பின் கூறப்பட்டது.

கா. 1. ப. 2.

என்று மொருவுதல் வேண்டும்
நன்றி பயவா வினை.

புகழொடு

(கா - உ.) எ -
வேண்டும்: யாதினை

து.—எஞ்ஞான்றும் குறிக்கொண்டு தவிர்தல் எனின் புகழுடன் தனக்கு நன்மையைப் பயவாத கருமத்தை எ - று.

(ப - உ.) எ - து.—எல்லாக் காலமும் தவிர்தல் லோடே கூட அறத்தைப் பயவாத வினையை எ - று.

வேண்டும் : புக

என்றும் என்றது செயல் அற்ற காலமும் என்றது. இது முத லாகக் கடிய வேண்டுவன கூறுகின்றார் ஆதலின் முற்பட அறமும் புகழும் பயவாத வினையைத் தவிர்க என்றது. (1)

கா. 2.

ப. 3.

ஓஒதல் வேண்டு மொளிமாள்குஞ் செய்வினை

யாஅது மென்னு மவர்.

(கா - உ.) எ - து.—தூய்மை அல்லாத வினை செய்தார்க்குக் கெடுதி உறுதி ஆகலான் அதனை ஒழிய வேண்டும் : யார் எனின் இரு மைக் கண்ணும் ஆக்கம் பெறக் கடவோம் யாம் என்னும் அறிவினை உடையோர். ஒளிமாள்குஞ் செய்வினை என்றது முன்பு தமக்கு நின்ற ஒளி கெடுமாறு செய்யும் வினை என்றது.



(ப - உ.) எ - து.—தமக்குப் புகழ் கெட செய்தலை ஆக்கம் கருதுவார் தவிர்க எ - று.

வரும் வினையைச்

ஓஒதல் வேண்டும் என்றது ஒவுக என்னும் பொருட்கண். ஒவுதல் வேண்டும் என ஒருசொல் நீர்மைப்பட வந்தது. இது முன்பு மன்ன புகழ் கெட வரும் வினையையும் தவிர்க என்றது. (2)

## கா. 3.

## ப. 4.

எற்றென் றிரங்குவ செய்யற்க
செய்வானேல்
மற்றன்ன செய்யாமை நன்று.

(கா - உ.) எ - து.—இவை தகாது என்று அஞ்சாது நெஞ்சில் துணிவு கொண்டு பிறர் சோகிக்கத் தருவன ஆகிய தூயது அல்லாத கருமங்களைச் செய்யாது ஒழிக: இங்ஙனம் இதனைக் குறிக்கொண்டு செய்வான் ஆயினும், செய்யும் கருமம் செய்யும் இடத்தும் பிறர்க்கு இரக்கம் வருதல் செய்யாமையே நன்று எ - று.

குறிப்பு:—எட்டின்கண் "செய்யானேல்" என மூலத்திலும் "செய் யான் ஆயினும்" என உரையிலும் பாடம் காணப்பட்டது. அது பொருந் துவதன்று.]

(ப - உ.) எ - து.—துணியப்பட்டது என்று வினையைச் செய்யாது ஒழிக. வினை செய்வான்

பின் இரக்கப்படும்
ஆகில் அதுபோல்

வனவும் செய்யாமையே நல்லது எ - று.

இது பின் இரங்கப்படும் வினை செய்யல் ஆகாது என்றது. (3) கா. 4.

ப. 5.

ஈன்றாள் பசிகாண்பா ளாயினுஞ் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை.

(கா - உ.) எ - து.—ஈன்ற தாய் முதல் தெய்வம் என்று மறை மொழிதலானும் தன்னை ஈன்றாளை முன்னம் வணங்கி வழிபடுதல் யாவர்க்கும் கடன் ஆகலானும், மற்று இவள் பசி கண்டு இரங்கா நெஞ்சினன் ஆதல் மிகவும் தீவினை : மற்று அது யாம் கண்டு பொறுத் திருப்பதும் அன்று : அதனால் முழுதும் உணர்ந்த ரும் பழிதரு வினைகளைச் செய்தலே மிகவும் தீது எ

சான்றோர் பழிக்

- று.

(ப - உ.) எ - து.—தன்னைப் பயந்தாள் பசி கண்டாள் ஆயினும், சான்றோரால் பழிக்கப்படும் வினையைச் செய்யாது ஒழிக எ - று.

இது நல்லோர் பழிக்கும் வினையைத் தவிர்க என்றது. (4) கா. ௫.

ப. 10.

பழிமலைந் தெய்திய வாக்கத்திற் சான்றோர்
கழிநல் குரவே தலை.

## 28. வினைத்தூய்மை

119

(கா - உ.) எ - து.—இங்ஙனம் சான்றோர் பழித்த வினைகளைத் தானும் தகர்து என்று உடன்பட்டு மற்று அவற்றினைச் செய்யத் தவிராது மற்று அவர் உரைத்த நீதிக்கு எதிர் மலைந்து இயற்றி மற்று அதனால் தான் எய்துவதாகிய செல்வத்தினும், தனக்கு மிக்க வறுமை தானே பெரிதும் தலைப்பாடு உடைத்து எ - று

மலைதல் என்பது மாறுபடுதல்.

(ப - உ.) எ - து.—பழிப்பினாலே மிகுதியாக எய்துகிற ஆக்கத்தின், சான்றோர்க்குப் பெருமிடியே தலை எ - று. (5)

கா. 6. ப. 6.

**இடுக்கட் படினு மிளிவந்த செய்யார்**
**நடுக்கற்ற காட்சி யவர்.**

(கா - உ.) எ - து.—இதன் தன்மை இது ஆகலான் தாம் பெரிதும் அங்ஙனம் ஆகிய இடர் உறினும் அதனை உற்று அமைவது அன்றி மற்று அது ஒழித்தல் காரணமாகப் பெரிதும் இளிவந்தன ஆகிய வினையைச் செய்யத் துணியார்; யார் எனின் ஆக்கமும் கேடும் அனுபவித்தல் கடன் என்று கலக்கம் அற்று அமைந்த அறிவினை உடையவர் எ - று.

பரி. பா - ம். “இடுக்கண் வரினும்”.

(ப - உ.) எ - து.—துன்பம் வரினும் இழிவு ஆகிய வினைகளைச் செய்யார்கள், துளக்கம் அற்ற தெளிவு உடையார் எ - று.

அவர் வருமது வரும் என்று நினைப்பர்.
படுவன செய்யற்க என்றவாறு ஆயிற்று.
வேண்டுவன கூறப்பட்டது.

இது பிறரால் இகழப்
இத்துணையும் கடிய

(6)

கா. 7. ப. 1.

துணைநல மாக்கந் தரூஉம் வினைநலம்
வேண்டிய தெல்லா மொருங்கு.

(கா - உ.) எ - து.—ஒருவர்க்குத் துணைவலியாய் உள்ள நன்மையானது அத்துணை நலத்து ஆக்கமே தரும்: அதனை வினைத்தூய்மை ஆகிய இது தாம் விரும்பிய பயன் எல்லாம் ஒரு தன்மைப்படத் தரும் எ - று.

(ப - உ.) எ - து.—துணை நன்மை ஆக்கத்தைக் கொடுக்கும்: அவ்வளவே அன்றி வினை நன்மை வேண்டியது எல்லாம் ஒருங்கு கொடுக்கும் எ - று.

துணை நன்மை ஆக்கம்
வின் ஈண்டு ஏதுவாக வந்தது

கொடுத்தல் எல்லாரானும் அறியப்படுத
இது வினைத்தூய்மை வேண்டும் என்ப

ஊடம் அதனுல் பயனும் கூறிற்று.



கா. 8.
ப. 9.

சலத்தாற் பொருள்செய்தே மாத்தல்
கலத்துணீர் பெய்திரீஇ யற்று.

பசுமட்

(கா - உ.) எ - து.—இது நமக்கு உறுதி அல்ல என்று கருதாது பிறரோடு சலம் பற்றிக் கொண்டு மற்று அதனுல் பொருளினைச் செய்து யாம் உடையாம் என்று இறுமாந்திருத்தல் எத்தன்மைத்தோ எனின், மண்ணுன் வனைந்துள ஆகிய பசுங்கலத்தின் அகத்து நீரினைப் பெய்து இருத்திய அத்தன்மைத்து எ - று.

(ப - உ.) எ - து.—வஞ்சத்தாலே பொருள் தேடி மகிழ்ந்திருத்தல் பசுமண் கலத்திலே நீரை முகந்து வைத்த தன்மைத்து எ - று. இது நாளும் பொருளும் கூடிக் கெடும் என்றது. (8)

கா. 9. ப. 8.

அழக்கொண்ட வெல்லா மழப்போ மிழ்ப்பினும்
பிற்பயக்கு நற்பா லவை.

(கா - உ.) எ - து.—தாம் பிறரைச் செறுத்தும் அவர் நெஞ்சு புழுங்கி அழுமாறு வலியினால் வவ்விக் கொண்ட பொருள் அனைத்தும், தாமும் அவ்வாறு அழும்படி போய்விடும்: இனி இவ்வாறு அன்றி முன்னம் தமக்கு உளது ஆகிய பொருளினை ஒருவாற்றான் இழந்தார் ஆயினும் பின்னும் உளதாய்ச் செல்லும் நற்கூறு ஆகிய வினையினான் இயற்றும் பொருளானவை எ - று.

(ப - உ.)
அழப்போம்:

எ - து.—பிறர் கொண்ட பொருள்கள் எல்லாம் தாமும் அவ்வாறு அன்றி நற்பகுதியால் கொண்ட பொருளை இழக்தாராயினும் பின்பு பயன்படும் எ - று.

இது தேடின பொருள் கெடும் என்றது. (9)

கா. 10. ப. 7.

கடிந்த கடிந்தொரார் செய்தார்க்
முடிந்தாலும் பீழை தரும்.

கவைதா

(கா - உ.) எ - து.—இவை இவை செய்யத்தகாது என்று சான்றோர் கடிந்தன ஆகிய வினைத்தன்மைகளைத் தாமும் கடிந்து நீங்காது

செய்வார் யாவர்? மற்று அவர்க்கு அவை தாம் கருதி யாங்கு முடிந்தாலும் பெரிதும் இடரைத் தருவதன்றிப் பெருமை பெறுதல் அரிது எ - று.

கடிந்த என்பது செய்யத் தகாதன என்றது. ஓரார் என்பது நீங்கார் என்றது.

பரி, பா - ம். "கடிந்தொரார் செய்வார்க்கு".



(ப - உ.) எ - து.—நல்லோரால் கடியப்பட்டவற்றைக் கடிந்து நீக்காது செய்யும் அவர்க்கு, அவ்வினை தான் கருதின வாற்றான் முடிந்த பின்பு பீடையைத் தரும் எ - று.

உம்மையால் முடிவதன் முன்னும் பீடை தரும் என்றது. இது நன்மை அல்லாத வினை செய்யின் அதுவும் தீமைதரும் என்றவாறு. அவை பின்பே காட்டப்படும் என்றார். (10)

(கா - உ.) இனி, மற்று இங்ஙனம் அரசர்க்கு அருப்பொருள் உரைக்கும் சொல் வன்மை உறுதி உடையார் ஆகிய அமைச்சர், மற்று அச்சொல்லினால் அரசர் செய்யும் வினையினது தூய்மையும்

ஆராய்ந்த இடத்தும், அவற்றுள் - நல்லனவற்றைப் செய்ய வேண்டும் ஆதலான், மற்று இதன் பின்னரே கின்றது மேலை அதிகாரம்.

பின்பு ஐயுறுது
அதனை அறிவிக்

## 29. வினைத்திட்பம்.

(ப - உ.) வினைத்திட்ப மாவது வினையின்கண் திண்ணியர் ஆகல்: மேல் நல்வினை செய்யவேண்டும் என்றார்: அது செய்யுங்கால் திண்ணிய ராகச் செய்ய வேண்டும் ஆதலின் அதன்பின் கூறப்பட்டது.

கா. 1.

ப. 6.

கலங்காது கண்ட வினைக்கட்
டுளங்காது
தூக்கங் கடிந்து செயல்.

(கா - உ.) எ - து.—யாதானும் ஒரு வினையும் அதன் தூய்மையும் கலங்காமல் ஆராய்ந்து தெளியக் கண்ட வினையின் இடத்துப் பின்னை இதனைச் செய்வோம் கொல் என்று அசைவது காலத் தாழ்ப்பினையும் கடிந்து கடிதின் செய்க எ - று.

(ப - உ.) எ - து.—கலக்கம் இன்றி ஆராய்ந்து கண்ட வினை இடத்துப் பின்னைத் துளக்கம் இன்றி அதனை நீட்டியாது செய்க எ - று.

இது விரைந்து செய்ய வேண்டும் என்றது.

(1) கா. 2.

ப. 2.

எனைத்திட்ப மெய்தியக் கண்ணும் வினைத்திட்பம்
வேண்டாரை வேண்டா துலகு.

(கா - உ.) எ - து.—மற்று எனைத்து வகைப்பட்ட திண்ணிமை

யும் அரசர்க்கு எய்திய இடத்தும், அமைச்சர் துணிந்து வினையின் திண்ணிமையை விரும்பிக் கொள்ளாராயின், விரும்பார் உயர்ந்தோர் எ - று.

உரைக்கும்

அவர்களை

- 16



(ப - உ.) எ - து.—கருவி முதலாயின எல்லாவற்றாலும் திண்மை பெற்ற இடத்தும் வினையினது திண்மையை விரும்பாதாரை உலகத்தார் விரும்பார் எ - று.

பல பொருளும் மிகுதி உடையார்க்கு வினைத்திட்பம் இன்று ஆனல் வரும் குற்றம் என்னை என்றார்க்கு, இது கூறப்பட்டது. (2)

கா. 3.

ப. 7.

கடைக்கொட்கச் செய்தக்க தாண்மை யிடைக்

னெற்று விழுமந் தரும்.

- [கொட்பி

(கா - உ.) எ - து.—அமைச்சரானோர் திண்ணிது ஆகத் தெரிந்து உரைத்த வினையினைக் கைக்கொண்ட அரசர் கடைபோகச் செய்யத்

தக்கதே ஆண்மைப்பாடு ஆவது: இனி இவ்வாறு அன்றி புரிந்து விடின், நெஞ்சினுள் எனைத்து ஒன்றும் கருதப் படாத தைத் தரும் எ - று.

இடை-
துயரத்

பரி. பா - ம். " இடைக்கொட்கின் ".

(ப - உ.) எ - து.—ஒரு வினையைத் தொடங்கினால் முடிவிலே சென்று மீளச்செய்வது ஆண்மை ஆவது: இடையிலே மீள்வன் ஆயின் மிகுதியைக் கொடாது, நோயைக் கொடுக்கும் எ - று.

சென்று மீளுதல் சுழல்தல் ஆயிற்று. வினையை முடியச் செய்ய வேண்டும் என்றது.

இது தொடங்கின

(3) கா. 4.

ப. 3.

வினைத்திட்ப மென்ப தொருவன் மனத்திட்ப
மற்றைய வெல்லாம் பிற.

(கா - உ.) எ - து.—வினையின் திட்பம் ஆவது அவ்வினை முடியும் அளவும் உரம் செய்து நிற்றல் ஆகலான் அதனை அங்ஙனம் கோலிக் கொண்ட அரசனது மனத்தின் திட்பமே ஏனைய எல்லாம் பிறவாய் ஒழியும் செய்வன கெட்டு விடும் எ - று.

திட்பம் ஆவது: மற்று
எல்லாம் வழி அழிந்து வன்

(ப - உ.) எ - து.—வினைத்திட்பம்
மனத்தின் உண்டான திண்மை.

என்று சொல்லப்படுவது ஒரு
அதனை ஒழிய மற்றைய எல்
லாம திடடபம எனறு சொலலபபடா எ - று.

மற்றைய என்பது கருவியும் உபாயம் முடித்தலும்.
திட்பம் ஆவது யாது என்றார்க்கு இது கூறப்பட்டது.

வினைத்
(4)
கா . 5 .
ப. 5,

சொல்லுதல் யார்க்கு மெளிய வரியவாஞ்
சொல்லிய வண்ணஞ் செயல்,

29. வினைத்திட்பம்

(கா - உ.) எ - து.—யாம் வினைத்திட்பம் உடையோம் என்று
இங்ஙனம் சொல்லல் யாவர்க்கும் எளிய: மற்று அச்சொல்லிய வண்ணமே செய்து முடித்தல் அரிய ஆகும்: அதனால் அங்ஙனம் முறை வழி செய்யத் திட்பம் உடையோர் வானவருள் ஒருவர் எ - று.

(ப - உ.) எ - து.—ஒரு வினையை இவ்வாறு செய்தும் என்று சொல்லுதல் யாவர்க்கும் எளிய ஆம்: அதனைச் சொல்லிய ஆற்றால் செய்து முடித்தல் யாவர்க்கும் அரிய ஆம் எ - று.

மேற்கூறிய இருவகையினும், ஊறு ஓராது செயலின் கூறுவார் முற்படச் சொல்லியவாறு செய்ய வேண்டும் கூறினார்.
வகை
என்று கா. 6.
(5)

ப. 4.

ஊறொரா லுற்றபி னொல்காமை யிவ்விரண்டி
னாறென்ப ராய்ந்தவர் கோள்.

(கா - உ.) எ - து.—யாதானும் ஒருவினை செய்யும் இடத்து அதற்கு இடையூறு வருவதும் வந்துற்றதுமாய் இருக்கும். அவற்றுள் வருவது ஆகிய இடையூறு முன் கோலிக் கழியும் ஆறு செய்தலும், அது அன்றி ஒன்று உற்றது ஆயின் அதற்கு மனம் தளராமையும் அவ்விரண்டினது நெறி என்று சொல்லுப ஆராய்ந்து அமைந்த அமைச்சரானோர் வினையினது கோட்பாட்டினை எ - று.

(ப - உ.) எ - து.—வினை செய்யுங்கால் உறும் துன்பத்தை ஓரார் ஆதலும், அத்துன்பம் உற்றால் தளரார் ஆதலும் ஆகிய இவ்விரண்டினது நெறி என்று சொல்லுவர்கள் வினையை எண்ணினவர்கள் செய்து முடிக்கும் கோட்பாடு எ - று.

மனத்திட்பம் ஆவது யாது என்றவர்க்கு படும் என்று கூறிற்று.

அஃது இரண்டு வகைப் கா. 7.
(6)

ப. 8.

துன்ப முறவரினுஞ் செய்க துணிவாற்றி
யின்பம் பயக்கும் வினை.

(கா -
டைத்து

உ.) எ - து.—வினைத்திட்பம் என்பது இத்துணை அருமை ஆகலான் அவ்விடுக்கண் மிகவரினும் அதற்கு அழியாது

நின்று நெஞ்சில் துணிவுடைமையை நடாத்தி மேல் தாகத்தாம் எடுத்துக்கொண்ட வினைகளையே செய்து

இன்பம் விளைப்ப
முடிக்க எ - று.

(ப - உ.) எ - து.—முற்பாடு துன்பம் மிக வரினும் செய்க பிற்பாடு இன்பம் பயக்கும் வினையை எ - று.

துணிந்து



பொருட்பால்

இனி உற்ற பின் ஒல்காமையின்
துன்பம் உற வரினும் துணிந்து செய்க
வினையை என்றார்.

பகுதி கூறுவார் முற்பட்டு
பிற்பாடு இன்பம் பயக்கும்
(7)

கா. 8.
ப. 9.

உருவுகண் டெள்ளாமை வேண்டு
கச்சாணி யன்னா ருடைத்து.

முருள்பெருந்
[தேர்க்

(கா - உ.) தாம் கருதிய வினையைக் கைக்கொண்டு முடிவு செய்தற்கு உரிய கட்டு ஆண்மை உடையோர் வேண்டுதலர்ன், அவரை

உருவினை நோக்கி இகழாது கைக்கொள்ள வேண்டும்: என்னை எனின், ஓடுகின்ற பெரிய தேர்க்கு அச்சு ஆணி போலும் திட்பம் உடையாரையும் உடைத்து இவ்வுலகம் எ - று.

(ப - உ.) எ - து.—யாவரையும் வடிவு கண்டு இகழ்தலைத் தவிர்தல் வேண்டும்: உருளா நின்ற பெரிய தேர்க்குக் காலாய் நின்ற உருளைகளைக் கழலாமல் தாங்குகின்ற சிற்றாணியைப் போலத் திண்ணியாரை இவ்வுலகம் உளது ஆகலான் எ - று.

திண்ணியாரை அறியும் ஆறு என்னை என்றார்க்கு, வடிவு கண்டு அறியல் ஆகாது என்பதூஉம் கூறிற்று. (8)

கா. 9.

ப. 1.

எண்ணிய வெண்ணியாங் கெய்துப வெண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்.

(கா - உ.) எ - து.—இவ்வாறும் அன்றி மற்று இவ்வினையை இவ்வாறு செய்து முடிப்போம் என்று எண்ணியார், அதற்கு ஏற்பத் தாமும் திண்ணியர் ஆகப் பெறின் அவ்வினையானது மேல் வினையது ஆகத் தாம் கருதிய பயன் யாது: அதனை மற்று அக்கருதி யாங்குப் பெறுவார்கள் எ - று.

(ப - உ.) எ - து.—தாம் எண்ணிய கருமங்களை எண்ணிய படியே பெறுவர்: அவ்வாறு எண்ணியவர் வினையைச் செய்து முடிக்கும் திண்மை உடையர் ஆகப் பெறுவாராயின் எ - று.

இது வினையின்கண் திண்மை வேண்டும் என்றது. (9)

கா. 10.

ப. 10. வீறெய்தி மாண்டார் வினைத்திட்பம் வேந்தன்க
ணூறெய்தி யுள்ளப் படும்.

(கா - உ.) எ - து.—வேந்தன் கோலிக் கொண்ட வினைத்திட்ப
மானது பின்பு ஓர் இடையூறு வந்து எய்தின், அறிவு மாட்சிமை



உடைய அமைச்சரானோர் அதனை வெல்லும்
விசாரிக்க மற்று அவ்விடையூறானது கெட்டு

உபாயத்தை விரும்புற்று
விடும் எ - று.

பரி. பா - ம். "ஊறெய்தி யுள்ளப் படும்".

(ப - உ.) எ - து.—மிகுதி எய்தி மாட்சிமைப் பட்டாது வினைத் திட்பமானது, அரசன் மாட்டு உறுதலை எய்தலான் எல்லாராலும் நினைக்கப்படும் எ - று.

எய்த என்பது திரிந்தது. இது

வினைத்திட்பம் உடையாரை எல்லாரும் விரும்புவார் என்றது. (10)

(கா - உ.) இனி மற்று இங்ஙனம் ஆராய்ந்து ஓர்ந்து துளங்கிய வினைக்கண் திட்பம் உடையான் பின்பு அது முடித்தல் அன்றே செயற்பாலது: அதனுன் மற்று இதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 30. வினைசெயல் வகை.

(ப - உ.) வினைசெயல் வகையாவது வினை செய்யும் ஆறு கூறுதல். மேல் வினை செய்யுங்கால் திண்ணியர் ஆக வேண்டும் என்றார்: அவ்வாறு திண்ணியார் வினை செய்யும் வண்ணம் கூறுகின்றார் ஆகலான் அதன் பின் கூறப்பட்டது.

கா. 1. ப. 1.

பொருள்கருவி காலம் வினையிடனோ
டிருமைர வெண்ணிச் செயல்.

டைந்து

(கா - உ.) எ - து.—எடுத்துக் கொண்ட கருமம் முடிவுகாறும் நடத்த வேண்டும் பொருளும், அஃது இயற்றுதற்கு உரிய கருவி களும், அது வாய்த்தற்கு அடுத்த காலங்களும், அது செய்தற்கு அமைந்த இடன் ஆகிய நிலன் என்னும் இவை ஐந்தும் இயையும் ஆறு மயக்கம் அற ஆராய்ந்து செய்தலே கடன் ஆவது என்று அரசர்க்கு அமைச்சன் வினை செயல்வகை கூறியது இதன் கருத்து எ - று.

(ப - உ.) எ - து.—பொருளும், கருவியும், காலமும், செய்யும் வினையும் பகைவரைப் பொருதற்கு உரிய இடமும் என்னும் ஐந்தினை யும் மயக்கம் தீர எண்ணிப் பின்பு வினை செய்யத் தொடங்குக எ - று.

இஃது ஒவ்வொன்றும் இரண்டு வகைப்படும். பொருள் ஆவது கெடும் பொருளும் பெறும் பொருளும். கருவி தனக்கு உள்ள படையும் மாற்றரசர்க்கு உள்ள படையும்: காலம் தனக்கு ஆம் கால மும் பிறர்க்கு ஆம் காலமும்: வினை தான்செய் வினையும் பகைவர்



செய் வினையும்: இடம் தனக்கு ஆம் இடமும் பிறர்க்கு ஆம் இடமும். இவை செய்யும் வினைக்கு முற்பட வேண்டும் என்று முன் கூறப் பட்டன. (1)

கா. 2.

ப. 3.

வினைபகை யென்றிரண்டி னெச்ச
நினையுங்காற்
தீயெச்சம் போலத் தெறும்.

(கா - உ.) எ - து.—தாம் எடுத்துக் கொண்டது ஓர் கருமம் முடியச் செய்யாது ஒழிவுபட நிற்றலும் தமது பகை தீர்க்கும் இடத்துத் தீராது ஒழிவுபட்டு நிற்றலும் என்னும் இவ்விரண்டு ஒழிவுபாடும் ஆராயுங் காலத்து ஒன்றினைக் கொளுவிப் பாந்த தீயினைச் செலவு அறத் தணியாது சிறிது ஒழிவுபட இகழ்ந்து நீங்கிய வழி மற்று அது யாங்ஙனம் சுட்டு விடுவது போல இவை இரண்டும் பற்றி நிற்பன தாம் மாட்டு ஆகலான் வினை எச்சத்தால் தம் பொருள் கேடும் பகை எச்சத்தால் தமது உயிர்க்கேடும் வரும் எ - து.

(ப - உ.) எ - து.—வினையும் பகையும் என்னும் இரண்டினது ஒழிவும் விசாரிக்கும் காலத்துத் தீயினது ஒழிவு போலக் கெடுக்கும் எ - று.

எச்சம் - சேஷம். அது வினை செய்யுங்கால்

சிறிது ஒழியச்

செய்தேம் என்று விடல் ஆகாது என்றது. ஈண்டுப் பகை கூறியது என்னை எனின், வினை செய்வார் பகைவர் மாட்டு ஆதலான் அவரைச் சிறியர் என்று இகழாமையும் வேண்டும் ஆதலான் ஈண்டுக் கூறப் பட்டது. (2)

கா. 3.

ப. 2.

தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க

தூங்காது செய்யும் வினை.

(கா - உ.) எ - து.—இப்படி ஆகலான் தொடங்கிய கருமமானது காலத் தாழ்வு படாது அதனை விரைவொடு செய்து முடிக்க வேண்டும். மற்று அக்காலத் தாழ்வு பட வேண்டும் கருமப் பகுதி உளதேல் அவற்றிற்கு ஏற்ற காலம் வருகாறும் தாழ்க்க நின்று செய்க; எனவே இங்ஙனம் கடிதிற் செய்து முடித்த கருமம் எச்சக் குற்றம் இல்லை; மற்றைக் காலம் பார்த்து நின்ற கருமமும் எச்சக் குற்றம் இல்லை எ - று.

(ப - உ.) எ -
தாழ்த்துச் செய்க :

து.—தாழ்த்துச் செய்ய வேண்டும் வினையைத்
தாழாமல் செய்யும் வினையைத் தாழாமல் செய்க
எ - று.

## 30. வினைசெயல் வகை

127

இஃது எய்தியது விலக்கிச் செய்யத் துணிந்தாலும் காலம்
பார்த்துச் செய்ய வேண்டுவன தாழாது செய்க என்றது. (3)

கா. 4.
ப. 6.

நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே
யொட்டாரை யொட்டிக் கொளல்.

(கா - உ.)
செய்தல் மிகவும்

எ - து.—தம் ஒரு நட்டார்க்கு நல்லனவற்றைச்
வேண்டுவது அன்றே! மற்று அவை செய்தலினும்

சால
பகை

விரைந்தே: யாது எனின் பகைவரானோரை
தீர்த்து இங்ஙனம் பொருந்திக் கொள்வாராயின்

ஒருவாற்றால்
பகை எச்சம்
இல்லை எ - று.

(ப -
விரைந்து

உ.) எ - து.—தமது சுற்றத்திற்கு நல்லவை
செய்யவேண்டும், பகைவரைப் பொருந்தி

செய்தலினும்
நட்பு ஆகக்
கொள்ளுதல் எ - று.

இது சுற்றத்திற்கு நல்லவை செய்தலினும், விரைந்து செய்ய வேண்டும் அன்றே: அதனினும்

வேண்டுவன
பகை கொள்
ளாமை விரைந்து செய்தல் வேண்டும் : அவரும் தம்மோடு ஒத்த வலி
உடையர் ஆயின் என்றவாறு.
(4)

கா. 5.
ப. 8:

செய்வினை செய்வான் செயன் முறை யவ்வினை
யுள்ளறிவா னுள்ளங் கொளல்.

(கா - உ.) எ - து.—யாதானும் ஒரு கருமம் செய்யும் இடத்துச் செய் கருமம் தானும், அக்கருமம் தலைக்கொண்டு செய்யும் அவனும், மற்று, அது முடியக் கற்று அதனை நாள்தோறும் செய்து ஒழுகும் முறைமைப்பாடும் என்று சொல்லப்பட்ட இவை மூன்றும் இனி இவற்றின் உள்பாடு அறிந்து நடாத்தும் உபாயம் உடையோனும் என்னும் இவை இத்தனையும் நெஞ்சு கைக்கொண்டு செய்கை வினை செயல்வகை..............து எ - று.

உள்ளறிவான் என்றது என்னை எனின் கடல் ஓடிப் பொருள் வினை செய்யும் வணிகனும் அவனுக்கு அவ்வினை செய்வாருமே அன்றிக் கடல் ஓட்டத்து உள்ளறிவான் ஆகிய மீகாமனும்.............. வினை செய்வாரை அன்றி அவ்வினை உள்ளறிந்து ஓட்டும் உபாயம் உடையோரும் வேண்டும் என அறிக.

(ப - உ.) எ - து.—செய்யத் தகும் வினையைச் செய்யும் அவன் செய்யும் முறைமை யாவது, அவ்வினையினது உளப்பாடு அறிவான் உள்ளத்தைக் கூட்டிக் கோடல் எ - று,



உள்ளம் கொளல் என்றது உண்மை.......... ...ளர் என்றற்கு இது வினை செய்யுங்கால் அவ்வினையை முன்பு அறியும் அவர்களைக் கொள்ள வேண்டும் என்றது. (5)

கா. 6.

ப. 9.

வினையான் வினையாக்கிக் கோடல்
நனைகவுள்
யானையால் யானையாத் தற்று.

(கா - உ) எ - து —ஒரு கருமத்திற்கு வேண்டும் பொருள் சேர்த்து நிறைவு செய்து பின் அக்கருமத் தானே வேண்டிய கருமத்தை ஆக்கிக் கோடல் எத்தன்மைத்தோ எனின், மதத்தினாலே நனையும் கபோல நன்மைக்கு உரியது ஓர் அண்ணல் யானையை ஆர்த்தற்கு வேண்டும் பொருள் சேர்த்தும் பின் மற்று அதனாலே வேறு அடவியுள் வாழும் யானை பலவற்றையும் தங்கண் பிணித்துக் கொள்ளுகின்ற அத்தன்மைத்து எ - று.

நனைகவுள் என்பது மதத்தாலே நனையும்

கபோலம் எ - று.

பரி. பா - ம். " யானையாத் தற்று ".

(ப உ.) எ - து.—ஒரு வினையாலே
செய்து கொள்க; அது மதயானையோடே
தால் போலும் எ - று.

பிறிது ஒரு வினையைச்
மதயானையைப் பிணைத்

நனைகவுள் என்பதனை இரட்டித்துக் கூட்டி தனக்கு ஒரு பகை
தோன்றினால் அவர்க்குப் பகை ஆயினரை அவரோடு பகைக்குமாறு

பண்ணுக : அவர் தம்முள் தாம் பொருது. அல்லது
வார் இல்லை என்றவாறு ஆயிற்று.

தம் பக்கல் வரு
(6) கா. 7.

ப. 7.

முடிவு மிடையூறு முற்றியாங் கெய்தும்
படுபயனும் பார்த்துச் செயல்.

(கா - உ.) எ - து.—மற்று இவ்வாறும் அன்றி யாதானும் ஒரு
கருமம் செய்யும் இடத்து அது கடைபோகச் சென்று முடிவது ஓர்
முடிவும், அது செய்யும் காலத்து நடுவு வரும் இடையூறும், அது
செய்து முற்றுப் பெற்ற இடத்து அதனால் எய்தும் பெரும்பயனும்
முன்னுறச் சீர் தூக்கிக் கொண்டு பின்பு செய்க அக்கருமத்தை
எ - று.

(ப-உ.) எ - து.—வினை தொடங்கினால் அது முடியும் வண்ண மும் அதற்கு வரும் இடையூறும் முடிந்த இடத்து உண்டாகும் பய னும் முன்பே அறிந்து வினை செய்க எ - று.

முடிவு மேல் கூறிய ஆற்றால் செய்யுங்கால் முடியும் முடியாது என்று அறிதல். இடையூறு பகைவர்க்கு வரும் படைத்துணை. முற்றி

## 30. வினைசெயல் வகை

120

யார்க்கு எய்தும் படுபயன் நேரும் இடையூறு சிறியதாய்ப் பெறும் பொருள் பெரியதாயினும் அதன் பின்பு விளையும் விளைவு. இது வெற் றிப்பகை தோற்றுதல். (7)

கா. 8.

ப. 10.

சூழ்ச்சி முடிவு துணிவெய்த
தாழ்ச்சியிற் றங்குத றீது.

லத்துணிவு

(கா - உ.) எ - து.—இவ்வாறு இவ்வினைத்துக் குறையும் தேர்ந்து கொண்ட தேர்ச்சியினது சமையின்கண் தாம் கருதிய

திரத்
வினை
செய்யத் துணியும் துணிவு எய்துதல், அங்ஙனம் துணிந்த இடத்து
மற்று அத்துணிவு பின்பு காலத்தாழ்வின்கண் படுதல் குற்றம் எ - று.

(ப - உ.) எ - து.—சூழ்ச்சிக்கு எல்லை துணிவு பெறுதல்: அவ்
வாறு துணிந்த வினை தாழ்ச்சியின்கண்ணே கிடக்குமாயின் அது
தீது ஆம் எ - று.

இது வினைசெயத் துணிந்த காலத்து நீட்டிக்கும் ஆயின் அதனை
அறிந்து பகைவர் தம்மைக் காப்பர்: ஆதலால் நீட்டியாது விரைந்து
வினை செய்ய வேண்டும் என்றது. (8)

கா. 9. ப. 4.

ஒல்லும்வா யெல்லாம் வினைநன்றே
செல்லும்வாய் நோக்கிச் செயல்.

யொல்லாக்காற் (கா - உ.) எ -
பாடுகள் அங்ஙனம்

து.—கீழ்ச்சொல்லிப் போந்த வினை செய்யும் கூறு
செய்கை தமக்கு இயலும் ஆயின் அவ்வியலும்

வழி எல்லாம் வினை செய்து ஒழுகுதல்
கற்பினும் (?) அவ்வினைகள் செலவுபடும்
துச் செய்து கொள்க எ - று.
சால நல்லது மற்று இயலா
வழி எல்லாம் ஓர்ந்து பார்த்

(ப - உ.) எ - து.—இயலும் இடம் எல்லாம் வினை செய்தல் வன்று: இயலாத காலத்து அதனை நினைந்து இருந்து இயலும் இடம் பார்த்துச் செய்க எ - று.

மேல் பகை எஞ்சவிடல் ஆகாது என்றார்: அது முடியாத காலத்துச் செய்யும் ஆறு என்னை என்றார்க்கு அதனை இகழாது பின்பு ஆம் காலம் பார்த்துச் செய்க என்றது. (9)

கா. 10. ப. 5.

உறைசிறியா ருண்ணடுங்க லஞ்சிக்
குறைபெறிற்
கொள்வர் பெரியார்ப் பணிந்து.

(கா - உ.) எ - து.— உலகத்துப் பொருள் வலி முதலிய அனைத்தாலும் தம் பகைவரின் சிறியர் யாவர் சிலர் மற்று அவர் பகைவரால்





தமக்கு உள் நடுக்கம் வருதலை அஞ்சி மற்று அவரினும் பெரிய வேந்தர் மாட்டுத் தமது குறைகூறி அவர்களை வணங்கி வழிபட்டுப் படைத் துணையாகக் கொள்வர் எ - று.

(ப - உ.) எ - து —உறையும் இடம் சிறியார் தமது இடன் நடுங்குதற்கும் அதற்கு அஞ்சித் தமது குறைதீரப் பெறின், தம்மின் பெரியாரைத் தாழ்ந்து நட்பாகக் கொள்வர் எ - று.

இது சிறியன் ஆயின் இவ்வாறு செய்ய வேண்டும் என்றது இவை எல்லாம் அரசற்கும் ஒக்கச் செய்ய வேண்டும் ஆயினும் அமைச்சுத் தொழில் ஆகலான் ஈண்டுக் கூறப்பட்டன. (10)

(கா - உ.) இனி மற்று இங்ஙனம் அரசர் உழையிருந்த அமைச்சராயினோர் வினையின் திட்பமும் வினைசெயல் வகையும் வைப்புறுத்தியும், பொருந்தா மன்னரைப் பொருந்துவித்தலும் திறைகோடலும் குறும்பு அறுத்தலும் பிறவும் வேண்டுதல் ஆன தூது சேறலும் அமைச்சர்க்குக் கடன் ஆகலான் மற்று இதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 31. தூது.

(ப - உ.) தூது ஆவது மாற்றரசர் மாட்டுச் சந்து செய்யும் அமாத்தியர் இலக்கணம் கூறுதல். இனிப் பகைவர் மாட்டு அமாத்தியர் செய்யும் திறம் கூறுகின்றார் ஆகலின் அவற்றின் பின் இது கூறப்பட்டது.

கா. 1.
ப. 9.

கற்றுக்கண் ணஞ்சான் செலச்சொல்லிக்
றக்க தறிவதாந் தூது.
காலத்தாற்

(கா - உ.) எ - து.—இராச நீதிக்கு ஏற்ற நூல்களை இனிது உணரக் கற்றும், இகல்வேந்தர் முன்னர்ச் சென்று உரைக்கும் இடத்துத் தறுகண்மையும் வேண்டுங்கால் உடையனும், வேண்டாக்கால்

அவர் செவிக்கு இனிது சொல்லும் ஆறு சொல்லிச் சொல்லுதற்கு அமைந்த காலத்தையும் கடைப்பிடித்து ஏற்றத்தாழ்வு படாமல் சொல்லத் தக்கதனையே அறிந்து சொல்லுவது யாது மற்று அதுவே ஆம் தூது என்று சொல்லப்படுவது எ - று.

(ப - உ.) எ - து.—தன் அரசன் சொன்ன மாற்றத்தையே சொல்லுங்கால், பகை அரசன் வெகுண்டானாயின், அது மாற்றுதற்கு ஆம் உபாயத்தைக் கற்று, அவ்விடத்து அஞ்சுதல் இன்றி வெகுட்சி தீருமாறு இசையச் சொல்லி, காளோடேகூடச் செய்யத் தகுவன அறிந்து செய்ய வல்லவன் தூதன் ஆவான் எ - று.

## 31. தூது 131

*தக்கது அறிதலாவது சொல்லின வார்த்தையைச் சொல்லாமல்*
*போதலும் வினைசெய்து போதலும். இஃது செய்ய வேண்டும் என்றது.*

இவ்விடத்திற்கு ஆவன கா. 2.

(1)

ப. 4.

அறிவுரு வாராய்ந்த கல்வியிம் மூன்றின்
செறிவுடையான் செல்க வினைக்கு.

(கா - உ.) எ - து.—முன்னமே தான் இயல்பு ஆக அறிவு உடையன் ஆதலும், மன்னரும் பிறரும் மகிழ்ந்து அணைத்தற்கு உரிய வடிவு உடையன் ஆதலும், கீழ்ச்சொன்ன வாம்பின் அன்றி மற்றும் பல ஆராய்ந்த கல்வி உடையன் ஆதலும் என்னும் இம்மூன்றினையும் உடையனாய் இருக்கின்றான் யாவன்? மற்று அவன் செல்வான் ஆக அரசர் காரியத்துக்கு எ - று.

(ப - உ.) எ - று.—அறிவும் வடிவும் தெளிந்த கல்வியும் இம்மூன்றினது அடக்கம் உள்ளவன் வினைக்குச் செல்லுக எ - று.

அறிவு - இயற்கை அறிவு. உருவு - வடிவு அழகு. ஆராய்ந்த கல்வி - கலைகளை அறிந்து ஆராய்ந்ததனால் ஆட்சியான கல்வி. இவை பிற்றினது அடக்கம் ஆவது - இம்மூன்றினால் வரும் பெருமிதத்தை அடக்கி ஒழுகுதல். (2)

கா. 3. ப. 1.

அன்புடைமை யான்ற குடிப்பிறத்தல் வேந்தவாம்
பண்புடைமை தூதுரைப்பான் பண்பு.

(கா - உ.) எ - து.—தன் அரசர் மாட்டு அன்பு பெரிது உடையனுமாய்த் தான் நல்ல குடியில் பிறந்தானுமாய் வந்து பயிலும் தொறும் வேந்தனவன் விரும்பும் மாபு உடையனுமாய் இம்மூன்று குணமும உடையான அரசாகுத தூது உரைபபான எ - று.

(ப - உ.) எ - து.—அரசன் மாட்டு அன்பு உடைமையும் அமைந்த குடியின்கண் பிறத்தலும், வேந்தனால் விரும்பப்படும் குணன் உடைமையும் தூது ஆகிச் சென்று சொல்லுமவனது இயல்பு எ - று.

வேந்தனால் விரும்பப்படும் குணமாவது அவன் றைத் தான் விரும்பாமை.

விரும்பும் அவற்

(3) .

கா. 4.

ப. 10.

கடனறிந்து காலங் கருதி யிடனறிந்
தெண்ணி யுரைப்பதாந் தூது.



(கா - உ.) எ - து.—அரசர் சொல்லும் திறம்பாடுகள் யாவும் அறிந்து சொல்லுதற்கு உரிய காலத்தையும் (கருதிக்)கொண்டு, மற்றுச் சொல்லுதற்கு அமைந்த இடத்தையும் இனிது உணர்ந்து பின்னும் மக்கட்பாடு, உரை தம்மினும் அப்பொழு..................கற்பன வற்றை நெஞ்சகத்து ஓர்ந்துகொண்டு இங்ஙனம் சொல்ல வல்லதும் தூது எ - று.

பரி. பா - ம். " எண்ணி யுரைப்பான் றலை."

(ப - உ.) எ - து.—காரியம் நின்ற முறைமையை அறிந்து காலத் தையும் நினைந்து இடமும் அறிந்து

தானே எண்ணிச் சொல்ல வல்ல வன் தலைவன் ஆவான் எ - று.

தலை, இடை, கடை என மூன்று வகையவருள் மேற்கூறின எல்லாம் இடையும் கடையும் ஆகிய தூதர் இயல்பு கூறினர்: இது. தலையான தூதர் இலக்கணம் கூறிற்று. தலையான தூதன் தானே காரியம் அறிந்து சொல்லும். இடையான தூதன் சொன்ன மாற்றத் தைச் சொல்லும். கடையான தூதன் ஓலை காட்டும். (4) கா. 5. ப. 5.

அன்பறி வாராய்ந்த சொல்வன்மை தூதுரைப்பார்க்
கின்றி யமையாத மூன்று.

(கா - உ.) எ - து.—அரசர் மாட்டு அன்பு பெரிது உடைமையும், இயற்கையானும் தெளிந்த அறிவு உடைமையும், சொல்லும் சொல் ஏற்றத்தாழ்வு இல்லாத சொல்வன்மையும் என்னும் இம்மூன்றும் அரசர்க்குத் தூது உரைக்கும் அமைவு உடையோர்க்குப் பெரிதும் இன்றியமையாது எ - று.

(ப - உ.) எ - து.— அன்பு உடைமையும், அறிவு உடைமையும், தெரிந்த சொல்வன்மை உடைமையும் என்னும் மூன்றும் தூது உரைப் பார்க்கு இன்றியமையாதது எ - று.

ஆராய்ந்த என்றமையால் கல்வி ஆயிற்று. மேற்கூறிய குணங்கள் எல்லாவற்றினும் இவை மூன்றும் இன்றியமையாதன என்று கூறிற்று. இத்துணையும் தூதர் இலக்கணம் கூறிற்று. (5)

கா. 6.

ப. 8.

தொகச்சொல்லித் தூவாத நீக்கி நகச்சொல்லி
நன்றி தருவதாந் தூது.

(கா - உ.) எ - து.—இங்ஙனம் ஆராய்ந்து தருவன சொல்லும் இடத்தும் பொருள் பெருகிய சொல்லினைச் சுருங்கச் சொல்லி, அங்ஙனம் சுருங்கச் சொல்லும் இடத்தும் பயன்படாத சொல்லினை நீக்கி



மற்று
மாறு
அச்சொல்லுவது தன்னையும் கேட்டவர் மகிழ்ந்து முகமலரு சொல்லிப் பின்னும் இவ்வாறு சொல்லுதலே அன்றி மற்று அவரால் தன் அரசர்க்கு வேண்டும்
நன்மையைத்தர வல்லது ஆம் தூது ஆவது எ - று.

தூவாத நீக்கி என்பது பயன்படாத ஒழித்தல் என்றது.

(ப - உ.) எ - து.—சுருங்கச்
சீக்கி மகிழுமாறு சொல்லித் தன்

சொல்லி விரும்பாத சொற்களை
அரசனுக்கு நன்மையைத் தரும்
அவன தூதன ஆவான எ - று.

இது சொல்லுமாறு கூறிற்று.

(6) கா. 7.

ப. 3.

நூலாரி னூல்வல்ல னாகுதல் வேலாருள்
வென்றி வினையுரைப்பான் பண்பு.

(கா - உ.) எ - து.—பலவகைப்பட்ட நூல்களையும் கற்று வல்ல சான்றோரினும் சமையக் கற்று வல்லனாய் இருக்கின்றது யாது மற்று அது வேல் வேந்தர் மாட்டுச் சென்று தன் அரசர்க்கு வென்றிக் கருமம் சொல்லுவானது மாபு எ - று.

எனவே அரசரும் யாவையும் மற்றுளோரும் அனைத்தும் அறிந்த தன்மையர் ஆகலான் அவர் மாட்டுச் சென்று உரைக்கும் இடத்துக் கல்வியும் திருத்தம் வேண்டும் என்பது கருதி இவர்க்கு நூல் வன்மை எடுத்து உரைத்தது என அறிக. சூழ்ச்சியாளரில் சூழ்ச்சி பெரிது உடையன் ஆகல் என்றும் ஆம்.

பரி. பா - ம். "நூலார்முன்" "வேலார்முன்".

(ப - உ.) எ - து.—பல நூல்களையும் கற்றார் முன்னர் அந்நூல்களைத் தானும் சொல்ல வல்லன் ஆதல், வேறுடையார் முன் நின்று தன் அரசனுக்கு வெற்றியாகிய வினையைச் சொல்லுமவன் இயல்பு எ - று. (7)

கா. 8.

ப. 6.

விடுமாற்றம் வேந்தர்க் குரைப்பான்
வாய்சோரா வன்க ணவன்.

வடுமாற்றம்

(கா - உ.) எ - து.—ஒரு
வேறு வேந்தர்க்குச் சென்று

வேந்தன் சொல்லிவிடும் மாற்றத்தை தன்
உரைப்போனவன் யாவன் எனின், இனி

அரசன் வேற்றரசனுக்குச் சொல்லிவிடும் மாற்றம்
வேற்றரசன் தன் அரசர்க்குச் சொல்லிவிடும் மாற்றம்

ஆயினும்
ஆயினும்
தனித்தனி இராச பாவனைக்கு உரிய மாற்றம் ஆம் அத்துணை அல்லது எளிமைபட கிழமை இயல்பு அன்றோ? அதனின் இவை முழுதும்

இவர் இவர்க்குச் சென்று இசைப்பின் தனது இராச காரியம் கெடும் ஆகலான் இருபாலும் சென்றால் வாய்ப்பன கூறி வடு அடுப்பன வழு வியும் புறப்படாமல் செறியப் பிடிக்கும் திறப்பாடு உடையவன் தூது எ - று.

(ப - உ.) எ - து.—தன் அரசன் சொல்லிவிட்ட மாற்றத்தைப் பகை யரசர்க்குச் சொல்லுமவன், தன்னரசன் சொல்லும் சொற்க ளுக்கு வடுவான சொற்களை யறந்தும் சொல்லாத அஞ்சாமையை உடையவன எ - று.

•

இது முதலாகச் சொல்லும் திறன் கூறுகின்றது படச் சொல் சொல்ல வேண்டும் என்றது.

ஆகலின் மூற்
(8) கா. 9.

ப 2.

தூய்மை துணைமை துணிவுடைமை
யிம்மூன்றின்
வாய்மை வழியுரைப்பான் பண்பு.

(கா - உ.) எ - து.—குலத்தூய்மை குணத்தூய்மை மனத் தூய்மை வாய்மொழித் தூய்மை முதலிய தூய்மையும் இருபாலும் சென்று சொல்லுங்கால், தன் அரசற்கும் அவன் கருமத்திற்கும் பெரிதும் துணைமைப்பாடு உடையன் ஆதலும் அரசர் முன்னர்ச் சொல்லும் இடத்துக் கலங்காது சொல்லும் தெளிவுடைமை இம் மூன்றினுடைய வஞ்சனை அற்ற வாய்மைப்பாடு உடைய்து யாது மற்று அது தூது நடத்து சொல்லுவான் மாபு ஆவது எ - று.

இனி வழியுரைப்பான் என்றது அரசன் ஏவலின் பின் சென்று உரைப்பான் என்றது.

(ப - உ.) எ - து.—தூய்மை உடைமையும், சுற்றம் உடைமை யும், ஒரு பொருளை ஆராய்ந்து துணிதல் உடைமையும் இம்மூன்றின் கண்ணும் மெய் உடைமையும் தூதற்கு இயல்பு எ - று.

தூய்மை - மெய்யும் மனமும் தூயன் ஆதல். இதன் மெய்மை யாவது பிறர்க்கு வேண்டிச் செய்யாது தனக்கு வேண்டிச் செய்தல். சுற்றத்தார் மாட்டும் பொய் கூறுமை பகைவர் மாட்டுப் பொய்கூற வேண்டுதலின் இது பின் கூறப்பட்டது. துணிவு துணிந்த பின்பு ஐயம் தோற்றாமல் துணிதல். வழியுரைப்பார் என்பது அரசன் சொன்ன மாற்றத்தையே சொல்லுதலால். (9)

கா. 10. ப. 7.

இறுதி பயப்பினு மெஞ்சா திறைவற்
குறுதி பயப்பதாந் தூது.

(கா - உ.) எ - து.—தான் சென்று பகை வேந்தர் முன்னர்க் கருமம் சொல்லுங்கால் கண்ணஞ்சாது சொல்ல வேண்டுவனவும் சொல்லி மற்று அதனால் தனக்கு உயிர்க்கு இறுதி பயப்பினும் ஒழிய விடாது தன் இறைவன் ஆகிய அரசனுக்கு வேண்டும் கருமம் உறுதியைப் பயக்க நிற்பது யாது மற்று அதுவே தூது ஆவது எ - று.

(ப - உ.) எ - து.—தன் உயிர்க்கு இறுதி சொல்லுதலை ஒழியாதே சொல்லுதலின், தன்

பயக்கும் ஆயினும்,
அரசனுக்கு உறுதி
உண்டாம் சொற்களைக் கூறுமவன் தூதன் ஆவான் எ - று.

இஃது இறுதி பயப்பினும் என்றமையான்

அரசன் சொன்ன மாற்றத்தையே சொல்லுக என்றது. (10)

(கா - உ ) இனி இங்ஙனம் அரசர்க்கு அமைச்சர் தூதாடி நாடு ஆக்கமும் பிறவும் செய்தமையாதோ ..............மன்னரைச் சேர்ந்து ஒழுக வேண்டும் அன்றே; அதனால் மற்று இதன் அறிவிக்கின்றது மேலே அதிகாரம்.

பின்னரே அதனை

## 32. மன்னரைச் சேர்ந்தொழுகல்.

(ப - உ) மன்னரைச் சேர்ந்து ஒழுகல் ஆவது - அரசர் மாட்டு அமாத்தியர் ஒழுகும் திறன் கூறுதல். இது முதலாக அவை யஞ் சாமை ஈறாகக் கூறுகின்றவை தம் அரசர் மாட்டு வேண்டுமாயினும் மாற்றரசர் மாட்டும் வேண்டுதல் இன்றியமையாத சிறப்பு உடைத் தாகலின் அதன் பின் கூறப்பட்டது.

கா. 1.
ப. 1.

குறிப்பறிந்து காலங் கருதி வெறுப்பில
வேண்டுப வேட்பச் சொலல்.

(கா - உ) எ - து —அரசனது உள்ளக் குறிப்பினை ஆராய்ந்து உணர்ந்து தான் சென்று அறிவுரைக்கும் காலத்தையும் கருதிச் சென்று உரைக்கும் இடத்து அவர்க்கு வெறுப்பு இல்லனவுமாய் அன்றி ஒரு வண்ணம் வேண்டும் அவனவுமாய் இருப்பனவற்றையே அரசர் பெரிதும் விருப்புற்றுக் கேட்குமாறு சொல்லுக மன்னரைச் சேர்ந்து ஒழுகும் அமைச்சர் எ - று.

(ப - உ.) எ - து —அரசன் குறிப்பை அறிந்து காலம் பார்த்து வெறுப்பில்லாதனவாய்ச் சொல்ல வேண்டுவனவற்றை விரும்புமாறு சொல்லுக எ - று.

இது சொல்லும் திறன் கூறிற்று.



கா. 2.
ப. 8.

கொளப்பட்டே மென்றெண்ணிக்
கொள்ளாத செய்
துளக்கற்ற காட்சி யவர்.
[யார்

(கா - உ.) எ - து.—அரசரான் மிகவும் கைக்கொள்ளப் பட்டேம் என்று கருதி இது காரணமாக அரசரால் கைக்கொள்ளத் தகாதனவற்றைச் செய்வதிலர்: யார் எனின் கலக்கம் அற்ற திண்ணிய அறிவினையுடையோர் எ - று.

(ப - உ.) எ - து —அரசனாலே கைக்கொள்ளப் பட்டேம் என்று நினைத்து அவன் நெஞ்சில் கொள்ளாதன செய்யார்கள் அசைவற்ற தெளிவுடையார் எ - று.

இஃது அரசன் இசைவன செய்ய வேண்டும் என்றது. (2) கா. 3.

ப. 10.

இளைய ரினமுறைய ரென்றிகழார்
வெளியோ டொழுகப் படும்.

நின்ற

றும்,

(கா - உ.) எ - து.—இவர் மிகவும் இளையாராய் இருந்தார் என் ஒருவாற்றால் நமக்கு இன்ன முறையினர் இவர் என்றும் கருதிக் கொண்டு இகழாராய் மற்று அவ்வாசர்க்கு அவாது குலமாபினல் உள தாம் நிலைபெற்று வருகின்ற பெரியது ஓர் ஒளி உண்டு அன்றே: மற்று அதனோடு சாரக் கூறிக்கொண்டு ஒழுக அடுக்கும் அமைவு உடையோர் எ - று.

(ப - உ.) எ - து —இவர் நமக்கு இளையர் என்றும், இத்தன்மை யாகிய முறை என்றும் இகழாது அவர் பெற்று நின்ற தலைமை யோடே பொருந்த ஒழுக வேண்டும் எ - று.

முறையார் என்றது இளங்கிழமை முறை. இது காலத்துக்குத் தக்க காட்சி செய்ய வேண்டும் என்றது. இது மூன்றும் பெரும் பான்மையும் தன் அரசனை நோக்கிற்றின. (3)

கா. 4. ப. 9.

## பழைய மெனக்கருதிப் பண்பல்ல
## கெழுதகைமை கேடு தரும்.

செய்யுங்

றும்

(கா - உ.) எ - து.—அரசர்க்கு நாம் பழையர் எனக்கருதி யாதா ஒன்று காரணமாக அரசர் மாட்டுத் தாம் ஒழுகும் பண்பிற்கு உரிய அல்லனவற்றைச் செய்யக் கருதும் கெழுதல் தன்மையானது கேட்டினைத் தரும்: எனவே என்றும் அரசர் மாட்டு அஞ்சி ஒழுகுதல் கடன் என்பது பொருள் ஆயிற்று எ - று.

(ப - உ.) எ
லாதனவற்றைச்

- து.—யாம் பழையம் என்று கருதி இயல்பு அல்
செய்யும் நட்பின் தகைமை தனக்குக் கேட்டைத்
தரும எ - று.

இஃது இயற்கை அல்லாதன தவிரல் வேண்டும்
என்றது. (4) கா. 5.

ப. 7.

அகலா தணுகாது தீக்காய்வார் போல
விகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார்.

(கா - உ.)
மற்று அதனை

எ - து.—குளிர்க்கு உடைந்து தீக்காய்கின்ற இடத்து அகல்வதும் செய்யாது அணைவதும் செய்யாது தீக் காய்ந்து இன்புறுகின்றார் யாதொரு படி: அப்படியே அவரைப் போல ஒழுகுவார் யார் எனின் விறல் மன்னரைச் சேர்ந்து ஒழுகும் விதி மரபு உடையோர் எ - று.

பரி. பா - ம். "போல்க".

(ப - உ.) எ - து.—திக்காய்வாரைப் போல நீங்குதலும் செய்யாது குறுகுதலும் செய்யாது மாறுபாடு இல்லாத வேந்தரைச் சேர்ந்து ஒழுகுக அமாத்தியர் எ - று.

இது சார்ந்து ஒழுகும் திறன் கூறிற்று.
பான்மையும் மாற்றாசரை நோக்கிற்று.

இத்துணையும் பெரும்
(5) கா. 6.

ப. 4.

எப்பொருளு மோரார் தொடரார்மற்
விட்டக்கா ற் கேட்க மறை.

றப்பொருளை

(கா - உ.) எ - து.—எப்பொருளும் ஓரார் என்பது அரசர் மாட்டுப் பிறரால் சில மறை உளதான காலத்து அப்பொருள் சிறிதே ஆயினும் பெரிதே ஆயினும் தாம் அதனைப் பொருட்படுத்திக் குறிக்கொண்டு விரும்பார். தொடரார் என்பது மற்று அவர் அங்கு நின்றும் நீங்கிப் போன இடத்தும் பின்பும் அவரொடு பற்றிக் கொள்ளார்; மற்று அப்பொருள் தான் புறத்து எங்கும் தானே விட்டு வெளிப்பட்ட காலத்தும் வேண்டுகின் கேட்பாராக அம்மறைப் பொருளினை எ - து.

(ப - உ.) எ - து.—யாது ஒரு பொருளையும் செவி கொடுத்து ஓராது தொடர்ந்து கேளாது அப்பொருளை மறைத்தல் தவிர்த்தால் பின்பு கேட்க எ - று.

இது கேட்டல் விருப்பமும் குற்றம் என்றது.
18



கா. 7.

ப. 6.

போற்றி னரியவை போற்றல் கடுத்தபின்
றேற்றுதல் யார்க்கு மரிது.

(கா - உ.) எ - து.—அரசர் மாட்டுக் குறிக்கொண்டு ஒழுக நினைப்பின் இழ்ச்சொல்லிப் போந்தவையும் பிறவும் ஆகிய அரியனவற்றைக் குறிக்கொண்டு நெறியின் ஒழுகுக: என்னை எனின் அவற்றுள் ஒன்றினுன் அரசர் முகம் கடுத்தபின் அவரைத் தெளிவித்தல் யாவர்க்கும் அரிது: எனவே உயிர்க்கேடும் பொருள் கேடும் ஆய்விடும் என்பது பொருள் ஆயிற்று எ - று.

(ப - உ.) எ - து.—காப்பான் ஆயின் காத்தற்கு அரியனவற்றைக் காக்க: குற்றம் உண்டு என்று ஐயப்பட்ட பின்பு தெளிவித்தல் யாவர்க்கும் அரிது எ - று.

அடுத்து ஒன்று சொல்லாமல் ஒழுகவேண்டும் பெரும்பான்மையும் பெண்டிர் மாட்டே வரும்.

என்றது. அது
(7) கா. 8.
ப. 2.

வேட்பன சொல்லி வினையில
வெஞ்ஞான்றும்
கேட்பினுஞ் சொல்லார் விடல்.

(கா - உ.) எ - து.—அரசரைச் சேர்ந்து ஒழுகும் அருமை இத்தன்மைத்து ஆகலான் அவர் விரும்பிக் கேட்பனவற்றைச் சொல்லி மற்று ஆங்கும் அவ்வுரையினான் மேல் ஒரு பயன் விளைத்தல் இல்லன வற்றை அரசர் கேட்டாராயினும் தாம் சொல்லாது ஒழிக எ - று.

பரி. பா - ம். "சொல்லா விடல்".

லித்

(ப-உ.) எ - து.—வேந்தனால் விரும்பப் படுவனவற்றைச் சொல் தமக்குப் பயன்படாதனவற்றைக் கேட்டாலும் சொல்லாது விடுக எ - று.

சொல்லாது விடல் ஆவது தூதனை நமக்குப் படை எவ்வளவு உண்டு என்று பகை அரசன் வினவினால், நீ அறியாதது ஒன்றோ என்று அளவு கூறாமை. வினையில 'என்றமையால் பயன் உண்

டாயின் சொல்லுக என்பது கருத்து: தன் அரசன் பெண்டிர் முத லாயினரைக் கேட்டார்க்குச் சொல்லாமை: இவை போல்வன சொல் லாமை வேண்டும் என்றது. (8)

கா. 9.

ப. 3.

செவிச்சொல்லுஞ் சேர்ந்த நகையு
வான்ற பெரியா ரகத்து.

மவித்தொழுக



(கா - உ.) எ - து.—அரசரைச் சேர்ந்து ஒழுகும் அமைச்சரானோர் மற்று அவர் தம்மொடு சொல்லும் செவிச்சொல் அன்றிப் பிறரொடு பொறையும் செவிச்சொல்லும், இனி மற்றவரோடு ஆயினும் பிறரோடு ஆயினும் அங்குக் கூடி நகும் நகையும் என்னும் இவை இரண்டும் ஒழிந்து ஒழுகுக: யார் மாட்டு எனின் செல்வம் முதலிய முற்றுப் பெற்ற பெரியோர் ஆகிய அவ்வரசரிடத்து எ - று.

(ப - உ.) எ - து.—ஒருவன் செவியுடன் சொல்லுதலும் ஒருவன் முகம் பார்த்துத் தம்மில் நகுதலும் தவிர்த்து ஒழுகுக அமைந்த பெரியாரகத்து எ - று.

இது செவிக் கூற்றும் நகையும் ஆகாது என்றது. (9)

கா. 10.

ப. 5.

மன்னர் விழைப விழையாரேன்
மன்னிய வாக்கந் தரும்.

மன்னரான்

(கா - உ.) எ - து.—அரசர் விரும்புவன யாவை சில: மற்று அவற்றைத் தாம் சிறிதும் விரும்பாரெனில், விரும்பாமையாகிய இது தான் அம்மன்னரால் நிலைபெற்ற செல்வத்தைக் கொடுக்கும் எ - று.

பரி. பா - ம். " விழையாமை ".

(ப - உ.) எ - று.—எல்லார்க்கும் பொதுவாகக் கருதினவை அன்றி மன்னரான் விரும்பப் பட்டவையிற்றை விரும்பாது ஒழிக. அவ்விரும்பாமை அம்மன்னன் தானே நிலையுள்ள செல்வத்தைத் தரும ஆகலான எ - று.

அவை நுகர்வனவும்
றைத் தவிர்தல் வேண்டும்

ஒப்பனை முதலாயினவும் ஆம். அவையிற்
என்றது. (10)

(கா - உ.) இனி இவ்வாறு அமைச்சர் மன்னரைச் சேர்ந்து ஒழுகி நின்ற இடத்து அவர் உட்குறிப்பு அறிந்ததனை முகக் குறிப்பினான் அறிந்து ஒழுகுதல் கடன் ஆகலான் மற்று இதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 33. குறிப்பறிதல்.

(ப - உ.) குறிப்பு அறிதலாவது அரசர் உள்ளக் கருத்தை அமைச்சர் அறிதலும் அமைச்சர் உள்ளக் கருத்தை அரசர் அறிதலும். இஃது அமைச்சர் இயல் ஆயினமையின் அமைச்சர் குறிப்பு அறிதல் கூறியது என்னை எனின், குறிப்பு அறிதல் அரசர்க்கும் வேண்டும்: ஆதலின் இறந்தது காத்தல் என்னும் தந்திர வுத்தியால் கூறப்பட்டது என்க. இது பெரும்பான்மையும் அமைச்சர்க்கு வேண்டுதலின் மன்னரைச் சேர்ந்து ஒழுகுதலின் பின் கூறப்பட்டது.

கா. 1.

ப. 7.

கூறுமை நோக்கிக் குறிப்பறிவா
மாறுநீர் வையக் கணி.

னெஞ்ஞான்று

ளம்

(கா - உ.) எ - து.—அரசன் சொல்ல வேண்டாமல் அவன் உள் குறித்ததனை முன்னம் குறிப்பினுன் அறிந்து கொள்வான் யாவ னோர் அமைச்சன் மற்று அவன் எஞ்ஞான்றும் வற்றா நீராகிய கடல் சூழ்ந்த வைப்பிற்கு ஓர் அணிகலம்: எனவே வையத்து வாழ்வோர்க் குப் பெரிதும் ஒளி..............ணயன் என்பது பொருள் ஆயிற்று எ - று.

(ப - உ.) எ - து.—அரசன் கூறுவதன் முன்னே அவன் மன நிகழ்ச்சியை நோக்கி அறியுமவன் எல்லா நாளும் மாறாத நீர் சூழ்ந்த வையத்துக்கு அணிகலன் ஆவான் எ - று.

இது மக்களில் சிறப்புடையன் ஆம் என்றது.

(1) கா. 2.

ப. 2.

அடுத்தது காட்டும் பளிங்குபோ னெஞ்சங்
கடுத்தது காட்டு முகம்.

(கா - உ.) எ - து.—தன்னை வந்து அடுக்கத் தோன்றின வண்ணத்தைத் தான் காட்டும் பளிங்கே போல ஒருவன் நெஞ்சமானது குறித்த நீர்மையைக் கைக்கொண்டு நீளக் காட்டுவன முகம்: எனவே ஒருவர் முன்னி அறிதற்குக் கருவி என்பது பொருள் ஆயிற்று எ - று.

(ப - உ.) எ - து.—தன்னை அடுத்த வண்ணத்தைக் காட்டுகின்ற பளிங்கைப் போல் நெஞ்சத்து மிக்கதனை முகம் காட்டும் எ - று.

மேல் முகம் அறிவிக்கும் என்றார்: அஃது அறிவிக்குமாறு என்னை என்றார்க்கு வெகுட்சி உண்டாயின் கருகியும், மகிழ்ச்சி உண்டாயின் மலர்ந்தும் காட்டும் என்றது. (2)

கா. 3. ப. 10.

குறிப்பிற் குறிப்புணர் வாரை யுறுப்பினுள்
யாது கொடுத்துங் கொளல்.

(கா - உ.) எ - து.—அரசாது முகம் கொண்ட குறிப்பினான் அவர் யாதானும் ஒரு கருமத்தை அவர் உள்ளம் கொண்ட குறிப்பினை அறிவார் யாவர்: மற்று அவர் தம்மை அவ்வரசரானோர் தாம் படைத்துள்ள அவற்றுள் பெரிதும் உறுப்பு உடையவாகச் சிறந்தனவற்றுள் யாதானும் கொடுத்துக் கைக்கொள்க எ - று.

(ப - உ.) எ - து.—முகக் குறிப்பினாலே உள்ளக் கருத்தை அறியு மவர்களைத் தன் உறுப்பினுள் வேண்டுவது யாது ஒன்றாயினும் கொடுத்துத் துணையாகக் கூட்டிக்கொள்க எ - று.

உறுப்பினுள் என்பதனைத் தனக்கு அங்கம் ஆயினவற்றுள் எனினும் அமையும். குறிப்பு அறிவாரை அறிதல் குறிப்பறிதல் ஆயிற்று. குறிப்பறிவாரை அரசன் கடியப்படுமோ கூட்டப்படுமோ என்று ஐய முற்றார்க்குக் கூறப்பட்டது. இவை இரண்டும் அரசன் மேலன. (3)

கா. 4. ப. 6.

குறித்தது கூறாமைக் கொள்வாரோ டேனை
யுறுப்போ ரனையரால் வேறு.

(கா - உ.) எ - து.—ஒருவர் உள்ளம் குறித்தது ஒன்றினை அவர் உரைக்க வேண்டாமல் மற்று அவர் முகக் குறிப்பினால் கைக்கொள்வா ருடன் மற்று ஏனை மாந்தர் முகம் கை கால் முதலிய மக்கள் உறுப் பின்கண் ஒரு தன்மையர் ஆதலே உள்ளது; மக்கட்கு அன்பு ஆகிய உணர்வின் பெரிதும் வேறுபாடு உடையார். என்னவே உறுப்பின் அவரோடு ஒருமை; உணர்வின் விலங்கொடு மக்கள் அனையர் என் பது வெளிப்படுத்தியவாறு ஆயிற்று என்பது பொருள் எ - று.

(ப - உ.) எ - து.—நினைந்ததனைச் சொல்லாமைக் கொள்ள வல் லாரோடு மற்றையார் உறுப்பு ஒரு தன்மையர் அல்லது அறிவினால் வேற்றுமை உடையர் எ - று.

இது குறிப்பறியாதார் அறிவில்லாதார் என்றது. (4)

கா. 5.

ப. 1.

முகத்தின் முதுக்குறைந்த துண்டோ
காயினுந் தான்முந் துறும்.

வுவப்பினுங்

(கா - உ.) எ - து.—மக்களாஞேர்க்கு உறுப்பிற் சிறந்தது ஆகிய முகத்தினும் பொறி உடையது ஒன்று உண்டோ? இல்லை அன்றே? என்னை எனின், ஒருவர் உள்ளத்தான் உவப்பினும் காயினும் மற்று அவை அவர் சொல்லாலும் செயலாலும் வெளிப்படுவதன் முன்னமே குறிப்பினல் தான் முந்துற்று நிற்கும் எ - று.

(ப - உ.) எ - து.—முகம் போல முதிர்ந்த அறிவு உடையது பிற உண்டோ? உவப்பினும் வெறுப்பினும் தான் முற்படக் காட்டும் எ - று.

குறிப்பு அறியுமாறு என்னை என்றார்க்கு இது என்றது.



கா. 6 .

ப. 5.

குறிப்பிற் குறிப்புணரா வாயி
னுறுப்பினு
ளென்ன பயத்தவோ கண்.

(கா - உ.) எ - து —தமது கண்கள் பிறர் நோக்கிய நோக்கிற் குறிப்பின் உளது ஆகிய குறிப்பினையே உணர மாட்டா ஆயின் உறுப்பி னுள் என்ன பயத்தனை கொல்லோ தாம்? எ - று.

(ப - உ.) எ - து.—ஒருவன் முகக் குறிப்பினானே அவன் மனக் குறிப்பை அறிய மாட்டாவாயின், தன் உறுப்புக்களுள் கண்கள் மற்று என்ன பயனைத் தருமோ? எ - று.

இது குறிப்பு அறியாதார் குருடரோடு ஒப்பர்

என்றது. (6) கா. 7.

ப. 4.

பகைமையுங் கேண்மையுங் கண் ணுரைக்குங்
வகைமை யுணர்வார்ப் பெறின். [கண்ணின்

(கா - உ.) எ - து.—ஒருவரோடு
பகைமையும் கெழுமுதல் தன்மையும்

ஒருவர்க்கு உள்ளத்தான் உள்ள
அவர் கண் தானே சொல்லித்

தரும்; யார்க்கு எனின், அவை இரண்டையும் பிறித்து நின்ற கூறுபாட்டை அங்ஙனம் தேர்ந்து உணர்வார்க்கு எ

உணர்த்து கண்
- று. மகிழ்ச்சி"

உரைக்கும் என்றது. *" மது மறைந்து கண்ணினானே கண்டு கொள்வார் என்பது.

உண்டோர் (ப - உ.) எ - து.—ஒருவனோடு கண்கள் சொல்லும்: கண்களினது வெறின் * - று.
உள்ள பகைமையும் நட்பையும்
வேறு பாட்டை அறிவாரைப் இது கண் அரிது என்றது.

கண்டு குறிப்பு அறிதல் நுண்ணியார்க்கு அல்லது (7)

கா. 8.

ப. 3.

நுண்ணிய மென்பா ரளக்குங்கோல்
கண்ணல்ல தில்லை பிற.

காணுங்காற்

(கா - உ.) எ - து.—உலகத்து யாவரினும்
யேம் என்று இருப்பாரையும் தாம் மற்றுத் தம்

யாம் பெரிதும் கூரி

குறிப்பினுன் அதை

* தொல்காப்பியம் பொருளதிகாரம் களவியல் இளம்பூரணருரை சூத்திரம் ௩௧௨ - வது—" ஏற்றமுந் தோற்றமும்" என்பதனுட் காட்டிய மேற்

கோட் செய்யுள் ஆகிய "எனல் காவ லிவளு மல்லள் "
பயின்று வருவது கண்டு கொள்க.

என்பதனுள் இவ்வடி 33. குறிப்பறிதல்

143

அறிந்து சீர் தூக்கும் கோல் ஆராயும் இடத்து
தாமே அல்லது வேறு இல்லை எ - று.

மற்று அவர் கண் /

அளக்கும் கோல் என்பது ஏற்றமும் தாழ்வும்
பலகாலும் தட்டியும் அசைத்தும் சீர்தூக்கும் தாசு

இனிது உணரப்
என்று ஆயிற்று.

(ப - உ.) எ - து.—யாம் நுண்ணிய அறிவு உடையம் என்பார்
பிறரை அளக்கும் கோல் ஆவது, விசாரிக்கும் இடத்துக் கண் அல்லது
பிற இல்லை: ஆகலான் கண் கண்டு அறிந்து கொள்க எ - று.

நண்ணியார் முகத்தின் தோற்றம் விடார்:
அறிய வேண்டும் என்றது.

அவரைக் கண்டு

(8) கா. 9.

ப. 9.

முகநோக்கி நிற்க வமையு மகநோக்கி
யுற்ற துணர்வார்ப் பெறின்.

(கா - உ.) எ - து.—தம்
யோர் தாம் வறிதே முகத்தை

கருத்தின் கொண்டது காணும் ஒள்ளி
நோக்கி மற்று உட்கொண்டதை உரை
யாமல் நிற்க அமையும் யார் மாட்டு எனின், அப்பொழுதே தாம் உட்கொண்டதனை ஓர்த்து மற்று இவர் உற்ற இன்பமும் துன்பமும் இதுபோலும் எனக் குறிப்பினான் அறிவாரைப் பெறின் அவர் மாட்டு எ - று.

(ப -
அகத்தை

உ.) எ - து.—முகத்தை நோக்கி நிற்க அமையும் தன் நோக்கி அதில் உற்றதனை அறிய வல்லாரைப் பெறின் எ - று.

எனவே அமாத்தியர் குறிப்பை அரசரும் அறிய வேண்டும் என்றவாறு ஆயிற்று: நிற்கின்ற தொழில் அமாத்தியன் கண்ணது ஆகலான். (9)

கா. 10.

ப. 8.

ஐயப் படாஅ தகத்த துணர்வாரைத்
தெய்வத்தோ டொப்பக் கொளல்.

(கா - உ.) எ - து.—ஒருவர் தாம் உள்ளத்துக் குறித்த பொருளை அல்லை ஆம் என்று ஐயப்படாதே இதுவே ஆகும் எனும் நல்ல குறிப்பு அறிவாளர் ஆகிய அமைச்சரை அவ்வாசர் தெய்வத்தோடு ஒப்பக் கொண்டு ஒழுக எ - று.

எனவே கருதி அறிவார் கடவுளர் ஆகலான் மற்று இவர் மக்கள் யாக்கையின் வத்தனராயினும் வானக் கடவுளரோடு ஒப்பர் எ - று.



(ப - உ.) எ - து.—பிறர் நினைத்ததனை ஐயப்படுதல் இன்றித் துணிந்து அறிய வல்லாரைத் தேவரோடு ஒப்பக் கொள்க எ - று.

அவரும் பிறர் நினைவு அறிவர்: இவரும் அவ்வாறு அறிதலான் இவரைத் தேவராக மதிக்கப்படும் என்றது. இவை இரண்டும் குறிப்பு அறிந்தார்க்கு உளது ஆகும் தன்மை கூறின. (10)

(கா - உ.) இனி அமைச்சரானோர் அரசன் குறிப்பு அறிந்து ஒழுகுதலே அன்றி அரசர் மாட்டு இருக்கும் அவையினது அறி அறிந்து ஒழுக வேண்டுதலான் மற்று இதன் பின்னரே மரபு அதனை விக்கின்றது மேலே அதிகாரம்.

## 34. அவை அறிதல்.

(ப - உ.) அவை அறிதலாவது இருந்த அவையத்தாரை அறிந்து அதற்குத் தக்க சொல்லுதல். அரசன் குறிப்பு அறிந்தாலும் அவை அறிந்து சொல்ல வேண்டுதலின் அதன் பின் கூறப்பட்டது.

கா. 1.

ப. 1.

அவையறிந் தாராய்ந்து சொல்லுக
சொல்லின்
றொகையறிந்த தூய்மை யவர்.

(கா - உ.) எ - து.—அரசர் மரபினை அறிந்து அவ்விடத்தில்

மாட்டு இருக்கும் அவையினது,
சொல்லுதற்குத் தகுவனவற்றை
ஆராய்ந்து பார்த்துச் சொல்லுக ; யார்
எனின்,............க் குற்றமில்லாத் தொகுதிப்
பாட்டினை அறிந்த தூய்மையினை உடைய அமைச் சர்
எ - று.

(ப - உ.) எ - து.—இருந்த அவையத்தாரை அறிந்து அதற்குத் தக்க சொல்லும் திறனை ஆராய்ந்து சொல்லுக சொல்லின் தொகையை அறிந்த தூய்மையை உடையர் எ - று.

தொகையறிதல் - திறன் அறிதல். இஃது மாறு கூறிற்று.

ஆராய்ந்து சொல்லு (1) கா. 2.

ப. 9.

அவையறியார் சொல்லன்மேற்
வகையறியார் வல்லதூஉ மில்.

கொள்பவர்
[சொல்லின்

(கா - உ.) எ - து.—இவ்வாறு அவையினது மாபினை அறிந்து ஆராயாது வறிதே சொல்லுதலை ஒருப்பட்டு நடாத்துவார் யாவர்; மற்று அவர் சொல்லின் தகுதியும் மற்று அல்லதும் ஆகிய கூறுபாட்டினையும் அறியார்: மற்று யாதானும் தாம் வல்லதும் இல்லையாய் விடும்; சொல்லின்கண் சோர்வு படுதலான் எ - று.



(ப - உ.) எ - து.—அவையினது அளவை அறியாது ஒன்றைச் சொல்லுதலை மேற்கொள்பவர் சொல்லின் வகையும் அறியார் ஆவார்: அன்றி வேறு வல்லதும் இலர் ஆவர் எ - று.

வகை - சில சொல். இது பிறரான்

மதிக்கப்படார் என்றது. (2)

கா. 3. ப. 10.

ஒளியார்முன் ஒள்ளியா ராதல் வெளியார்முன்
வான்சுதை வண்ணங் கொளல்.

(கா - உ) எ - து.—ஒள்ளிய அறிவாளர் அவை முன்னர்க்கு ஏற்பத் தாமும் ஒள்ளிய அறிவாளர் ஆதல் உடையர் எனின் அவ் அறிவு இல்லாப் பேதையார் ஆகிய வெள்ளறிவாளர் முன்னர் வரின், அங்குந்தனையும் வெண்மை நிறமே தனக்கு இயல்பு ஆகிய சுதை போலும் வெள்ளை வண்ணத்தைத் தம் கண் உள்ளது ஆகக் கொண்டு கழிதல் எ - று.

ஒளியார் என்பது ஒள்ளிய அறிவு உடையார் எ - று. வெளியர் என்பது வெள்ளியார், அறிவு கேடர் எ - று. வான் சுதை வண்ணங் கொளல் என்பது - இதில் வாலிமை - வெண்மை: சுதை என்பது மணலும் நீறும் கூடிய சுண்ணம்பு.

(ப - உ.) எ - து.—ஒள்ளிய அறிவை உடையார் முன்னர் தாமும் ஒள்ளிய அறிவை உடையாராய் இருத்தலும், வெள்ளறிவினர் முன்னர் வாலிய சுதை வண்ணம் போன்ற வெண்மையைக் கொண் டிருத்தலும் அவை அறிதலாவது எ - று.

மேல் அவை அறிந்து ஆராய்ந்து சொல்ல வேண்டும் அவற்றுள் அவை அறிதலாவது இது என்று கூறியது.

என்றார் :

(3) கா. 4.

ப. 6.

உணர்வ துடையார்முற் சொல்லல்
பாத்தியு ணீர்சொரிந் தற்று.

வளர்வதன்

(கா - உ.) எ - து.—ஒள்ளிய அறிவினை உடையோர் அவை

முன்னர் தாமும் தமது ஒள்ளிய அறிவு புலப்படச் சொல்லுதல் எத்தன்மைத்தோ எனின், தானே இனிது வளர்வது ஓர் பயிருக்குக் கட்டிய பாத்தியுள் பருவக் குறை வாராமல் நீர் கோலிச் சொரிந்த அத்தன்மைத்து எ - று.

(ப - உ.) எ - து.—யாதானும் ஒன்றைச் சொல்லுங்கால் அதனைத் தெரிந்து உணரும் அறிவை உடையார் முன்பு சொல்லுக: அது வளர்வது ஒன்று நின்ற பாத்தியின் கண்ணே நீர் சொரிந்தால் போலும் எ - று.

19



உணர்வது - அறிவது. மேல் சொல் அறிவார் முன் சொல்லுக என்றார்: அப்பொருள் அறிவார் முன்னர்ச் சொல்லுக என்பதூஉம், அச்சொல்லினாலே தம் கல்வி வளரும் என்பதூஉம் கூறிற்று :... ..(4)

கு. 5 .

ப. 8.

அங்கணத்து ளுக்க வமிழ்தற்று
ரல்லார்முற் கோட்டி கொளல்.

றங்கணத்த

(கா - உ). எ - து.—பொல்லாத நீர் உகுத்தற்கு உரியது ஓர் அங்கணத்துள் கொண்டு சென்று உகுத்த பாலும் தேனும் முதலிய அமுதம் எத்தன்மைத்து: மற்று அத்தன்மைத்து: யாது எனின் தம்மோடு சிறந்த நல்லறிவினர் அல்லார் கூட்டத்து முன்னர் தமது கல்வி விநோதம் கொண்டு ஒழுகல் எ - று.

(ப - உ.) எ - து.—அங்கணத்தின் உக்க அமிழ்தம் போல இகழ் ...வர்: தம்முடைய இனம் அல்லாதார் முன் சொல்லுவார் ஆயின் ...று.

கல்வி உடையார் புல்லவையுள் சொன்னால் உளது ...னை என்றார்க்கு இஃது இகழப்படுவர் என்றது.

ஆகும் குற்றம்

(5)

கா. 6. ப. 5.

இடைதெரிந்து நன்குணர்ந்து சொல்லுக
நடைதெரிந்த நன்மை யவர். [சொல்லின்

(கா - உ.) எ - து.—எய்தி யிருந்த அவையிடம் அறிந்தும் பெரி தும் நன்மையைக் குறிக்கொள்வது அறிந்தும், பின் ஒன்று சொல் லுக. யார் எனின், சொல் ஒழுங்கினை நன்முறை யான் அறிந்த நன்மையினை உடையவர் எ - று.

(ப - உ.) எ - து.—[N. B. இது சுவடியில்

எழுதாமல் விடு

பட்டுள்ளது] சொன்னல் அதற்கு வரும் குற்றத்தை ஆராய்ந்து நன்மை ஆம் அவற்றை அறிந்து சொல்லுக: சொல்லினது வழக்கு ஆராய்ந்த நன்மை உடையார். இஃது ஆராய்ந்து சொல்லுமாறு கூறிற்று. (6)

கா. 7.

ப. 3.

நன்றென்ப வற்றுள்ளும் நன்றே முதுவருண்
முந்து மொழியாச் செறிவு.

(கா - உ.) எ - து.—இது நன்று என்று சான்றோர் தெரிந்து கைக்கொண்டவற்றுள் எல்லாம் சால நன்றே: யாது எனின், தம்மினும் முதிர்ந்த அறிவினை உடைய முதறிவாளர் முன்னர் அவர்

34. அவை அறிதல்

4.

குறிப்பு அறிந்து அன்றித் தாம் ஒன்றினை லாமையாகி நின்ற அரணிப்பு எ - று.

முந்து உற்றுச் சொல்

அரணிப்பு ஆவது - நாவை மிகவும் ஒடுக்கிக்

கொண்டு இருத்தல்
என்பது.

(ப - உ.) எ - து.—நன்று என்று சொல்லப்பட்ட எல்லாவற்
றுள்ளும் மிக நன்று தம்மின் முதிர்ந்தார் முந்து
அடக்கம் எ - று.

உற்றுச் சொல்லாத

முதுவர் - தவத்தாலும் குலத்தாலும் முதிர்ந்தார். இஃது இருந்த அவையின் கண் முந்து உற்றுச் சொல்லல் ஆகாது என்றது. இவை மூன்றும் ஆராய்ந்து சொல்லுமாறு கூறின. (7)

ir. 8 .

ஆற்றி னிலைதளர்ந் தற்றே வியன்புல
மேற்றுணர்வார் முன்ன ரிழுக்கு.

(கா - உ.) எ - து.—ஒன்று தொட்டுத் தாம் ஒழுகி வருகின்ற ஒழுக்க நிலையின், தவறியது எத்தன்மைத்து: அவ்வளவு அன்றி அதனினும் சாலக் குற்றம் உடைத்து; யாது எனின் தம் கல்வியால் பரந்த அறிவினைத் தாம் ஒன்று சொல்லத் தொடங்கும் போது எதிர் ஏற்று அறிவோர் கூட்டத்து அவை முன்னர் தமது சொல்லின் சொல் இழுக்கம் எ - று.

ஆற்றின் நிலை தளர்ந்து அற்று என்றது - தாம்

ஒழுகி வருகின்ற
ஒழுக்கின் நிலையின் தவறிய அத்தன்மைத்து என்றது. வியன் புலம் என்பது உயர்ந்த அறிவு என்றது. ஏற்று உணர்வார் என்பது உரை. கலப்பதன் முன்னமே யாது எனக் கருதி இதனை எதிர் ஏற்று அறிவோர் எ - று.

இழுக்கம் என்பது..................

(ப - உ.) எ - து.—ஒரு நெறியின்கண் நின்றார் அந்நிலைமை குலைந்தாற் போல இகழப்படும்: அகன்ற கல்வியைக் கேட்டு அறிய வல்லார் முன்னர்த் தப்புதல் எ - று.

ஏற்று என்பது கேள்வியின் கண் வருதலின் கேள்வி ஆயிற்று மேல் தப்பு வாராமல் சொல்ல வேண்டும் என்றார்: அதனால் வரும் குற்றம் என்னை என்றார்க்கு இது கூறப்பட்டது. (8)

கா. 9. ம. 7.

புல்லவையுட் பொச்சாந்துஞ் சொல்லற்க நல்லவையு
ணன்கு செலச்சொல்லு வார்.



(கா - உ.) எ - து.—தாம் புல்லறிவாளர் குழாத்துப் புக்கால் தமது சிறந்த சொல்லினை மறந்தும் சொல்லற்க: யார் எனின், நல்லனை அறியும் நல்லறிவாளர் அவையின்கண் தமது நன்கு அமைந்த சொல் அவர் செவிக்குச் சொல்லுமாறு சொல்ல வல்ல தூய அமைச்சர் எ - று.

பொச்சாந்து - மறந்து.

(ப - உ.) எ - து.—புல்லியார் இருந்த அவையின்கண் மறந்தும் சொல்லாது ஒழிக: நல்லார் இருந்த அவையின்கண் நல்லதனை இசையச் சொல்ல வல்லார் எ - று.

இது வெளியார் முன் வெள்ளையா
சொல்லாது இருத்தல் என்றது.

யிருத்தலால் அவர் முன்பு
(9)

கா. 10. ப. 4.

கற்றறிந்தார் கல்வி விளங்குங் கசடறச்
சொற்றெரிய வல்லா ரகத்து.

(கா - உ.) எ - து.—பல நூல்களையும் திருந்தக் கற்று அமைந்த அமைச்சாது கல்வியானது விளங்காநிற்கும்: எவ்விடத்து எனின், தமது சொல்லினை ஒருகா..................எ - று.

(ப - உ.) எ - து.—நூல்களைக் கற்று அவற்றின் பயனும் அறிந்தவர்களது கல்வி விளங்காநிற்கும்: குற்றம் அறச் சொல்லை ஆராய வல்லார் முன்னர்ச் சொல்லின் எ - று

கல்வியின் விழுப்பம் கற்றோர்க்கு அல்லது
லான் அவர் முன்பு சொல்லுக: ஆதலானே
என்றது.
அறிதல் அரிது ஆக
அக்கல்வி விளங்கும்
(10)

(கா - உ.) இனி மற்று இங்ஙனம் அரசரானோர் அமைச்சர் தூயவை குறிக்கொண்டு அறிந்த பின், மற்று அவை முன் இருந்து காரியம் பொருள் உறுதி உரைக்க வேண்டும் : ஆதலான் மற்று அதன் பின்னரே அவைக்கண் அஞ்சாமை யதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்

## 35. அவை அஞ்சாமை.

(ப - உ.) அவை அஞ்சாமை யாவது அவையின் கண் அஞ்சாது சொல்லுதல். அவை அறிந்தாலும் அஞ்சாது சொல்ல வேண்டுத லின் அதன்பின் கூறப்பட்டது.



கா. 1.
ப. 6.

பகையகத்துப் பேடிகை யொள்வா ளவையகத்
தஞ்சு மவன்கற்ற நூல்.

தும்

(கா - உ.) எ - து.—ஒருவன் தான் பகை நடுவுள் புக்க உறையகத்து ஒடுங்கிய கூரிய தெளிந்த வாளினை ஒக்கும் :

இடத்
யாது

எனின், ஒருவன் அவையில் சென்று புக்க
இடத்துத் தனது கல்வி
யால் தெளிந்த கூரிய அறிவு புலப்படாமை அஞ்சி
இருப்போன் கற்ற
நூலானது எ - று.

(ப - உ.) எ - து.—பகையின்கண்
அஞ்சுமவன் பிடித்த கூர்
வாள் போலும்: அவையின்கண் அஞ்சுமவன்
கற்ற நூலும் எ - று.

மேல் பயன் இல்லை என்றார்: இது பயன்
டிற்று.

இல்லாதவாறு காட்
(1)

கா. 2.
ப. 8.

உளரெனினு மில்லாரோ டொப்பர்
களனஞ்சிக்
கற்ற செலச்சொல்லா தார்.

(கா - உ.) எ - து.—இவ்வுலகத்து உயிர் வாழ்க்கை உடைய
ரேனும், இறந்தாரோடு ஒப்பர்: யார் எனின், தாம் எய்திய அவைக்
களத்தை அஞ்சித் தாம் கற்றனவற்றை அவர் செவிக்கு ஏற்கு
மாறு சொல்லுதல் கல்லாதார் எ - று.

(ப - உ.) எ - து.—உளர் ஆயினும் செத்தாரோடு அவைக் களத்து அஞ்சித் தாம் கற்றதனை அவர்க்கு இசையச்

ஒப்பர்:
சொல்ல
மாட்டாதார் எ - று.

இவை ஐந்தும் அவை அஞ்சுதலான் வரும் குற்றம் கூறின (2)

கு. 3.

ப. 1.

பகையகத்துச் சாவா ரெளிய ரரிய
ரவையகத் தஞ்சா தவர்.

(கா - உ.) எ - து.—பகை நடுவுள் சென்று புக்க இடத்துத் தமது உயிர் ஓம்பாது மானம் ஓம்பிச் சாகத் துணிவார் உலகத்துள் எளியர் ஆகவும் கூடும்: அவையின் நடுவுள் சென்று புக்க இடத்துச் சிறிதும் அஞ்சாது தெளிந்த அறிவுறுத்தும் அமைவு உடையோர் பெரிதும் அரியர்: எனவே ஆண்மைக்கு அவரும் அறிவுக்கு இவரும் சாலச் சிறந்தார் எ - று.

(ப - உ.) எ - து.—பகையின்கண் அஞ்சாது நின்று சாவார் பெறுதற்கு எளியர்: அவையின்கண் அஞ்சாது சொல்ல வல்லார் பெறுதற்கு அரியர் எ - று.

இஃது அவை அஞ்சாமை அரிது என்பது.

(3) கா. 4.

ப. 2.

கற்ருர்முற் கற்ற செலச்சொல்லித்
மிக்காருண் மிக்க கொளல்.

தாங்கற்ற

(கா - உ.)
சான்ஞேர் யாது

எ - து.—இவ்வாறு அறிவு பெரிது உடைய அமைச்ச
செயற்பாலது எனின், பலவற்றையும் கற்று வல்ல

சான்ருேர்
செவிக்குச்

கூட்டத்து அவை முன்னர்த் தாம் கற்றனவற்றை அவர்
செல்லுமாறு சொல்லுதலும் செய்து மற்று அதுவேயும்

அன்றி அவ்விடத்துத் தாம் கற்றனவற்றின் மிக்கார் உளர்
மிக்கனவற்றை இகழாது பெரிதும் குறிக்கொள்க எ - று.

எனின்

(ப - உ.) எ - து.—தாம் கற்றதனைக் கற்றவர்கண் முன்பே இசையச் சொல்லித் தாம் கற்றதனினும் மிகக் கற்றார் மாட்டு அவர் மிகுதியாகக் கற்ற பொருளைக் கேட்டுக் கொள்ளுதல் அவை அஞ்சாமை ஆவது எ - று.

கேட்டல் காரணமையால் வருதலின் அஞ்சாமை ஆயிற்று. மேல் அரிது என்று கூறிய அவை அஞ்சாமை எத்தன்மைத்து என்றற்கு இத்தன்மைத்து என்று கூறப்பட்டது.

(4) கா. 5.

ப. 3.

கற்றாருட் கற்றா ரெனப்படுவர் கற்றார்முற்
கற்ற செலச்சொல்லு வார்.

(கா - உ.) எ - து.—உலகத்துக் கற்றவர் பலருள்ளும் இவர் பெரிதும் கற்றார் என்று அக்கற்றவர் தம்மாலே முன் எடுத்து உரைக்கப்படுவார்; யார் எனின் கற்றோர் முன்னர்த் தாம் கற்றனவற்றை ஏற்கச் சொல்ல வல்லோர் எ - று.

(ப - உ.) எ - து.—கற்றார் எல்லாரினும் கற்றார் என்று சொல்லப்படுவார் தாம் கற்றதனைக் கற்றார் முன்பே அவர்க்கு ஏற்கச் சொல்ல வல்லார் எ - று.

இது கற்றார் என்பதூஉம் அவை அஞ்சாதவரையே என்று கூறப்பட்டது. (5)

கா. 6. ப. 5.

வாளொடென் வன்கண்ண ரல்லார்க்கு நூலொடென்
நுண்ணவை யஞ்சு பவர்க்கு.

(கா - உ.) எ - து.—பலகாலும் தாம் வாளொடு பயின்று போர் தலைசேரினும் என்ன பயன்? பகை வந்து உற்ற இடத்து அவ்வாளினால் பணி கொள்ளும் தறுகண்மை உடையர் அல்லாதார்க்கு; மற்று

அப்படியே சிலர் பல நாளும் நூலொடு பயின்று போந்தாரேனும் என்ன பயன்? அந்நூலைத் தாய எதிர் விடுத்து இன்பு உறுது கல்விக்கு உரிய சான்றோர் குழாத்தை அஞ்சுமவர்க்கு எ - று.

(ப - உ.) எ - து.—வாளினால் பயன் என்னை வன்கண்ணர் அல்லாதார்க்கு? அதுபோல நூலினால் பயன் என்னை நுண்ணிய அவையின்கண் அஞ்சுபவர்க்கு? எ - று.

இது பிறர்க்குப் பயன் படாமை அன்றித் படாது என்றது.

தமக்கும் பயன் கா. 7.

(6)

ப. 7.

கல்லா தவரிற் கடையெனப கற்றறிந் து

நல்லா ரவையஞ்சு வார்.

(கா - உ.) எ - து.—மற்று இவ்வாறு அன்றிக் கற்று அறிவு இல்லாத மூடரினும் சாலக் கடை என்று சொல்லுப சான்றோர்: யாரை எனின், கற்க வேண்டுவன கற்று அவற்றின் கருத்து அறிந்து வைத்துப் பின்னும் கல்வியால் பெரிதும் நல்லோரது குழாத்தைக் கண்ட இடத்து அஞ்சுமவர்களை எ - று.

(ப - உ.) எ - து.—கல்லாதவரினும் கடை என்று சொல்லுவார் உலகத்தார்: கற்று அறிந்து வைத்தும் நல்லோர் இருந்த அவையின்

கண் சொல்லுதல் அஞ்சுவாரை எ - று.

இது கல்லாதவரினும் இகழப்படுவர் என்றது.

(7) கா. 8.

ப. 10.

வகையறிந்து வல்லவை வாய்சோரார் சொல்லின்
தொகையறிந்த தூய்மை யவர்.

(கா - உ.) எ - து.—இக்குற்றம் தங்குதல் இன்றி அவை முன்னர்ச் சென்ற இடத்துத் தாம் கற்று வல்லவை சொல்லும் கூறுபாடு அறிவதும் செய்து மற்றும் அவைக்கு உரித்து அல்லதனை மறந்தும் அவர்வயின் சோர விடுவது இலர்: யார் எனின் கல்வி மிகுதியால் சொல்லின் தொகை அனைத்தும் துரிசு அற உணர்ந்த தூய்மையின் உடையோர் எ - று.

(ப - உ.) எ - து.—தப்பினால் வரும் குற்றத்தை வகை அறிந்து கற்று வல்ல அவையின்கண் அச்சத்தினால் சோர்வுபடச் சொல்லார்: சொற்களின் தொகுதியை அறிந்த தூய்மையை உடையவர் எ - று.

மேல்கூறிய வாற்றால் கற்றவர்கள் தப்பச் சொல்லார் என்று அக்கல்வியால் பயன் கூறிற்று.

(8)



கா. 9.

ப. 4.

பல்லவை கற்றும் பயனிலரே நல்லவையு
ணன்கு செலச்சொல்லா தார்.

(கா - உ.) எ - து.—பலவற்றுள் கற்று உணர்ந்தும் அவற்றால் ஒரு பயனும் இலர்: யார் எனின் நல்லறிவாளர் குழீஇச் சென்ற இடத்தும் கல்வி நன்மை அவர் செவிக்கு ஏற்குமாறு சொல்லுதற்கு அல்லாதார் எ - று.

யர்

(ப - உ). எ - து.—பல நூல்களைக் கற்றாலும் ஒரு பயன் உடை அல்லர்: நல்லவையின்கண் நன்றாக அவர்க்கு ஏற்கச் சொல்ல மாட்டாதார் எ - று.

இஃது அவை அஞ்சுவார் கற்ற கல்வி என்றது.
பிறர்க்குப் பயன் படாதது கா. 1 0.

(9)

ப. 9.

ஆற்றி னளவறிந்து கற்க வவையஞ்சா
மாற்றங் கொடுத்தற் பொருட்டு.

(கா - உ.) எ - து.—அரசர்க்கு
னமே தாம் கற்கும் இடத்துக் கல்வி

அமைச்சராய் உள்ளார் முன்
நெறியின் அளவு அறிந்து கற்
பார் ஆக : என்னை எனின், பின்பு தாம் சென்று
எய்திய அவையினை
அஞ்சாது மற்று அவர் கேட்டவற்றிற்கு
வழங்குதல் பொருட்டு ஆக எ - று.

மாற்றம் வன்மையின்

இதனால் என் சொல்லியவாறோ எனின், அரச நீதியும் அமைச்ச நீதியும் அறநெறிக்கு உரியவும் புரவியும் களிறும் பொருந்துவ குறிப்ப வும் பிறவும் ஆகிய வரம்புக்கு ஏற்பன கற்க என்று இங்குச் சொல்லிய அன்றிப் புல்லிய கற்பின் அவை அரசர்க்கும் அவைக்கும் அடாதன எ - று.

(ப - உ.) எ - து.—அவை
தற்காக நெறியானே அளவுகூறு

அஞ்சாது மறு மாற்றம் சொல்லு
நூல்களை அறிந்து கற்க எ - று.

அளவு - ப்ரமாணம். அது கூறும் நூல்கள் ஆவன : மீமாம்ஸை முதலான நூல்கள். கல்வியாவது மெய் ஆராய்ச்சியான நூல்களைக் கற்றலும் வேதவேதாந்தம் கற்றலும், உழவும் வாணிகமும் கற்றலும்,

படை வழங்கல் ஆகிய தண்ட நீதி கற்றலும் என நால் வகைப்படும் என்பது களப்ரதீபிகை. அந்த நான்கிலும் பின் கூறிய இரண்டும் சொல்லாண்மை யன்மையானும், வேதம் கேட்டல் சொல்லாதே

அமைதலா னும், அவையிற்றைக் கூறுது தர்க்கம் கற்றூர்க்கு அல்லது

36. (கா.)



மறுமாற்றம் சொல்லுதல் அரிது ஆதலின் என்று இது கூறப்பட்டது.

அதனைக் கற்க வேண்டும்

(10)

(கா - உ.) இனி மற்று இங்கீகி அரசரும் அமைச்சரும் கூடி வாழினும், தாமே பரிக்து கொள்ளும் நாடு அன்றி இயல்பிற............ ............நாடு இவ்வாறே வேண்டும் என்பதனுல் மற்று அதன் பின் னரே அதனை அறிவிக்கின்றது மேலையதிகாரம்.

36. (கா.) நாடு.—(பரி.) பொருளியல்.

(ப - உ.) பொருள் இயல் ஆவது: பொருளின் பகுதி கூறுதல். அது கூறிய அதிகாரம் ஐந்தினும் முற்படப் பொருள் ஆகுதற்கு இடம் ஆகிய நாட்டு இயல்பு ஓர் அதிகாரத்தாலும், அந்நாட்டிற்கு ஏமம் ஆகிய அரண் இயல்பு ஓர் அதிகாரத்தாலும், அவ்விடங்களில் ஆக்கப்பட்ட பொருள் இயல்பு ஓர் அதிகாரத்தாலும், பொருளினான் உண்டாக்கப் பட்ட படை இயல் இரண்டு அதிகாரத்தாலும் கூறப் பட்டது. இஃது அமைச்சர் செய்யப்படுதலின் அதன்பின் கூறப் பட்டது: அவற்றுள் நாடு ஆவது - நாட்டு இலக்கணம் கூறுதல்.

கா. 1. ப. 1.

வருபுனலும் வாய்ந்த மலையு
மிருபுனலும்
வல்லரணு நாட்டிற் குறுப்பு.

(கா - உ.) வருபுனல் என்றது கூடிக்கூடிப் பல இடத்தும் மலை முதலாகக் கடல் ஈறு ஆக வழித் தொடர்பு அறாது வரு புனலுடைய ஆறுகளும்: வாய்ந்த மலை என்றது வாய்ப்புடை மலைகளும்: இரு புனலும் என்றது சிறிது கல்லிய இடத்துக் கீழ் நீரும் மேல் தெளி யும் குளநீரும்: வல் அரணும் என்றது பல இடத்தும் தனக்கும் தன் படைத்தலைவர்க்கும் தனது நாட்டுக் குடிகளுக்கும் சென்ற இடத்துப் பிறர் நலியாது சேர்ந்து நீங்குதற்கு உரிய அரண்களும்: இனி நாட்டு எல்லைக்கண் மாற்றார் வருதற்கு அரிய புலியும் எண்கும் மாவும் பயிலும் அடர் பெருங்காடும்: மிடை தரும் கான்யாறும் இங்குச் சொன்ன இவை அனைத்தும் மாசு அறச் சிறப்பது நாடு எ - று.

(ப - உ.) எ - து.—ஆற்று நீரும் வாய்ந்த மலையும் கீணீரும் ஊற்று நீரும் வலிய அரணும் நாட்டிற்கு அங்கம் எ - று.

நாடு ஆக்கும் இடத்து யாறு ஒழுகும் இடத்தினையும், பயன் படும் மலையினையும், ஏரி ஆக்கும் நீர் நிறுத்தல் ஆம் இடத்தினையும், குன்று கல்வி நீர் உண்டாக்கல் ஆம் இடத்தினையும், அரண் ஆக்கும் இடத்தினையும் கண்டு அவ்விடத்தை நாடு ஆக்குக: அவை நாட்டிற்கு
20



உறுப்பு ஆகலான் என்றவாறு ஆயிற்று.
யாமல் வேண்டும் என்றது.
இவ்வைந்து உறுப்பும் குறை கா. 2.
(1)

ப. 9.

உறுபசியு மோவாப் பிணியுஞ்
செறுபகையுஞ்
சேரா தியல்வது நாடு.

(கா - உ.) எ - து.—மிக்க பசியும், நிலத்து ஆகிய நீங்காப் பிணியும், தம்மைச் செறுக்கும் நன்கு நடப்பது நாடு எ - று.

இயல்பால் உளது
பகையும் சேராது

(ப - உ.) எ - து.—மிக்க பசியும், இடையறாத

பிணியும், ஒறுக்
கும் பகையும் சேரா து இயன்றது நாடு எ - று.

இது சேர்தல் ஆகாதன இவை என்று கூறிற்று.

(2) கா. 3.

ப. 8.

கேடறியாக் கெட்ட விடத்தும்
நாடென்ப நாட்டிற் றலை.

வளங்குன்று

(கா - உ.) எ - து.—வேற்று அரசரால் கேடு அறியாது யாதா
னும் ஒருவாற்றால் கெட்ட இடத்தும் பின்னும் விளைவளம் குறை
படாது ஆகிய நாடு யாது? மற்று அது நாடுகளில் பெரிதும் தலைமைப்
பாடு உடையது எ - று.

(ப - உ.) எ - து.—கெடுதல் அறியாதாய்க்
கெட்டது ஆயினும் பயன் குன்றாத நாட்டினையே
என்று சொல்லுவர் எ - று.

எல்லா நாடுகளினும் தலையான நாடு

மேல் கூறிய விட்டில் முதலாயினவற்றால் கெட்டது ஆயினும்
பின்பும் ஒருவாற்றால் பயன்படுதல் ஆவது தலையான நாடு என்றது.(8)

கா. 4.

ட. 4.

தள்ளா விளையுளுந் தக்கோருந் தாழ்விலாச்
செல்வருஞ் சேர்வது நாடு.

(கா - உ.) எ - து.—மாறாது விளையும் விளைச்சலும், தகுதியால் சிறந்த கல்வியும் ஞானமும் உடைய சான்றோரும், நாளும் யாவர்க்கும் ஈயக் குறைபடாத செல்வம் உடையோரும் செறிந்து இயல்வது நாடு எ - று.

(ப - உ.) எ - து.—தப்பாமல் விளையும் நிலங்களும், தகுதியாரும், தாழ்வு இல்லாத செல்வரும் சேர்வது நாடு எ - று.
உடை

தள்ளா விளையுள் - மழை இல்லாத காலத்திலும் சாவி போகாத நிலம். தக்கார் - குலத்தாலும் குணத்தாலும் அமைந்தார். தாழ்வு

36. (கா.)



இல்லாத செல்வர் - பிறரால் இகழப்படாத செல்வர்: பிறர்க்கும் பயன்படும் செல்வர் என்றது. இம்மூன்றும் எல்லா உயிர்க்கும் ஆகலின் சேரவேண்டும் என்று கூறப்பட்டது. (4)

கா. 5.
ப. 3.

நாடென்ப நாடா வளத்தன நாடல்ல
நாட வளந்தரு நாடு.

(கா - உ.)
யாதினை எனின்

எ - து —நாடு என்று சொல்லுவர் பெரியோர்: புறத்து ஒன்று போய்த் தேட வேண்டாத பல வகைப் பட்ட விளைவளம் சிறந்த நாடுகளை: மற்று அல்லவை யாது எனின் நிலத்து விளையும் வளம் புறத்துப் போய்த் தேடுமாறு விளையும் நாடு எ - று.

(ப - உ.) எ - து.—நாடு என்று சொல்லுவர் தேட வேண்டாத வளத்தினை உடைய நாட்டை; நாடு அல்ல என்று சொல்லுவர் தேடினால் வளம் தருகின்ற நாட்டை எ - று.

இஃது எல்லா நிலத்திலும் உள்ள பண்டம் கலத்தினால் ஆதல் காலினால் ஆதல் தன்னிடத்தே உடைத்தாதலும், தன் நிலத்தில் உள்ள பண்டத்தை மிகுதியாக உடைத்தாதலும் வேண்டும் என்றது. (5)

பெரும்பொருளாற் பெட்டக்கதாகி
லாற்ற விளைவது நாடு.
யருங்கேட்டா

(கா - உ.) எ - து.—அவ்விடத்து வாழ்வார் பலரும் பெரும் பொருள் செல்வருமாய்ப் பிறநாட்டு உள்ளோரும் தம்மை நாள்தோறும் விரும்பத் தக்கதுமாய்த் தம் அரசாலும் பிறவாற்றாலும் என்றும் கேடு அறியாதுமாய் அளவு இறந்த விளைச்சலை உடையது யாது அதுவே நாடு ஆவது எ - று.

பெட்டக்க என்றது விரும்பத்தக்க என்றது. அருங்கேட்டால் என்றது கேடு அரிய என்றது.

(ப - உ.) எ - து.—பெரும்பொருளாலே விரும்பத்தக்கது ஆகிக் கேடு அரிது ஆகலோடே மிகவும் விளைவது நாடு எ - று.

விரும்பத் தக்கது என்றமையால் பெரும் பொருள் ஆவது - நெல்லும். கேடு ஆவது விட்டில், கிளி, நால்வாய், பெரும்புயல். இது மேல் சொன்னவும் சொல்லாதனவும் தொகுத்துக் கூறிற்று. (6)



கா. 7.

ப. 6.

பல்குழுவும் பாழ்செய்யு முட்பகையும் வேந்தலைக்குங்
கொல்குறும்பு மில்லது நாடு.

(கா - உ.) எ - து.—மறப்படை மாக்கள் பெருகக் கூடும் கூட்டமும், செல்வம் உடையோர் தம் செல்வத்தைத் தேய்க்கும் உட்பகையும், நாடுபற்றி வாழும் பெருநெறி வேந்தனைக் காடுபற்றி நிற்கச் செய்யும் கொல்வினைக் குறும்பும் இல்லது யாது? மற்று அதுவே நாடு ஆவது எ - று.

(ப - உ.) எ - து.—பலவாய்த் திரளும் திரட்சியும், பாழ் ஆக்கும் உட்பகையும், வேந்தனை அலைக்கின்ற தொழிலை உடைய குறும்பரும் இல்லாதது நாடு.

பாழ் ஆக்கும் உட்பகை ஆவது - நாட்டுத் தலைவராயினும் அதிகாரியாயினும் நாட்டைக் கெடுக்குமவர்கள். இவை ஆராய்ந்து கடிய வேண்டுதலின் இது கூறப்பட்டது. (7)

கா. 8.

ப. 9.

பொறையொருங்கு மேல்வருங்காற் றாங்கி யிறைவர்க்
கிறையொருங்கு நேர்வது நாடு.

(கா - உ.) எ - து.—கோல் கீழ்வாழும் குடிகள் ஆயினர் யாதானும் ஒரு காரணத்தான் முன் இறுக்கும் ஆறு அன்றிப் பெரும் பொருள் பாரம் தங்கள் மேல் வரவேண்டும் காலத்தும் அதனைப் பொறுத்தும், அரசனைப் பாதுகாத்துப் பின்னும் அரசற்கு ஆறில் ஒன்று ஆக என்றும் இறுத்தற்கு உரிய இறையினையும் ஒன்றும் குறைபடாமல் ஒருங்கு உடன் தொகுத்து இயல்வது யாது? மற்று அதுவே நாடு ஆவது எ - று.

(ப - உ.) எ - து.—குடிமை செய்தல் பல காலத்திலே பலவரினும் அதனைப் பொறுத்து நிச்சயித்த கடமையை அரசனுக்கு ஒருங்கு கொடுக்க வல்லது நாடு எ - று.

தளர்ச்சியைச் செய்தலின் பொறை ஆயிற்று. குடிமை ஆவது கடமை ஒழிய வரும் அவை, இதனானே குடிமக்கள் பண்பு உடையராக வேண்டும் என்பது கூறிற்று. (8)

கா. 9 .

. ப. 2.

பிணியின்மை செல்வம் விளைவின் ப மேம
மணியென்ப நாட்டிற்கிவ் வைந்து.

(கா - உ.) எ - து.—நிலனும் நீரும் சோறும் இனிமைகளானே பிணி பெரிது இன்மையும், பலர்

முதலியவற்றின்
வழிச் செல்வம் 37. அரண்



பெரிது உடைமையும், வேட்பன எல்லாம் விளைந்து செல்கின்ற விளை நுகர் பொருளினும், நுண்ணறிவு இன்பம் ஆகிய இன்பமும் ஒரு நாள்போல் எந்நாளும் அரச..................ேமமும் என்னும் இவை ஐந்தும் நாட்டிற்கு அணி எ - று.

(ப - உ.) எ - து.—நோய் இன்மையும், செல்வம் உடைமையும், விளைவு உடைமையும், காவல் உடைமையும், என்று சொல்லப்பட்ட இவை ஐந்தும் நாட்டிற்கு அழகு என்று சொல்லுவர் எ - று.

செல்வம் - பொன்னும் பசுவும் பலவாயின மிகுதல்; விளைவு ஆவது - பல தானியங்களும் பொலிவு உடைமை; இன்பம் ஆவது - கண்டும் கேட்டும் உண்டும் உயிர்த்தும் உற்றும் இன்பு உறப்படும் பொருள்களை உடைமை; காவல் ஆவது மாற்றரசனாலும் தன் அரசனாலும் நலிவு இன்மை. மேல் நாட்டிற்கு அங்கம் ஆவன கூறினார்: இஃது அழகு ஆவன கூறிற்று. (9)

கா. 10. ப. 10.

ஆங்கமை வெய்தியக் கண்ணும்
வேந்தமை வில்லாத நாடு.

பயமின்றே

(கா - உ.) எ - து.—அவ்வண்ணமே கள் எல்லாம் முற்றுப்
கீழ்ச்சொல்லி வந்த நன்மை இலதே: யாது எனின்

பெற்ற இடத்தும் யாதானும் ஒரு பயன்
கொற்றவன் காவல் முற்றுப் பெறுதல் இல்
லாத நாடானது எ - று.

(ப - உ.) எ - து.—மேல்
ஆயினும் பயன் இல்லையாம்:
அல்லாத நாடு எ - று.
கூறிய வாற்றான் எல்லாம் சேர்ந்தது
வேந்தனது அமைதியை உடைத்து இது
என்றது.

நாட்டிற்கு அரசனும் பண்பு உடையன்

ஆகவேண்டும்

(10)

(கா - உ.) இங்ஙனம் பொது வகையான் நாட்டு அரண் பின் மன்னர்பதி அரண் கூறலும் இயல்பு ஆகலான் மற்று பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலே அதிகாரம்.

கூறிப்

இதன்

## 37. அரண்.

(ப - உ.) அரண் ஆவது - அரண் இலக்கணம்

கூறுதல். மேல்

நாட்டி இலக்கணம் கூறினார் நகர் இலக்கணம்

அதன் 'பின் இது கூறப்பட்டது.

கூறுகின்றார் ஆகலின்

கா. 1.

ப. 6.

கொளற்கரிதாய்க் கொண்டகூழ்த் தாகி

நிலைக்கெளிதா நீர தரண்.

யகத்தார்



(கா - உ) எ - து.—பகை வேந்தர் முற்றி இருந்தும் கொளற்கு அரிது ஆய், அகத்தோர் நெடிது ஆண்டு இருப்பினும் உணற்கு எளிது ஆகப் பெரிதும் ஈட்டிக் கொண்ட நெல் அரிசி கொள்ளுப்பயிர் முதலிய உணவு பொருள்களையும் உடைத்து ஆய், நாற்பெருஞ் சேனையும் விட்டு உலாவுதற்கு வேண்டும் வீதியும் பூவும் சாந்தும் நீரும் நிழலும் பொதுவியர்க்கு உரிய மகளிரும் பிறவும் உடையது யாது? மற்று அதுவே அரண் ஆவது எ - று.

(ப - உ.) எ - து.— பகைவரால் கொள்ளுதற்கு அரிது ஆய்த் தன் அகத்தே அமைக்கப்பட்ட உணவையும் உடைத்து ஆய், அகத்து உறைவார்க்கு நிற்றற்கு எளிது ஆகும் நீரையும் உடைத்து ஆய் இருப்பது அரண் ஆவது எ - று.

எனவே புறத்தார்க்கு நிற்றற்கு அரிய நீரை உடைத்து ஆக வேண்டும் என்றவாறு ஆயிற்று. அஃதாவது அரணுக்கு நீங்கு நிற்பது ஓர் ஆற்றினின்றும் பிறர்க்குத் தோற்றுமல் சுருங்கையாகப் படுத்து உள்ளே நீர் புகுதலும், மதிலை முற்றினார்க்கு அணிய நீர் இன்மையும், இன்னும் அகனே வெற்றிலையும் பூவும் உள்ளே உண்டாக்குதலும் பிறவும் ஆம். (1)

கா. 2. ப. 8.

முற்றியு முற்று தெறிந்து
பற்றற் கரிய தரண்.

மறைப்படுத்தும்

(கா - உ.) எ - து.—கொற்ற வேந்தர் புறம் கோலிக்கொண்டும், அங்ஙனம் கோலிக்கொண்டு இராது புறத்து நின்று பொருதும், சென்று குத்தியும், அறைப்படுத்தும் அதனைப் பற்றுவேம் என்று முயன்றாலும் பற்றுதற்கு அரியது யாது? மற்று அதுவே அரண் ஆவது எ - று.

(ப - உ.) எ - து —சூழ விட்டும், சூழ விடாதே ஒரு பக்கம் முறிய எறிந்தும், அரண் உள்ளாரைக் கீழ் அறுத்தும் இம்மூன்றினு ளும் கொள்ளுதற்கு அரியது அரண் ஆவது எ - று.

அரண் கொள்வார்க்கு உபாயப்
இம்மூன்றினுலும் கொள்ளப்படாமை

இம்மூன்று அல்லது இல்லை:
வேண்டும் என்றது. (2) கா. 3.

ப. 9.

முற்றாற்றி முற்றி யவரையும்
பற்றியார் வெல்வ தரண்.

பற்றாற்றிப்

(கா - உ.) எ - து.—முற்றும்
கொள்வேம் என்று அதன் புறத்து

வெற்றி அரசர் அவ்வரண் யாம்
வந்து சூழ்ந்து கொண்ட அவரை 37. அரண்

யும், முன் கடையவர் வேய்வா, வாத்து ஆற்றி எவ்வாற்ருனும் தன்னைப் பதியாகப் பற்றி வாழ்வோர் பற்றவரை வெல்லுமாறு இருப்பது யாது? மற்று அதுவே அரண் ஆவது எ - று.

(ப - உ.) எ - து.—சூழ விடுதலைச் செய்து மதிலைச் சூழ்ந்து பொருவாரையும் அரணையும் பற்றுதலைச் செய்து மதில் தலையைப் பற்றியார் வெல்வது அரண் ஆவது எ - று.

இஃது அரண் இல்லாமையே அன்றி என்றது.

வெல்லவும் வேண்டும் கா. 4.
(3)

ப. 4.

முனைமுகத்து மாற்றலர் சாய
வீறெய்தி மாண்ட தரண்.

வினைமுகத்து

(கா - உ.) எ - து.—புறத்து அரசன் கடைப் புறத்துப் போர் தொடங்கிய அளவிலே தலை சாய்த்து ஓடுமாறு அகத்தோர்* இயந்திரம் முதலிய கல்பொறியும் பாம்பும் கனலும் கடிகுரங்கும் வில் பொறியும் வேலும் வெந்நீவட்டும் காய்ச்சிய மணலும் கவவு இருப்பு உலக்கையும் வீச்சுறு தூண்டிலும் விசைத்தெறி கவணும் ஆகிய வினைத்தொழில் உடைய மாட்சிமைப் பட்டது யாது? மற்று அதுவே அரண் ஆவது எ - று.

முனை முகத்து என்றது கடைப் புறத்து வந்து போர் கிய என்றது. வினைமுகத்து என்பது—போர்த் தொழில் என்றது. வீறு எய்தி என்றது விருப்பம் உற்று என்றது.

தொடங்
இடத்து

(ப - உ.)
கெடும்படியாக

எ - து.—முந்து உற்ற முகத்தினை உடைய பகைவர் வினை செய்யும் இடத்து வெற்றி எய்தி மாட்சிமைப் பட்டது அரண் ஆவது எ - று.

அஃது ஆவது அட்டாலகமும் மதில் பொறியும் முதலாயின மதில் தலையில் அமைத்தல். இது மதில் தலையில் கருவிகள் அமைக்க வேண்டும் என்றது. (4)

கா. 5.

ப. 1.

ஆற்று பவர்க்கு மரண்பொரு
போற்று பவர்க்கும் பொருள்.

எஞ்சித்தற்

(கா - உ.) எ - து.—சோர மன்னரைப் போர் ஆற்றுபவர்க்கும் அரண் பொருள் ஆதலால் அதனை இகழ்தல் ஆகாது: இனி இங் ஙனம் போர் ஆற்றாது அஞ்சி அகம்புக்குத் தம்மைப் பேணிக் கொள் பவர்க்கும் அரண் பொருள் எ - று.

---

* சிலப்பதிகாரம் அடைக்கலக் காதை உ0எ-உ0கூ வரி ஒப்புமை காண்க.



(ப - உ.) எ - து.—வலி ஆற்றுவார்க்கும் அரண் பொருள் ஆம்: வலிவு இன்மை யான் அஞ்சித் தம்மைக் காப்பார்க்கும் அரண் பொருள்: ஆதலால் அதனைச் செய்ய வேண்டும் எ - று.

வலி

என்றார்:

உடையோர்க்கும் ஒரு காலத்தே வேண்டுதலின்
இஃது அரண் செய்ய வேண்டும் என்றது.

வேண்டும்

(๖)

கா. 6.

ப. 10. எனைமாட்சித் தாகியக் கண்ணும் வினைமாட்சி
யில்லார்க ணில்லா தரண்.

(கா - உ.) எ - து.—கீழ்ச் சொன்னவும் பிறவும் ஆகிய எனைத்து வகைப்பட்ட மாட்சிமை உடைத்தாகிய இடத்தும், புறத்தவர் திறத்துப் பொழுது தோறும் வேறுபடச் செய்யும் வினையினது மாட்சிமை இல்லாதார் மாட்டு நில்லாது அரண்: எனவே அவ்வினைகள் ஆங்கு ஆங்குச் செய்து தெவ்வரை ஓட்டும் திறன் இல்லாதார்கண் உளதேனும் அழிந்து விடும் எ - று.

(ப - உ.) எ - து.—சொல்லப் உடைத்த ஆயினும் வினையின்கண்

பட்ட எல்லா மாட்சிமையும்
மாட்சிமை இல்லாதார் மாட்டு
அரணுல் பயன் இல்லை எ - று.

இது வினை செய்ய வல்லாரும் வேண்டும் என்றது. (6)

பரி. பா - ம். "னில்ல தரண்".

கா. 7.

ப. 5.

சிறுகாப்பிற் பேரிடத்த தாகி யுறுபகை
யூக்க மழிப்ப தரண்.

(கா - உ.) எ - து.—சிறு படையால் காக்கும் காப்பு அமைவு உடைத்துமாய், அகத்து வாழ்வோர்க்குப் பெரிதும் இடப்பாடு உடைத்துமாய்ப் புறத்துப் பகையினது உள்ளக் கோட்பாட்டினை ஒருங்கு அழிப்பது யாது? மற்று அதுவே அரண் ஆவது எ - று.

(ப - உ.) எ - து.—காக்க வேண்டும் இடம் சிறிது அகலம் பெரிய இடத்தை உடைத்தாய் மதிலை உற்ற மிகுதியைக் கெடுப்பது அரண் ஆவது எ - று.

ஆய் மதில்
பகைவரது

சிறுகாவல் ஆவது - ஒரு பக்கம் மலை நீர் ஆயினும் உடைத்து ஆதல். இஃது காவல் சிறிது ஆகவும் வேண்டும் என்றது.

ஆயினும் காடு ஆயினும்
இடம் பெரிது ஆகவும்
(7)

கா. 8.

ப. 3. உயர்வகலந் திண்மை யருமையிந் நான்கி
னமைவர ணென்றுரைக்கு நூல்.

(கா - உ.) எ - து.—நோக்குதற்கு அரிய உயர்வு உடைமையும் அதற்கு அரிய அகலம் உடைமையும் குத்துதற்கு அரிய திட்பம் உடைமையும் எ...........மை வினையான் அருமை உடைமையும் என்னும் இந்நான்கினது முற்றுப்பேறு உடையது யாது? மற்று அதுவே அரண் ஆவது எ - று.

(ப - உ.) எ - து.—உயர்ச்சியும் அகலமும் திண்மையும் கிட்டு
தற்கு அருமையும் என்னும் நான்கின் அமைதியை உடையது மதில்
என்று சொல்லும் இலக்கணம் எ - று.

அருமை ஆவது - முதலையும் கிடங்கும்* அடியொட்டியும் முதலாயினவற்றால் கிட்டுதற்கு அருமை. அமைவு என்றது இதனின் மேல் செய்யப்படாது என்னும் அளவு உடைத்து ஆதல். திண்மை என்றது கல்லும் இட்டிகையும் இட்டுச் செய்தல். இஃது அரண் செய்யும் ஆறு கூறிற்று.
(8)

கா. 9 .
ப. 2.

மணிநீரு மண்ணு மலையு மணிநிழற்
காடு முடைய தரண்.

(கா - உ.) எ - து.—மணி நீரும் என்றது பளிங்கு போலத் தெளிந்து ஆழம் உடைமையும் வற்றாமையும்: மண்ணும் என்றது நாற்பெருஞ் சேனையும் அகத்து அடி இடுதற்கு அரிய இடமும்; மலை

யும் என்றது மறறு அதன் புறத்து மூற்றி ஓங்கித் தலை மயக்குறுத்து ஆங்கு அதன் புறம் சூழ்ந்து ஓங்கிப் பரந்த தூங்கு இருள் காடும் வகை அறப்பெற்ற இவை நான்கினையும் உடையதே அரண் ஆவது எ - று.

(ப - உ.) எ - து.—தெளிந்த நீர் ஆயினும் நிழலும் நீரும் இல்லாத வெறுநிலம் ஆயினும் மலை ஆயினும் அழகிய நிழலினை உடைய காடு ஆயினும் உடைய இடம் அரணம் எ - று.

மலை அரண் என்றும் காடு அரண் என்றும் கூறுப. சேற்று அரண் என்பதும் ஒன்று உண்டு. அதுவும் இஃது அரண் செய்யும் இடப் கூறிற்று. இவற்றினுள் அடங்கும்.

(9)

கா. 10.

ப. 7.

எல்லாப் பொருளு முடைத்தா யிடத்துதவு
நல்லா ளுடைய தரண்.

(கா - உ.) எ - து.—கீழ்ச்சொல்லிப் போந்த பரிசே அரண் இயல் பொருளும் அகத் பொருளகளும் இனிது

பொருளும்

(10)

(கா - உ.) இனி இவ்வாறு இருவகை............மினிது வாழ்ந்தார் ஆக்கல் ஆவது நெறி வழுவாமல் பொருள் செய்து கொண்டிருப்பின் அன்றே: அதனால் மற்று இதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 38. பொருள் செயல்வகை.

(ப - உ.) பொருள் செயல்வகை யாவது பொருள் தேடும் ஆறும், அதனால் பயன் கொள்ளும் ஆறும் கூறுதல். இது நாடும் நகரமும் உடையார்க்கு உளது ஆவது என்றார் ஆகலின் அதன் பின் கூறப்பட்டது.

கா. 1.

ப. 3.

அறனீனு மின்பமு மீனுந்
திறனறிந்து
தீதின்றி வந்த பொருள்.

(கா - உ.) எ - து.—அறத்தையும் தரும்: அறத்தினால் வழுவாத இன்பத்தையும் தரும்: யாது எனின்? நெறியினால் ஈட்டி வேறு ஒரு குற்றம் இன்றி வால் உற்ற பொருள் ஆனது எ - று.

(ப - உ.) எ - து.—அறத்தையும் பயக்கும்: இன்பத்தையும் பயக்கும்: திறன் அறிந்து பிறர்க்குத் தீமை பயத்தல் இன்றி வந்த பொருள் எ - று.

பொருளால் பயன் அறம் செய்தலும் இன்பம் நுகர்தலும் அன்றே? அவ்விரண்டினையும் பயப்பது நியாயம் ஆகத் தேடின பொருள் ஆதலின் பொருள் தேடுங்கால் நியாயத்தோடு தேட வேண்டும் என்றது. (1)

கா. 2.
ப. 9.

பொருளென்னும் பொய்யா விளக்க
மிருளறுக்கு
மெண்ணிய தேயத்துச் சென்று.

(கா - உ.) எ - து —மெய்யில் கூடிய பொருள் என்று சொல்லப்படுகின்ற கெடாத விளக்கானது பிறவியில் இனிய மறுமை உலகமும் பிறவி நீங்கிய முத்தியும் தரப் கருதிய வண்ணம் பெறல் ஆவதும்



செய்து கொலை, களவு, கள், காமம், பொய், சினம், சூது முதலியவற்றில் செல்லுகின்ற அறியாமை ஆகிய இருளை நீக்கி நன்மை பயக்கும் எண்ணிய தேயத்து எய்துமாறு எ - று.

(ப - உ.) எ - து.—பொருள் ஆகிய மெய்யான ஒளி எண்ணப்பட்ட தேயம் எல்லாவற்றிலும் சென்று இருள் அறுக்கும் எ - று.

இருள் ஆவது ஒளி இல்லாத இடம். பொருள் உண்டாகப் புகழ் உண்டாம்: புகழ் உண்டாக ஒளி எங்கும் பாக்கும் என்றது. அரசன் பொருள் உடையன் ஆயின் தான் கருதின தேயம் எல்லா வற்றினும் தன் ஆணை நடக்கும் என்றும் ஆம். (2)

கா. 3.

ப. 7.

அருளென்னு மன்பீன் குழவி
பொருளென்னுஞ்
செல்வச் செவிலியா லுண்டு.

(கா - உ.) எ - து.—இவ்வருள் என்று சான்றோரால் சொல்லப் படுகின்ற அனைத்து உயிர்க்கும் ஒத்தது ஓர் அன்பு ஈன் குழவியா னது பின்பு பொருள் என்று சொல்லப்படுகின்ற செல்வம் யாது: மற்று அந்தச் செவிலித்தாயால் உளது ஆம் எ - று.

(ப - உ.) எ - து.—அறம் செய்தற்குக் காரணம் ஆகிய அன்பி னின்றும் தோற்றின அருள் ஆகிய குழவி பொருள் ஆகிய நல்ல செவிலித்தாய் வளர்த்தலாலே உண்டாம் எ - று.

மேல் பொருள் உடையாற்கு அறம் எளிது என்றார்: இது பெறும் ஆறு என்னை என்றார்க்கு அன்பும் அருளும் இயல்பு ஆக உடையர் ஆயினும் பொருள் இலர் ஆயின் அவற்றால் பயன் இல்லை ஆம்: ஆகலால் பொருள் உடையாற்கே அறம் செய்யல் ஆவது என்று கூறப்பட்டது. (3)

கா. 4. ப. 2.

அருளொடு மன்பொடும் வாராப்
புல்லார் புரள விடல்.
பொருளாக்கம்

(கா - உ.) எ - து.—இப்படி நெஞ்சத்து அன்போடும் நல்ல அருளோடும் மருவி வாராத பொருளினது ஆக்கத்தை எஞ்ஞான்றும் பொருந்தாராய் நழுவ விட எ - று.

(ப - உ.) எ - து.—அருளோடும் அன்போடும் வான் வரும் ஆக்கத்தைப் பொருந்தாது போக விடுக

வாராத பொரு
எ - று.

எனவே பொருள் ஈட்டுங்கால் பிறர் வருத்தத்துக்குப் பரியா தும் பயின்றார் மாட்டுக் காதல் அழியவும் பொருள் தேடுதலைத் தவிர்க என்றவாறு ஆயிற்று. (4)



கா. 5.

ப. 6.

ஒண்பொருள் காழ்ப்ப வியற்றியார்க்
கேனை யிரண்டு மொருங்கு.

கெணபொரு

(கா - உ.) எ - து.—முறையின் வருவது ஆகிய பொருளினை மிகுதி ஈட்டினவர்க்கு முன்பு கூறிய அறமும் இன்பமும் என்று சொல்லப்பட்ட ஏனைய இரண்டும் ஒரு தன்மைப்பட எய்தும் எ - று.

(ப - உ.) எ - து.—ஒள்ளிய பொருளை முற்ற உண்டாக்கினற்கு ஒழிந்த அவ்வறமும் காமமும் ஆகிய பொருள் இரண்டும் எளிய பொருள் ஆக எய்தல் ஆகும் எ - று.

மேல் சில பொருள் உடையார்க்குப் பொருள் தாமை வரும் என்றார் : அஃது அறமும் இன்பமும் ஆம் என்று கூறிற்று.

எய்துதல் வருக்
வந்தால் எய்தல் கா. 6.
(5)

ப. 5.

குன்றேறி யானைப்போர் கண்டற்றாற்
றுண்டாகச் செய்வான் வினை.

றன்கைத்
[தொன்

(கா - உ.) எ - து.—தான் குன்றின் மீது ஏறிப்போய் இனிது இருந்து நிலத்துப் பொருகின்ற யானைப் போரினை அஞ்சாது கண்டு இன்பு உறாஉம் அதுதன்மைத்து : யாது எனின், தன் மாட்டு ஒரு பொருள் உளது ஆகச் செய்து கொள்பவனது வினையும் எ - று.

எனவே பாவமும் பகையும் தன்னை நணுகாமல் பரிகரித்து இனிது வாழும் பொருள் உடையோன் என்பது பொருள் ஆயிற்று என அறிக.

(ப - உ.) எ - து.—குன்றின் மேலே இருந்து யானைப் போர் கண்டால் போலும்; தன் கையத்து ஒரு பொருள் உண்டாகக் கொண்டு செய்யத் தொடங்கினவன் செய்யும் வினை எ - று.

பொருள் உடையார்க்குத் தாம் வருத்தம் உறாமல் செய்வார் ஆகவே கண்டு இருக்கலாம் என்றது.

பிறவை வினை

(6)

கா. 7.

ப. 10.

இல்லாரை யெல்லாரு மெள்ளுவர் செல்வரை
யெல்லாருஞ் செய்வர் சிறப்பு.

(கா - உ.) எ - து.—கைப்பொருள் இல்லாதாரை யாவரும் இகழ்வர்: கைப்பொருள் உடையோரை யாவரும் இன்பம் உற்றுச் சிறப்புச் செய்வார்கள் எ - று.



(ப - உ.) எ - து.—பொருள் இல்லாதாரை எல்லாரும் இகழ்வர். பொருள் உடையாரை எல்லாரும் சிறப்புச் செய்வர் எ - து.

சிறப்பு எய்துதலும் இதனானே வரும் என்றது.

(7)

## கா. 8.

### ப. 1.

செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கு
மெஃகதனிற் கூரிய தில்.

(கா - உ.)
என்னை எனின்

எ - து.—நெறியினால் இயற்றி ஈட்டுக பொருளை:
வேந்தர் ஆயினும் பகைவரை வெல்லும் கருவியானது

இதனின் கூரியது பிறிது இல்லை: அதனால் பொருள்
நர் சினம் தணிந்து பெரிதும் இனியர் ஆவர் எ - று.

வழங்கச் செறு

(ப - உ.) எ - து.—பொருளை உண்டாக்குக: பகைவரது பெரு மிதத்தை அறுக்கல் ஆம் கருவி அப்பொருள் போலக் கூரியது பிறிது இல்லை எ - று.

இது பொருள் ஈட்ட வேண்டும் என்றது. (8)

## கா. 9.

ப. 8. பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்ல தில்லை பொருள்.

(கா - உ.) எ - து.— சத்துருக்களையும் மித்துருக்களையும் தமக்கு உறுதி பண்ணிக் கொடுக்கும் பொருள் ஆனது இது அன்றிப், பொருள் ஆக மதிக்கல் ஆவது ஒன்றும் இல்லை எ - று.

இனி இவ்வாறு அன்றிக் குலத்தில் இழிவு

ஆகியாரையும், உறுதி இல்லாதாரையும் யாவரும் மதிக்கப் பண்ணும் என்று உரைப்பினும் ஆம்.

(ப - உ.) எ - து.—ஒரு பொருள் ஆக மதிக்கப் படாதாரையும் பொருள் ஆக மதிக்கப் பண்ணுகின்ற பொருளை அல்லது வேறு பொருள் என்று சொல்லல் ஆவது இல்லை எ - று.

மேல் இன்பம் எளிது ஆக வரும் என்றார். அஃது எளிது வரும் ஆறு என்னை ? வடிவு இல்லாதாரைப் பெண்டிர் இகழ்வர்

ஆக ஸ்ன, நனமனறு உறறாகருப மபாருள
ஆத மதிப்பர் என்று கூறப்பட்டது.

கா. 10.
உடையாரை யாவரும நன்கு
(9)

ப. 4.
உறுபொருளு முல்கு பொருளுந்தன் ஒன்னார்த்
தெறுபொருளும் வேந்தன் பொருள்.



(கா - உ.) எ - து.—நாடு இறுக்கும் முறைமையின் பெறும் பொருளும், நீரினும் நிலத்திலும் வருவனவற்றாள் தனக்கு உள ஆம் சுங்கப் பொருளும், தன் பகைவரைத் திறை வாங்கிக் கொள்ளும் பொருளும் எல்லாம் வேந்தனுக்கு நெறியின் வரும் பொருள் எ - று.

(ப - உ.) எ - து. —தானே வந்து உற்ற பொருளும், ஆய வற்கத்தால் வரும் பொருளும் பகைவரை அடர்த்துக் கொண்ட பொருளும் அரசனுக்குப் பொருள் ஆம் எ - று.

உறுபொருள் - கால் அற்ற பொருள். மேல் நியாயம் ஆகத் தேட வேண்டும் என்றார்: இவை நியாயமோ என்று ஐயுற்றாற்கு அரசற்கு நியாயம் என்று கூறப்பட்டது (10)

(கா - உ ) இனி அரசர்க்குப் பொருள் ஈட்டம் உண்டாய இடத்தும் படை இடம் இல்லை ஆயின் பகைவரை வெல்லற்கு அரிது ஆகலான் மற்று இதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

# 39. படைமாட்சி.

(ப - உ.) படைமாட்சி ஆவது படையினது நன்மை கூறுதல். இது மேல் கூறிய பொருளின் உண்டாம் ஆதலானும் அதனை ஈட்டுதற்கும் காத்தற்கும் படைவேண்டும் என்பதனாலும் அதன் பின்

கூறப்பட்டது.

கா. 1.

ப. 2.

அழிவின் றறைபோகா தாகி
வன்க ணதுவே படை.

வழிவந்த

(கா-உ.) எ-து.—எதிர்ப்பட்ட முகத்து கெஞ்க அழிவு இன்றித் தன் கோமானை வஞ்சித்துக் கீழ் போகாதது ஆகி வழி வருகின்ற தறுகண்மையை உடையது யாது? மற்று அதுவே படையாவது எ-று.

(ப-உ.) எ-து.—கெடுதல் இன்றிக் கீழ் போகாதது ஆகிக் குலத்தின் வழிவந்த அஞ்சாமையை உடையது படையாவது எ-று.

வழிவருதல் வீரன் மகன் வீரன் ஆதல். தன்மை கூறிற்று.

இது படையினது கா. 2.
(1)

ப. 3.

மறமான மாண்ட வழிச்செலவு தேற்ற
மெனநான்கே யேமம் படைக்கு.

(கா - உ.) எ - து.—தன் கெஞ்சிற்கு இயல்பு ஆயது ஓர் மறமும், சேவகத் தாழ்ச்சிக்கு மானிப்பது ஓர் வாசிப்பாடும், மாட்சிமைப்பட்ட வழிச்செலவு என்னும் அரசர்க்கு ஏவல் வழி பிழையாது செல்லலும், எதிர் கண்ட விடத்துத் தடுத்து எதி நிற்கும் திறமையும் என்றும் இக்நான்குமே படைக்குச் சேம உறுதிப்பாடு எ - று.

(ப - உ.) எ - து.—மறமும் மானமும் கல்வழிச் சேறலும் தெளிவு உடைமையும் என்னும் கான்கும் படைக்கு அரண் ஆம் எ - று.

கல்வழிச் சேறல் ஆவது மறம் செய்யும் கால் அறத்தின் வழிச் செய்யும் தெளிவு கலக்கம் இன்மை. மேல் கெடாமை வேண்டும் என்றார் : இது கெடாமைக்குக் காரணம் கூறிற்று. (2)

கா. 3.

ப. 7.

சிறுமையுஞ் செல்லாத் துனியும்
மில்லாயின் வெல்லும் படை.

வறுமையு

(கா - உ.) எ - து.—படைச் சிறுமையும் நீங்காத கோபமும் படையினது வறுமையும் என்னும் இக்குற்றம் மூன்றும் இலது ஆயின் எதிர்ப்படையை எவ்வாற்றானும் வெல்லும் படை எ - று.

(ப - உ.) எ - து.—சிறுமை உறுதலும் போகாத்

துன்பம் உறு
தலும் வறுமையும் இல்லை ஆயின் படை வெல்லும் எ
- று.

சிறுமை உறுதல் ஆவது இழிந்தார் பெற்ற சிறப்பு உயர்ந்தார் பெறுமை. போகாத் துன்பம் ஆவது பெண்டிரைக் கைக்கொள்ளுத லும் இளி வரவு செய்தலும் போல்வன. வறுமையாவது கொடாமை. இது படைக்கு அரசன் செய்யும் திறன் கூறிற்று.
(3)

கா. 4.

ப. 1.

உறுப்பமைந் தூறஞ்சா வெல்படை
வெறுக்கையு ளெல்லாந் தலை.

வேந்தன்

தக,

(கா - உ.) எ - து.—பாதாதிகேசம் ஆக ஓர் ஆள் என்றதற்குத் உறுப்பினால் முற்றுப் பெற்றுக் கணை கருவி முதலியவற்றான்

வந்து உற்ற வடுப்பாட்டிற்கும் சிறிதும் கண்ணஞ்சாத வீரப்படை யானது அரசன் படைத்த செல்வத்துள் எல்லாம் பெரிதும் தலைமைப் பாடு உடைத்து எ - று.

(ப - உ.) எ - து.—யானை, குதிரை கருவிகள் ஆகிய உறுப்புக்களால் அமைந்து இடுக்கண் உற்றால் அதற்கு அச்சம் இன்றி வெற்றி உடைய படை அரசன் தேடின பொருள் எல்லாவற்றினும் தலையான பொருள் எ - று.

ஆதலால் படை வேண்டும் என்றது.

(4) 108 திருக்குறள் - பொருட்பால்

கா. 5.

ப. 10.

நிலைமக்கள் சால வுடைத்தெனினுந்
தலைமக்க ளில்வழி யில்.

தானை

(கா - உ.) எ - து.—எதிர்ப்படை கண்டால் பிறர் காதலிக்க நிலையாது தெளிந்து நிற்கும் நிலைப்பாட்டினை உடைய வீரரைச் சால உடைத்தேனும் சேனையானது சேனைத் தலைவராகிய தலைமக்கள் லாத இடத்துச் செய்வது ஓர் சேவகம் இல்லை எ - று.

இல்

(ப - உ) எ - து.—நிலை உடைய வீரரைப் பெரிதும் உடைத்து ஆயினும் படையானது தனக்குத் தலைவனை இல்லாத இடத்து வெற்றி இல்லை ஆம் எ - று.

இது
என்றது.

படை அமைந்தாலும் படைத்தலைவன் அமைக்க
இவை இரண்டும் படை ஆளும் திறன் கூறின.

வேண்டும்
(5)

கா. 6.

ப. 8.

அடற்றகையு மாற்றலு மில்லெனினுந்
தானை
படைத்தகையாற் பாடு பெறும்.

(கா - உ.) எ - து.—எதிர்ந்தோரை எறிந்து
மையும் அதற்கு உரிய ஆண்மைத் திறப்பாடும

கொள்ளும் தகை
இல்லை ஆயினும,

சேனையானது கைக்கொண்டு நிற்கும் இடந்து விட்டு விளங்கிப் பயின்று உள்ளது ஆகிய விறல் கருவிகளால் பொலிவுடன் நிற்றல் சாலப் பெருமை பெறும் எ - று.

(ப - உ.) எ - து.—பகைவரைக் கொல்லும் தகுதியும் அவர்மேல் வந்தால் பொறுக்கும் ஆற்றலும் இல்லை ஆயினும் சேனையானது படை யழகினனே பெருமை பெறும் எ - று.

படையழகு என்றது அலங்காரமும் கொடியும் குடையும் முரசும் காகளமும் முதலாயினவற்றால் அழகு பெறுதல். இதுவும் அரசன் அமைக்க வேண்டும் என்றது. (6)

கா. 7. ப. 9.

ஒலித்தக்கா லென்னு முவரி யெலிப்பகை
நாக முயிர்ப்பக் கெடும்.

(கா - உ.) எ - து.—எலிப்பகை அனைத்தும் கூடிக்கொண்டு கடல் போல ஆர்த்து வரினும் பயன் இல்லை: என்னை எனின் அவை அத்தனைக்கும் ஒரு நாகமானது வந்து பூத்தென மூச்சு எறியக் கெட்டு விடும் எ - று.

39. படைமாட்சி 169

(ப - உ.) எ - து.—கடல் போல் ஒலித்தக்காலும் எலியினது மாறுபாட்டினால் வரும் தீமை என் உளது ஆம்? அவ்வொலி நாகம் உயிர்த்த அளவிலே கெடும் எ - று.

இது படை மிக்கது வெல்லும் என்று

தெளிந்து ஆளவேண்டும் என்றது.

கருதாது விரைத்

(7)

கா. 8.

ப. 4.

தார்தாங்கிச் செல்வது தானை தலைவந்த
போர்தாங்குந் தன்மை யறிந்து

(கா - உ.) எ - து.—எதிர்ப்படை வந்து தலைப்பட்ட காலத்து இவ்வாறு பொருவேம் என்று எண்ணிக் கலங்காது மற்று அதனைப் பொறுத்து அடர்த்துச் சென்று நெருக்க வல்லது யாது? மற்று அதுவே தூசி எனப்படுவது எ - று.

(ப - உ.) எ - து.—முன் வந்த படையைப் பொறுத்து மேற் செல்ல வல்லது படையாவது : அவ்விடத்துற்ற போரினைத் தடுக்கும் இயல்பு அறிந்து எ - று.

இது முந்திச் செல்ல வேண்டும் என்பதூஉம் செல்லுங்கால் இடம் அறிந்து செல்ல வேண்டும் என்பதூஉம் கூறிற்று. (8) கா. 9.

ப. 6. உலைவிடத் தூறஞ்சா வன்கண்
டொலைவிடத்துத்
தொல்படைக் கல்லா லரிது.

(கா - உ.) எ - து.—தன் படை கெடும் இடத்தும் தன்மேல் வந்துற்ற கருவி கண்மையானது

வடுப்பாட்டிற்கும் சிறிதும் கண்ணஞ்சாத தறு பண்டு படைத்தலே வீரைக் கண்ணுற்றுப் புறத்து எறியாது முன் எறிந்து முன் ஏற்றுக் கொண்டு விளைதித்து அழி படை தாங்குதல் பழம் படைக்கு அல்லால் அரிது எ - று.

(ப - உ.) எ - து.—அரசு கெடும் இடத்து வழிவந்த படைக்கு அல்லது போர்க்களத்து அழிவு வந்த இடத்து உயிர்க்கு வரும் ஊறு அஞ்சா வன்கண்மை இல்லை எ - று.

தொலைவிடம் என்பதனை முன்னே கூட்டுக. மேல் வழிவந்த படை வேண்டும் என்றார் : அதனால் பயன் என்னை என்றார்க்கு அவர் தமக்கு முன்பு உள்ளார் அல்லது படை கெட்டால் செயலை நினைப்பார் : ஆதலான் அவர்க்கு சிற்றல் அரிது என்றவாறு ஆயிற்று. (9) கா. 10. ப. 5.

கூற்றுடன்று மேல் 'வரினுங் கூடி யெதிர்நிற்கு
மாற்ற லதுவே படை,
22



(கா - உ.) எ - து.—எல்லைக் காலத்துக் கூற்றம் கனன்று மேல் வந்து பொரி..................து தானும் எதிர்த்து அடர்த்து நிற்கும் திறமைப் பாட்டது யாது? மற்று அதுவே படை எனப்படுவது எ - று.

(ப - உ.) எ - து.—கூற்றமானது வெகுண்டு மேல்வரினும் சிதறுதல் இன்றி எதிர் நிற்க வல்ல வலிமையை உடையது படையாவது எ - று.

இது மாற்றார் மேல் வந்தால் நின்று பொறுக்க வேண்டும் என்றது.

(10)

(கா - உ.) இனி மற்று இங்ஙனம் படைமாட்சி.................தற்பின்............செருக்கு உணர்த்த வேண்டுதலான் மற்று இதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 40. படைச்செருக்கு.

(ப - உ.) படைச் செருக்கு ஆவது

தல். இது படைக்கு இன்றியமையாதது

படையினது வீரியம் கூறு
ஆயினமையின் அதன் பின்
கூறப்பட்டது.

கா. 1.

ப. 1.

உறினுயி ரஞ்சா மறவ ரிறைவன்
செறினுஞ்சீர் குன்ற லிலர்.

(கா - உ.) எ - து
வின்கண் தமது உயிர்

—எதிர்ப்படை தம்மேல் வந்து தாக்கும் அள
பேணக்கருதி அஞ்சாது அவ்விடத்து உயிர்

வழங்கக் கருதும் வீரர் தம்மை ஆண்ட அரசரானோர் ஒரு
உற்றுச் செறினும், தமது சேவகத் தறுகண்மையின் சிறிதும்

காலம்
குறை
படுதல் இலர் எ - று.

(ப - உ.) எ - து.—ஒன்று உற்ற காலத்து உயிர்ப் பொரு
அஞ்சாத மறவர் தம் அரசனால் செறுக்கப் பட்டார் ஆயினும் தமது
தன்மை குன்றுதல் இலர் எ - ற.

மேல் அதிகாரத்துச் சிறுமை முதலாயின

செய்யின் படை வெல்
லாது என்றார் ஆயினும், இயல்பு ஆக அஞ்சாமை உடையர் செய்யும் இடத்துக் குறைய நில்லாமை வேண்டும் என்றது.

வீரியம்

(1) கா. 2.

· ப. 2.

பேராண்மை யென்ப தறுகணொன்
றுற்றக்கா

லூராண்மை மற்றத னெஃகு.

40. படைச்செருக்கு 171

(கா - உ.) எ - து. - படை மக்கள் தமக்கு எப்பொழுதும் இயல்பு ஆகிய மிகவும் பெரிய ஆண்மை என்று சொல்லுவர் உலகோர்: யாதினை எனின், பகை வந்து உறற இடத்துப் பண்டை ஆண்மையை மிகவும் கூர்க்கப் பிடித்து அடர்த்து எதிர் நடத்தல்

கூர்மையாவது எ - று.

(ப - உ.) எ - து.—ஒருவனுக்குப் பெரிய ஆண்மை என்று சொல்லுவார், ஒன்று உற்றக்கால் அஞ்சான் ஆதலை: அவ்வாண்மைக்குப் படைக்கலம் என்று சொல்லுவர் உலகு இயல் அறிந்து செய்தலை எ - று.

உலகியல் அறிதல் - தனக்கு எளியார் மேல் செல்லாமை: இது

வீரம் செய்யுங்கால் எளியாரை அடாமை வேண்டும்
என்றது. (2)

கா. 3.

ப. 4.

என்னைமுன் னில்லன்மின் றெவ்விர்
முன்னின்று கன்னின் றவர்.

பலரென்னை

(கா - உ.) எ - து.—வறிதே என்முன் வந்து நில்லன்மின் தெவ்வீர்காள்: என்னை எனின் முற்பட மதியாது எனது முன்வந்து நின்று நின்று பிற்படக்கல் உருபு ஆகி நின்றோர் அளவு இறந்த பலர் ஆகலான் எ - று.

(ப - உ.) எ - து.—என்னுடைய அரசன் முன்னர்ப் பகைவீர்!
நில்லாது ஒழிமின் : முன் நாள் இவன் முன்னே
நின்று கல் எழுதப்
பட்டு நின்றோர் பலர் ஆதலான் எ - று.

இஃது எளியாரைப் போகச் சொல்லி
எதிர்ப்பாரோடு பொர
வேண்டும் என்றது.
(3) கா. 4.

ப. 6.

விழித்தகண் வேல்கொண் டெறிய

வழித்திமைப்பி

னோட்டன்றோ வன்க ணவர்க்கு.

(கா - உ.) எ - து.—தாம் கூர்க்க நோக்கிய இடத்தே மற்றை எதிர்த்தோர் தம் கைக்கொண்ட வேலினைத் தம்மீது எறியப் பெற்று வைத்து மற்று அதனைத் தலை அழித்து அப்பொழுது இமைப்பர் ஆயின், இமைத்தவர்க்கு முன் சொன்ன இல்லை எ - று.

தறுகண்மையானது யாதும்

(ப - உ.) எ - து.—மாற்றாரோடு எதிர்த்துச் சிவந்து நோக்கின கண்ணிலே ஒருவன் வேலினனே எறிய அதற்கு மீண்டும் இமைப்பர் ஆயின், இது கெட்டதனோடு ஒக்கும், அஞ்சாதார்க்கு எ - று.



விழித்தகண் - மாற்றாரை நோக்கி இமையாத கண் எனினும் அமையும். புண்பட்டால் ஆற்றார் ஆயின் கெட்டதனோடு ஒக்கும் என்றது. (4)

கா. 5. ப. 5.

கைவேல் களிற்றொடும் போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும்.

(கா - உ.) எ - து.—தனது கைவேலினை எதிர் வந்த களிற் றெடும் போக்கி மீண்டு வருகின்ற வீரனவன் தன் மெய்க்கண் வேறு ஒருவன் எறிந்த வேலினைப் பறித்துக் கைக்கொண்டு நின்று சிரிக்கும் எ - று.

நகும் என்றது வெறுங் கையாளனை எறிந்தவன் என்ன ஏன்று ஒரு நகையும், வெறுங் கைக்கு அம்மா! ஒரு வேல்

வீரனே

வந்தது

என்று ஒரு நகையும் என அறிக.

(ப - உ.) எ - து.—தன் கையில் வேலை ஒரு களிற்றேடே போக்கி அதன் பின் கருவி தேடிச் செல்லுமா அவன் தன் மெய்யின் மேல்பட்ட வேலைப் பறித்துக் கருவி பெற்றேம் என்று மகிழும் எ - று.

வீரர் செயல் இத்தன்மை யாதலால் புண்பட்டால் அதற்கு ஆற் றிப் பின்னும் போரின்கண் காதல் செல்ல வேண்டும் என்றது. (5)

கா. 6. ப. 3.

கான முயலெய்த வம்பினில் யானை
பிழைத்தவே லேந்த லினிது.

(கா -

கமியமாறு

உ.) எ - து.—ஒருவன் காட்டிடத்து முயலினைப் பட்டுக் எய்த அம்பினின் போர்க்களத்து ஒருவன் ஒரு களிற்று

யானையைக் குறித்து எறிந்த இலக்குப் பிழைத்த
ஏந்திக் கொண்டல் பெரிதும் இனிது எ - று.

வேலினை எடுத்து

(ப - உ.) எ - து.—காட்டகத்து முயலைப்பட எய்த அம்பினும் யானையைப் பிழைக்க எறிந்த வேலை ஏந்துதல் இனிது வீரற்கு எ - று.

இது மேலதற்குக் காரணமாகக் கூறப்பட்டது. (6)

கா. 7. ப. 7.

விழுப்புண் படாதநா ளெல்லாம் வழுக்கினுள்
வைக்குந்தன் னாளை யெடுத்து.

(கா - உ.) எ - து.—போர்க் களத்துச் சென்று புக்கார் புறத்துப் படுதல் இன்றி முகத்தினும் தோளினும் மார்பினும் விழுமிய புண் ஆகிய வீரத் தழும்புபடப் பெறாத நாட்களும் உள அன்றே: அவை



எல்லாம் தனக்கு உளவாகக் கருதாது தன்னை
வற்றுள் சிலவை ஆக அந்நாட்களை வேறே நீக்கி

வழுக்கிக் கழிந்தன
வைக்கும் எ - று.

(ப - உ.) எ - து.—தனது வாழ்நாள் ஆகிய நாளை எண்ணி, அவற்றுள் விழுமிய புண்படாத நாள் எல்லாவற்றையும் தப்பின நாள் ஆக எண்ணி வைக்கும் வீரன் எ - று.

இது போரின்கண் முகத்தினும் மார்பினும் புண்பட வேண்டும் என்பதூஉம் முதுகுபுறம் கொடாமையும் வேண்டும் என்றது. (7)

கா. 8.

ப. 8.

சுழலு மிசைவேண்டி வேண்டா
கழல்யாப்புக் காரிகை நீர்த்து.

வுயிரார்

(கா - உ.) எ - து.-- இன்னார் இன்ன போர்க் களத்து இன்ன விறல் தொழில் செய்தார் என்று மற்று எண், திசையும் பரந்து திரியும் புகழினையே விரும்பி மற்று இது காரணத்தால் உயிரினை உடையாரயவர் தம் காலில் யாத்த வீரக்

சிறிதும் விரும்பா
கழல் யாப்பானது
பெரிதும் ஆண்மைக் கட்டளைப்பாடு உடைத்து
மற்றையார் காலில் கட்டிய கழல் யாதுக்கோ என்று
அறியேம் யாம் எ - று.

(ப - உ.) எ - து.—பரக்கும் புகழை விரும்பி உயிரை விரும்பா தவர் கழல் கட்டுதல் அழகு

உடைத்து எ - று.

இது புகழ் வரின் பட வேண்டும் என்றது.

(8) கா. 9.

ப. 9.

இழைத்த துகவாமைச் சாவாரை யாரே
பிழைத்த தொறுக்கிற் பவர்.

(கா - உ.) எ - து —போர்க்களத்து எதிர் நின்ற

வீரரை நோக்கி
நம்மை யாம் இவை செய்வேம் என்று எண்ணி முன் கூறியது யாது?
மற்று அவ்வெண்ணத்தைக் கடவாமை காரணமாகச் சென்று

பொருது தம் உயிர் செருக்கும் இறல் உடையோரை இவ்வுலகத்து
யாரே தானெ.............பிழைத்தாரென்று சொல்லி முன் நின்று
ஒறுக்கக ' வல்லவா எ - று.

(ப - உ.)
ரைத் தப்பினர்

எ - து.—முன் கூறிய வஞ்சினம் தப்பாமல்
என்று பழிக்க வல்லவர் யார் எ - று.

சாவா

இது வஞ்சினம் தப்பின் பட வேண்டும்

என்றது. (9) கா. 10.

ப. 10.

புரந்தார்கண் ணீர்மல்கச் சாகற்பிற்

சாக்கா

டிரந்துகோட் டக்க துடைத்து.



(கா - உ.) எ - து.—தம்மைப் பெரிதும்
......தனோர் இவரை யாம் இழந்தோம்:

தலையளித்து ஓம்பு......
என்ன பாவம் என்று
இரங்கிக் கண்ணீர் சொரியுமாறு அமரில் புக்குச் சாக வல்லர் ஆயின்,
அதுவே சாக்காடு என்பது: மற்று அது இரந்து கொள்ளும் தகுதி
யினை உடைத்து எ - று.

பரி. பா - ம். "சாகிற்பிற்".

(ப - உ.) எ - து.—தம்மை ஆண்டவாது
சாவக் கடவாராயின் அச்சாக்காடு எல்லாராலும்
தகுதி உடைத்து எ - று.
கண்ணீர் மல்குமாறு
வேண்டிக் கொள்ளும்

இஃது ஆண்டவனுக்குக் கேடு வரின்
என்றது.

பட வேண்டும்

(10)

(கா - உ.) இனி மற்று இங்ஙனம் படைமாட்சி, படைச் செருக்கால் எதிர் மலைவு காட்டி மற்று இதன் பின்பு இனிது மேவி நட்புப் புரிந்து ஒழுக வேண்டி மற்று இதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 41. நட்பு.

(ப - உ.) நட்பு இயலாவது அறம், பொருள், இன்பம் என்னும் மூன்றின் கண்ணும் நின்று நன்னெறிக் கண் உய்க்கும் ஆகலின் அதன் இலக்கணம் கூறுதல். அரசன் தானும் திருந்தித் திருந்திறையும் கூட்டிக்கொண்டு நாடு முதலான பொருளையும் பெற்று அதனை அழியாமல் காக்கும் படையை உடையனாயினும், காமத்தான் ஆதல் மயக்கத்தான் ஆகல் பிறழ ஒழுகுவனாயின் இவை எல்லாப் பொருளையும் கெடுத்துத் தானும் கெடுவன் என்று அவ்வாறு ஒழுகுங்கால் தன்னில் பெரியர் ஆகிய மந்திரி புரோகிதரை ஒளித்தும் தன் ஏவல் வழி வரும் அமாத்தியரையும் கேளாதும் ஒழுகுவன் ஆகலின், அவ்விடத்து உடன்பட்டு நின்று பாதுகாப்பர் வேண்டும் என்று இப்பொருள் கூறப்பட்டது. அது கூறிய அதிகாரம் ஐந்தினும் முற்பட நட்பு இலக்கணம் ஓர் அதிகாரத்தானும், அவரை ஆராயும் ஆறு ஓர் அதிகாரத்தானும், நட்கப்படாதார் இலக்கணம் ஓர் அதிகாரத்தானும், மனத்தினால் நட்பு இன்றி நட்டார் போன்று ஒழுகுவார் திறன் ஓர் அதிகாரத்தானும் கூறப்பட்டது. அவற்றுள் நட்பு ஆவது நட்டோர் மாட்டுச் செய்யும் திறன் கூறுதல்.

கா. 1. ப. 5.

அறிவி னவைநீக்கி யாறுய்த்

தழிவின்க
ணல்ல லுழப்பதா நட்பு.



(கா - உ.) எ - து.—தம்மொடு நட்டார்க்கு ஓர் இடுக்கண் வந்த இடத்துக் குற்றத்தை நீக்கி மற்று இவர்க்கு நல்வழியைச் செலுத்திப் பின்னும் வருகிற 'அழிவின்கண் தாமும் கூட நின்று அவ்வல்லல் அநுபவிப்பதே நட்பு ஆவது எ - று.

(ப - உ.) எ - து.—அழிவு வந்த இடத்துத் துன்பத்தை நீக்கி இன்ப நெறியின் கண் நிறுத்திச் செயலற்ற அவரோடு கூட அல்லல் படுவது நட்பு எ - று.

அழிவு வந்த இடத்து

இது துன்பம் கெடுக்க வேண்டும் என்றது.

மாட்டாக்கால் தானும் துன்பம் உற கா . 2. (2)

ப. 4.

உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
யிடுக்கண் களைவதா நட்பு.

(கா - உ.) எ - து.—உடை நழுவினவன் தனது கை கடிது பற்றித் தாங்கிக் கொண்டாற் போல அப்பொழுதே அவ்விடுக்கண் களைவது யாது? மற்று அதுவே நட்பு ஆவது எ - று.

(ப - உ.) எ - து.—உடை இழுக்தவன் கை குறிப்பு இன்றித் தானே சென்று மறைக்குமாறு போல இடுக்கண் உற்ற அப்பொழுதே அதனைப் போக்க வல்லது நட்பு எ - று.

இது கழறுதலே அன்றித் துன்பம் துடைக்கவும் வேண்டும் என்றது.

(2) கா. 3.

ப. 10.

நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்னீர்மை பேதையார் நட்பு.

(கா - உ.) எ - து.—பிறை உருபு நாள்தொறும் நிறைந்து செல்லும் தன்மையது போலும் நீர்மை உடையார் கெழுமுதல் தன்மை மற்று இனிப் பிறை நிறை மதியது பின் நாள் தொடங்கித் தேய்ந்து செல்லும் நீர்மையது உடைத்து அறிவு கேடர் செய்யும் நட்பு ஆனது எ - று.

(ப - உ.) எ - து.—பிறை நிறையும் நீர்மை போல ஒரு நாளுக்கு ஒரு நாள் வளரும் அறிவுடையாரொடு கொண்ட நட்பு: மதியின் பின் நீர்மை போலத் தேயும் பேதையரோடு கொண்ட நட்பு எ - று.

இஃது அறிவு உடையார் நட்பு வளரும் என்பதூஉம் அறியா தார் நட்புத்தேயும் என்பதூஉம் கூறிற்று. பின் கின்றூர் ஆகலின் இது பின் கூறப்பட்டது.

என்பதூஉம் அறியா

நட்பு ஆராய்தல் கூறு

(3)

.பரி. பா - ம். "பின்னீர".



கா. 4.

ப. 7.

இனைய ரிவர்நமக் கின்னம்யா மென்று
புனையினும் புல்லென்னு நட்பு.

(கா - உ.) எ - து.—வேறு ஒருவர் வந்து தம்மோடு இவர் நமக்கு யாவர் என்று வினவினல், இவர் நமக்கு இன்ன தன்மையர்: யாம் இவர்க்கு இன்ன தன்மையேம்: என்று இங்ஙனம் தம் கெழு முதல் புனைந்து உரைப்பினும் பொலிவு அழியும் நட்பு: எனவே பேதையார் நட்பின் பிழையினைப் பெரிதும் கடிந்தவாறு ஆயிற்று எ - று.

(ப - உ.) எ - று.—இவர் எமக்கு இத்தன்மையர்: யாமும் இவர்க்கு இத்தன்மையேம் என்று பேணிச் சொல்லினும் நட்பு வாடும்: ஆகலான் தன்னை நினைக்குமாறு போல நினைக்குதல் எ - று.

இது மேல் கூறியவாறு செய்தலே அன்றித் தான் அவன் என்றும் வேற்றுமை இன்றி ஒழுக வேண்டும் என்றது. இத்துணையும் நட்பின் இலக்கணம் கூறப்பட்டது. (4)

கா. 5.

ப. 2.

முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்

தகநக நடபது நட்பு.

(கா - உ.) எ - து.—புறத்து உறுப்பு ஆகிய முகநகை மாத்திரம் செய்து நட்புக் கொள்ளும் நட்பது நட்பு அன்று: இனி அகத்து உறுப்பு ஆகிய நெஞ்சானது உள் மகிழ்வு உற நிற்கும் நட்பே நட்பானது எ - று.

(ப - உ.) எ - து.—முகத்தொடு முகம் நட்பு அன்று: மனத்தொடு மனம் மகிழக் மகிழக் கொள்ளும் நட்பு கொள்ளும் நட்பே நட்பு எ - று.

மேல் நட்பு அரிது என்றார்: உலகத்துப் பலரும் தம்மில் கலந்தது காணு நின்றேம். அஃது கூறப்பட்டது.

அரிது ஆயினவாறு என்றார்க்குக் கா. 6. (5)

ப. 3.

நகுதற் பொருட்டன்று நட்டன் மிகுதிக்கண்
மேற்சென் றிடித்தற் பொருட்டு.

(கா - உ.) எ - து.—ஒருவரோடு ஒருவர் நட்டல் ஆவது புறமே நகை செய்தல் பொருட்டு அன்று: மற்று யாதிற்கோ எனின், அவர் நடக்கும் முறைமைக்கும் இங்கு அமையாது ஆகியது ஓர் குற்றம்

கண்டால் அப்பொழுதே அவர்
தல் பொருட்டு: எனவே அவர்
தம்மைப் பெரிதும் அடர்த்துக் கழறு
கேடு தம் கேடு எ - று.

(ப - உ.) எ - து.—ஒருவனோடு ஒருவன் நட்புப் பண்ணுதல் நகுதல் பொருட்டு அன்று: மிகையாயின செய்யும் இடத்துக் கழறு தல் பொருட்டு எ - று.

இது மனம் மகிழ நட்டலே அன்றிக் கழறவும் வேண்டும் என்றது.

தீக்கருமம் கண்டால்
(6)

கா. 7.

ப. 9.

புணர்ச்சி பழகுதல் வேண்டா
வுணர்ச்சிதா
னட்பாங் கிழமை தரும்.

(கா - உ.) எ - து.—ஒருவரோடு ஒருவர் கலப்பு நெடுங்காலம் பழகுதல் வேண்டா: மற்று என்னை எனின் அவர் நல்லர் என்று தாம் ஒருக்கும்று உணர்ந்த உணர்ச்சி தானே நட்பு ஆகிய வேற்றுமை அற்ற உரிமையைத் தரும் எ - று.

ஈண்டுக் கிழமை என்பது உரிமை.

(ப-உ.) எ-து.—நட்பு ஆதற்குப் பலநாள் பழகுதல் வேண்டா: ஒரு நாள் கண்டாராயினும் உணர்வு உடையார்க்கு அவ்வுணர்வு உடைமை தானே நட்பு ஆகும் உரிமையைத் தரும் எ-று.

மேல் குணவான் கண்ட அறிவு உண்டாக்கும் என்றார்: இஃது ஒத்த அறிவு உடையார்க்கும் அவ்வறிவு உடைமை தானே நட்பு ஆக்கும் என்று கூறப்பட்டது. (7)

கா. 8.

ப. 1.

செயற்கரிய யாவுள நட்பி னதுபோல்
வினைக்குரிய யாவுள காப்பு.

(கா- உ.) எ
கோடற்கு அரியன

- து.—நட்பினைப் போல ஒருவரால் செய்து
மற்று யா உள? எனவே யாவும் இல்லை; இனி

நட்பினது போல வினைக்கு
செய்து கொண்ட பொருள்

அரிய யா உள காப்பு எனவே தாம்
முதலிய வர்க்கங்களைப் புரைபடாமல்

காக்கின்ற காப்பு மற்று இந்நட்புக்குப் பழுதுபடாமல் காவல் வினைபோல வினைக்கு அரியன யாவும் இல்லை எ-

காப்பது ஓர் (ப - உ.)
று. யாவை உள?

எ - து.—நட்புப் போல் உண்டாக்குதற்கு அரியன அவ்வாறு உண்டாக்கப் பட்ட நட்புப் போல பிற கல் வினை செய்தற்கு அரிது ஆகக் காக்கும் காவல் யாவை உள? எ - று,

இ து நட்புத் தேடல் அரிது என்றது. (8)

23



கா. 9 .
ப. 6.

நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனிற் 
யொல்லும்வா யூன்று நிலை.

கொட்பின்றி

(கா - உ.) எ - து.—தாம் இவ்வாறு நட்ட நட்பிற்குப் பின் ஒரு குறை இன்றி இனிது வீற்றிருக்கை யாதோ எனின், அவர்க்கு உதவ வேண்டும் இடத்து எங்கும் புரிவு இன்றித் தமக்கு இயலும் வழி எல்லாம் உதவி உரைத்து நிற்கும் நிலையை எ - று.

கொட்பு இன்றி என்றது புரிதல் இன்றி என்றது.

(ப - உ.) எ - து.—நட்புக்குச் சுழல்வு இன்றி இனிது இருக்கல் ஆவது யாது என்னில், அதுவும் இடத்து ஊன்றியாகி நிற்றல் எ - று.

கொட்பு இன்றி வீற்றிருத்தல் எனக் கூட்டுக. இதனால் சொல்லியது நட்புத் திரிவு இன்றி இருத்தலாவது நட்டார்க்குத் தளர்ச்சி வந்தால் தாங்குதல் என்றவாறு ஆயிற்று. மேல் கூறின எல்லாம் ஒத்தார் மாட்டும் மிக்கார் மாட்டும் செய்யும் திறன் கூறிற்றின. இது செல்வக் குறைபாட்டினால் தம்மில் தாழ்ந்தார் மாட்டும் செய்யும் திறன் கூறிற்று. (9)

கா. 10. ப. 8.

நவில்தொறு நூனயம் போலும் பயில்தொறும்
பண்புடை யாளர் தொடர்பு.

(கா - உ.) எ - து.—கற்கும் தொறும் கற்கும் தொறும் கற்பவர்க்கு நூல் நயம் செய்யும் இனிமை போலும்: பயிலும் தொறும் பயிலும் தொறும் பண்புடையாளர் நட்பு எ - று.

(ப - உ.) எ - து.—படிக்கும் தொறும் நூல் நயம்போல அறிவு தரும்: பழகும் தொறும் பண்புடையாளரது நட்பு

எ - று.

மேல் பொதுவாக நட்டோர் செய்யும் திறன் கூறினர்: குணவானோடு நட்புக் கொள்ளின் அறிவு உண்டாம் என்று

இது
கூறி
யது.

(10) (கா - உ.) இனி இவ்வாறு நட்பு வடு

இன்றி வளர்ந்து செல்

லும் இடத்துத் தகுதி ஆராய்ந்து நடக்க வேண்டுதலான்
னரே அதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

இதன் பின்

## 42. நட்பு ஆராய்தல்.

(ப - உ.) நட்பு ஆராய்தலாவது நட்டற்கு ஆவாரை ஆராய்ந்து கொள்ளுமாறு கூறுதல். இது நட்குங்கால் ஆய்ந்து நட்க வேண்டுத லின் இதன் பின் கூறப்பட்டது.



கா. 1.
ப. 4.

அழச்சொல்லி யல்ல திடித்து வழக்கறிய
வல்லார்நட் பாய்ந்து கொளல்.

(கா - உ.) எ - து.—நட்பானவன் இங்ஙனம் காரியமானது நிகழுமாறு சொல்லியும் நெறி அல்லது செய்யும் இடத்து நெருக்கியும் செய்யத் தகும் முறைமை இது என்று அறிதலும் இம்மூன்று நெறியும் வல்லவர் யாவர் சிலர் நல்லறிவாளர் அவரது நட்பினை ஆராய்ந்து கொள்க நட்கும் இடத்து எ - று.

(ப - உ.) எ - து.—குற்றம் கண்டால் அழுமாறு சொல்லி நெறி அல்லாதனவற்றிற்குக் கழறி, உலக வழக்கு அறிய ஆராய்ந்து கொள்க எ - று.

வல்லாது நட்பை
இது மந்திரிகளின் நட்பு
தார்க்குத் தம்மில் உயர்ந்தாரை
ளப்படும்.
ஆவாரைக் கூறிற்று. அரசர் அல்லா
நட்பு ஆக வேண்டும் என்று கொள் கா. 2.
(1)

ப. 1.

நாடாது நட்டலிற் கேடில்லை நட்டபின்
வீடில்லை நட்பாள் பவர்க்கு.

(கா - உ.) எ - து.—இங்ஙனம் ஆராய்ந்து கடிது நட்டலின் மேற்பட்ட கேடும் இல்லை: ஒருவாற்றான் நட்ட பின்பு விடுதியும் இல்லை: யார்க்கு எனின், நட்பு அறிந்து ஆளும் அவர்க்கு எ - று.

(ப - உ.) எ - து.—ஆராயாது நட்புப்

பண்ணுதல் போலக் கெடு தல் வருதல் இல்லை: நட்ட பின்பு அவர்க்கு விடுதல் இல்லை ஆதலால் எ - று.

இஃது ஆராய் வேண்டும் என்றது.

(2) கா. 3.

ப. 10.

ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடை

தான்சாந் துயரந் தரும்.

[முறை

(கா - உ.) எ - து.— ஒருவரோடு முதல் முறை நட்புச் செய்யும் இடத்து அவர் குணம் குற்றங்களைப் பலபடியும் தெரிந்து ஆய்ந்து கொள்ளாதான் செய்யும் நட்பானது பின் முறையே தனது உயிர்க்கு இறுதியாவது ஓர் உறு துயரத்தைச் செய்யும் எ - று.

(ப - உ.) எ - து.—குற்றம் ஆய்ந்து கொள்ளாதான் கொண்ட நட்புப் பிற்காலத்துத் தான் சாதற்கு ஏதுவான துன்பத்தைத் தரும் எ - து.

இஃது ஆராயாமையால் வரும் குற்றம் கூறிற்று.

(3)



கா. 4.

ப. 6.

ஊதிய மென்ப தொருவற்குப் பேதையார்
கேண்மை யொரீஇ விடல்.

(கா - உ.) எ - து.— உலகத்து உணர்வுடை ஒருவனுக்குப் பெரும் பேறு என்று எடுத்து உரைக்கப்படுவது யாதோ எனின், அறிவு கேடாது கெழுமுதலைச் செய்யாது தப்பிப் போதல் எ - று.

ஒரீஇ என்பது நீங்கி யொழிதல் என்பது.

(ப - உ.) எ - து.—ஒருவற்கு இலாபம் ...ரோடு நட்பு ஆகுதலை நீங்கி விடுதல் எ - று.

ஆவது அறிவிலாதா

இது பேதையார் நட்புத் தவிர்க்க என்றது.

(4)

கா. 5.

ப. 7.

உள்ளற்க வுள்ளஞ் சிறுகுப
கொள்ளற்க
வல்லற்க ணாற்றறுப்பார் நட்பு.

(கா - உ.) எ - து.—சிறுமை உள்ளம் கருதற்க: அல்லல் உற்ற பினையும் கொள்ளற்க எ - று.

உள்ளனவற்றை என்ஞான்றும்
இடத்துக் கீழ் அறுப்பாரது நட்

(ப - உ.) எ - து.—தான் சிறுகும் அவற்றை உள்ளத்தால் நினையாது ஒழிக: அதுபோல அல்லல் வந்த இடத்து வலியறுப்பாரது நட்பைக கொள்ளாது ஒழிக எ - று.

இஃது இழிகுணத்தார் நட்புத் தவிர்க என்றது.
(5) கா. 6.

ப. 8.

கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மை யடுங்காலை
யுள்ளினு முள்ளஞ் சுடும்.

(கா - உ.) எ - து.-- வாழும் காலத்து உடன்கூடி நட்புச் செய்து கெடும் காலத்துக் கைவிடுவாரது நட்புக் கூற்றுவன் வந்து அடும் காலத்து நினைப்பினும் உள்ளம் சுடும் எ - று.

(ப - உ.) எ - து.—கெடும் பொழுது கைவிடுவாரது நட்பைத் தன்னைப் பிறர் கொல்லும் காலத்து நினைப்பினும் நினைத்த மனத்தினை அந்நட்புச் சுடும் அவர் சொல்லுதலினும் எ - று.

இது கேட்டிற்கு உதவாதார் நட்பைத் தவிர்க என்றது. (6) கா. 7.

ப. 5.

மருவுக மாசற்றார் கேண்மையொன்
றொருவுக வொப்பில்லார் நட்பு.

நீத்து

## 42. நட்பு ஆராய்தல் 161

(கா - உ.) எ - து.—மனம் மாசு அற்றார் கேண்மையை மருவுக: தமக்குச் சிறந்தது யாதாவும் ஒன்று கொடுத்தும் தமது சீர்மைக்கு ஒவ்வாதாரது நட்பினைக் கொள்ளாது நீங்குக எ - று.

(ப - உ.) எ - து.—குற்றம் அற்றார் நட்பைக் பொருளைக் கொடுத்தாயினும் தனக்கு நிகரில்லாதார் நீங்குக எ - று.

கொள்க: ஒரு
நட்பினின்றும் நிகர்

இது குற்றம் அற்றார் நட்பைக் கொள்ள வேண்டும் என்பதூஉம் அல்லாதார் நட்புத் தவிர வேண்டும் என்பதூஉம் கூறிற்று. (7)

கா. 8.

ப. 3.

குடிப்பிறந்து தன்கட் பழிநாணு வானைக்
கொடுத்துங் கொளல்வேண்டு நட்பு.

(கா - உ.) எ - து.—ஒழுக்கம் குன்றாக் குலத்துப் மாட்டு ஒரு பழி நாணுவானைச் சிறந்தன கொடுத்தும் வேண்டும் எ - று.
பிறந்து தன்
நட்புக்கொள

(ப - உ.) எ - து.—மேல் கூறியவற்றுள் உயர்குடிப் பிறந்து பிறர் சொல்லும் பழிக்கு அஞ்சும் அவனை அவன் வேண்டியது ஒன்று கொடுத்து நட்பு ஆகக் கொள்க எ - று.

கொடுத்தும் கொளல் வேண்டும்
ஆவாரைக் கூறிற்று.

என்றமையால் அரசன் நட்பு
(8)

கா. 9.

ப.. 2.

குணனுங் குடிமையுங் குற்றமுங்
வினனு மறிந்தியாக்க நட்பு.

குன்றா

(கா - உ.) எ - து.—குடிப்பண்பும், ஒழுக்கக் குறைபாடு இல்லாச் சுற்றமும் குணமும் குற்றமும் இவை நான்கும் ஒருவரைச் சீர்தூக்கி அறிந்து மற்று அவரோடு செறிக நட்பினை எ - று.

(ப - உ.) எ - து.—ஒருவனுடைய குணமும் குடிப்பிறப்பும் குற்றமும் குறை இல்லாத சுற்றமும் முன்பே ஆராய்ந்து பின்பு அவனை நட்பு ஆகப் பிணிக்க எ - று.

இவை எல்லாம் ஒத்தன ஆயின் உறவு நாள் ஆராய வேண்டுவன கூறிற்று.

செல்லும். இஃது
(9) கா. 10.

ப. 9.
கேட்டினு முண்டோ ருறுதி
நீட்டி யளப்பதோர் கோல்.

கிளைஞரை

(கா - உ.) எ - து.—ஒருவர்க்கு வறுமை முதலிய கேடு வந்து உற்ற இடத்துத் தளர்ச்சி அல்லது ஓர் உறுதி இன்று அன்றே: மற்று அக்கேட்டின்............ருறுதிப்பாடு அஃது அய............ வெனின் இவர் எமக்கு இனிய துணையவர் என்று இங்ஙனம் தமக்குச் சிறந்த கிளைஞரைக் காலம் கெடுக விட்டு அளப்பது ஓர் கோல் எ - று.

(ப - உ.) எ
டாம்:. அக்கேடு

- து.—கேடு வந்த இடத்தினும் ஒரு பயன் உண்
நட்டாரது தன்மையை அளந்து அறிதற்கு ஒரு கோல் ஆம் ஆதலால் எ - று.

மேல் கெடுங்காலைக் கைவிடுவாரை விட வேண்டும் என்றார்: அவரை அறியுமாறு என்னை என்றார்க்குக் கேட்டால் அல்லது அறிதல் அரிது என்று கூறிற்று. (10)

(கா - உ.) இனி மற்று இங்ஙனம்.................நட்பு என்றார் ஆகலின் நீட்டி மற்று இதன் பின்னரே பழமையை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 43. பழமை.

(ப - உ.) பழமையாவது நட்டோரது உரிமை அவர் உரிமையால் செய்வனவற்றிற்குப் பொறுக்க அதன் பின் கூறப்பட்டது.

கூறுதல்: இஃது
வேண்டும் என்று கா. 1.
ப. 9.

விழையார் விழையப் படுப
பண்பிற் றலைப்பிரியா தார்.

பழையார்கட்

(கா - உ.) எ -
யார் எனின் நட்பில்

து.—விரும்பா மனத்தாராலும் விரும்பப்படுவர் : தமக்குப் பழையாராய் உள்ளவர் மாட்டு மாயில் தலைப்பிரியா மாட்சிமையோர் எ - று.

(ப - உ). எ - து.—விரும்பாதாராலும் விரும்பப்படுவர் : நட்டோர் மாட்டுக் குணத்தினின்று நீங்காதார் எ - று.

பழைய

இது பகைவரும் விரும்புவர் என்றது.

(1) கா. 2.

ப. 2.

நட்பிற் குறுப்புக் கெழுதகைமை
குப்பாதல் சான்றோர் கடன்.

மற்றதற்

(கா - உ.) எ - து.—ஒருவரோடு
குச்           சிறந்தது யாது எனின், என்றும்

ஒருவர் கட்டால் அக்கட்பிற்
ஒருபடி படக் கெழுமிய கெழு

## 43. பழமை 183

தகைமை ஆகிய பழமைக்கு என்றும் இனியர்
ஆதல் சான்றோர் கடன எ - று.

உப்பு என்பது இனிமை.

(ப - உ.) எ - து.—கட்பிற்கு அங்கம்
வுரிமையால் செய்யும் அதற்கு உடம்படுதல்

ஆவது உரிவை: அவ்
சான்றோர்க்கு இயல்பு
எ - று.

பல காயமும் அமைந்தாலும் உப்பு இன்றாயின் இனிமை உண்டாகாதது போல, உடன்படாராயின் இனிமை இன்றாம் ஆதலான் உடம்பட வேண்டும் என்றது. (2)

கா. 3 .
ப. 8.

கெடாஅர் வழிவந்த கேண்மையார்
கேண்மை

விடாஅர் விழையு முலகு.

(கா - உ.) எ - து.—ஒரு பொழுதும் இடைவிடாது பட வந்த கேளின் தன்மையோர் நட்பினை ஒருகால் விரும்பி நிற்பர் உயர்ந்தோர் எ - று.

ஒரு வழிப்
ஒழியாதே

(ப - உ.) எ - து.—குற்றம் உண்டான இடத்தும் நட்பினில் கெடாராய்க் குலத்தின் வழிவந்த நட்பு உடையாரது நட்பை விடுதல் இன்றி உலகத்தார் விரும்புவர் எ - று.

இது பழமையைக் கொண்டாடுவாரை
ஆடுதற்கு விரும்புவர் என்றது.

உலகத்தார் தாமும் நட்பு கா. **4.**
(3)

**ப. 3.**

விழைதகையார் வேண்டி யிருப்பர்
கேளாது நட்டார் செயின்.

கெழுதகையார

(கா - உ.) எ - து.—நட்டாரானோர் யாம் இப்பொருள் கைக் கொள்வோம் என்று கொண்டவரைக் கேட்டுக் கொள்ளாது அவ ருடன் தமக்கு உள்ள பழமை மிகுதியாலே யாதானும் ஒன்று செய்யின் அவருடன் நட்பின்கண் விழை தகையாரானோர், அவர் அங் ஙனம் கேளாது செய்கின்ற உரிமையை மேன்மேலும் வேண்டி யிருப் பர்: என் எனின், தாம் அவர் என்னும் வேற்றுமை இலர் ஆகலான் எ - று.

பரி. பா - ம். "விழைதகையான்".

(ப - உ.) எ - து.—நட்டோர் தமது உரிமையாலே கேளாது இசைவு இல்லாதவற்றைச் செய்வார் ஆயின் அதற்கு முனியாது அதனையும் தாமே விரும்பும் தன்மையோடு கூட விரும்பி இருப்பர் மிக்கார் எ - று. (4)



கா. 5.
ப. 5.

*அழிவந்த செய்பினு மன்பறா*
*வழிவந்த கேண்மை யவர்.*

ரன்பின்

(கா - உ.) எ - து.—தாம் அழிய வந்தனவற்றைச் செய்தாராயினும் அன்பு விடார்: அன்பினாலே வழிவந்த கேண்மையை உடை

யோர் எ - று.

(ப - உ.) எ - து.—தமக்கு அழிவு வரும் காரியத்தைப் பழைய நட்டோர் செய்தாராயினும் அவரோடு உள்ள அன்பு விடார்: முற் காலத்து அன்பின் வழியாக வந்த நட்பை உடையவர்கள் எ - று.

இது கேடு வருவன செய்யினும் அமைய வேண்டும் என்றது (5) கா. 6.
ப. 4.

கேளிழுக்கங் கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு
நாளிழுக்க நட்டார் செயின்.

(கா - உ.) எ - து.—இவ்வாறு நல்லவும் தீயவும் அவரைக் கேளாது செய்தற்கு உரிய கெழுதகைமை வல்லார் ஆகிய கிளைமை யோர்க்கு அவருடன் நட்டார் பின்னும் நட்பிடைக் குற்றம் செயின் அற்றை நாள் தமது வாழுநாள் வரையுள் இழந்த நாள் ஆகும் எ - று.

கேள் இழுக்கம் என்பது நட்பில் குற்றம் என்றது.

(ப - உ.) எ - து.—நட்டாரது தப்பைப் பிறர் சொல்லுங்கால் கேளாத உரிமை அறிய வல்லார்க்கு நட்டோர் தப்புச் செய்யில் அந்த நாள் நல்ல நாள் ஆம் எ - று.

இது கேளாது செய்தலே அன்றித் வேண்டும் என்றது.

தப்புச்,செய்யினும் அமைய கா. 7.
(6)

ப. 10.

பழகிய நட்பெவன் செய்யுங்
கெழுதகைமை
செய்தாங் கமையாக் கடை.

(கா - உ.) எ - து.—அவரொடும் நெடுங்காலம் பழகிய நட்பு எல் லாம் என் செய்யும் : யாதும் இல்லை : எவ்விடத்து எனின் கீழ்ச் சொன்னபடியே அவர் தமக்கு வேண்டும் கெழுதகைமை செய்து அமையா இட,த்து எ - று.

(ப - உ.) எ - து.—பழகிய நட்பால் பெறும் பயன் என்னை? உள் உரிமையால் ஒருவன் பிழை யாத இடத்து எ - று.
செய்த காலத்து அரசன் தான் அமை 43.
(7)

பழமை 185 கா. 8.

ப. 6.

பேதமை யொன்றோ பெருங்கிழமை
நோதக்க நட்டார் செயின்.

யென்றுணர்க

(கா - உ.)

தாம் பெரிதும்

எ - து.—தம்மோடு நட்டார் இவ்வாறு அன்றித் நோவத் தக்கனவற்றைச் செய்வாராயின் ஒன்றோ

அவர் அறியாமை

மோடு வேற்றுமை

எ - று.

என்று உணர்க: இனி ஒன்றோ அவர்க்குத் தம் அற நின்ற பெரியது ஓர் உரிமை என்று அறிக

(ப - உ.) எ - து.—தாம் நோவத் தக்கனவற்றை நட்டோர் செய்தாராயின் அதற்கு முனியாது ஒன்றில் அறியாமையாலே செய் தார் என்று கொள்க: ஒன்றில் பெரிய உரிமையாலே செய்தார் என்று கொள்க எ - று. (8)

கா. 9. ப. 1.

பழமை யெனப்படுவ தியாதெனின்
கிழமையைக் கீழ்ந்திடா நட்பு.

யாதுங்

(கா - உ.) எ - து.—ஒருவரோடு ஒருவர்க்கு உள்ள காலப்பழமை யென்று எடுத்து உரைக்கப்படுவது யாதோ எனின் தம் பொருட் கண் அவர் செய்யும் யாதானும் உரிமையை வேறிடாது விரும்பும் நட்பு எ - று.

(ப - உ.)
எனின் யாது

எ - து.—பழமை என்று சொல்லப்படுகின்றது யாது ஒன்றினையும் உரிமை அறுத்தல் இல்லாத நட்பு எ - று.

இது பழமையாவது இது என்று கூறிற்று.

(9) கா. 10.

ப. 7.

எல்லைக்க ணின்றார் துறவார் தொலைவிடத்துந்
தொல்லைக்க ணின்றார் தொடர்பு.

(கா - உ.) எ - து.—தம்மொடு நட்பினால் பழமைக்கண் நிலை நின்றார் தொலையும் இடத்தும் அப்படிப் பழமை வரம்பின்கண் நின் றார் யாவர்? மற்று இவர் இவரோடு உண்டாகிய தொடர்பினை என் றும் கைவிடார் எ - று.

(ப - உ.) எ - து.—பழமையின் கண்ணே, நின்றாரது நட்பை அவரானே தமக்கு அழிவு வந்த இடத்தும் விடார்கள் ஒழுக்கத்தின் கண்ணே நின்றார் எ - று.

எல்லையாவது வரம்பு. அஃது ஒழுக்கம் ஆயிற்று. மேல் கூறிய ஆற்றான் அமைந்து விடுதல் அன்றி நட்பு விடுதல் உயர்ந்தோர் செய் யார் என்றது. (10)

(கா - உ.) இவ்வாறு அன்றிக் கெழுமிக் கை உணர்த்துகின்றது மேலே அதிகாரம்.

விடுவாது• தீங்கு

## 44. தீ நட்பு.

(ப - உ.) தீநட்பு ஆவது தீய குணத்தர் ஆகிய மாந்தரோடு நட்டதனால் வரும் குற்றம் கூறுதல். மேல் நட்பு ஆராய்தல் கூறுகின்றுழி நட்க்கப்படாதாரைக் கூறி ஈண்டும் கூறுதல்............பிற எனில் அற்று அன்று : அதனுள் நட்கப்படாதாரைக் கூறினார் : இதனுள்
அவரால் பயன் இன்மை கூறினர் ஆதலின் வேறு படுத்துக் கூறப்பட்டது என்க. மேல் நட்பினால் வரும் பயனும் அவரோடு ஒழுகும் திறனும் கூறினார். இது நட்பினால் வரும் பயன் கூறுகின்றது ஆக ஆகலின் அதன் பின் கூறப்பட்டது.

கா. 1.

ப. 4.

பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை
பெருகலிற் குன்ற லினிது.

(கா - உ.) எ - து.—காணும் தொறும் கண்ணினால் பருகிக் கொள்வார் போன்று இருப்பினும் நல் ஒழுக்கம் இல்லாதது கேண்மை பெருகி வருதலின் தம் கருமம் குறை படுதல் சால இனிது எ - று.

(ப - உ.) எ - து.—கண்ணினால் பருகுவாரைப் போலத் தனக்கு அன்பு உடையாராய் இருப்பினும் குணம் இல்லாதார் நட்புப் பெருகு மதனினும் குறைதல் நன்று எ - று.

இது குணம் இல்லாதார் நட்புத் தீது என்றது.

(1) கா. 2.

ப. 10.

நகைவகைய ராகிய நட்பிற்
பத்தடுத்த கோடி யுறும்.

பகைவராற்

(கா - உ.) எ - து.—இவர் நகையர் ஆகி நட்டு ஒழுகலின் இவர் மாட்டு ஓர் அயிர்ப்பு இல்லை: அதனால் பலகோடி படைவரினும் அவை புறத்தினின்று வருவன ஆகலான் அதனிடை ஓர் உபாயம் சிந்தித்து உய்யவும் கூடும். மற்று இவர் கூட நின்றே குடி முழுதும் கெடுப்பர் என்பது பொருள் எ - று.

(ப - உ.) எ - து.—நகையின் பகுதியார் செய்த நட்பினும் பகைவராலே பத்துக் கோடி மடங்கு நன்மை மிகும் எ - று.

நகை வகையார் நட்பு ஆகிய அதனினும் பகைவர் ஆதல் நன்மை பயக்கும் என்று பொருள் உரைக்கினும் அமையும். நகை வகை

யார் - காமுகரும் வேழம்பரும் முதலாயினோர்: இவர்கள் நட்புத் தீது என்றது. பின் கூடா நட்புக் கூறுவார் ஆதலின் இவர்களும் அதற்குரியர் என்பதற்கு ஈண்டுரைத்த தென்க. (2)

கா. 3.

ப. 7.

கனவிலு மின்னாது மன்னோ வினைவேறு
சொல்வேறு பட்டார் தொடர்பு.

(கா - உ) எ - து.—கனவின்கண் அன்றியே கனவின்கண்ணும் இன்னாதது: எங்ஙனம் எனின் தொழில் ஒன்றாய்ச் சொல் ஒன்றாய் வேறுபட்டு இருப்பார் நட்பு எ - று.

(ப - உ.) எ - து.—பயன்படும் நனவின்கண்ணே அன்றிக் கனவின்கண்ணும் இன்னாது ஆம், செய்யும் தொழில் வேறு ஆகச் சொல்லும் கூற்று வேறு ஆக ஒழுகுவாரது நட்பு எ - று.

இது பொய் கூறுவார் நட்புத் தீது என்றது.

(3)

கா. 4.

ப. 1.

அமரகத் தாற்றறுக்குங் கல்லாமா

தமரிற் றனிமை தலை.

வன்னார்

(கா - உ.)

வலது சாரியும்,

எ - து.—போர் செய்யும் இடத்து இடது
குறுக்கு அறுத்தலும், நெடுகப் பாய்தலும்,

சாரியும்,
மற்றும்
பலவும் கற்று அறியா மா ஆனது தலைனை நடாத்துவான்
அறுக்குமாப் போல அன்னர் ஆகிய தமரின் தனிமையே
தலை எ - று.
ஆற்றலை
மிகவும்

(ப - உ.) எ - து.-- தெருவின்கண் செறிப்பட

கண் எறினவன்
நடந்து அமரின் போல்வார் தமர்

வலியைக் கெடுக்கும் அறிவு இல்லாத குதிரையைப்
ஆவதின் தனியன் ஆதல் நன்று எ - று.

தனிமை தீது என்பது முன்பே அமைந்து

கிடந்தது. இக்கட்
பின் கொடுமை யதுவும் நன்று ஆயிற்று. தீமைக்கு அளவு இன்மை
யின் இவ்வாறு கூறினர். இவ்வுரை மேல் வருவனவற்றிற்கும் ஒக்
கும். இது கயவர் நட்புத் தீமை பயக்கும் என்றது. (4)

**கா. 5.**

**ப. 8.**

உறினட் டறிவொருஉ மொப்பிலார்
பெறினு மிழப்பினு மென்.

கேண்மை

(கா - உ.) எ - து.—இங்ஙனம் தமக்கு உறுவது பெறும் காலத்து மிகவும் நட்டும் தமக்கு உறுதி அறும் இடத்து நீங்கும் இயல்பினர் ஆகிய இந்த ஒத்த நெறி இல்லாதார் கேண்மை பெறின் அதனல்



வரும் இன்பம் யாது? இழப்பின் அதனல் வரும் சேதம் யாது? மற்று ஒன்றும் இல்லை எ - று.

(ப - உ.) எ - து.—செல்வம் மிக்க காலத்து
அற்ற காலத்து நீங்குகின்ற
நட்டு அஃது னல் வரும் நன்மை யாது?

நிகர் அல்லாதார் நட்பைப் பெற்ற அத
இழந்த அதனுல் வரும் தீமை யாது?
எ - று.

மக்களுள் இவரோடு ஒத்த இழிவு உடையார் இன்மையான் ஒப்பு இலாதார் எ - று.

அன்றியும் தன்னேடு பொருத்தம் இல்லாதார் என்றும் ஆம். இது கால புருடர் நட்புத் தீது என்றது. (5) கா. 6.

ப. 9.

உறுவது சீர்தூக்கு நட்டும் பெறுவது
கொள்வாருங் கள்வரு நேர்.

(கா - உ.) எ - து.—தமக்கு உறுவது பார்த்து வந்து சார்ந்த நட்டாரும், பெறுவது கொள்ளும் பொது மகளிரும், பொருள் சோர்வு பார்க்கும் கள்வரும், இம்மூவர்க்கும் வஞ்சனை தன்னில் ஒக்கும் எ - று.

(ப - உ.) எ - து.—நட்டோர்க்கும் தமக்கும் வரும் நன்மை தீமையை ஒக்கப் பார்த்துத் தமக்கு நன்மை ஆகும் அதனைச் சீர்மை தூக்கும் நட்டோரும், பெற்றது கொள்ளும் கணிகையரும், கள் வரும் மேற் கூறியவர்களோடு ஒப்பர் எ - று.

இம்மூவர் நட்பையும் ஆராயின் அவர்களும் தீமை தருவர் என்றது. (6)

கா. 7.

ப. 2.

செய்தேமஞ் சாராச் சிறியவர் கேண்மை
யெய்தலி னெய்தாமை நன்று.

•

(கா - உ.) எ - து —பலகாலும் தமக்கு ஒருவர் பேருதவி செய்தவர்க்கும் தாம சிறிதும் உறுதி சாராத புல்லியர் ஆகிய நீசர் நட்புப் பெறுதலின் பெறுமையே மிகவும் நன்று எ - று.

(ப - உ.) எ - து.—நட்புச் செய்து தனக்கு பாதுகாவல் ஆகாத புல்லியாரது புல்லிய நட்பைப் பெறுவதினும் பெறுமை நன்று எ - று.

இது சிறியார் நட்புத் தீமை பயக்கும் என்றது. சூதர், வேட்டைக்காரர், பெண்டிர் போல்வார்.

சிறியாரவார்



கா. 8.
ப. 5.

ஒல்லுங் கரும முடற்று பவர்கேண்மை
சொல்லாடார் சோர விடல்.

(கா - உ). எ - து.—தமக்கு இயலும் கருமத்தையும் இயற்றாது கெடுபவர் கேண்மையை நாவினாலும் உரையாடாராய்க் கழிய விடுக எ - று.

உடற்றுபவர் என்றது கெடுப்பவர் என்றது.

(ப - உ.) எ - து.—தம்மால் இயலும் கருமத்தை முடியாது வருத்துமவர் நட்பை நட்பு விடுக எ - று.

என்று சொல்லுமதும் செய்யாராய் விழ

இஃது அழுக்காறு உடையார் நட்புத் தீது என்றது. (8) கா. 9.

ப. 6.

எனைத்துங் குறுகுத லோம்பன்
மன்றிற் பழிப்பார் தொடர்பு.

மனைக்கெழீஇ

(கா - உ.) எ - து.—எவ்வாற்றானும் சென்று அடைதலைப் பரிகரிக்க : யாதினை எனின் மனையிடத்துக் கெழுமி வைத்து மன்றின் கண் சென்றே பழித்து உரைப்பாரது நட்பினை எ - று.

(ப - உ.) எ - து.—சிறிதும் செறிதலைத் தவிர்க : மனையின்கண் நட்டோராய் இருந்து தவிர்க எ - று.

மன்றின்கண் குற்றம் கூறுவாரது நட்பைத்

இது குற்றம் கூறுவார் நட்புத் தீது என்றது.

(9) கா. 10.

ப. 3.

பேதை பெருங்கெழீஇ நட்பி
ரேதின்மை கோடி யுறும்.

னறிவுடையா

(கா - உ.) எ - து.—அறிவிலாதான் ஒருவன் கெழுமுதல் செய்து நட்பைச் செலுத்துவதினும்

வந்து பெருங்
அறிவுடையார்
பகைமை கோடி உறும் எ - று.

(ப - உ.) எ -
ஆகும் அதனினும்

து.—அறிவு இல்லாதார் மிகவும் கெழுமிய நட்பு அறிவுடையார் பகைமை கோடி மடங்கு மிக்க நனமை உடைடாம எ - று.

இது பேதையார் நட்புத் தீமை பயக்கும் என்றது. (10) 190

(கா - உ.) இனி, இங்ஙனம் உறின் நட்டு அறின் ஒருவும் தீ நட்பினும் கொடிது கூடாதார் நட்பே: அதனால் மற்று இதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 45. கூடா நட்பு.

(ப - உ.) கூடா நட்பு ஆவது சுற்றத்தார் ஆயினும் பிறர் ஆயினும் மனத்தினால் கள்ளாது நட்டாரைப் போல ஒழுகுவார் இயல்பும் அவர் மாட்டு ஒழுகும் திறனும் கூறுதல். அவர் தாம் இருவகையர்: தமக்கு இனம் அன்றிக் கருமம் காரணம் ஆக நட்பாரும், பகைவராய் நட்பாரும் என: அவ்விரு வகையாரவேயும் தீய நட்புப்போலக் கடிய வேண்டுதலின் அதன் பின் கூறப்பட்டது.

கா. 1. ப. 8.

> சீர்விடங் காணி னெறிதற்குப் பட்டடை
> நேரா நிரந்தவர் நட்பு.

(கா - உ.) எ - து.—தமக்கு ஏறத் திருந்தின இடம் காணின் அவரைத் தாம் கொல்லுதற்குப் பட்டடை: யாது எனின், தமது அகத்து ஒவ்வாராய்ப் புறத்து ஒருவரோடு ஒத்தார் போன்று உள்ளவர் நட்பு எ - று.

(ப - உ.) எ - து.— முடியும் இடம் காணின் மற்று ஒருவன் எறிதற்குப் பட்டடையாம்: மனத்தினால் சேராது புறம் ஒத்தார் போல ஒழுகுவாரது நட்பு எ - று.

பட்டடையாவது தான் தாங்குவது போல நின்று வெட்டுவார்க்கு உதவி செய்வது. இது கூடா நட்பினால் வரும் குற்றம் கூறிற்று. (1)

கா. 2. ப. 4.

நட்டார்போ னல்லவை சொல்லினு மொட்டார்சொ
லொல்லை யுணரப் படும்.

(கா - உ.) எ - து.—தாமும் சிலரோடு நட்டார் போல் நடித்துச் செவிக்கு இனியனவே சொல்லினும் அகத்து ஓர் ஒட்டு இல்லாதார் சொல்லும் அச்சொல்தானும் விரைய ஆராய்ந்து கொள்ள அடுக்கும் எ - று.

(ப - உ.) எ - து.—நட்டாரைப் போல நல்லவை ஆராய்ந்து சொல்லினும் மனத்தினால் பொருந்தாதார் சொல்லை இதுவும் ஒரு வினை உடைத்து என்று விரைய ஆராயப்படும் எ - று.

இது காரியமானவற்றைச் சொல்லினும் தேறல் அரிது என்றது. (2)

## 45. கூடா நட்பு 191

கா. 3.

ப. 5.

பலநல்ல கற்றக் கடைத்து மனநல்ல
ராகுதன் மாணார்க் கரிது.

(கா - உ ) எ - து.—நல்ல நூல்கள் பலவற்றையும் பழுது அறக் கற்ற இடத்தும் அக்கல்விச் சிறப்பால் தன் நெஞ்சு இனியர் ஆகுதல் உள் தூய்மை இல்லாதார்க்கு அரிது எ - று.

(ப - உ.) எ - து.—நல்ல ஆகிய பல நூல்களைக் கற்ற மனன் நல்லர் ஆகுதல் மாட்சிமை இல்லாதார்க்கு அரிது எ

இடத்தும்

- று.

மனம் நன்மையாவது செம்மை: அஃது இவ்விடத்து இன்மையால் மன நன்மை இல்லாதார் ஆயினர். இது கல்வியான் அறிதல் அரிது என்றது. (3)

கா. 4. ப. 1.

இனம்போன் றினமல்லார் கேண்மை மகளிர்
மனம்போல வேறு படும்.

(கா - உ.) எ - து.—புறத்து ஒருவரோடு ஒத்தார் போன்று இருந்து அகத்து அவ்வினம் இல்லாதார் நடிக்கும் நடிப்பு மகளிர் தமது உள்ளம் போல் இடம் காணின் வேறுபட்டு விடும் எ - று.

பொது மகளிர் என்னாது மகளிர் எனப் பொது வகையால் கூறி யது குலமகளிரும் குணம் கெடுதல் கூடும் என்பது குறிப்பு என்று அறிக எ - று.

(ப - உ.) எ - து.—நட்டோர் போன்று மனத்தினன் இல்லாதார் நட்புப் பெண் மனம் போல வேறுபடும் ஆகலான் உள்ளக் கருத்து அறிந்து கொள்க எ - று.

நட்பு

அவர்

இது நட்பாய் ஒழுகுவாரது உள்ளக் கருத்து

என்றது.

அறிய வேண்டும் கா. 5.
(4)

ப. 6.

சொல்வணக்க மொன்னார்கட்
தீங்கு குறித்தமை யான்.

கொள்ளற்க
(கா - உ.)
[வில்வணக்கந் கக்கை அகம்

எ - து.—முன்னரே வந்து சொல்லும் சொல் வணக் பொருந்தாதார் மாட்டு என்றும் கைக் கொள்ளாது

ஒழிக: என் எனின், வில் வளைந்த வணக்கம் எத்துணை உண்டு: அத் துணையும் கொலைக் குறித்து நின்றமையால் அது நினைக்க வேண்டும் எ - று.



(ப - உ.)
மாட்டு நன்று

எ - து.—தாழச் சொல்லும் சொல் வல்ல பகைவர் சொன்னார் என்று கொள்ளாது ஒழிக: வில்லினது வணக்கம் தீமையைக் குறித்தமை ஏதுவாக எ - று.

இது தாழச் சொல்லினும் தேறப்படாது என்றது. (5) கா. 6.

ப. 7.

தொழுதகை யுள்ளும் படையொடுங்கு
ரழுதகண் ணீரு மனைத்து.

மொன்று

(கா - உ.) எ -
கையினைக் கண்டால்

து.—உள்ளம் பொருந்தாதார் புறமே தொழுத குறிக்கொண்மின் : அதுதானே கொலைக் கருவி அறிந்து ஒடுங்கக் கொண்மின்: மற்றவர் என்று உற்ற இடத்து அழுத கண்ணீரும் அத்தன்மைத்து எனவே அதுவும் உயிர்க்கு இறுதி செய்தற்கு அடிக் கொண்டதோர் கருவி எ - று.

இங்ஙனம் தொழுதலும் அழுதலும் அன்றி அவர் நகுதலும் அன்னது என்பதனை அறிவிக்கின்றது "முகத்தி னினிய நகாஅ ..... .............." [கீழ்வரும் குறள் காண்க].

(ப - உ.) எ - து.—தொழுத
கும் : பகைவர் அழுத கண்ணீரும்

கையுள்ளும் கொலைக் கருவி ஒடுங்
அவ்வாறு கொள்க எ - று.

இது மெல்லியர் ஆகத்
னும் தேறப்படார் என்பது.
கூறப்பட்டது.
தொழுத காலத்தினும் அழுத காலத்தி
இத்துணையும் கூடா நட்பினது இயல்பு  கா. 7.
(6)

ப. 2.

முகத்தி னினிய நகாஅ வகத்தின்னா
வஞ்சரை யஞ்சப் படும்.

(கா - உ.) எ - து.—முகத்தினால்
லும் செய்து மனத்தின்கண் இன்னாத
இனிய ஆக மகிழ்ந்து நகுத
வஞ்சரைக் காணின் அஞ்சப்
படும் எ - று.

:

(ப - உ.) எ - து.—முகத்தான் இனிய ஆகச் சிரித்து மனத்திலே பொல்லாங்கு நினைக்கும் வஞ்சரை அஞ்ச வேண்டும் எ - று.

மேல் நட்பாய ஒழுகுவாரது உள்ளக் கருத்து அறிய வேணும் என்றார்: இஃது அறியுங்கால் குறிப்பினாதல், சொல்லினாதல் அறிய வேண்டும் அன்றே: அவை எல்லாவற்றானும் அறிதல் அரிது என் பார் முற்படக் குறிப்பினான் அறிதல் அரிது என்பதூஉம் கூறப் பட்டது. (7)

45. கூடா நட்பு

198

கா. 8.

ப. 10.

பகைநட்பாங் காலம் வருங்கான் முகனட்

டகனட் பொரீஇ விடல்.

(கா - உ.) எ - து.—இங்ஙனம் பகை நட்பு ஆம் காலம் வருங்கால் இது ஒன்று உடைத்து எனக் கருதிக் குறிக்கொண்டு தாமும் புறமே முகத்தினான் நட்புச் செய்து அகத்தான் இவரை நம்பி நள்ளாது ஒழித்து விடுக எ - று.

(ப - உ.) எ - து.—பகைவர் நட்பின் நட்பு ஆம் காலம் வந்த இடத்து முகத்தால் நட்பினைச் செய்து அகத்தால் நட்பினை நீங்கி விடுக எ - று,

இது பகைவோராய நட்டோர் மாட்டு கூறிற்று.

ஒழுகும் திறன் கா. 9.
(8)

ப. 9.

மிகச்செய்து தம்மெள்ளு வாரை நகச்செய்து

நட்பினுட் சாப்புல்லற் பாற்று.

(கா -
னும் மிகப்

உ.) எ - து.—கீழ்ச்சொன்ன அவையே அன்றிப் பின் பல செய்தே தம்மை உள்ளத்தால் பெரிதும் இகழ்ந்திருப் பாரை ஓர்ந்து, தாம் புறமே முகத்தான் நகச்செய்தே அவரோடு நட்பினுல் உள்ளுறச் செறியும் பகுதியினை உடைத்து அன்று எ - று.

நட்பினுள் சாப்புல்லற் பாற்று என்பது தாம் அவரோடு நட்பின் கண் சாவப் புல்லுதல் என்றது. உள் புல்லற் பாற்று அன்று தாம் அவரோடு உள்ளுற அணைக்கும் பகுதியினை உடைத்து அன்று எ - று.

(ப - உ) எ - து.—நட்டாரைப் போலச் செய்யும் அவற்றை மிகச் செய்து மனத்தினுல் தம்மை இகழும் அவர்களைத் தாமும் மகிழுமாறு செய்து நட்பின்கண் நட்புச் சாவ நட்க எ - று.

இது கருமம் காரணம் ஆகி நட்டாரோடு கூறிற்று.

ஒழுகும் திறன் கா. 10.
(9)

ப. 3.

மனத்தி னமைய ர தவரை
யெனைத்தொன்றுஞ்
சொல்லினாற் றேறற்பாற் றன்று.

(கா - உ.) எ - து.—இவ்வாறு நெஞ்சினால் நட்பு
அமைவு இல்லா
தாரை அவர் சொல் பகுதியால் யாதானும் ஒன்று நட்குதல் பகுதி
யினை உடைத்து அன்று: எனவே ஒன்றும் குறிக்கொண்டு தம்மை
ஓம்பிக்கொள்க என்பது பொருள் ஆயிற்று எ - று.

25



(ப -
ஒன்றின்

உ.) எ - து.—மனத்தால் பொருத்தம் இல்லாதாரை யாது
கண்ணும் அவர் சொல்லினால் தெளியற் பாற்று அன்று
எ - று.

இது சொல்லினால் அறிதல் அரிது என்றது -
த்து.

நட்பியல் முடிந்
(10)

(கா - உ.) இனி இவற்றினும் தீது பேதைமை என்பதனன்
இவற்றின் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலே அதிகாரம்.

# 46. (கா.) பேதைமை.—(பரி.)

## துன்பவியல்.

(ப-உ.) துன்ப இயலாவது கேட்டிற்குக் காரணம் ஆகியவற்றது இயல்பு கூறுதல். இறைமாட்சி முதல் ஆகக் கூடா நட்பு ஈறு ஆகப் பொருள் பகுதி ஆகிய அரசர்க்குரிய அமைச்சும், நாடும், அரணும், பொருளும், படையும் நட்பும் என்று சொல்லப்பட்ட ஆறு உறுப்பும் கூறினார்: இனி அவ்வரசர்க்கும் அவரால் ஆக்கப்பட்ட பொருட்கும் கேடுவரும் நெறியை அறிந்து காக்கும் ஆறு கூற வேண்டும் ஆதலின் இது கூறப்பட்டது. மேலதனோடு இயையும் இது. அஃது யாங்ஙனம் கூறினார் எனின், அது கூறிய அதிகாரம் பன்னிரண்டினும், இதன் முதல் ஆகப் பெரியாரைப் பிழையாமை ஈறு ஆகப் பிறரால் கேடு வரும் திறனும் அதனைக் காக்கும் ஆறும், தன்னான் வரும் துன்பப் பகுதி ஐந்து அதிகாரத்தானும் கூறப்பட்டது.

கா. 1. ப. 4.

நாணாமை நாடாமை நாரின்மை
பேணாமை பேதை தொழில்.

யாதொன்றும்

(கா - உ.) எ - து —செய்யத் தகாதன செய்தால் பிறர் சிரிப்பர் என்று நாணம் இல்லாமையும், நன்மையும் தீமையும் ஆராயாமையும், யாவர் மாட்டும் தன் நெஞ்சத்தொடு நட்பும் நயமும் இல்லாமையும், தவமும் ஞானமும் கல்வியும் முதலிய பெரும் பேறுகளின் யாதானும் ஒன்று தனக்கு வேண்டும் என்று பேணிக் கொள்ளாமையும் இப்படிச் சொல்லப்பட்டவை எல்லாம் மதிமயக்கை உடையது யாது? மற்று அதுவே பேதை தன் தொழில் எ - று.

(ப - உ.) எ - து.—நாணம் யும், ஈரம் இன்மையும், யாது பேதையார் தொழில் எ - று.

இன்மையும், தெரிந்து உணராமை ஒரு பொருளையும் போற்றுமையும்

இது பேதையார் தொழில் கூறிற்று. பேதையார் இலக்கணம் கூறியவாறு.

இவை நான்கினும்

(1)

46. (கா.) பேதைமை.—(பரி.) துன்பவியல்

195

கா. 2.

ப. 10.

கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றாற்
குழாஅத்துப் பேதை புகல்.

சான்றோர்

(கா - உ.) எ - து.—ஒருவன் மாசு அறக் கழுவாத காலைத் தூவெண் துகில் விரித்த சிறந்த படுக்கை மேல் சென்று வைத்த அத் தன்மைத்து: கல்வியால் மாசு அற விளங்கிய மனத்தூய்மை உடைய சான்றோர் அவையுள் நெஞ்சு அழுக்கு உடைய பேதை சென்று புகுதல் எ - று.

(ப - உ.) எ - து.—கழுவாத காலைப் பள்ளியின்கண் வைத்தாற் போலும்: சான்றோர் அவையின்கண் பேதை புகுந்து கூடி இருத்தல் எ - று.

இது பேதை இருந்த அவையும் இகழப்படும் என்றது. (2) கா. 3.

ப. 5.

ஒருமைச் செயலாற்றும் பேதை
யெழுமையுந்
தான்புக் கழுந்து மளறு.

(கா - உ.) எ - து.—தான் பெற்று நின்ற ஒரு பிறவிக் கண்ணே செய்து கோடலை வல்லன்

பேதையானவன்: யாதினையோ எனின், இனி வரும் பிறப்பின்கண் எஞ்ஞான்றும் ஒரு கரையேற்றம் இல்லாத வண்ணம் தான புக்கு அழுந்தும் கும்பி நரகத்தை எ - று.

(ப - உ.) எ - து.—பேதை ஒரு பிறப்பின்கண் .செய்யும் செயலானே செய்ய வல்லன் ஆம்: எழு பிறப்பினும் தான் புக்கு அழுந்தும் நரகத்தை எ - று.

எனவே அதற்குக் காரணம் ஆயின செய்யும் என்றவாறு ஆயிற்று. எழுபிறப்பினும் என்றது ஒருகால் அதன் அகத்திலே பிறந்தால் அவ்வுடம்பு நீங்கினும் பின்னும் அதன் உள்ளே பிறந்து அகலாது உறப் பேதை அறம் செய்யுமாறு கூறிற்று. (3)

கா. 4.

ப. 6.

மைய லொருவன் களித்தற்றாற் பேதைதன்
கையொன் றுடைமை பெறின்.

(கா - உ.) எ - து.—முன்னமே பித்து
னும் கள் உண்டு களித்த அத்தன்மைத்து:

எறினன் ஒருவன் பின்
யாதோ எனின், தான்

முன்னமே யாதும் அறியாப் பேதையும் ஆய்ப் பின்னும் அதன் மேலே தன் கையகத்து ஓர் உடைமையும்.....................செய்யும் முறைமை செய்யான் ஆம் எ - று.

(ப - உ.) எ - து.—முன்னே பித்தாய் மயங்கிய ஒருவன் மது உண்டு களித்தால் போலச் செய்வது அறியான் ஆம் பேதையானவன் கையகத்தே ஒரு பொருள் உடையன் ஆகப் பெற்றான் ஆயின் எ - று.

இது பொருள் பெற்றால் ஒழுகும் திறன் கூறிற்று. (4) கா. 5.
ப. 2.

பேதைமையு ளெல்லாம் பேதைமை காதன்மை
கையல்ல தன்கட் செயல்.

(கா - உ.) எ - து.—அறியாமைகள் எல்லாவற்றினும் மிக்க அறியாமை யாவது யாதோ எனின், செய்யும் முறை அல்லவற்றின்கண் காதன்மை செய்தலே கீழ்ச் சொன்ன நாகாதிகட்குக் காரணம் ஆகிய பாவங்கள் எல்லாம் விளைக்கும் இவன் காதன்மை என்பது பொருள் ஆயிற்று எ - று.

(ப - உ.) எ - து.—அறியாமை எல்லாவற்றுள்ளும் அறியாமை ஆம்: தனக்குக் கை வாராத பொருளின்கண் காதன்மை செய்தல் எ - று.

இது வருந்தினும் பெறுதலுக்குக் காதல் என்றது.

செய்தலும் பேதைமை கா. 6.
(5)

ப. 7.

பொய்படு மொன்றோ புனைபூணுங்
பேதை வினைமேற் கொளின்.

கையறியாப்

(கா - உ.) எ - து.—அவ்வினை செய்யத் தரும் ஒழுக்கம் அறியாப் பேதையானவன் ஒரு வினை செய்ய ஒருப்படும் ஆயின் அது பொய்யாய் விடும் ஒன்றோ: அன்றி இனி ஒன்றோ மேல் விளைவது அறியாது பிறர்க்குத் தான் புனை ஆகலைத் தன் மேலே எறட்டுக் கொள்ளும் எ - று.

(ப - உ.) எ - து.—பயன் அறியாப் பேதை ஒரு வினையை மேற்கொளவன் ஆயின் அஃது ஒன்றில் தப்பும்: ஒன்றில் செய்ய வல்லாரைத் தேடும்: அல்லது தான் செய்து முடிக்க மாட்டான் எ - று.

இது பொருள் செய்யும் திறன் கூறிற்று.

(6) கா. 7.

ப. 8.

ஏதிலா ரார்த் தமர்பசிப்பர் பேதை
பெருஞ்செல்வ முற்றக் கடை.

(கா - உ.) எ - து.—அயலார் பலரும் உண்டு இனிது இருப்பத் தனக்கு இன்றியமையாத சுற்றத்தார் பலரும் பசியொடு வாழ்வர் அக்குடிப்பிறந்த பேதையானவன் விதியினுல் ஒரு பெருஞ் செல்வம் உற்ற இடத்து எ - று.

(ப - உ.) எ - து.—அசலார் உண்ண உற்ருர் பசித்திருப்பர் பேதையானவன் பெரிய செல்வத்தை உற்ற இடத்து எ - று.

இது பேதை பொருள் பெற்ருல் வழங்கும் திறன் கூறிற்று. (7)

கா. 8.

ப. 9.

பெரிதினிது பேதையார் கேண்மை
பீழை தருவதொன் றில்.

பிரிவின்கட்

(கா - உ.) எ - து. – மிகவும் இனிது இப்பேதையார் நட்பு: என்னை காரணம் எனில், அவர் பிரிந்த பிரிவின் இடத்து நெஞ்சுக்கு ஒரு துயாம் தருவது யாது ஒன்றும் இல்லை எ - று.

(ப - உ.) எ - து.—மக்கட்குப் இனிது: பிரிந்த இடத்து வருவது

பேதையாது நட்பு மிகவும் ஒரு துன்பம் இல்லையாதலான் எ - று.

இது காமம் துய்க்குமாறு கூறிற்று.

(8) கா. 9.

ப. 1.

பேதைமை யென்பதொன்
றியாதெனி ஏதங்
[கொண்
டூதியம் போக விடல்.

(கா - உ.) எ - து.—அறியாமை என்று சொல்லப்படுவது யாது எனின் குற்றம் ஆகிய செயலைக் கொண்டு உறுதி ஆகிய செயலைச் செய்யாதே விடுதல் எ - று.

அல்லதூஉம் பேதைமை என்று சொல்லப்படுவது ஆகிய தீக் குணம் ஒன்று உண்டு அஃது யாதோ எனின் பிறர் குற்றம் முழுவதும் கைக்கொண்டு மற்று அவர் தமது நற்குணம் அனைத்தும் கழிய விடுதல் எ - று.

(ப - உ.) எ - து.—அறியாமை என்று சொல்லப்படுவது யாது எனின் குற்றம் பயப்பனவற்றைக் கைக்கொண்டு நன்மை பயப்பனவற்றை விடுதல் எ - று.

பேதைமையின் இலக்கணம் கூறுவார் அறியாமை என்று கூறினர்.

முற்படத் தன் கருமம்
(9) 198

திருக்குறள் - பொருட்பால்

கா. 10.

ப. 3.

ஓதி யுணர்ந்தும் பிறர்க் குரைத்துந்
பேதையிற் பேதையா ரில்.

தாமடங்காப்

(கா - உ.) எ - து.—கற்கக்கடவ நூல்கள் அனைத்தையும் கற்றும் அவற்றின் பொருள் முழுவதும் உணர்ந்தும் மற்று அவை பிறர்க்கு

இவ்வண்ணமே உரைத்தும் பின்னும் தான் அமைவு உடையன் ஆகா தான் யாவன் ஒருவனைப் போலப் பேதைமை உடையார் உலகத்து யாவரும் இல்லை எ - று.

(ப - உ.) எ - து.—நூல்களைக் கற்று அறிந்தும் அதனைப் பிறர்க்கு இசையச் சொல்லியும் தாம் அடங்குதலைச் செய்யாத பேதையைப் போலப் பேதையார் உலகத்து இல்லை எ - று.

கல்வி உடையாரை அறிவு உடையார் என்று உலகத்தார் கூறுவர் ஆதலின் அதனை மறுத்துக் கூறூர் ஆயினும் அடக்கம் இல்லை ஆயின் பேதையர் என்று கூறப்பட்டது. (10)

(கா - உ.) இனித் தமக்கு உள்ள மதிகொண்டு பழுதுடன் சில கற்றும் கல்லாதும் பேரறிவு உடையர் ஆகப் பாவித்திருக்கும் புல்லறிவாளர் அறிவும் பேதைமையின்கண் ஓர் பிரிபு உரு ஆகலான் மற்று இதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலே அதிகாரம்.

## 47. புல்லறிவாண்மை.

(ப - உ.) புல்லறிவாண்மை யாவது சிற்றறிவின் இயல்பும் அதனால் வரும் குற்றமும் கூறுதல். இதுவும் பேதைமையோடு ஒத்த இயல்பிற்று ஆதலான் அதன் பின் கூறப்பட்டது.

கா. 1.

ப. 8.

அறிவின்மை யின்மையு ளின்மை
பிறிதின்மை
யின்மையா வையா துலகு.

(கா - உ.) எ - து. —கற்கப்படு நூல்கள் பலவற்றையும் கசடு அறக் கற்று மனத்து இருள் நீங்கி நுணுகிப் பார்த்த அறிவு ஒருவர்க்கு இல்லாமையே இல்லாமை ஆவது: அதனால் அவ்வறிவின் வேறுபட்டு உள்ள இல்லாமை ஒன்றையும் இல்லாமையாக வைத்து எண்ணார் உயர்ந்தோர் எ - று.

(ப - உ.) எ - து.—நல்குரவினுள் நல்குரவு ஆவது அறிவு இன்மை; பொருள் இன்மையை நல்குரவு ஆக எண்ணார் உலகத்தார்: [illegible]ணியும் செய்தார் மாட்டே சேரும் ஆகலான எ - று.

## 47. புல்லறிவாண்மை

199

அறிவு புண்ணியம் செய்தார்க்கு உளது ஆமோ எனின், அது முயற்சியானும் வரும் ஆகலின் வேறு பகுத்துக் கூறினர். இனி அறிவின்மை யான் வரும் குற்றமும் கூறுவார் முற்பட இதனின் மிக்க நல்குரவு இல்லை என்றார். (1)

கா. 2. ப. 10.

அறிவிலார் தாந்தம்மைப் பீழிக்கும் பீழை
செறுவார்க்குஞ் செய்த லரிது.

(கா - உ.) எ - து.—புல்லறிவாளர் ஆகிய அறிவு கேடர் தாமே தம்மைத் துயர் உறுக்கும் துயரம் சொன்ன வறுமையே அன்றித் தம்மைப் பெரிதும் செறுக்கும் பகைவர்க்கும் செய்தல் அரிது எ - று.

(ப - உ.) எ - து.—அறிவு இலாதார் தாமே தம்மை இடர்ப்படுத் தமது பகைவர்க்கும் செய்தல் அரிது எ - று.

இது மேல் கூறிய அதனை வலியுறுத்திற்று. இத்துனை பிழை கூறுகின்ற துன்பத்தை உண்டாக்கும் அவற்றுக்குக் காரணம் ஆம் என்பதுஉம் கண்டு கொள்க. (2)

# கா. 3.

# ப. 5.

அற்ற மறைத்தலோ புல்லறிவு தம்வயிற்
குற்ற மறையாக கடை.

(கா - உ.) எ - து.—தமக்குப் பொருள் அற்றம் தீர்த்தல் சாலப் புல்லறிவு என்றது. தமக்கு வறுமையை நீக்குவதாகக் குற்றம் செய்தலே புல்லறிவு என்று ஆயிற்று: எனவே ஒருவர் விரைந்து மறைத்தற்கு முயல்வது இவ்வற்றம் அல்லது பொருள் அற்றம் மறைத்தல் அன்று என்பது பொருள் ஆயிற்று எ - று.

(ப - உ.) எ - து.—தம்மாட்டு உள்ள குற்றத்தைப் பிறர் அறியாமை மறைத்த காலத்துப் பிறர் காணுமல் மறைக்க வேண்டும் உறுப்பை உடையான் மறைத்தல் புல்லறிவு எ - று.

எனவே அதுவும் மறையான் ஆயின் குற்றம் காடுவார் இல்லை என்றவாறு ஆயிற்று. இது குற்றம் மறையாமை புல்லறிவு என்றது.(3)

கா. 4. ப. 7.

அறிவிலார் நெஞ்சுவந் தீதல் பிறிதுயாது
மில்லை பெறுவான் றவம்.

(கா - உ.) எ - து.—புல்லறிவாளன் ஆகிய அறிவு கேடன் தன் மனம் மகிழ்ந்து ஒருவர்க்குப் பொருள் கொடுத்தல் என்கின்ற இது பிறிது யாதானும் ஒன்றும் இல்லை. இஃது அன்றி [illegible]தோ

எனில் அவன் வயின்
பயனே யன்றி யாது

பெறுகின்ற வளம் முன் முன்செய்த நல்வினைப்
ஒன்றும் இல்லை காரணம் எ - று.

பரி. பா - ம். "அறிவிலா னெஞ்சுவந்து".

(ப - உ.) எ - து.—அறிவு
காரணம் வேறு ஒன்றும் இல்லை

இலாதான் மகிழ்ந்து கொடுத்தற்குக்
: அப்பொருளைப் பெறுகின்றவன் நல்
வினைப்பயன் எ - று.

இது கொடுத்தான் ஆயினும் வரிசை அறியாது கொடுக்கும் ஆக லின் புல்லறிவு ஆயிற்று. இத்துணையும் புல்லறிவின் இயல்பு கூறப் பட்டது. (4)

கா. 5 .
ப. 2.

கல்லாத மேற்கொண் டொழுகல்
கசடற

வல்லதூஉ மையந் தரும்.

(கா - உ.) எ - து.—தான் கல்லாதவற்றையும் கற்றானாகத் தன் மேல் ஏறட்டுக் கொண்டு நடத்தல் யாது? அது மற்றுத் தான் கசடு அறக் கற்று வல்லதூஉம் ஐயப்படுதலைச் செய்யுமாறு எ - று.

(ப - உ.) எ - து.—தான்
ஏறிட்டுக் கொள்ளுதல் குற்றம்

முடியக் கல்லாதவற்றைக் கற்றானாக
திரக் கற்றதனையும் ஐயம் ஆக்கும்
எ - று.

இது கல்லாததனை மேற்கொள்ளுதல் புல்லறிவு என்றது. (5)

கா. 6.
ப. 4.

காணாதாற் காட்டுவான் றான்காணான்
கண்டானாந் தான்கண்ட வாறு.

காணாதான்

(கா - உ.) எ - து.—தான் கற்றது ஒன்றின் மெய்ப் பொருளைக் காண அறியாத புல்லறிவாளன் தான் கண்ட ஆற்றையே குறித்து ஒன்றைக் கசடு அறக் காட்டக் கருதுவான் யாவன்? அவன் தானும் மற்று அன்னனே ஆம்: என்னை எனின், தான் காட்டும் மெய்ப் பொருள் காணுதான் ஆகிய புல்லறிவாளன் தான் கண்டவற்றையே கண்டாளுய் விடும் இத்துணை அல்ல: ஓர்ந்து கைக்கொள்ளும் கருத்தினன் அல்லன் எ - று.

(ப - உ.) எ - து.—அறியாதானை அறிவிக்கப் புகுவான் தான்

அறியான் ஆகும் : அவ்வறியாதவன் அறிந்தபடியே அறிந்திருக்கும்

ஆதலான் எ - று.

இது கொண்டது விடாமை புல்லறிவு என்றது.

(6) 47. புல்லறிவாண்மை 201

கா. 7.

ப. 6.

ஏவவுஞ் செய்கலான் றான்றேறா

போஒ மளவுமோர் நோய்.

ணவ்வுயிர்

(கா - உ.) எ - து.—தானும் அறியான் பிறர் சொல்லவும் செய்யான் ஆகிய புல்லறிவாளன் யாவன்? அவன் உயிர் நீங்கும் அளவும் விடாது அனுபவிப்பது ஓர் நோயாம் இந்நிலை எ - று.

(ப - உ.) எ - து.—அறிவுடையார் சொல்லவும் தான் செய்யான்: அத்தன்மையன் ஆகிய சீவன் போம் அளவும் உலகத்தார்க்கு ஒரு நோயைப் போல்வன் எ - று.

ஏவுதல் - தான் தெரிய என்று ஏவுதல் தெளிதல் - பொருள் யாதென்று தெளிதல். இஃது ஈட்டின பொருளைக் கொடுத்தலும் துய்த்தலும் செய்யாமை புல்லறிவு என்றது. வேறு செய்யும் வினைக்கும் ஒக்கும். (7)

கா. 8. ப. 9.

அருமறை சோரு மறிவிலான் செய்யும்
பெருமிறை தானே தனக்கு.

(கா - உ.) எ - து—இவர் எமக்கு இனியர் என்று கருதிப் பிறர்க்கு உரைத்தற்கு அரியது ஓர் மறையினை ஒருவர் சொன்னால் அதனை அடக்குவது ஓர் அமைவு இன்றிப் பின்பு அவ்விடத்திலே சோரவிடும் புல்லறிவாளன் மற்று அவன் தானே தனக்குப் பிறிது ஒன்றாலும் தீராத பெரிய துக்கத்தைச் செய்து அனுபவிக்கும் எ - று.

(ப - உ.) எ - து.—அறிவு இல்லாதான் தான் அரிது ஆக எண்ணின மறைப்பொருள் சோரவிடும்: அதுவே அன்றித் தனக்குத் தானே பெரிய துன்பத்தினையும் செய்து கொள்ளும் எ - று.

'சோர்விடுதல் - பிறர்க்குச் சொல்லுதல். இது உயிர்க்கேடும் தானே செய்யும் என்றது.

பொருள் கேடும்

(8) கா. 9.

ப. 1.

வெண் மை யெனப்படுவ தியாதெனி லொண்மை

யுடையம்யா மென்னுஞ் செருக்கு.

(கா - உ.) எ - து — பலராலும் இது வெள்ளறிவு என்று பழித்து உரைக்கப்படுவது யாதோ எனின் எல்லாரினும் யாம் சால நுண் ணறிவு உடையோம் என்று இருக்கும் பெருமிதம் எ - று.

வெள்ளறிவு ஆவது புல்லறிவு ஆவது.





(ப - உ.) எ - து.—புல்லறிவு என்று சொல்லப்படுவது யாது எனின் யாம் அறிவு உடையேம் என்று தம்மைத் தாம் மதிக்கும் களிப்பு எ - று.

வெண்மை - காழ்ப்பு

வெண்மை எனப்பட்டது.

இன்மை : முற்றுதல் இன்மையின்
புல்லறிவு ஆவது இத்தன்மைத்து என்று

கூறுவார் முற்பட அறிவு இல்லாதவன் அறியேன் என்னுது வுடையோன் ஆகத் தன்னை மதித்தல் புல்லறிவு என்றது.

அறி
(9) கா. 10.
ப. 3.

உலகத்தா ருண்டென்ப தில்லென்பான் வையத்
தலகையாய் வைக்கப் படும்.

(கா - உ.) எ - து.—திருந்திய கேள்வியின் உயர்ந்தோர் தெரிந்து உண்டு என்னும் மெய்ப்பொருளை அஃது இல்லை என்று கழறுவான் யாவன் ஒரு புல்லறிவாளன், அவனை ஈண்டு ஒரு மகன் என்று கருத அடாது : பின்னை என் எனின் பேய்களுடன் இவனும் ஒரு பேயாக வைத்து எண்ண அடுக்கும் எ - று.

(ப - உ.) எ - து.—உலகத்து அறிவு உடையார் பலரும் உண்டு என்பது ஒரு பொருளை இல்லை என்று சொல்லுமவன் இவ்வுலகின் கண்ணே ஒரு பேய் என்று எண்ணப்படும்.

இஃது உயர்ந்தோர் உண்டு என்பதனை இல்லை என்றது.

என்றல் புல்லறிவு
(10)

(கா - உ.) இத்தன்மையர் ஆகிய புல்லறிவாளருடன் கெழுமல் ஆகாமை உணர்த்தி மற்று அதன் பின்னரே ஒருவரோடும் இகல் கோடலும் ஆகாது என்பதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 48. இகல்.

(ப - உ.) இகல் ஆவது பிறரோடு மாறுபாடு கொண்டார்க்கு வரும் குற்றம் கூறுதல். இஃது அறியாதார்க்கு உளது ஆம் ஆதலின் பின் கூறப்பட்டது.

கா. 1.

ப. 7.

இகலானு மின்னாத வெல்லா நகலானு
நன்னய மென்னுஞ் செருக்கு.

(கா - உ.) எ - து.—யாவரோடு ஆயினும் தான் கொள்ளும் மாறுபாட்டானே உள ஆம்: யாவை என்னின் பெரிதும் இன்னா தன அனைத்தும்: மற்று இனி யாவரோடு ஆயினும் முகமலர்ந்து



இனிது ஒழுகுவரேல் அதனால் ஆம் நல்ல ஆசாரம் படுகின்ற யாவரும் மகிழும் மகிழ்ச்சி எ - று.

என்று சொல்லப்

(ப - உ.) எ - து.—மாறுபாட்டினானே துன்பங்கள் எல்லாம் உள ஆம்: உடன்பட்டு களிப்பு உண்டாம் எ - று.
நகுதலானே நன்னயம் ஆகிய உள்ளக்

மேல் கூறிய குற்றம் எல்லாம் பயத்தலின், தனக்கும் பிறர்க்கும் மகிழ்ச்சி உண்டாம் என்றது.

அதனைத் தவிரத்
(1)

கா. 2.

ப. 8.

இகலென்னு மெவ்வநோய் நீக்கிற் றவலில்லாத்
தாவில் விளக்கந் தரும்.

(கா - உ.) எ - து.—இகல் என்று சொல்லப்படும் துயர் விளைக்கும் நோயை ஒழிப்பின் பின் கெடுதலும் இன்றி மற்றும் தமக்கு ஓர் விளக்கத்தையும் தரும் எ - று.

எவ்வம் என்பது துக்கம் : தா என்பது வருத்தம்.

(ப - உ.)
வான் ஆயின்

எ - து.—மாறுபடுதல் ஆகிய இன்னாத நோயை நீக்கு அங்கீக்குதல் கேடு இல்லாத குறை அற்ற ஒளியினைத் தரும எ - று.

இது தோற்றம் உண்டாக்கும் என்றது.

(2) கா. 3.

ப. 5.

இகலின் மிகலினி தென்பவன் வாழ்க்கை
தவலுங் கெடலு நணித்து.

(கா - உ.) எ - து.—இது நமக்குத் தகாது என்று மீட்கி இன்றிப் பிறரோடு இகலின்கண்ணே மிகுதலை...........பவாது வாழ்க்கை குறைபடுதலும் கெட்டுவிடுதலும் கணித்து எ - று.

தவல் என்பது குறைதல்.

(ப - உ.) எ - து —பிறருடன் இனிது என்று கருதுமவனும், அவன் கெடுதலும் அணித்து எ - று.

மாறுபாட்டின்கண் மிகுதல்
மனை வாழ்க்கையும் சாதலும் நிரனிறை - இது உண்டாம் என்றது.

சாயான் ஆயின் உயிர்க்கேடும் பொருள் கேடும் கா.

(3)

4.

ப. 4.

இகலெதிர் சாய்ந்தொழுக வல்லாரை யாரே
மிகலூக்குந் தன்மை யவர்.



(கா - உ.) எ - து.— தம்மொடு பிறர் வந்து இகலின் அவ்விகல் எதிர் மலையாது தலை சாய்ந்து ஒழுக வல்லாரை மற்று யாரேதான் அவர் மேம்பாட்டைத் தள்ளும் தன்மை யவர்? எ - று.

மிகல் என்பது மேம்பாடு. ஊக்குதல் என்பது தள்ளுதல்.

(ப - உ.) எ - து.— இகலின் எதிர் சாய்ந்து ஒழுக வல்லாரை வெல்ல நினைக்கும் தன்மையவர் யாவர் தான்? எ - து.

மேல் இகலின்கண் சாய்ந்து ஒழுக வேண்டும் என்றார்: அது தோல்வி ஆகாதோ என்றார்க்கு அவரை வெல்வார் இல்லை என்றது.(4) கா. 5.

ப. 3.

இகலிற் கெதிர்சாய்த லாக்க மதனை
மிகலூக்கி னூக்குமாங் கேடு.

(கா - உ.) எ -
எதிர் தலை சாய்ந்து

து.— தம்முடன் பிறர் இகலும் இகலில் தான் ஒழுகுதல் யாவது? அது தமது ஆக்கத்தைக் கொணர்ந்து ஊக்கும் : இனி அங்ஙனம் தலை சாய்ந்து ஒழுகக் கருதாது மற்று அதனை இகலின் கண்ணே நெஞ்சு ஊக்கின் ஆங்கு அது கொணர்ந்து ஊக்குபாம் கேடு என்பதனை எ - று.

(ப - உ.) எ - து.— மாறுபாட்டிற்குச் சாய்ந்து ஒழுகல் ஆக்கம் 'ஆம் : அதனை மிகுதலை நினைக்கின் கெடும் எ - று.

இது மாறுபாட்டிற்குச் சாய்க்க வேண்டும் என்றது. (5) கா. 6.

ப. 9.

இன்பத்து ளின்பம் பயக்கு மிகலென்னுந்
துன்பத்துட் டுன்பங் கெடின்.

(கா - உ.) எ - து. —இன்பத்துள் மிக்க இன்பத்தைத் தரும் : இகல் என்னும் துன்பத்துள் மிக்க துன்பம் கெடின் எ - று.

(ப - உ.) எ - து.— இன்பத்தின் மிக்க இன்பத்தை எய்தும் : மாறுபாடு ஆகிய துன்பத்தின் மிக்க துன்பம் போம் ஆயின் எ - று. எல்லா என்றது.

இன் பத்தினும் மிக்க வீடு பேற்று இன்பமும் எய்தும் கா. 7.

(6)

ப. 1.

இகலென்ப வெல்லா வுயிர்க்கும் பகலென்னும்
பண்பின்மை பாரிக்கு நோய்.

(கா - உ.) எ - து —,தாம் பிறரொடு மாறுபட்டு ஒழுகும் மாறுபாடு என்று சொல்லுப சான்றோர் ; எவ்வுயிர்க்கும் இனிது மேவி 48. இகல்



ஒழுகாது வேறுபடுதல் என்னும் இப்பண்பு இன்மையைப் பரப்பும் கோய் எ - று.

பகல் என்பது பகுதல் என்றது. பாரித்தல் என்பது பரப்புதல்.

(ப - உ.) எ - து.—எல்லா உயிர்க்கும் வேறு படுதல் ஆகிய குணம் இன்மையைப் பரப்பும் துன்பத்தை இகல் என்று சொல்லுவர் அறிவோர் எ - று.

இஃது இகலாவது இது என்று கூறிற்று.
(7)

கா. 8.
ப. 2.

இகல்காணு னாக்கம் வருங்கா லதனை
மிகல்காணுங் கேடு வரற்கு.

(கா - உ.) எ - து.—தான் பிறரோடு இகலுதலைக் காணுன் : தனக்கு ஓர் ஆக்கம் வரக்கடவதான காலத்து : இனி மற்று அதனை மேல் மேலும் மிகுதலை காணும் தனக்குக் கேடு வருவதற்கு உரிய காலத்து எ - று.

(ப - உ.) எ - து — மாறுபடுதற்குக் காரணம் உண்டாயினும், ஆக்கம் வரும் காலத்து மாறுபாடு கேடு வரும் காலத்து எ - று.

காணுன் : அதனை மிகுதலை காணும்

இம்மாறுபாடு நல்வினை உடையார்க்குத் தோற்றுது என்றது.(8) கா. 9.
ப. 6.

மிகன்மேவு மெய்ப்பொருள் காணு
மின்னு வறிவி னவர்.
ரிகன்மேவு

(கா - உ.) எ - து.—தன்னின் பெரியது பிறிது இன்றித் தானே பெருமை மேவுதல் பண்பிற்றுய் என்றும் யாது ஒருபடி படைிற்பது ஆகிய இம்மெய்ப் பொருளைக் காணமாட்டார் யாரோ எனின்

சில சமய வேற்றுமை பற்றி நின்று அதன் மேவுதல் பண்பிற்று ஆகிய இப்பெரியது ஓர் இன்னாத அறிவினர் எ - று.

மிகன்மேவு என்பது பெருமை.

(ப - உ.) எ - து.—மிகுதலைப் பொருந்துகின்ற உண்மைப் பொருளைக் காணமாட்டார்: மாறுபாட்டினைப் பொருந்தின இன்னாத அறிவு உடையார எ - று.

மெய்ப்பொருள் காணார் என்றமையால் கல்வியின்கண் தருக்கத்தினால் மாறுபடுவாரை நோக்கிற்று. இது மாறுபடுவார்க்கு மெய்ப்பொருள் தோன்றாது என்றது. (9)



கா. 10.
ப. 10.

பகல்கருதிப் பற்றா செயினு மிகல்கருதி
யின்னாசெய் யாமை தலை.

(கா - உ.) எ - து.—தம்மொடு சிறிதும் பற்று இல்லாதார் வந்து கருதிக்கொண்டு மாறுபடுதலைச் செய்யினும் தாம் அவரொடு மிகல் கருதிகொண்டு மற்று அவர்க்கு இன்னாதவற்றைச் செய்யாமையே தமக்குத் தலைமைப்பாடு ஆவது எ - று.

(ப - உ.) எ - து.—தம்மொடு பற்று இல்லாதார் வேறுபடுதலைக் கருதித் தீயவற்றைச் செய்தார் ஆயினும் அவரொடு மாறுபடுதலைக் கருதித் தாமும் அவர்க்கு இன்னாதவற்றைச் செய்யாமை நன்று எ - று.

மேல் கூறிய குற்றமும்
தற்குக் காரணம் உள்வழியும்

குணமும் பயக்கும் ஆதலின் மாறுபடு
தவிர்தல் வேண்டும் என்றது. (10)

(கா - உ.) ஓர் அரசர்க்குப் பகை விளைக்க வேண்டிய வழி மற்று அதனால் அவர்க்கு ஓர் அழிவு வாராது மாட்சிமைப்பட ஆராய் தலும் அமைச்சர்க்குக் கடன் ஆகிய ஆற்றான் முன்னம் மிகைத்து இகல் செய்யல் ஆகாது என்பதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 49. பகைமாட்சி.

(ப - உ.) பகை மாட்சி ஆவது பகை கொள்ளுங்கால் தனக்கு நன்மை பயக்குமாறு கொள்ளுதல். மேல் பகைகோடல் ஆகாது என்றார்: இது பகை கொள்ளுங்கால் நன்மை பயக்கும் ஆகின் கொள்க என்றமையால் அதன் பின் கூறப்பட்டது.

கா. 1. ப. 6.

துணைநிலனுய்க் குற்றம் பலவாயின்
கினனிலனு மேமாப் புடைத்து.

மாற்றார்க்

(கா - உ.) எ - து.—தன் வயின் குணம் என்பது ஒன்றும் இலனாய்க் குற்றம் பல உடையனாய் இருப்பின் அவனொடு மாறுபாடு கொள்ளக் கருதுகின்ற மாற்றார்க்கு இணை இல்லாதது ஓர் சேம உறுதியைப் பெரிதும் உடைத்து எ - று.

இனன் இலன் என்றது இணை இலன் என்றது.

(ப - உ.) எ - து.—குணங்கள்
பல உடையனுயின் அவன் துணை

யாதும் இலனுய்க் குற்றங்கள்
இலன் ஆம்: அது மாற்றூர்க்கு
ஏமம் ஆதலை உடைத்து ஆம் எ - று.



அன்றியும் மாற்றூர்க்கு இவன் துணை இலன் என்று மனத்தின் கண் கொள்ளும் வலி உடைத்தாம் என்றும் ஆம். மேல் பகைவர் மாட்டுக் குற்றம் பெருகின், அவரை வெல்லலாம் என்றூர்: இக் குற்றம் தம் மாட்டும் உளதாயின் வெல்ல ஒண்ணுது என்று இது பொதுவாகக் கூறப்பட்டது. குற்ற வகை மேல் கூறப்படுகின்றன. (1)

கா. 2. ப. 1.

வலியார்க்கு மாறேற்ற லோம்புக
வோம்பா
மெலியார்மேன் மேக பகை.

(கா - உ.) எ - து.—ஆள்வலி, தோள்வலி, பொருள்வலி, துணை வலி முதலிய இவற்றுல் தம்மின் வலியார்க்குத் தாம் மாறுபாடு எற்றலைப் பரிகரிக்க: மற்று யார் மாட்டு எனின் தம் வன்மையும் மென்மையும் சீர்தூக்கித் தம் வலியைப் பரிகரிக்க: வல்லாத மெலியார் மாட்டு மேவுக பகைமை எ - று.

மேக பகை என்றது மேவுக பகைமை என்றது.

(ப - உ.) எ - து.—தம்மின்
தலைத் தவிர்க.
தம்மைப் போற்றாத

வலியார்க்குப் பகையாய் எதிர்
எளியார் மாட்டுப் பகை கோடலை
மேவுக எ - று.

இது தனக்கு எளியாரோடு பகை கோடல் ஆம்
என்றது. (2)

கா. 3.

ப. 2.

கல்லான் வெகுளுஞ் சிறுபொரு
ளொல்லானை யொல்லா தொளி.

ளெஞ்ஞான்று

(கா - உ.) எ - து.—சிறந்த நூல்களைக் கல்லாதானும் ஆய்க்
கண்டாரோடு எல்லாம் வெகுளுவானும் ஆய் எஞ்ஞான்றும் இழி
பொருள் விரும்பு............ப்பானை மேவ மாட்டாது புகழ் எ - று.

சிறு பொருள் என்பது இழிவு பொருள். ஒளி
என்பது புகழ்.

(ப - உ.) எ - து.—கல்லாதானும் ஆய் வெகுட்சியும் உடைய
னும் ஆய்ச் சிறு பொருளனும் ஆகிய பகைவனை எல்லா காலும் ஒளி
பொருந்தாது எ - று.

மேல் தம்மைப் பாதுகாவாத எளியாரைப் பகை

கொள்ளலாம்
என்றார்: அவர் எத்தன்மையர் என்றார்க்கு அவரது இலக்கணம் கூறுவார் முற்பட இவை மூன்றும் உடையார்க்கு விளக்கம் உண்டாகாது ஆகலின் அவரொடு பகை கொள்ளலாம் என்றார். (3)

208 திருக்குறள் - பொருட்பால்

கா. 4.

ப. 3.

செறுவார்க்குச் சேணிகவா வின்ப
வஞ்சும் பகைவர்ப் பெறின்.

மறிவிலா

(கா - உ.) எ - து.—வந்து
சேண் நீங்கா இன்பம் ஆனவை:
தெரிந்து அறிவு இல்லாதவரும்

அடர்க்க நினைவார்க்குத் தம்மைச்
எவ்விடத்து எனின், .............ங்கு
ஆவோர் எதிர் காணின் உள் நடுக்

கம்

உடைய பகைவரைப் பெறின் அவ்விடத்து எ - று.

சேண் இகவா இன்பம் என்பது நீங்கா இன்பம் என்றது.

(ப - உ.) எ - து.—அறிவு இல்லாத அச்சம் உடைய பகைவரைப் பெறின் அவரைச் செறுவார்க்கு இன்பம் தூரப் போகாது: அணித்து ஆக வரும் எ - று.

அறிவு - காரிய அறிவு. இவை
வெல்ல மாட்டார் ஆதலால் பகை

இரண்டும் ஒருங்கு உடையார்
கொள்ளலாம் என்று கூறப்
பட்டது.

(4)

கா. 5.

ப. 4.

கணைச் சினத்தான் கழிபெருங்
காமத்தான்
பேணமை பேணப் படும்.

(கா - உ.) எ - து.—ஈண்டு இதுக்குத் தகாது

என்று நோக்
காது செய்யும் சினத்தை உடையோனும் ஆய் நெறிபட்டு வருவன ஒழியப் பேணுமை ஆகிய நெறி கெட வரூஉம் தனம் முதலியவற் றைக் காமித்துச் செல்வோனும் ஆய் இதனல் பகையை விரும்பிக் கைக்கொள்ளப்படும் எ - று.

(ப - உ.) எ - து.—மீண்டு பாராச்
பெரிய காமத்தனும் ஆகியவன் பகையை

சினத்தனும் ஆய் மிகப்
விரும்பப்படும் எ - று.

காணுச்சினம் என்றது மேல்
இவை உடையார் நட்டோர் இலர்

கூறிய வெகுட்சியின் மிகுதியை.
ஆவார் ஆதலால் பகை கோடல்
ஆம் என்றது.

(5) கா. 6.

ப. 10.

வழிநோக்கான் வாய்ப்பன செய்யான்
பண்பிலன் பற்ருர்க் கினிது.

பழிநோக்
[கான்

(கா - உ.) எ - து.—நூல்நெறி ஆராய்ந்து பாரானும் ஆய் மற்று அதனாலே வாய்ப்பு உடைக் கருமங்கள் செய்யானும் ஆய் மற்று இவை செய்தார் பிறர் பழிக்கும் பழித்துரை பாரானும் ஆய்.

## 49. பகைமாட்சி

209

மற்று உலக வழக்கம் ஆகிய மாபு இலனும் பகைவர்க்குச் சால இனியது ஒன்று எ - று.

ஆயின் அவன் பகை

(ப - உ.) எ - து.—ஒருவினை செய்யத் தொடங்குங்கால் பின் வருவன பாரான்: பயன் படுவனவற்றைச் செய்யான்: அதனால் உறும் பழியைப் பாரான்: குணமும் இலன்: இவன் பகைமை பகைவர்க்கு இனிது ஆம் எ - று.

இவன் பகைமையால்

றது. இவை ஐந்தினானும்

பகைவர்க்கு இனிமை உண்டாகும் என்

தான் திருந்த வேண்டும் என்று கூறப் பட்டது.

(6)

கா. 7.

ப. 9.

நீங்கான் வெகுளி நிறைவில
னெஞ்ஞான்றும்

யாங்கணுமு யார்க்கு மெளிது.

(கா - உ.) எ - து.—பெரிதும் சினம் தணியானும் ஆய்த் தன்னை நிரப்பத்தை வைக்கும் நிறைவு இலனும் ஆயின், மற்று அவனொடு பகைமை எல்லாக் காலமும் எவ்விடத்தானும் யாவர்க்கு ஆயினும் எளிது எ - று.

(ப - உ.) எ - து.—வெகுளியினின்றும் நீங்கானும், நிறை உடைமையும் இவன் ஆயின், அவனை வெல்லுதில் எக்காலத்தும் எவ்விடத்தும் யாவர்க்கும் எளிது எ - று.

இவை இரண்டும் உடையவன் எல்லார்க்கும் தோற்கும். (7)

கா. 8.
ப. 5.

கொடுத்துங் கொளல்வேண்டு மன்ற
வடுத்திருந்து

மாணுத செய்வான் பகை.

(கா - உ.) எ - து.—தமக்குச் சிறந்தது யாதானும் கொடுத்தும் கோடல் வேண்டும் : என்றது யாதினை எனின்..............மண்டித் திருந்து தானே தனக்கு இன்னுதவற்றைச் செய்வானது பகையினை எ - று.

(ப - உ.) எ - து.—பகையை உற்றிருக்கும் மாட்சிமை இல்லா தன செய்யுமவன் பகையினை ஒன்றனைக் கொடுத்தும் கொளல் வேண்டும் துணிந்து எ - று.

மாறுதை செய்தல் ஆவது பகைக்கு ஆவன செய்யாது பிறிது செய்தல். இவன் வினை செய்யமாட்டான் ஆதலால் பகை கோடல் ஆம் என்றது.

27

(8) 210 திருக்குறள் - பொருட்பால்

கா. 9 .

ப. 8.

அஞ்சு மறியா னமைவில னீகலான்
றஞ்ச மெளியன் பகைக்கு.

(கா - உ.) எ - து.—ஒருவன் தனக்கு வது செய்யுய : பின்னும் உறற வினைக்கண்

எதிர் காணின் அஞ்சு
கட்டும் கழறியும் அறி
வது செய்யான் : அன்றியும் தன்னைச் சமைத்துக் கொள்வது ஓர் நிறைவும் இலன் : இதன் மேலும் கொடைக் கடன் அறிந்து தனிப் பதும் செய்யான் யாவன் ? அவன் பிறர்க்கு மிகவும் எளியன் பகைமைக்கு எ - று.

தஞ்சம் எளியன் என்றது மிகவும் எளியன் என்றது.

(ப - உ.) எ - து —அஞ்ச வேண்டாதவற்றிற்கு

அஞ்சுமவன் , பகைவன் வலிமை அறியான், அமைதியிலன், ஈயமாட்டான், இப் பெற்றிப் பட்டவன் பகைவர்க்கு மிகவும் எளியவன் எ - று.

இவை நான்கும் உடையவன் தோற்கும் என்றது. (9) கா. 10.

ப. 7.

அன்பில னான்ற துணையிலன் றான்றுவ்வா
னென்பரியு மேதிலான் றுப்பு.

(கா - உ.) எ - து.—பகை கொளின்

| | |
|---|---|
| அன்பிலன் : மற்றும் தனக்கு | அமைந்த |
| அல்லது யாவர் | மாட்டும் |
| துணையிலன் : | பின்னும் |
| தான் ஒன்றுக்கு | ஓர் துப்பிலாதான் யாவன்? |
| அரியும் ஏதிலான் | கைக் கருவி எ - று. |
| அவன் என்பினையும் | |

ஏதிலான் துப்பு என்பது பகைவன் படைக்கலம்.

(ப - உ.) எ - து.—சுற்றத்தார் மாட்டு அன்பு உறுதலும் இலன்: வேற்று அரசா ஆகிய துணையும் இலன்: தான் வலியும் இலன்: இப்பெற்றிப் பட்டவன் பகைவனது வலியை யாங்ஙனம் அறுக்கும்? எ - று.

என்பரியும் என்பது இகழ்ச்சிக் குறிப்பு.
தவன் வெல்ல மட்டான் என்றது.

இம்மூன்றும் இல்லா
(10)

(கா - உ.) இனி மற்று இதன் பின்னரே ஒருவர்க்குப் பகைமை நாட வேண்டிற்று ஆயின் அப்பகைத் திறம் தெரிந்து தமக்கு வாய்ப்பச் செய்ய வேண்டும் அதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 50. பகைத்திறம் தெரிதல்.

(ப - உ.) பகைத்திறம் தெரிதல் ஆவது பகையின்கண் செய்யும் திறன் ஆராய்தல். மேல் பகை கொண்டால் வெல்வாரையும் தோற்



பாரையும்
எண்ணிச்

கூறினார்: இனி அப்பகைவர் மாட்டுச் செய்யும் செய்ய வேண்டுதலின் அதன் பின் கூறப்பட்டது.

திறன்

கா. 1.
ப. 10.

வகையறிந்து தற்செய்து தற்காக்க மாயும்
பகைவர்கட் பட்ட செருக்கு.

(கா - உ.) எ - து.—தன்னோடு எதிர்வதன் கூறுபாட்டை அறிந்து மற்று அதற்குத் தக்காங்கு அதனின் மிகத் தன்னைச் சமைத்துக் கொண்டு இங்ஙனம் தன்னைப் பேணிக் கொள்ளவே கெடும் : யாதோ எனின் பகைவர் மாட்டு உளதாகிய மனச் செருக்கு எ - று.

வகை என்பது
எனின் மிகைப்பட்ட

தன்னொடு மலைந்து எழும் பகைக்குத் தகாது
தன்னைச் சமைத்துக் கொண்டு என்றது.

(ப - உ.) எ - து.—வினை செய்யும் வகையை அறிந்து தன்னைப் பெருக்கித் தன்னைக் காக்கப் கெடும் எ - று.
பகைவர் மாட்டு உண்டான பெருமிதம்

இது பகையை வெல்லும் திறன் கூறிற்று.
(1) கா. 2.
ப. 9.

இளைதாக முண்மரங் கொல்க களையுநர்
கைகொல்லுங் காழ்த்த விடத்து.

(கா - உ.) எ - து.—களைய வேண்டின்
இளைது ஆகவே முள்ளுடை மரத்தினைக் களைக:

எத்துணையும் , சால
என் எனின் களையு

ஈது கையினை வாதிக்கும்: மற்று அது முற்றிய இடத்து:
பற்றார் திறமும் அப்படி என்பது பொருள் எ - று.

எனவே (ப - உ.) எ
றின இடத்துக்

- து.—முள் மரத்தை இளைது ஆகவே களைக: முற்
தன்னைக் களைய நினைத்தார் கையைக் கொல்லும்
ஆகலான் எ - று.

இது பகைவர் வலியர் ஆகும் முன்னே
என்றது.

களைய வேண்டும் கா. 3.
(2)

ப. 3.

வில்லே ருழவர் பகைகொளினுங் கொள்ளற்க
சொல்லே ருழவர் பகை.

(கா - உ.) எ - து.—நட்புக் கொள்ளாது வில் வேந்தருடன் ஒருவர் பகை கொளினும் கொள்ளற்க: யாது எனின், கற்று உணர்ந்த சான்றோரோடு பகை எ - று.



வில்லேருழவர் என்றது வில் வேந்தர் என்றது. வர் என்பது கற்று உணர்ந்த சான்றோர் என்பது.

சொல்லேருழ

(ப - உ.) எ - து.—வில்லை ஏர் ஆக கொள்ளினும் சொல்லை ஏர் ஆக உடைய

உடைய உழவரோடு பகை
உழவரோடு பகை கொள்
ளாது ஒழிய எ - று.

இஃது அரசனோடு பகை கொளினும் கொள்ளல் ஆகாது என்றது.

அமைச்சரோடு பகை

(3) கா. 4.

ப. 4.

தன்றுணை யின்றாற் பகையிரண்டாற் றானொருவ
னின்றுணையாக் கொள்கவற்றி னொன்று.

(கா - உ.) எ - து.—தன்னொடு கட்பு ஆகிய துணை ஒன்று இலது ஆயின், தனக்குப் பகை இரண்டு ஆயின்,

என்பது
அன்னன்

ஆகிய ஒருவன் தான் இனி யாதோ செயற்பாலது எனின் அப்பகை இரண்டின் ஒன்றை யாதானும் ஒரு வாற்றான் தனக்கு இனிய துணை ஆகப் பிரித்துக் கொள்க எ - று.

(ப - உ ) எ - து.—பகை இரண்டு ஆய்த் தான் ஒருவன் ஆய்த் தனக்குத் துணையும் இல்லாதான் பகை இரண்டினுள் ஒன்றை இனிய துணை ஆகச் செய்து கொள்க எ - று.

இஃது இருவரொடு பகை கொள்ளத் தகாது

என்றது. (4)

கா. 5.

ப. 5.

ஏழுற் றவரினு மேழை தமியனாய்ப்
பல்லார் பகைகொள் பவன்

(கா - உ.) எ - து.—பேய் கொண்டவரினும் சாலப் பித்தன்: யாவன் எனின் இங்ஙனம் தான் ஒருவனாய் இருந்து மற்று இது நமக்கு வாயாது என்று கருதாது பலரொடும் தான் பகை கொள்ளக் கருதுப்வனா எ - று.

ஏமுற்றவன் என்றது மதிமயக்கு உற்றவன் என்றது.

(ப - உ.) எ - து.—பித்து உற்றவரினும் அறிவு இலன்: தனியன் ஆய் இருந்து பலரோடும் கை கொள்ளும் அவன் எ - று.

இருவரோடு பகை கொள்ளுதல் நீதி அன்று ஆகப் பலரோடு பகை கொண்டவன் பித்தரோடு ஒக்கும் என்றவாறு ஆயிற்று. இது பலரோடு பகை கோடல் ஆகாது என்றது. (b)

## 50. பகைத்திறம் தெரிதல்

213

கா. 6.
ப. 2.

உயிர்ப்ப வுளரல்லர் மன்ற செயிர்ப்பவர்
செம்மல் சிதைக்க லாதார்.

(கா - உ.) எ - து.—தம்மை வருத்தம் செய்பவர் ஆகிய பகை வர் தம் எதிர் வந்து சினத்து ஒரு மூச்சு எறிய அத்தனைக்கு உளர் அல்லர் மன்ற: யார் எனின், மற்று அவரது பெருமையைத் தலை யழிக்க மாட்டாதார் எ - று.

(ப - உ.) எ - து.—பகைவரது தலைமையைக் கெடுக்க மாட்டா தார் பகைவர் உயிர்க்கும் மாத்திரத்தாலே அறுதியாகச் சாவார் எ - று.

இது பகை கொள்ளுங்கால் வலியாரோடு பகை கோடல் ஆகாது என்றது.

(6)

கா. 7.
ப. 8.

நோவற்க நொந்த தறியார்க்கு மேவற்க
மென்மை பகைவ ரகத்து.

(கா - உ.) எ - து.—உறுதுயர் கண்டு தாம் பெரிதும் நொந்தால் மற்று அந்நொந்ததனை இவர் எம் பொருட்டு இது செய்தார் என்ப தனை மதியாதார்க்கு நோவற்க; அன்றியும் பகைவரிடத்து என்றும் தாம் வன்மையோடு இயைய நிற்கும் அத்துணை அல்லது அவரோடு தாம் மென்மையோடு இயைய நினையற்க எ - று.

தம் துயர்க்கு ஒருவர் நொந்தது மதியாதாரும் பகைவரின் ஒரு கூற்றரே வேறு அல்லர் என்பதனல் இதனை எடுத்து ஒதினர் என அறிக: என்னை, காஞ்சிரம் பிஞ்சும் காஞ்சிர மரமும் இத்துணை அல்லது பிறிது ஒன்று ஆகாதாற் போல.

(ப-உ.) எ-து.—தாம் வருத்தம் உற்றதனை அறியாதார்க்கு வருத்தம் உற்றுச் சொல்லாது ஒழிக: அதுபோலப் பகைவரிடத்துத் தமது மென்மையைத் தோற்றுவிக்கலை விரும்பாது ஒழிக எ-று.

இது பகைவர் மாட்டுத் தமது மென்மை என்றது.

தோற்றுவியாது ஒழிக

(7)

கா. 8.

ப. 7.

பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடை யாளன்

றகைமைக்கட் டங்கிற் றுலகு.



(கா-உ.) எ-து.—பகைதானே வந்து மென்மை செய்யுங் காலத்து இரங்கிப் பின் தான் ஒருவன் பகையை செய்யாது நட்பு ஆகக் கொண்டு ஒழுகும் மாபுடையாளன் யாவன்? மற்று அவனது நெறிமைக் கண்ணே நிலை நின்றது ஒழுக்கம் எ-று.

உலகம் என்பது ஒழுக்கம்.

(ப-உ.) எ-து.—பகைவரை நட்புப் போலக்

கொண்டு ஒழுக

வல்ல பண்புடையவன் பெருமையின் கீழே உலகம் தங்கும் எ - று.

இது பகை கொள்ளாமையால் வரும் பயன் கூறிற்று. (8)

**கா. 9.**

ப. 1.

பகையென்னும் பண் பி லதனை யொருவ
னகையேயும் வேண்டற்பாற் றன்று.

(கா - உ.) எ - து.—பகைமை என்று சொல்லப்படும் செறி இல்லதனை ஒரு மக்கட் பண்புடையோன் தான் ஒருவரோடு நகையாடியும் செய்ய வேண்டற்பாலது அன்று: எனவே என்றும் குறிக்கொண்டு இது செய்யற்க என்பது பொருள் ஆயிற்று எ - று.

(ப - உ.) எ - து.—பகை என்று இல்லாததனை ஒருவன் விளையாட்டின்

சொல்லப்படுகின்ற குணம் கண்ணும் விரும்பற்பாலது

அன்று எ - று.

இஃது எவ்விடத்தும் பகை ஆகாது என்றமையால் எண்ணம் ஆயிற்று.

என்றது. பகை ஆகாது
(9)

கா. 10.
ப. 6.

தேறினுந் தேறா விடினு மழிவின்கட்
டேறான் பகாஅன் விடல்.

(கா - உ.) எ - து.—பகை என்று தேறினும் தேறுவிடினும் ஒருவர் இடரின்கண் பெரிதும் தேறும் பண்பு இலனும் ஆகித் தம்மை
விட நீங்காதானும் ஆயின், மற்று அவன்
கைவிடுக: எனவே இவனும் ஒருவர்க்கு

திறம் தெரிந்து அவனைக்
உள்ளுறு பகை என்பது
பொருள் ஆயிற்று எ - று.

அழிவின்கண் தேறான் என்பது தமக்கு ஓர்
துப் பெரிதும் தேறத் தகான் ஆகி எ - று.

அழிவு வந்த இடத்

பகான் என்பது நீங்கான் என்றது. விடல்
என்பது விடுக
என்றது.

.(ப - உ.) எ - து.—பகைவனை ஆக்கம்

உள்ள காலத்து நட்
டோன் என்று தெளியலும் ஆம் : பகைவன்
என்று ஐயப்படலும் 51. உட்பகை

215 ஆம் அழிவு வந்த இடத்துத் தெளிவதும்
செய்யாது ஒழுகுக எ - று.

செய்யாது நீக்குவதும் இது பகைவர் ஆயினர்
இயல்பு கூறிற்று.

மாட்டு அழிவின்கண் செய்வது ஓர்
(10)

(கா - உ.) இனி, மற்று இங்ஙனம் புறத்தது ஆகிய பகைத் திறம் தெரித்த பின்னரே உள்ளுறு பகை எழுச்சி உணர்த்தி மற்று இதன் பின்னரே அதன் முதிர்பு ஆகிய உட்பகை உணர்த்துகின்றது மேலை அதிகாரம்.

## 51. உட்பகை.

(ப - உ.) உட்பகை ஆவது உடனே வாழும் பகைவர் செய்யும் திறன் கூறுதல். அஃதாவது புறம்பே நட்டோர் போன்றும் சுற்றத்தார் ஆகியும் ஒழுகி மனத்தினுல் பகைத்திருப்பார் செய்யும் திறன் கூறுதல். இதுவும் ஆராய்ந்து காக்க வேண்டும் ஆதலின் அதன் பின் கூறப்பட்டது.

கா. 1. ப. 3.

எட்பக வன்ன சிறுமைத்தே யாயினு
முட்பகை யுள்ளதாங் கேடு.

(கா - உ.) எ - து.—எள்ளில் பிளந்த சிறுமை உடைத்து ஆயி னும் உட்பகையுடனே வாழும் பகையின் கண்ணது ஒருவர்க்குக் கேடு எ - று

(ப - உ.) எ - து.—எள்ளின் பிளவே போன்ற ஆயினும், உடன் வாழும பகையினால் உளது ஆகும் கேடு எ - று.
சிறுமைத்தே
ஒருவர்க்குக்

இது உட்பகை சிறிது என்று இகழற்க என்றது.

(1) கா. 2.
ப. 6.

செப்பின் புணர்ச்சிபோற் கூடினுங் கூடாதே
யுட்பகை யுற்ற குடி.

(கா - உ.) எ - து.—செப்பு உருபு பொருந்தும் காலத்து முத லும் மூடியும் ஒரு பழுது அற ஓர் உருபு என்னும் ஆறு இறுக மூறு கப் பொருந்த நிற்கும் அன்றே: அது போலத் தம்முள் ஒரு வேற் றுமை அறப் பொருந்தி நின்று ஓர் எல்லைக்கண் பின்னும் அச்செப் பின் புணர்ச்சி போல் சிறிதும் கூடாது பக்கு விடுமே: யாது எனின், உட்பகை உற்றவாது குடி முழுதும் எ - று.

(ப - உ.) எ - து.—செப்பினது புணர்ச்சி போலப் புறத்து வேற்றுமை தெரியாமல் கூடினர் ஆயினும் பொருத்தம் இல்லாதவர் ஆவர்: உட்பகையும் அஃது உட்பட்ட குடியும் எ - று.

செப்பும் மூடியும் ஒன்று பட்டால் போல இருந்து செப்பு அகத்து உட்பொருள் வாங்குவார்க்கு மூடி துணையாய்க் கழன்று நிற்கும் அதுபோல அகன்று நிற்பர் எ - று.

செப்பிற்கு உவமை குடி: மூடிக்கு உவமை உட்பகை. (2) கா. 3.

ப. 2.

உட்பகை யஞ்சித்தற் காக்க வுலைவிடத்து
மட்பகையின் மாணத் தெறும்.

(கா - உ.) எ - து.—உட்பகை சிறிதும் அஞ்சித் உறுவழிப் பெரிதும் தளர்ச்சி

தன்னைப் பரிகரித்துக் கொள்க: என் எனின் தனக்கு ஓர் வந்த இடத்தே கரைபடக் கட்டிய மண் உறுதிக்கு ஒரு

தளர்ச்சி வந்த இடத்து மற்று அதனை முழுவதும் முரித்து எறியும் வெள்ளம்போல் இதுவும் தன் குடி முழுதும் குலைத்து எறிந்து விடும் எ - று.

உலைதல் என்பது தளர்தல். மண்பகை என்றது நீர் வெள்ளம் என்றது.

(ப - உ.) எ - து.—உடனே வாழும் பகைவரைத் தான் அஞ்சித் தன்னைக் காக்க: தனக்குத் தளர்ச்சி வந்த இடத்துக் குயவன் மண்கலத்தை அறுக்கும் கருவிபோலத் தப்பாமல் கெடுக்கும் ஆதலான் எ - று.

மண்பகை தான் அறுக்குங்கால் பிறர் அறியாமை நின்று அறுக்கும். இது தன்னைக் காக்க வேண்டும் என்றது. இவை இரண்டினாலும் அஞ்ச வேண்டும் என்பது, காக்க வேண்டும் என்பதும் கூறப்பட்டன. (3)

கா. 4.
ப. 8.

மன மாணா வுட்பகை தோன்றி
னினமாணா
வேதம் பலவுந் தரும்.

(கா - உ.) எ - து.—ஒருவர்க்கு தம் மனம் மாட்சி இல்லாதது ஓர் உட்பகை வந்து தோன்றும் ஆயின் தம் குடி மாட்சிமை இல்லாத ஆறு உள்ள குற்றம் பலவற்றையும் தரும் எ - று.

(ப - உ.) எ - து.—மனம் நன்று ஆகாத உட்பகை தோன்றும் ஆயின் தனக்கு இனம் ஆயினர் நல்லர் ஆகார்: அற்று அன்றிப் பல குற்றங்களும் உண்டு ஆம் எ - று.

51. உட்பகை

217

இஃது
றது. இவை

இனம் பொருந்தாமல் கூடநின்று பகைப்பிக்கும் என் நான்கினும் அவர் செய்யும் திறன் கூறப்பட்டது.(4)

கா. 5.

ப. 4.

*நிழனீரு மின்னாத, வின்னா தமர்நீரு*
*மின்னாவா மின்னா செயின்.*

(கா - உ.) எ - து —உலகத்துப் பொது வகையாக நிழலும் நீரும் இனிய எனினும், சில நச்சு மாமும் நச்சுப் பொய்கையும் என்பன உள அன்றே: மற்று அவை எனை நிழலும் நீரும் போன்று இருந்தும், இருந்தோரும் அருந்தினோரும் இறந்துபடும் திறம் வினையும்: அதனால் மற்று ஆங்குத் தமர் ஆக நட்டோரது நீர்மை, நீர்மை போன்று இருந்து பெரிதும் இன்னா ஆம்: இன்னாதன வற்றைச் செய்யும் இடத்து எ - று.

(ப - உ.) எ - து.—நிழல் அகத்து நீரும் இனிதே ஆயினும் அவற்றுள் இன்னாங்கு செய்யின் இன்னாது ஆகும். அதுபோலச் சுற்றத்தார் தன்மையும் இனிது ஆயினும் அவர் இன்னாதவற்றைச் செய்வார் ஆயின் இன்னாது ஆகயே விடும் எ - று.

இது சுற்றம் என்று இகழற்க என்றது. இவை இரண்டினும் இகழாமை கூறப்பட்டது. (5)

கா. 6 .

ப. 1. வாள்போல் பகைவரை யஞ்சற்க வஞ்சுக
கேள்போல் பகைவர் தொடர்பு.

(கா - உ.) எ - து.—வாள்போலக் கடியர் ஆகிய புறப் பகைவரை அஞ்சாது ஒழியினும் ஒழிக: மற்று உள் புகுந்து கேள் போன்று கேள் ஆகாப் பகைவாது நட்பினை அதினினும் குறிக்கொண்டு அஞ்சுக எ - று.

(ப - உ.) எ - து.—வாளைப் போலக் கொல்லும் திறத்தினை உடைய கொடிய பகைவரை அஞ்சாது ஒழிக: முகம் நட்டாரைப் போன்று மனத்தினுல் பகைத்து இருப்பார் தொடர்வு அஞ்சுக எ - று.

பகைவரை அஞ்சுவதினினும் மிக அஞ்ச வேண்டும் என்றவாறு ஆயிற்று உட்பகையாவது இது டும் என்பதூஉம் கூறிற்று.

என்பதூஉம், அதற்கு அஞ்ச வேண் கா. 7.
(6)

ப. 7. உடம்பா டிலாதவர் வாழ்க்கை குடங்கருட்
பாம்போ டுடனுறைந் தற்று.
28



(கா - உ.) எ - து.—உள்ளத்துள்..................டிலாதவரோடு கூடி வாழும் வாழ்க்கை எத்தன்மைத்தோ எனின் பெரும் பேழை அகத்து உறையும் பாம்போடு தாமும் ஆண்டுக் கூடி உறையும் அத்தன்மைத்து ஆகலான் எ - று.

(ப - உ.) எ - து.—மனத்தினால் பொருத்தம் ஒத்து வாழும் வாழ்க்கை ஒரு குடில் அகத்தே

இல்லாதோரோடு
பாம்போடு கூட
வாழ்ந்தால் போலும் எ - று.

பாம்பு எய்த வந்தால் கடிக்கும்: அதுபோல இடம் வந்தால் கொல்வார் என்றது. (7)

கா. 8.
ப. 10.

ஒன்றாமை யொன்றியார் கட்படி
பொன்றாமை யொன்ற லரிது.

னெஞ்ஞான்றும்

(கா - உ.) எ - து.—தம்மோடு நட்டார் மாட்டும் உட்பகை உளது ஆம் ஆயின் மற்று ஒன்று கூடியும் அதனால் தான் எஞ்சாமை கூடுதல் அரிது எ - று.

(ப - உ.) எ - து.—தன்னோடு ஒன்றார் மாட்டு ஒன்றாமை உளது ஆயின் எல்லா நாளினும் சாவாமையைக் கூடுதல் அரிது எ - று.

இது நட்டார் ஆகிய உட்பகையினால் வரும் தீமை கூறிற்று. (8) கா. 9.
ப. 9.

உறன்முறையா னுட்பகை
ஏனதம் பலவும் தரும்.
தோன்றி னிறன்முறையா

(கா - உ.) எ - து.—தம்மோடு வந்து உறுதல் பண்பினன் யாவன் மாட்டு உட்பகை தோன்றுவது ஆயின் அதனுன் இறுதல் பண்பினன் வரும் குற்றம் ஒன்று இரண்டு அல்ல பலவும் விளையும் எ - று.

உறல் என்றது தம்மோடு வந்து உறுதல் என்பது. முறைமை என்பது மாபு. இறல் என்பது வருதல் என்றது.

உயிர்க்கு இறுதி, பொருட்கு இறுதி

(ப - உ.) எ - து.—உறவின் முறையோடே உட்பகை தோன்றும் ஆயின் அது கெடுதல் இனையும் தரும் எ - று.

முறைமையோடே கூடப் பல துன்பத்

உறவு - உறுதல் ஆயிற்று. இது சுற்றத்தார் யினுல் வரும் தீமை கூறிற்று.

ஆகிய உட்பகை
(9)

52. (கா.) பெரியாரைப் பிழையாமை

கா. 10.
ப. 5.

அரம்பொருத பொன்போலத் தேயு
முரம்பொரு
துட்பகை யுற்ற குடி.

(கா - உ.) எ - து.—அராவுகின்ற அரம் சென்று பொருத கார் இரும்பு போலத் தமது உரம் முழுவதும் ஒழுகத் தேய்ந்து விடும்: யாதோ எனின் உட்பகை உற்ற குடி முழுவதும் மற்று அவனால் பொரப்பட்டு எ - று.

பொன் என்றது இரும்பு.

(ப - உ.) எ - து.—உட்பகையானது உட்பட்ட குடி அரத்தினால் தேய்க்கப்பட்ட பொன் போல வலி தேயும் எ - று.

அவரால் பொரப்பட்டுத் தன் இஃது உட்பகை என்றது.

அழகு செய்வது போல வலியை அறுக்கும்
(10)

(கா - உ.) அதனால் இதனின் கேட்கிப் பெரியோரோடு கெழீஇய நட்பின் பிழையாமையே உறுதி என்பதனை உணர்த்துதற்கு மற்று அதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 52. (கா.) பெரியார்ப்பிழையாமை—(பரி.) பிழையாமை.

பெரியாரைப்

(ப - உ.) பெரியாரைப் பிழையாமை ஆவது தம்மில் பெரிய

அரசரையும் முனிவரையும் அறிஞரையும் பிழைத்து ஒழுகாமை. மேல் பகையின்கண் செய்யும் திறமும் கூறினார்: இது தம்மில் பெரியார் தம்மைப் பகையாகக் கொள்ளார் ஆயினும் தமது இகழ்ச்சியாலே அவரால் தீமை பயக்கும் ஆதலின் அதன் பின் கூறப்பட்டது.

கா. 1.

ப. 10.

ஆற்றுவா ராற்ற லிகழாமை போற்றுவார்
போற்றலு ளெல்லாந் தலை.

(கா - உ.) எ - து.—உலகத்துத் தவநெறியாளர் ஆகிய பெரியோரது தவநெறி ஒழுக்கத்தைத் தாம் இகழாமை ஆகிய தலைமை யாது? அது குறிக்கொள்வார் தம் குறிக்கோளுள் எல்லாம் சாலத் தலைமை எ - று.

எனவே அவரைப் பிழைப்பின் தாம் கெடுவர் என்பது பொருள்.

(ப - உ.) எ - து.—தவத்தினாலும் வலியினாலும் பெரியாரது வலிமையை இகழாது ஒழிக: அது தம்மைக் காப்பார்க்குப் போற்றிக் கொண்டிருக்கப் பட்டவை எல்லாவற்றுள்ளும் தலையாம் எ - று

இகல்
சால் வரும்

முதல் ஆகப் பெரியாரைப் பிழையாமை ஈறு ஆகத்
துன்பப் பகுதி ஆயினவாறு கண்டு கொள்க.

பிற
(1)
கா. 2.
ப. 7.

இறந்தமைந்த சார்புடைய ராயினு
சிறந்தமைந்த சீரார் செறின்.

மூய்யார்

(கா - உ.) எ - து.—சீர்மைப் பாட்டினை உடையார் யாவர்? மற்று அவர் குணம், கல்வி, கேள்வி, குறி உடைமை முதலியவற்றான் மிக்கு அமைந்த சார்பினை உடையர் ஆயினும் உய்ந்து கரை ஏறார்: தவமும் ஞானமும் முதலியவற்றான் மிக்கு அமைந்த சீர்மைப் பாட்டினை உடையார் தம்மைச் செறின்: எனவே யி.........
பெரியோரை என்றும் பிழையற்க என்பது பொருள் எ - று.

(ப - உ.) எ - து.—மிகவும் அமைந்த துணை உடையர் ஆயினும் கெடுவர்: மிகவும் அமைந்த சீர்மையை உடையார் செறுவார் ஆயின் எ - து.

இது துணை உடையார் ஆயினும் உயிர்க்கேடு வரும் என்பது (2) கா. 3.

ப. 8.

ஏந்திய கொள்கையார் சீறி
னிடைமுரிந்து
வேந்தனும் வேந்து கெடும்.

(கா - உ.) எ - து.—சொன்ன தவமும் ஞானமும் முதலியவற்றால் மிக்க கோட்பாட்டை உடைய பெரியோர் சீறுவர் ஆயின் அரசனும் தனது வாழ்க்கை இடையே முரிந்து கெட்டுவிடும் எ - று.

வேந்தனும்
நாடும் பொருளும்

என்ற உம்மை சிறப்பும்மை ஆகலான்............
பெரும் படையும் உடையவர்..............கெட்டு
விடும் எ - று.

ஏந்துதல் - மிகுதல்.

(ப - உ.) ஏ - து.—உயர்ந்த கோட்பாட்டை உடையார் வெகுள் வர் ஆயின் இந்திரனும் இடையிலே இற்றுத் தன் அரசு இழக்கும் எ - று.

*"வேந்தன் மேய தீம்புனல் உலகமும்" இது பொருள் கேடு வரும் என்றது.

என்றார் பிறரும்.

(3) கா. 4.

ப. 6.

எரியாற் சுடப்படினு முய்வுண்டா முய்யார்

பெரியோர்ப் பிழைத்தொழுகு வார்.

---

*தொல். பொருள் - அகம் சூ. 5.

52. (கா.) பெரியார்ப்பிழையாமை

221

(கா - உ.) எ

வாற்றால் பிழைப்பு

- து.—தீயினல் சுடப்படினும் யாதானும் ஒரு உண்டாகவும் கூடும்: பிழையார் பெரியோரைப் பிழைத்து ஒழுகும் அவர் எ - று.

(ப - உ.) எ - து.—தீயினல் சுடப்படினும் உய்தல் பெரியார்ப் பிழைத்து ஒழுகுவார் உய்யார் எ - று.

உண்டு ஆம்:

பட

இது முனிவரைப் பிழைத்ததனல் வரும் குற்றம் உயிர்க்கேடு வரும் என்று கூறினர்.

கூறிற்று: முற்

(4) கா. 5.

ப. 4.

வகைமாண்ட வாழ்க்கையும்
தகைமாண்ட சீரார் செறின்.

வான்பொருளு
[மென்னாந்

(கா - உ.) எ - து.—நூல் வகுத்த வகை அனைத்தும் மாட்சிமைப்பட்ட இல்வாழ்க்கையும் அதற்குச் சிறந்த பொருளும் உடைத்து ஆயினும் என் ஆம்? தவமும் ஞானமும் ஒழுக்க நெறியும் உடைய சீரார் செறின் எ - று.

(ப - உ.) எ - து.—எல்லா வகைகளும் மாட்சிமைப்பட்ட வாழ்க்கையும் மிக்க பொருளும் என்ன பயன் உடைத்து ஆம்? பெருமையான் மிக்க தகுதியை உடையார் செறுவார் ஆயின் எ - று.

எல்லாவகையும் ஆவன - சுற்றமும், நட்டோரும், குற்றிளையோரும், இல்லும், நிலனும் முதல் ஆயின. வான் பொருள் - ஈட்டி வைத்த பொருள்கள் எல்லாம் அழியும் என்றது. (5)

கா. 6. ப. 3.

கூற்றத்தைக் கையால் விளித்தற்று
காற்றுதா ரின்னு செயல்.

லாற்றுவார்க்

(கா - உ.) எ - து.—தமக்கு மிகவே வேதனை வருதலை யாரும் வேண்டார் அன்றே? மற்று அதற்கு உரிய கூற்றத்தை இங்கே வா என்று தாமே தம் கைகாட்டி அழைத்த அத்தன்மைத்து: யாது எனின் தவ நெறியாளர் ஆகிய பெரியோர்க்கு மற்று அஃது இல்லார் ஆகிய சிறியோர் இன்னாதனவற்றைச் செய்தல் எ - று.

ஒத்

தால்

(ப - உ.) எ - து.—வலி உடையார்க்கு வலி இல்லாதார் இன் செய்தல் தம்மைக் கொல்லும் கூற்றைக் கைகாட்டி அழைத்
போலும் எ - று.

றம்

மேல் கூறிய மூவரினும் அரசரைப் பிழைத்தலால் கூறுவார் முற்பட உயிர்க்குக் கேடு வரும் என்றார்.

வரும் குற் (6) 222 திருக்குறள் -

பொருட்பால்

கா. 7 .

ப. 5.

யாண்டுச்சென் றியாண்டு முளராகார்
வேந்து செறப்பட் டவர்.

வெத்துப்பின்

(கா - உ.) எ - து.—எவ்விடத்தில் சென்றும் எக்காலத்திலும் உளர் ஆக உய்ய மாட்டார்: மற்று யார் எனின் உலகத்து நல்லோரால் விரும்பத் தக்க வலிக்கு ஒரு சக்கரவர்த்தியாகிய அரசரால் செறப்பட்டவர் எ - று.

ஈண்டு வெம்மை என்றது விருப்பம் என்றது.

துப்பு என்றது வலி என்றது.

(ப - உ.) எ - து.—எவ்விடத்துச் செல்லினும்

எவ்விடத்தும் உளர் ஆகார் வெய்ய வலி உடைய வேந்தனல் செறப்பட்டவர் எ - று.

இது கெட்டுப் போறுதும் இருக்கல் ஆவது ஓர் என்றது.

அரண் இல்லை கா. 8.

(7)

ப. 9.

குன்றன்னர் குன்ற மதிப்பிற் குடியொடு
நின்றன்னர் மாய்வர் நிலத்து.

(கா - உ.) எ - து.—தவம் முதலியவற்றல் பெரியோர் ஆகிய மலைபோலச் சிறிதும் சலியாதோரைக் குறைபட நினைப்பின் இவ்வுல

கத்துச் சிறந்த குடிப்பிறப்போடு நின்று வைத்தே மற்று மையாரும் அதனல் ஓர் ஆக்கம் இன்றி நசிப்பர் எ - று.

அத்தன்

(ப - உ.) எ - து.—மலைபோலப் பெரியாரைக் குறைய மதிப்பார் ஆயின் உலகத்தின்கண்ணே நின்றல் போலத் தோன்றுபவர் குடியோடே கூட மாய்வர் எ - று.

நின்றுல்போல என்றது நிலையாமை குறித்தது. குன்ற மதித்தல் - அவமதித்தல். இது மந்திரி புரோகிதரைப் பிழைத்து ஒழுகினுல் அவர் அவமதிப்பர் ஆயின் தாமும் தம் கீழ்வாழும் குடியும் மாய்வர் என்று கூறிற்று. (8)

கா. 9. ப. 2.

பெரியாரைப் பேணு தொழுகிற்
பேணு விடும்பை தரும்.

பெரியாராற்

(கா - உ.) எ - து.—அங்ஙனம் பெரியோரை நெஞ்சினுல் விரும்பாது ஒழுகின் அப்பெரியார் தம்மாலும் பேணிக் கோடற்கு அரிது ஆகிய பேரிடும்பையைத் தரும் எ - று.



பேரிடும்பை என்பது பேணிக்கொள் எ

ஒண்ணுத இடும்பை என்றது.

(ப - உ.) எ - து.—பெரியாரைப் போற்றுது ஒழுகுவான் ஆயின் அவன் ஒழுக்கம் அவரானே எல்லாராலும் இகழப்படும் துன்பத்தைத் தரும் எ - று.

இது முனிவரைப் போற்றுது ஒழுகின் குற்றம் றது. இவை இரண்டும் பிழையாமை வேண்டும் பட்டது.

பயக்கும் என்
என்று கூறப்
(9)



கெடல்வேண்டிற் கேளாது செய்க
வடல்வேண்டி னாற்று பவர்க ணிழுக்கு.

(கா - உ.) எ - து.—தான் கெட வேண்டினன் ஆயின் நல்ல அறிவு உடையாரோடு ஆராயாது ஒரு காரியத்தைச் செய்வான் ஆக: மற்றுத் தன்னைக் கொல்ல வேண்டுவான் ஆயின் வலி உடைய பெரியோர் மாட்டுக் குற்றத்தைச் செய்க எ - று.

(ப - உ.) எ - து.—தான் கெடுதல் வேண்டுவன் ஆயின் பெரியாரைக் கேளாதே ஒரு வினையினைச் செய்க. தன்னைக் கொல்ல வேண்டுவன் ஆயின் வலி உடையார் மாட்டே தப்புச் செய்க எ - று.

கேளாது செய்தல் என்பதனை மந்திரி புரோகிதரைக் கேளாது செய்தல் என்று கொள்ளப்படும். அவ்வாறு செய்தால் அவரை அவமதித்தல் ஆம் ஆகலின் ஈண்டுக் கூறப்பட்டது. அறிவாரைக் கேளாது செய்தலும் வலியார்க்குத் தப்புச் செய்தலும் குற்றம் என்றது. (10)

(கா - உ.) இனி மற்று இவர்கண் இழுக்கு என்னும் இக்குற்றம் கடக்ததன் பின்னரே இது பெண்மை அஞ்சுவான் யாவன்? மற்று அவன் பெரிதும் அஞ்சும் யாதினை எனின், எஞ்ஞான்றும் உலகத்து நல்லோர் ஆகிய சான்றோர்க்குக் கூட வழக்கு இயல்பு அல்லாதது ஓர் இழுக்கு ஆகலான் இதுவும் பரிகரிக்க வேண்டும் என்பதனை உணர்த்துகின்றது மேலை அதிகாரம்.

## 53. பெண்வழிச் சேறல்.

(ப - உ.) இனித் தன்னால் வரும் துன்பப்பகுதி ஆவது: இன்பம் காரணம் ஆக மனையாள் வழி ஒழுகுதலும், கணிகையரோடு கூடுதலும், கறவு உண்டு களித்தலும், சூது ஆடலும், திய உண்டி மிக உண்டலும் என ஐந்து வகைப்படும். இவை எல்லாம் இறுதியில் துன்பம் பயத்தலின் துன்பப் பகுதி ஆயிற்று. அவற்றுள் பெண்



வழிச்சேறல் ஆவது மனைவியர் வழி ஒழுகினால் வரும் குற்றம் கூறுதல். இது மூன்று வகைப்படும், மனையாளை அஞ்சுதலும், அவள் சொன்னது செய்தலும், அறத்தினும் பொருளினும் சாராது காதலினும் மிக்க காதலும் என.

கா. 1.
ப. 2.

இல்லாளை யஞ்சுவா னஞ்சுமற்
றெஞ்ஞான்று

## நல்லார்க்கு நல்ல செயல்.

(கா - உ.) எ - து.— தன் மனையாளை மற்று அவன் பெரிதும் அஞ்சும்: யாதினை உலகத்து நல்லோர் ஆகிய சான்றோர்க்குக்

அஞ்சுவான் யாவன்?
எனின் எஞ்ஞான்றும்
கூட நல்லனவற்றைச்
செய்தலை எ - று.

(ப - உ.) எ - து.—மனையாளை அஞ்சுவான் எஞ்ஞான்றும் நல் லார்க்கு நல்லன செய்தலை அஞ்சும் எ - று.

இஃது அறம் செய்ய மாட்டான் என்றது.

(1) கா. 2.
ப. 1.

இமையாரின் வாழினும் பாடிலரே யில்லா
ளமையார்தோ ளஞ்சு பவர்.

(கா - உ.) எ - து.—நுகர்ச்சிக்கண் ஒருமறு இன்றி வாழ்வார் அமரர் அன்றே: மற்று அவர்போல வாழினும் பெருமை இலரே: யாவர் எனின் அமை வளம் நிறைந்த தோளினள் ஆகிய மனையாளை அஞ்சும் பண்பு இல்லார் எ - று.

(ப - உ.) எ- து.—தேவரைப்போல இன்பு உற்று வாழினும் பெருமை இலர் ஆவர் : மனையாளை து வேய்போலும் தோளை அஞ்சு பவர் எ - று.

இது செல்வம் உடையர் ஆயினும் யால் பிறரால் மதிக்கப்படார் என்றது.

அவரால் பயன் இல்லாமை

(2)

கா. 3.

ப. 7.

அறவினையு மான்ற பொருளும் பிறவினையும்
பெண்ணேவல் செய்வான்க ணில்.

(கா - உ.) எ - து.—அறமும், பொருளும், ஏவல் செய்து ஒழுகுவார்க்கு இல்லை எ - று.

இன்பமும் பெண்

(ப - உ.) எ - து.—அறம் செய்தலும், செய்தலும், ஒழிந்த காமம் நுகர்தலும் பெண் வான் மாட்டு இல்லை ஆம் எ - று.

அமைந்த பொருள்
ஏவல் செய்து ஒழுகு

அச்சம் இவர் ஆயினும் சொன்னது செய்வர் ஆயின் இம் மூன்று பொருளும் எய்தார் என்றது; என்னை தலைமை அவள் கண்ணது ஆதலான். இவை மூன்றினும் ஏவல் செய்தார்க்கு உளது ஆகும் குற்றம் கூறப்பட்டது. (3)

கா. 4. ப. 6.

நட்டார் குறைமுடியார் நன்றாற்றார் நன்னுதலாள்
பெட்டாங் கொழுகு பவர்.

(கா - உ.) எ - து.—தனக்குச் சிறந்த நட்டார்க்கு ஒரு குறை வந்த இடத்து அதனைத் தீர்க்க மாட்டார். இனி அதுவேயும் அன்றிக் கல்வியும் கேள்வியும் முதலிய நன்கு செய்தலும் மாட்டார்: என் எனின் தன் மனையாளை விரும்பியது ஆண்மைக்குத் தகுதி அன்று என நாணாது மற்று ஆங்கே உள் அழுந்தி ஒழுகும் அவன் எ - று.

(ப - உ.) எ - து.—தம்மோடு நட்டார் குறை தீர்க்க மாட்டார்: அவர்க்கு நல்லது செய்யவும் மாட்டார்: நல்ல நுதலினை உடையாள் விரும்பியவாறு செய்து ஒழுகுவார் எ - று.

குறை தீர்த்தல் ஆவது - உற்ற துன்பம் தீர்த்தல். நன்று ஆற்றல் - சிறந்தன செய்தல். இவையும் அவள் சொல்ல வேண்டுதலின் செய்ய மாட்டார் என்றது.

(4) கா. 5.

ப. 3.

மனையாளை யஞ்சு மறுமையி லாளன்
வினையாண்மை வீறெய்த லின்று.

(கா - உ.) எ - து.—தன் மனையாளைத் தான் அஞ்சி ஒழுகுகின்ற அம்மறுமைப்பயன் இழந்தோனது வினை ஆட்சி ஒரு நன்மை பெறுதல் இல்லை எ - று.

(ப - உ.) எ - து.—மனையாளை அஞ்சுகின்ற

மறுமைப் பயன் எய்தாதவன் ஒரு வினையை

இல்லை எ - று.

ஆளும் தன்மை பெருமை எய்துதல்

இது பொருள் செய்ய மாட்டான் என்றது.

(5) கா. 6.

ப. 9.

பேணாது பெண்விழைவா
நாணாக நாணுத் தரும்.

29

ணுக்கம் பெரியதோர்

(கா - உ.) எ - து.—தான் ஒழுகும் தகுதியைப் பொருள் ஆக விரும்பாது மனையாளைப் பொருள் ஆக விரும்புவானது பொருள் முதலிய ஆக்கம், ஒருவன் உள் அஞ்சி நாணத் தரும்: அவற்றுள் எல்லாம் பெரியது ஓர் நாணம் ஆம் மற்று அங்ஙனம் தீது ஆகிய நாணுதலைத் தரும் எ - று.

பேணாது என்றது தன் தகுதியை விரும்பாது என்றது.

(ப - உ). எ - து.—அறத்தினையும் பொருளினையும் பேணாது மனையாளைக் காதலிப்பானது செல்வம் பெரியது ஓர் நாணம், உலகத்தே நிற்கும்படியாகத் தனக்கு நாணினைத் தரும் எ - று.

அவன் செல்வத்திற்குப் பயன் நாணம் ஆய்
அச்செல்வம் அற்றால் பின்பு என்ன செய்வேம்

முடியும். என்னை
என்று நாணுவன்
ஆதலின். பெரியது ஓர் நாணுதல் ஆவது இவன்
காமத்தால் கெட்டான் என்று உலகத்தார் அறிய
சச்சந்தன் திறம் காண்க.

நிறபது ஓர் நாணம் உண்டாதல் - கா. 7.

(6)

ப. 4. இல்லாள்கட் டாழ்ந்த
வியல்பின்மை யெஞ்ஞான்று
நல்லாரு ணாணுத் தரும்.

(கா - உ.) எ - து.—மனையாள் மாட்டு உள்

அழுக்திச் செல்வனை மாபு கெடு ஆனது மற்று எஞ்ஞான்றும் தனக்குப் பல சான்றோர் இருந்த இடத்து எல்லாம் பெரியது ஓர் கூச்சம் ஆன நாணத்தைத் தரும் எ - று.

(ப - உ.) எ - து.—மனையாள் மாட்டுத் இயல்பு கேடு எல்லா நாளும் நல்லார் இடத்து

தாழ்ந்து ஒழுகும்
நாணுதலைத் தரும்
எ - று.

மனையாளை அஞ்சித் தாழ்ந்து ஒழுகுவன் ஆயின் அவனைக் கடியும் தன்மை இலன் ஆவன்: அதனானே நல்லார் முன்பு நாணி நிற்கும்: ஆதலால் காம நுகர்ச்சியும் பெறான் என்றது. இவை நான்கினும் அஞ்சி ஒழுகுவார்க்கு வரும் குற்றம் கூறப்பட்டது. (7)

கா. 8. ப. 8.

மனைவிழைவார் மாண்பய மெய்தார்
வினைவிழைவார்
வேண்டாப் பொருளு மது.

(கா - உ.) எ - து. -மனையாளைச் சால விரும்புவார் யாவர்? மற்று அவர் மாட்சிமை உடைய மறுமைப் பயனும் எய்துதல் இலர்
ஆக வயும் தம் கருமம் விரும்பிச் செல்வார் பொருளும் அவ்விழுப்பம் தானே எ - று.

யாவரும் வேண்டாப்

53. ு பெண்வழிச் சேறல்



(ப - உ.) எ - து.—மனையாளைக் காதலித்து ஒழுகுவார் நற்பயனைப் பெறார்: யாதானும் ஒரு வினையைச் செய்து முடிக்க வேண்டு வேண்டுவார் விரும்பாத பொருளும் அவரை விழையாமையே எ - று.

இஃது அறத்தினும் பொருளினும் காதல் இன்றி அவர் மையே காதலித்து ஒழுகுவார்க்கு அறனும் பொரும் இல்லை என்றது.

தம்
ஆம் கா. 9.
(8)

ப. 5.

பெண்ணேவல் செய்தொழுகு
மாண்மையி
பெண் ணே பெருமை தரும்.
[ஞ ணுடைப்

(கா - உ.) எ - து.—மனையாள் ஏவல் கேட்டு அது செய்து ஒழுகும் ஆண்மை ஒருவர்க்குச் சிறுமை தரும் அல்லது பெருமை உடைத்து அன்று: அதனல் அவ்வாண்மை படைப்பதில் ஆண் மகற்கு உள் அஞ்சும் நாணத்தை யுடைய நன்னெறிப் பெண்ணே அவர்க்கு மிக்க பெருமையைக் கொடுக்கும் எ - று.

(ப - உ.) எ - து.—பெண்டிர் ஏவின தொழிலைச் செய்து ஒழுகும் ஆண்மையின் நாண் உடைத்தாகிய பெண்மையே நல்லமை உடைத்து ஆம் எ - று.

இது பிறரால் மதிக்கப்படார் என்றது.

(ஒ) கா. 10.

ப. 10.

எண்சேர்ந்த நெஞ்சத் திடனுடையார்க்
பெண்சேர்ந்தாம் பேதமை யில்.

கெஞ்

[ஞான்றும் இன்

(கா - உ.) எ - து.—அறம், பொருள், இன்பம், வீடு என நான் திறம் தெரிந்து எண்ணும் எண் சேர்ந்த நெஞ்சத்தின் இடம்

பாடு உடையார் யாவர்? மற்று அவர்க்கு எஞ்ஞான்றும் பெண் வழிச்சென்று சேர்ந்து ஏவல் கேட்டு ஒழுகும் பேதமை சிறிதும் இல்லை எ - று.

(ப

யார்க்கு

- உ.) எ - து.—எண்ணம் சேர்ந்த மனத்தின் விரிவு உடை எல்லா நாளும் பெண்ணைச் சார்ந்து ஆம் அறிவு இன்மை இல்லை ஆம் எ - று.

எண் சேர்தல் ஆவது - இதனால் வரும் குற்றத்தைத் தெரிந்து உணர்தல். இதனை உடையார் அறிவு உடையார் என்றது. (10)

(கா - உ.) இனி, மற்று இவ்வாறு யாவர்க்கும் தாம் வரைந்து கொண்ட வரைவு மகளிர் மாட்டேயும் மனைவாழ்க்கை மாபு ஒழிய இழைத்து வாழ்தல் மாபு அன்று என்பதனை உணர்த்தி மற்று அதன் பின்னரே வரைவில் மகளிர் ஆகிய பரத்தையர் மாட்டு மருஉதல் மாபு அன்று என்பதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

—

## 54. வரைவின் மகளிர்.

(ப - உ.) வரைவில் மகளிர் ஆவது கணிகையரொடு கலந்தால் வரும் குற்றம் கூறுதல். முயக்கத்தின் வரைவு இன்மையால் வரைவு இல் மகளிர் என்று கூறப்பட்டது. மேல் மனைவியர் மாட்டு மிக்க காதலினால் வரும் குற்றம் கூறினார்: இது கணிகையர் காமத்தினால் வரும் குற்றம் கூறுதலின் பின் கூறப்பட்டது.

கா. 1. ப. 3.

பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்க மிருட்டறையி
லேதில் பிணந்தழீஇ யற்று.

(கா - உ.) எ - து.—தாமே தமக்குப் பொருள் வரைந்து ஒழுகும் பெண்டிர் தமது பொருள் வரல் ஆற்றிற்கு வேண்டும் ஆடவர் உயர்ந்தோர் இழிந்தோர் யாவரே யாவரே ஆயினும் வரைவு இன்றிப் பொய்மை முயக்கம் முயங்கும் மகளிரது முயக்கம் பெரிதும் இருள் உடைய அறையுள் புக்கவர் அப்பிணம் தழீஇ உறையும் அத்தன்மைத்து எ - று.

(ப - உ.) எ - து.—பொருளையே கருதும் பெண்டிர் ஒருவனோடு பொய்யே முயங்கும் முயக்கம் இருட்டு அறையின் உள்ளே கிடந்தது ஒரு வேற்றுப் பிணத்தைக் கூலிக்குத் தழுவியது போலும் எ - று.

கேடு வரினும் இன்பம் தரும் ஆயின் புணர்ச்சியான் வரும் குற்றம் என்னை என்றார்க்கு, அவர் இவ்வாறு வருந்துவர் ஆகலான் இன்பம் இல்லை என்று கூறப்பட்டது. இவை இரண்டினாலும் கணிகையர் கூட்டத்தினான் வரும் குற்றம் கூறப்பட்டது. (1)

கா. 2.

ப. 7.

ஆயு மறிவின ரல்லார்க்
மாய மகளிர் முயக்கு.

கணங்கென்பார்

(கா - உ.) எ - து.—இவர் இப்படிப் பட்டவர் என்று ஆராயும் அறிவு இல்லாதார்க்குத் தெய்வத் தன்மை உடைத்து என்பர் வஞ்சனையால் பொருள் வரையும் மாயப் பொதுமகளிர் முயக்கு எ - று.

(ப - உ.) எ - து.—யாதானும் ஒரு பொருளை உள்ள ஆறு ஆராய்ந்து காணும் அறிவு இல்லாதார்கரு வருத்தம் ஆம் என்று சொல்லுவர் மாயத்தை வல்ல மகளிர் முயக்கம் எ - று.

இவரை அறிவு இல்லாதார் சார்வர் என்றது.

(2) 54. - வரைவின் மகளிர் 229

கா. 3.

ப. 4.

பொருட்பொருளார் புன்னலந் தோயா
ளாயு மறிவி னவர்.
ரருட்பொரு

(கா - உ.) எ - து.—ஆடவரது பெருமையும் சிறுமையும் விரும் பாது பொருள் பொருள் என்று விரும்பி இருப்பவர் புல்லிய நலத் தைப் பொருந்தார்: யார் எனின் அருளைத் தமக்குப் பொருள் ஆகத் தெரிந்து உணரும் அறிவினை உடையோர் எ - று.

எனவே இவ்வஞ்ச மகளிர்க்குக் கொடுக்கும் பொருளை வறி யோர்க்கு ஈதலே வாய்ப்பதே தமக்கு என்று ஆயும் அறிவினர் கருத்து என அறிக எ - று.

(ப - உ.) எ - து.--பொருளைப் பொருள் ஆகக் புல்லிய நலத்தைத் தோயார்: அருளைப் பொருள் அறிவு உடையார் எ - று.

| | |
|---|---|
| கொள்வாரது | அருள் உடையார் ஆம் |
| ஆக ஆராயும் | அறிவார் சாரார் என்றது. |
| | லின். |
| அறிவு என்றமையால் | இவரை அறன் |
| என்னை? அறத்தைக் | கெடுப்பர் ஆக கா. 4. |

(3)

ப. 9.

நிறைநெஞ்ச மில்லவர் தோ ய்வர் பிறநெஞ்சிற்

பேணிப் புணர்பவர் தோள்.

(கா - உ.) எ - து.—தமது நற்குணம் நிறைவு உடைய நெஞ் சம் இல்லாதார் முயங்குவர்: பிறவற்றை நெஞ்சின்கண் பேணிப் புணரும் பொது மகளிர் தோளை எ - று.

பிற என்ற பன்மை பொன்னும் ஆடையும்
வியன என அறிக.
பூவும் சாந்தும் முத

(ப - உ.) எ - து.—நிறை உடைய நெஞ்சு
வர்: இன்பம் அல்லாத
இல்லாதவர் தோய் வைத்து அன்பு உற்றார்

பிற ஆகிய பொருளை வெஞ்சினலே விரும்பி
போலப் புணருமவர் தோளினை எ - று.

இது நிறை இல்லாதார் சேர்வர் என்றது.

(4) கா. 5.

ப. 6.

தன்னலம் பாரிப்பார் தோயார்
புன்னலம் பாரிப்பார் தோள்.

தகைசெருக்கிப்

(கா - உ. ) எ - து.—தமது நன்மையை

மேன்மேலும் விரித் துக்கொண்டு ஒழுகும்

யாதினை எனின் எப்பொழுதும் பொருள் வரும் தகைமையைத் தருக்கி மற்று இது காரணம் ஆக வஞ்சனை ஆகிய புல்லிய ஆசையைப் பாரித்து நடிக்கும் பொது மகளிர் தம் தோளினை எ - று.

(ப - உ.) எ - து.—தம்முடைய நலத்தினை உலகின்கண் பரப்பு வார் சோரார் : வனப்பினால் களிப்பு உற்றுத் தமது புல்லிய நலத் தை எல்லார் மாட்டும் பரப்புவார் தோளினை எ - று.

புல்லிய நலன் என்றார் வனப்பு உடையர் ஆயினும் இழிந்தார் மாட்டும் பரப்புதலின் தம் நலம் பாரிப்பர் என்றமையால் இன்பம் நுகர வல்லார் சாரார் என்றார் பின்னர் இன்பம் அது ஆகாமையின். இவை மூன்றும் அறம், பொருள், இன்பம் வேண்டுவார் சாரார் என்று கூறப்பட்டது. (5)

கா. 6 .

ப. 2.

அன்பின் விழையார் பொருள்விழையு
ரின்சொ லிழுக்கந் தரும்.

மாய்தொடியா

(கா - உ.) எ - து.—ஆடவரை எஞ்ஞான்றும் நெஞ்சத்து அன்பினன் விரும்பாராய்ப் பொருளையே விரும்பிச் செல்லும் ஆய் தொடிப் பரத்தையர் சொல்லிக் காட்டும் இன்சொல்லும் இழுக்கத்தைத் தரும இத்துணை அல்லது விழுப்பம் தாராது ஆம் ஆராயின் எ - று.

(ப - உ.) எ - து.— அன்பால் கலத்தல் இன்றிப் கலக்கும் ஆய் தொடியார் சொல்லும் இன்சொல் பின்பு

பொருளால்
கேட்டினைத்
தரும் எ - று.

இது கணிகையர் கூட்டத்தினல் வரும் குற்றம் குக் கூறப்பட்டது.

என்னை என்றார்க் கா. 7.
(6)

ப. 1.

பயன்றூக்கிப் பண்புரைக்கும் பண்பின் மகளிர்
நயன்றூக்கி நள்ளார் விடல்.

(கா - உ.) எ - து.—தாம் கருதிய பொருள் தமக்குப் பயன் படும் உபாயமே சீர்தூக்கிப் புறமே நெறிப்பட உரைக்கும் நெறியில் மகளிர் செய்யும் நகையை இது வெறும் பொய் நகை என்று சீர் தூக்கி மற்று இவரோடு நட்புச் செய்யாது ஒழிக எ - று.

(ப - உ.) எ - து.—தமக்கு உள்ளது ஆம் பயனை நோக்கிக் குணம் இல்லாத மகளிர் இன்பத்தை சாராது ஒழிக எ - று.

ஆராய்ந்து பார்த்து அவரைச்

54. வரைவின் மகளிர்

231

ஞர்.

இதனுனே கணிகையர் இலக்கணம் எல்லாம் தொகுத்துக் இது கணிகையர் கலவியைத் தவிர்க என்றது.

கூறி
(7)

கா. 8.

ப. 10.

இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவறுந்
திருநீக்கப் பட்டார் தொடர்பு.

(கா - உ.) எ - து.—..............................................
இம்மூவகைப் பொருள் அனைத்தும் காமே தம்வயின் நீக்கல் ஆற்று ரது மனத் தொடர்ச்சி எ - று.

" இம்மையே தவஞ்செ யார்கை யிருநிதி யகற்றல்
நம்மையுங் கள்ளுஞ் சூது நான்முகன் படைத்து

வேண்டி
விட்டான்"
என்றார் பிறரும் என அறிக எ - று.

(ப - உ.) எ - து.—கவர்த்த மனத்தை உடைய பெண்டிரும் கள்ளும் கவறும் திருமகளால் கடியப் பட்டாரது நட்பு எ - று.

இது நல்குரவு இலார் சாரார் என்றது. பின்பு கள்ளும் கவறும் கூறுகின்றார் ஆதலின், அவை மூன்றும் ஒத்த இயல்பின என்று அறிதற்குப் பின் கூறப்பட்டது. இவை நான்கினும் அவரைச் சார்வார்.................கூறப்பட்டது. (8)

கா. 9.
ப. 9.

வரைவிலா மாணிழையார் மென்றோள் புரைவிலாப்
பூரியர்க ளாழு மளறு.

(கா - உ.) எ - து.—வரைவில் மகளிர் ஆகிய பரத்தையாது மென்றோள் அவ்வுருவிற்று ஆயினும் அது அன்று : மற்று என்னை எனின் அறிவு மேம்பாடு இல்லாத கீழ்மக்கள் புக்கு அழுந்தும் கும்பி நரகம் எ - று.

புரைவு - உயர்வு. பூரியர்கள் - கீழ் மக்கள்.

(ப - உ.) எ - து.—முயக்கத்தில் வரைவு இல்லாத மாண் இழை யாரது மெல்லிய தோள் ஆவது, உயர்வு இல்லாத கயவர் அழுந்தும் நரகம் எ - று.

கயவர் அழுந்துவது நரகின்கண் ஆதலின் இஃது இழிந்தார் சார்வர் என்றது.

நரகு எனப்பட்டது. கா. 10.

(9)

ப. 5.

பொதுநலத்தார் புன்னலந் தோயார் மதிநலத்தின்
மாண்ட வறிவி னவர்.



(கா - உ.) எ - து.—யாவர் மாட்டும் பொதுப்பட வரும் பொருள் காரணம் ஆக நடிக்கும் பொது நலத்தார் ஆகிய பொது மகளிர் காட்டும் புல்லிய நலத்தைப் பொருந்தார்; யார் எனின், தம்மதித் தூய்மையால் பெரிதும் மாட்சிமைப் பட்ட அறிவினை உடையோர் எ - று.

(ப - உ.) எ - து.—எல்லார்க்கும் பொது ஆகிய நலத்தினை உடையவாரது புல்லிய நலத்தைச் சேரார் மதி நலத்தாலே மாட்சிமைப்பட்ட அறிவு உடையார் எ - று.

புத்திமான்கள் சேரார் என்றமையால், பொருளை கருதுவார் சேரார் என்றார் பொருளைக் கெடுப்பர் ஆதலின். (10)

(கா - உ.) இங்ஙனம பொது மகளிர் முயக்கம் பொருள் அன்று என்பதனை உணர்த்தி மறறு அதன் பின்னரே இதனொடு பொருஉம் கள் உண்டலும் உணர்த்துகின்றது மேல் அதிகாரம்.

## 55. கள்ளுண்ணாமை.

(ப - உ.) கள் உண்ணாமை ஆவது கள் வேண்டும் என்று கூறுதல். இது கணிகையர்

உண்டலைத் தவிர்தல்
கூட்டத்தினால் வரும்
ஆதலின் அதன் பின் கூறப்பட்டது.

கா. 1.

ப. 1. உண்ணற்க கள்ளை யுணிலுண்க
சான்றோரா
லெண்ணப் படவேண்டா தார்.

(கா - உ.) எ - து.—எஞ்ஞான்றும் உண்ணாது ஒழிக கள்ளினை எனின் மற்று உண்ணினும் உண்க: யார் எனின், சான்றோரால் மற்று இவரும் எம்மில் ஒருவர் என்று உடன் எண்ணப்படுதலை வேண்டாதவர் எ - று.

டின்

(ப - உ.) எ - து.—கள்ளினை உண்ணாது ஒழிக: உண்ண வேண் சான்றோரால் மதிக்கப்படுதலை வேண்டாதார் உண்க எ - று.

இது கள் உண்டலைத் தவிர வேண்டும்

என்றது. (1) கா. 2.

ப. 9.

உள்ளொற்றி யுள்ளூர் நகப்படுவ
ரெஞ்ஞான்றுங்
கள்ளொற்றிக் கண்சாய் பவர்.

(கா - உ). எ - து.—தனித்தனி நெஞ்சினால் அயிர்த்து ஆராய்ந்து தாம் வாழும் ஊரின் மக்களானே எஞ்ஞான்றும் சிரிக்கப்படுவார் யார் எனின், கள் உள்ள வழி ஒற்றிச் சென்று மற்று ஆங்கே தம் கண்ணோடித் திரிபவர் எ - று.

## 55. கள்ளுண்ணாமை

233

உள் ஒற்றி என்பது நெஞ்சினால் அயிர்த்து ஆராய்ந்து கள் ஒற்றி என்பது கள் உளவழி ஆராய்ந்து என்றது. கண் சாய்ப்பர் என்பது கண்ணோடித் திரிபவர் என்றது.

(ப - உ.) எ - து.—தங்கள் ஒழுக்கத்தை உள்புக்கு அறிந்து
உள்ளூராலே இகழப்படுவர்; எல்லா நாளும் கள்
நாடி அதன் கண்ணே வாழும் அவர் எ - று.

உள்ள இடத்தை

உண்ணுமது அறிவார் இல்லை என்பார்க்கு
டது.

இது கூறப்பட் கா. 3.

(3)

ப. 7.

களித்தானைக் காரணங் காட்டுதல்
நீணீர்க்

குளித்தானைத் தீத்துரீஇ யற்று.

(கா - உ.) எ - து.—கள் உண்டான்
சான்றோர் பல நால் வகையாலும் இற

ஒருவனைக் குறித்துச்
தகாது என்று எடுத்து
உரைத்துக் காட்டுதல் அவது எத்தன்மைத்தோ
எனின், நீருள் மூழ்கி நின்றான் ஒருவனைத் தீயினால்
சென்று துருவிப் பிடித்த அத் தன்மைத்து எ - று

பரி. பா - டீ. "நீர்க்கீழ்".

(ப - உ.)
எ - து.—கள் உண்டு களித்தவனைக் காரணம் காட்டித்
தெ ளிவித்தல் நீரக்கீழ் மூழ்கினானைத் தீயினான்
அறிதற்றது போலும் எ - று.

அருவுதல் - நிசைச்சொல், இது பிறர் சொல்லவும்
என்றது. இத்துணையும் கள் உண்பார்க்கு உளது ஆகும்
கூறப்பட்டது.

கேளார்
குற்றம் கா. 4.
(3)
ப. 3.

நாணென்னு நல்லாள்
புறங்கொடுக்கும் கள்

பேணப் பெரு ங்குற்றத் தார்க்கு.
[ளென் னும்

(கா - உ.) எ - து.—நாண் என்றும் நன்னெறியாட்டி இவ னின் நீங்கிப் புறத்து ஏகும்: இவ்வாறு புறம் மாறிப் போவது யார்க்கு எனின், கள் என்று எடுத்து உரைக்கப்படும் சிறிது உணர்வு உடையோர் யாவராலும் விரும்பப் படாது ஆகிய இந்தப் பெரிய குற்றத்தை உடையோர்க்கு எ - து.

(ப - உ.) எ - து.—நாணம் என்று சொல்லப்படுகின்ற நன் மடந்தை பின் காட்டிப் போம்: கள் உண்டல் ஆகிய பிறரால் விரும் பப்படாத பெரிய குற்றத்தினை உடையார்க்கு எ - று.

இது நாணம் போம் என்றது.
(4)

30



கா. 5.
ப 2.

ஈன்றாள் முகத்தேயு மின்னாதா
லென்மற்றுச்
சான்றோர் முகத்துக் களி.

(கா - உ.) எ - து — பெற்ற தாய்க்குப் புதல்வர் செய்யும் பிழை யும் கூட இனிது அன்றோ? மற்று அவள் முன்னரும் இன்னாதால்: இனி என்னை வேறு சான்றோர் முன்னர்க் களி எ - று.

(ப - உ.) எ - து.—கள்ளைப் பயந்தாள் முன்னும் களித்தல் இன்னாது : ஆதலால் சான்றோர் முன்பு களித்தல் மற்று யாது ஆகும் எ - று.

எல்லார் முன்னும் இன்னாமையே பயப்பது என்றவாறு ஆயிற்று. கள் உண்டல் இனிமை தரும் அன்றே: இதனால் வரும் குற்றம் என்னை என்றார்க்கு அதனால் வரும் குற்றம் கூறுவார் முற்பட இன்னாமை பயக்கும் என்று கூறப்பட்டது. (5)

கா . 6.
ப. 4.

உட்கப் படாஅ ரொளியிழப்ப ரெஞ்ஞான்றுங்
கட்காதல் கொண்டொழுகு வார்.

(கா - உ.) எ - து.—பிறரால் இவர் பெரியோர் என்று மதிக்கப் படார் : பற்று ஒளியினையும் இழப்பர் : யார் எனின் எஞ்ஞான்றும் கள் ளின் மாட்டுக் காதல் கொண்டு ஒழுகும் கடுவினையாளர் எ - று.

(ப - உ.) எ - து.—பிறரால் மதிக்கப்படார் : தோற்றமும் இழப் பர் : எல்லா நாளும் கள்ளினைக் காதல் செய்து ஒழுகுவார் எ - று.

இது மதிக்கவும் படார் : புகழும் இலர் என்றது. (6) கா. 7.

ப. ௬.

கள்ளுண்ணுப் போதிற் களித்தானைக்
ஞுள்ளான்கொ லுண்பவன் சோர்வு.

காணுங்கா

(கா - உ.) எ - ா.—ஒருவன்
ஆயினு, பின ஒரு பொழுது அது

ஒரு பொழுது கள் உண்டான்
செய்பாதும இருக்கும் அன்றே:
மறறு அப்பொழுதின் கண் மனை கள பருகித் தன்னை அறியாது
கலங்கி வருவானையும் தான் கண்டிருக்கும் அன்றே: அங்ஙனம்
கண்ட இடத்து ஆயினும் கருதி நோக்கானே அக்கள்ளினைப் பருகு
வானது சோர்வினை எ - று.

எனவே அவன் உணர்ச்சிச் சோர்வும், கண் சோர்வும், உடல்
சோர்வும், உடைச் சோர்வும் கண்டு யாமும் அங்ஙனம கெடுவேம்
ஆமாறே எ றெறு உள்ளும் உபாயம் அறியாது மற்று இதுவே
சோாவு எனறு அறிக எ - று.

பரி. பா - ம். "உள்ளான்கொ லுண்டதன் சோர்வு".



(ப - உ.)

களித்தவனைக்

எ - து.—தான் கள் உண்ணாத பொழுது கள் உண்டு கண்ட இடத்து நினையான் போலும் தான் கள் உண்ட பொழுது தனக்கு உள்ளது ஆகும் ஆயின் தவிரும் எ - று.

சோர்வினை : நினைப்பன்

இது தமக்கு உளது ஆகும் குற்றம் காணார் என்றது. (7) கா. 8.

ப. 8.

களித்தறியே னென்பது கைவிடுக
தொளித்ததூஉ மாங்கே மிகும்.

நெஞ்சத்

(கா - உ.) எ - து.—ஒருவன் கள்ளின் களித்தும் மற்று அதனால் யான் அறியேன் என்பதனைக் கைவிடுவான் ஆக: மற்று அக் களவினையும் களினால் களித்த காலத்துப் பித்தரைப் போலப் பிறர் அறிய விட்டுப் பேசும் எ - று.

(ப - உ.) எ - து.—கள் உண்டால் களித்து அறியேன் என்பதனைக் கைவிடுக: மனத்தின்கண் கரந்ததூஉம் அப்பொழுதே வாய் சோர்ந்து புலப்படும்: அது கள்ளுக்கு இயல்பு எ - று.

இது மயங்கேம் என்பார்க்குக் கூறப்பட்டது.

(8) கா. 9.

கையறி யாமை யுடைத்தே விலைகொடுத்து
மெய்யறி யாமை கொளல்.

(கா - உ.) எ - து.—இதன் பயன் அது ஆகலான் பெரிதும் தான் ஓர் ஒழுக்கம் அறியாமை என்னும் குற்றத்தை உடைத்து: அஃது யாது எனின் ஒருவன் பித்து ஏறல் இன்றி வேண்டும் விலை கொடுத்தும் தான் மெய் மறந்து ஒழுகுவது ஓர் நெய் அறியாமையைக் கோடல் எ - று.

ஈண்டுக் கை என்பது ஒழுக்கம்.

(ப - உ.) எ - து.—பயன் அறியாமை உடைத் துப் பொருள் கொடுத்துத் தம்மை அறியாமையைச் செய்யும் கள்ளினைக் கோடல் எ - று.

மெய் என்பது தாம் என்பதும், ஒன்று என்பதும், அறத்துப் பாலில் கூறப்பட்டது: அன்றியும் பொருளில் உண்மை என்றும் ஆம். இது மேல் கூறிய குற்றம் எல்லாம் இதனை அறிவு உடையார் செய்யார் என்பது கருத்து.

அறியாமை பயத்தலின் (9)

ப. 5.

துஞ்சினர் செத்தாரின் வேறல்ல ரெஞ்ஞான்று
நஞ்சுண்பார் கள்ளுண் பவர்.



(கா - உ.) எ - து.—உலகத்து ஓவாது துஞ்சினர் என்றும் செத்தார் என்றும் வருவதன் பொருள் கருதின் இறந்து பட்டார் என்பதே தா வல்லது துஞ்சினர் என்றது : வேறு ஒன்றும் அல்ல ; கள் உண்பவரும் நஞ்சு உண்பாரின் வேறு அல்லர் எ - று.

(ப - உ.) எ - து.—உறங்கினர் செத்தாரோடு ஒப்பர் ; அறிவு இழத்தலான் ; அதுபோல எல்லா நாளும் கள் உண்பவர் நஞ்சு உண்பவரை ஒப்பர் ; மயங்குதலான் எ - று.

இஃது அறிவு இழப்பர் என்றது.

(10)

(கா - உ.) இனி மற்று இங்ஙனம் கள்ளும், சூதும், களவும் என்பன கண்டகத் தொழில் ஆகலால் மற்று இதன் பின்னரே சூதினை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 56. சூது.

(ப - உ.) சூது ஆவது மேல் கூறியவற்றோடு ஒத்த

சூது ஆடினால் வரும் குற்றம் கூறுதல்.
இயல்பிற்று ஆகலின் அதன் பின் கூறப்
பட்டது.

கா. 1.

ப. 2.

அகடாரா ரல்ல லுழப்பர்சூ தென்னு

முகடியான மூடப்பட் டார்.

(கா - உ.) எ - து.—பிறிது ஓர் செல்வம் அடையாமையே அன்றித் தன் வயிறு ஆர உண்டு சேறலும் இலர்: இன்னும் மற்று இதுவேயும் அன்றிப் பெருந்துயரும் உறுவர்: யார் எனின் சூது என்று எடுத்து உரைக்கப்படுகின்ற இம்மூதேவியால் சூழ்ந்து கொள் ளப்பட்டவர் எ - று.

(ப - உ.) எ - து.—தமக்கு உளது ஆகிய இந்திரியங்களும் மனமும் இன்புற்று நிறையப் பெறார்: அதுவே அன்றி அல்லல் படுவதும் செய்வர்: சூது ஆகிய மூதேவியால் மறைக்கப் பட்டார் எ - று.

மறைத்தல் - நற்குணங்கள் தோற்றுமை மறைத்தல். மேல் சூது ஆடல் ஆகாது என்றார்: அதனால் குற்றம் என்னை என்றார்க்கு இவை இரண்டு குற்றமும் உள ஆம் என்று கூறப்பட்டது. (1)

கா. 2. ப. 9.

சிறுமை பலசெய்து சீரழிக்குஞ் சூதின்
வறுமை தருவதொன் றில்.

(கா - உ.) எ - து.—தனக்குக் கீழ்மைகள் பலவற்றையும் செய்வதாய் இங்ஙனம் மேன்மை ஆகிய சீர்மைப் பாட்டினைத் தலையழிக்



கும் சூதின் மேற்பட ஒருவர்க்கு வறுமையைத் தருவதும் இல்லை எ - று.

தாவல்லது மற்று ஒன்

(ப - உ.) எ - து.—துன்பம் ஆயின பலவற்றையும் செய்து தலைமையை அழிக்கும் சூதுபோல் வறுமை தருவது பிறிது ஒன்று இல்லை எ - று.

மேல் கூறிய எல்லாவற்றையும் கூறப்பட்டது.

தொகுத்து நன்கு மதித்துக்
(2)

கா. 3.
ப. 6.

பொருள்கெடுத்துப் பொய்மேற்
கொளீஇ யருள்
தல்ல லுழப்பிக்குஞ் சூது.
[கெடுத்

(கா - உ.) எ - து.—ஒருவர்க்கு முன் நின்ற பொருளையும் கெடுத்துப் பொய்மையும் அவன்பால் கொளுவி வறியோர்க்கு ஒன்று ஈதல் மாபு ஒன்று உள்ள அருளினையும் கெடுத்துப் பின்னும் தமக்கு ஆற்ற ஒண்ணு அரும்துயர் உறுவிக்கும் சூது ஆனது எ - று.

(ப - உ.) எ - து.—முற்படப் பொருளைக் கெடுத்து அதன் பின் பொய்மையை மேற் கொள்ளுவிக்கும்: பின் அருளைக் கெடுத்து அதன்பின் அல்லல் படுத்துவிக்கும் சூது எ - று.

சூது ஆடினுர் அல்லல் உழப்பர் என்றார்: பொருள் கேடு வருவது அல்லது அருள் கெடுவது உண்டோ என்றார்க்கு அத்துணை வருமாறு இது என்று கூறப்பட்டது. (3)

கா. 4. ப. 5.

பழகிய செல்வமும் பண்பும் கெடுக்குங்
கழகத்துக் காலை புகின்.

(கா -
வத்தையும்

உ ) எ - து.—தம் குலத்தொடு பழகி வருகின்ற செல்
கெடுத்துத் தாம் ஒழுகி வருகின்ற மாபினையும் கெடுத்து

விடும்: தாம் என்செயின், காலையே தாம் செய்யும்
ஒழிந்து சூது ஆடு களரிக்கண் சென்று புகஉம்
எ - று.
கருமக் கடன்
செய்தி ஆயின்

(ப - உ.) எ - து.—தோன்றின நாள் தொட்டு வருகின்ற செல்வத்தினையும் தமது இயல்பு ஆகிய குணத்தினையும் கெடுக்கும் சூது கழகத்தின்கண்ணே காலைப் பொழுது புகுவன் ஆயின் அப்புகல் எ - று.

மேல் கூறிய இன்புறுதல் வாயிலர் ஆயினும்,
தோன்றின நாள் தொட்டு வருகின்ற செல்வம்
உடையார்க்கும் பண்பு உடையார்க்கும் 238

திருக்குறள் - பொருட்பால்

உளது ஆகுமே என்றூர்க்கு அவை இரண்டும்
பட்டது.

போம் என்று கூறப் கா. 5.
(4)

கவறுங் கழகமுங் கையுந் தருக்கி
யிவறியா ரில்லாகி யார்.

(கா - உ.) எ - து.—கவறு ஆடலும் அக்கவறு ஆடு களத்தில் சென்று புகுதலும் பிறிது ஒன்றினும் கைவைக்கும் கருமம் இன்றி அக்கவறு ஆடும் ஒழுக்கமே ஒழுக்கம் ஆதலும் இவையே நெருங்கப் பயின்று மற்று இது அல்லது பிறர்க்கு ஒன்று ஈயாது இறுகி நிற்கும் உலோபம் உடையார் யாவர்? மற்று அவரே இருமை ஆக்கமும் இலர் ஆகியோர் எ - று.

கழகம் என்பது சூது ஆடுகளம். கை என்பது இதற்கு ஏற்ற ஒழுக்கம். தருக்குதல் என்பது நெருக்குதல். இவறல் என்பது உலோபம்.

(ப - உ.) எ - து.—கவற்றினையும் வினையும் விரும்பி விடாதவர்கள் முன்

கழகத்தினையும் கைத்தொழி
காலத்தினும் வறியர் ஆனர்
எ - று.

கவறு - *நெத்தம். கழகம் - உருண்டை உருட்டும் இடம். கைத் தொழில் - கவடி பிடித்தல். சூது ஆவது இம்மூன்று வகைத்து என்பதூஉம், இதனனே வறுமை உறுமென்றார் அஃது யாங்ஙனம் அறிதும் என்பார்க்கு முன்பு சூது ஆடிக் கெட்ட அரசராலே அறிய லாம் என்பதூஉம் கூறப்பட்டது. (5)

ஒன்றெய்தி நூறிழக்குஞ் சூதர்க்கு
ணன்றெய்தி வாழ்வதோ ராறு.

முண்டாங்கொ

(கா - உ.) எ - து.—சூதைப்பற்றி நின்று ஒரு பொருள் எய்திப் பல பொருள் இழக்கும் சூது ஆடுவார்க்கும் உளது ஆமோ? ஆகாது; * யாது எனின் ஒருவாற்றானும் தமக்கு ஓரிடத்தும் ஒரு நன்மை பெற்று வாழ்வது ஓர் நெறி எ - று.

(ப - உ.) எ - து.—ஒரு பொருளின்கண் ஒரு பொருளினை எய்தி அவ்வாசையாலே மற்று ஒரு பொருளின்கண் நூறு பொருளை இழப்பிக்கும் சூதாடிகளுக்கு நன்று எய்தி வாழ்வது ஒரு நெறி உண்டாமோ? எ - று.

* கலித்தொகை 94-வது

பாடல் உரை "வல்லுப் பலகை" நெத்தப் பலகை என்பது ஒப்புக் காண்க.



இது தூண்டிலில் பொன் மீன் விழுங்கினல் போலும் என்றார். அதற்குக் காரணம் ஆகவும் இரக்கம் இல்லை என்பதூஉம் கூறிற்று.(6)

கா. 7.

ப. 4.

உருளாய மோவாது கூறிற்
போஒய்ப் புறமே படும்.

(கா - உ.) எ - து.—வாய்மையும் வழக்கும்
தன் நாவினால் கூறும் நயம் இன்றி என்றும் கவறு

கல்வியும் முதலிய
புரட்சியில் தோன்
றும் தாயப் பெயர்களையே ஒழியாது கூறித் திரட்டிய பொருள்
தொகை அனைத்தும் தம் இடத்தினின்றும் போய்க் கெட்டு விடும்
எ - று.

உருள்தல் என்பது புரளுதல். ஆயம் என்பது கவறு புரட்சி
யின் தாயம். பொருள் ஆயம் என்பது பொருள் கூட்டம் என்றது,
படும் என்றது கெடும் என்றது.

(ப - உ.) எ - து.—புரளும் கவற்றை இடைவிடாது
தும் கூறுவான் ஆயின் பொருள் வரவு தன்னை விட்டுப்
பிறர்பால் செல்லும எ - று.

எக்காலத்
போய்ப்

மேல் கூறிய ஐந்தும் அடையாமைக்குக் காரணம் என்னை என்
றார்க்கு முயற்சி இன்மையான் இவற்றை உண்டாக்கற்குக் காரணம்
ஆகிய வருவாய் இல்லை ஆம் என்று அதற்குக் காரணம் ஆகக் கூறப்
பட்டது. (7)

கா. 8. ப. 1.

வேண்டற்க வென்றிடினுஞ் சூதினை வென்றதூஉந்
தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று.

(கா - உ.) எ - து.—சூது ஆடலைத் தாம் வென்றிடினும் விரும்பற்க: என் எனின் அங்ஙனம் வென்று உளது ஆய அப்பொருள் தானும் ஒருவன் கொலை கருதித் தூண்டிலிற் செறித்த பொன்னினைக் கண்ட மீனனது நமக்கு இனிது என்று கருதி விழுங்கிய அத் தன்மைத்து எ - று.

(ப - உ.) எ - து.—வெல்லும் ஆயினும் சூதினை ஒழிக: வென்று பெற்ற பொருளும் தூண்டிலின்கண் பொன்னை மீன் விழுங்கினாற் போலும் எ - று.

விரும்பாது
உண்டாகிய

பொன் என்பது இரும்பு ஆம். பின் கேடு பயக்கும் என்றவாறாயிற்று. உம்மையான் வெல்லான் என்பது துணிபு. இது சூது ஆடலைத் தவிர்க என்றது. (8)

கா. 9. ப. 8.

இழத்தொறுங் காதலிக்குஞ் சூதேபோற் றுன்ப
முழத்தொறுங் காதற் றுயிர்.

(கா - உ.) எ - து.—கற்றல் கேட்டல் கடன் அறிந்து ஒழுகு தல் என்னும் இவை காதலியாது சூதினால் தன் கைப்பொருள் இழத்தல் கண்டு வைத்தும் அங்ஙனம் இழக்கொறும் இயற்றல் காத லிக்கும் சூதே போலும் பெரிதும் துன்பம் உழத்தொறும் உழத் தொறும் காதல் உடைத்தாவது இச்சூது ஆடும் உணர்விலி: என்னை பாவம்! எ - று

காதற்று என்பது காதலை உடைத்து என்றது. உயிர் என்பது இவனை ஒரு மகன் என்று கூறுதற்கு நாணி உயிர் என்றது.

(ப - உ.) எ - து.—பொருளை இழக்கும் தோறும் பொருளைக் காதலிக்கும் சூது போலத் துன்பம் உழக்கும் தோறும் இன்பத்திலே காதல் உடைத்து உயிர்: இவை இரண்டினுக்கும் அஃது இயல்பு எ - று.

ஈண்டு உயிர்க்கு அஃது ஆதல் கூறியது எற்றுக்கு எனின் இவை இரண்டையும் ஒன்றை ஒன்றாகக் கூறின் அல்லது பிறிது உவ மிக்கப்படும் பொருள் இல்லை என்றற்கு எனக்கொள்க. மேல் ஒன்று எய்தி நூறு இழக்கும் என்றார். அஃது என்னை? ஒருகால் தோற்ற வன் பின்பு தவிரானோ என்றாற்கு இது கூறப்பட்டது. (9)

கா. 10. ப. 3.

உடைசெல்வ மூணொளி கல்வியென் றைந்து
மடையாவா மாயங் கொளின்.

(கா - உ.) எ - து.—உடுப்பனவும், உடைய பல செல்வமும், உண்பனவும், ஊன்று தோற்றமும், கல்விகளும் என்று இவ்வைந்தும் இவனை அணுகா ஆம்: சூதின் கருவி இருந்து நின்று ஆயம் கைவிட யாட்டாமல் கைக்கொண்டு ஒழுகப் பெறுவோர்க்கு எ - று.

ஆயம் கொளின் என்பது கவற்றினது ஆயம் என்றது.

(ப - உ.) எ - து.—உணவும் ஆடையும் செல்வமும் புகழும் கல்வியும் என்று சொல்லப்பட்ட ஐந்து பொருளும் சோர ஆம்: அவற்றைக் கையகத்துக் கொளின் எ - று.

செல்வம் - பொன்னும் மணியும் பூமியும் அடியாரும் முதலாயின. மேல் சூது ஆடினார் இன்பு உற்று நிறைவு பெறார் என்றார். அதற்குக் காரணம் என்னை என்றாற்கு இன்பத்திற்குக் காரணம் ஆகிய இவை ஐந்தும் அடையார் என்று காரணம் கூறிற்று. (10)

## 57. மருந்து

241

(கா - உ.) இவ்வாறு கட்பின்கண் சூதும், கள்ளும் மருவற்க என்பது உணர்த்தி மற்று அனைவர்க்கும் மூத்து உற மருவுதற்கு இனிய யாக்கை உறுதிக்கு வாய்ப்பு உடைமை மருந்து ஆகலான் மற்று அவற்றின் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேல் அதிகாரம்.

## 57. மருந்து.

(ப - உ.) மருந்து
திறன் கூறுதல். மேல்

ஆவது யாக்கை நோய் உறாமல் செய்யும்
கடிய வேண்டுவன கூறினார்: இனிக் கடியப்
படாத உணவும் தன் அளவின் மிகும் ஆயின் துன்பம் பயக்கும் ஆதலான் அதுவும் அளவு அறிந்து நுகர வேண்டும் என்று அதன் பின் கூறப்பட்டது.

அற்ரு லளவறிந் துண்க வஃதுடம்பு

பெற்ரு னெடிதுய்க்கு மாறு.

(கா
அற்ருல்

- உ.) எ - து.—ஒருவன் தான் முன்னம் உண்டது
அவ்வறவு தான் பொய்ப்பசியோ மெய்ப்பசியோ

வெந்து
என்று
சிறிது தாழ்க்க நின்று ஓர்ந்து தெளிந்த பின்னர்
உண்க : அங்ஙனம் உண்ணவே அது கொண்டு தன்
உடம்பு நிலை தளராமல் உறுதிக்கண் நெடிது கொண்டு
செலுத்துவது ஓர் நெறியினைப் பெறலாம் எ - று.

(ப - உ.) எ - து.—முன்பு உண்டது அற்ருல் பின்பு உண்ணுங்கால் இத்துணை அறும் என்பதுஉம் தான் அறிந்து உண்க: அஃது உடம்பு பெற்றவன் அதனை நெடுங்காலம் செலுத்துதற்கு உரிய வழி அது ஆம எ - று.

மேல் அற்றது போற்றி உண்க என்ருர் : இது போற்றுதல் ஆவது அளவு அறிந்து உண்டல் என்று கூறப்பட்டது. (1) கா. 2. ப. 4.

மாறுபா டில்லாத வுண் டி
மறுத்துண்ணி
னூறுபா டில்லை யுயிர்க்கு.

(கா - உ.) எ - து.—கைப்புப் கூர்ப்புத் துவர்ப்பு என்று சொன்ன புளிப்புத் தித்திப்புக் காழ்ப்புக் அறுவகைச் சுவையும் இப்படி மாறுபட வகுத்து உண்ணாது ஒருபடியே உண்ணும் சில்சுவை உண்டியை ஒழித்து மருத்து நூல் கூறியாங்கு உண்ணப்பெறின் ஓர் இடையூறு படுதல் இல்லை மக்கட்கு எ - று.

(ப - உ.) சுவையும் வீரியமும் மாறுபாடு நீக்கி உண்பான் ஆயின் தன் உயிர்க்கு வரும் இல்லாத உணவை இடையூறு இல்லை எ - று.

31



மேல் மாறுபடாத உணவை உண்ண என்றார்: இதனானே எவ்விடத்தும் மாறு ஆகாமை வருதலின் அஃது எய்தியது விலக்கிச் சுவையும் வீரியமும் மாறுபட்டன நுகரா வேண்டும் என்றது. அஃதா. வது பலாப்பழம் தின்றால் சுக்குத் தின்றல். (2)

மிகினுங் குறையினு நோய்செய்யு
வளிமுதலா வெண்ணிய மூன்று.

நூலோர்

(கா - உ.) இவ்வாறு மாறுபாடு வருத்து உண்பது: அது தானும் அளவின்கண் மிகினும் குறையினும் மருத்து நூல் வல்லோர் ஆகிய மருத்துவர் அனைத்து நோய்க்கும் அடியுரம் ஆக நூல் நெறியின் சூழ்ந்த வாதம் முதலிய மூன்று நோயினையும் செய்யும் எ - று.

நூலோர் என்பது - மருத்துவர் என்பது. வளி என்பது வாதம்.

(ப - உ.) எ - து.—உணவும், உறக்கமும், இணை விழைச்சும் தன் உடம்பின் அளவிற்கு மிகினும் குறையினும் நூலோரான் எண்ணப்பட்ட வாதமும் பித்தமும் ஶ்லேஷ்மமும் ஆகிய மூன்றும் நோயைச் செய்யும் எ - று.

மேல் உணவு மிகின் நோய் செய்யும் என்றார்: அதுவே அன்றி

மற்று உள்ளவை மிகினும் இவை மூன்றும் ஆகும் என்றது.

குறையினும் நோய்

(3)

கா. 4.

ப. 5.

இழிபறிந் துண்பான்க ணின்பம்போ
கழிபே ரிரையான்க ணோய்.

ணிற்கும்

(கா - உ.) எ - து.—அளவின்கண் இழிவது ஆகிய இழிவு அறிந்து உண்போன் யாவன், அவன் மாட்டு இன்பம் போல இனிது நிற்கும்: யாவர் மாட்டு யாது எனின், அங்கி அளவு அறியாத மிகு பேர் இரையன் இடத்து நோய் ஆனது எ - று.

(ப - உ) எ - து —அறும் அளவு அறிந்து உண்பவன்கண் இன்பம் போல உண்டாம்: மிக உண்பான் கண் நோய் எ - று.

மேல் கூறியவாற்றான் உண்ணதாற்கு

என்றது.

நோய் உண்டாம்

(4)

ஙா. 5. ப. 10.

தீயள வன்றித் தெரியான் பெரிதுண்ணி
னோயள வின்றிப் படும்.

57. மருந்து

(கா - உ.) எ - து.—இவ்வாறு தனது அங்கிக்குத் தக்க அளவு என்பது ஒன்று இன்றிப் பின்னும் அவ்வுண்பதனை மற்று இது உண்டிக்குத் தகும் தகாது என்று தெரிந்து உணாரானும் ஆய் முன் கூறியாங்குக் கழிபேர் இரையாகப் பெரிது உண்ணும் ஆயின் அவன் கண் வரும் நோய் ஓர் அளவு இன்றி உளது ஆம் எ - று.

(ப - உ.) எ - து.—வயிற்றில் தீயினது அளவு அன்றி ஆராயாதே மிக உண்பான் ஆயின் மிக நோய் உண்டாம் எ - று.

இது நோய் தீர்ந்தாலும் தீ அளவு அறியாது உண்பான் ஆயின் மீண்டும் நோய் வரும் ஆதலான் அளவு அறிந்து உண்ண வேண்டும் என்றது. பொரிக் கஞ்சிக்கூழ்..........................................(5)

கா. 6 .

ப. 3.

அற்ற தறிந்து கடைப்பிடித்து
மாறல்ல
துய்க்க துவரப் பசித்து.

(கா - உ.) எ - து.—தான் முன் காலத்து
உண்டது அற்றது
அறிந்து பின்னும் தான் உண்ணும் முறைமைக்கு மாறு முதிரப் பசித்தும் அறகி அறவே உண்க எ - று.

அல்லவற்றை

(ப - உ.) எ - து.—முன்பு உண்ட உணவு
பின்பு

அற்றதனை அறிந்து ஒன்று

அறும் அளவும் கடைப்பிடித்து உண்ணுங்கால் ஒன்றிேனாடு மாறு கொள்ளாத உணவினை மிகவும் பசித்து உண்க எ - று.

மாறுகோடல் ஆவது *செய்யும்
மில் அளவு ஒக்கும் ஆயின் கொல்லும்

தேனும் இனிய ஆயினும் தம்
: அதுபோல்வன.

இஃது உண்ணுங்கால் அளவு அறிந்து உண்ணலே அன்றி, மாறு அற்ற உணவை உண்ண வேண்டும் என்றது. (6) கா. 7.

ப. 1.

மருந்தென வேண்டாதாம் யாக்கைக் கருந்திய
தற்றமை போற்றி யுணின்.

(கா - உ.) எ - து.—தாம் அங்ஙனம் உண்பது இங்ஙனம் அற்
றமை குறிக்கொண்டு ஒழுகப் பெறின் உறுவது ஓர் நோய் தமது யாக்கைக்கு இனி வேறு மருந்து ஒன்று நாவினைல் லும் வேண்டாது ஆய்விடும் எ - று.

இன்மை

சொல்

பரி. பா - ம். "வேண்டாவாம்" "அற்றது".

*"தேனெய் கூட்டி யுண்டிறந்தோ ரொருவ னுலகினில்வா் இது நீதென் றுரைத்தல் ஒக்கும்"—சிவஞான சித்தியார் சௌத் - மதமறுதலை - செய் 3.



(ப - உ.) எ - து.—மருந்து ஒன்றும் வேண்டா ஆம் உடம்பிற்கு: முன் காலத்து அருந்திய உணவு அற்றமை அறிந்து நுகர்வது பாதுகாத்து நுகர்வான் ஆயின் எ - று.

இவ்வாறு செய்வன் ஆயின் மருந்து தேட வேண்டா என்றது. (7)

கா. 8. ப. 7.

நோய்நாடி நோய்முத னாடி யதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்.

(கா - உ.) எ - து.—இவன் உற்ற நோய் இது என்று மருத்துநூல் முறையினால் ஆராய்ந்தும் இவற்கு இந்நோய் வருதற்குக் காரணம் யாது என்று இங்ஙனம் தெரிந்து நோக்கிப் பின்னும் அந்நோயினை இனிது ஆகத் - தணிக்கும் திறம் அறிந்தும் அவர் இடங்களில் செயல் விழையாமல் வாய்ப்பச் செய்க எ - று.

(ப - உ.) எ - து.—நோயினையும் ஆராய்ந்து நோய் வருதற்குக் காரணமும் ஆராய்ந்து உறும் நோய் தீர்க்கும் நெறியும் ஆராய்ந்து தப்பாமல் செய்க எ - று.

இது நோய் தீர்க்கும் ஆறு கூறிற்று. (8)

கா. 9. ப. 8.

உற்றா னளவும் பிணியளவுங் காலமுங்
கற்றான் கருதிச் செயல்.

(கா.- உ.) எ - து.—நோய் உற்றவனது வன்மையும், மென்மையும், அவனுக்குச் சென்ற வயது அளவு ஆம் பிறவும், அவன் உற்ற நோய் ஆவது அவன் அனுபவத்திற்கு வந்து அடிக்கொண்ட முகமோ என்றும், இடம் கொண்ட நோய் தலைசாய்ந்த முகமோ என்றும், இந்நோய் நிலை அளவு அறிந்தும், காலம் காரோ, கூதிர், முன்பனி, பின்பனி, சிரின வேனில், வேனில் என்னும் அறுவகைப் பருவத்துள்ளும் இப்பருவத்து இந்நோய்க்கு இம்மருந்து செய்தால் தீரும், விகற்பிக்கும் என அறிதலும் யாரோ எனில், வாகடம் முதலிய மருத்து நூல்களை பாகு அறக் கற்றவரே: இத்துணையும் குறிக்கொண்டு மற்று இதன் பின்னரே மருந்தினைச் செய்வான் ஆகன - று.

(ப - உ.) எ - து.—நோய் உற்றவன் அளவும், நோயின் அளவும், அது பற்றிய காலமும் அறிந்து அதற்குத் தக்க ஆறு மருந்து செய்க ஆயுரு வேதம் வல்லார் எ - று.

மேல் வாய்ப்பச் செய் என்றார் இது வாய்ப்பச் செய்யும் ஆறு கூறிற்று. (9)

## 58. (கா.) குடிமை—(பரி.) குடியியல்

குடிமை 245 கா. 10.

ப. 9.

உற்றவன் தீர்ப்பான் மருந்துழைச் செல்வானென்
றப்பானாற் கூற்றே மருந்து.

(கா - உ.) எ - து.—நோயினை உற்றோன் தானும், இந்நோயான் இடர் உறக்கடவோம் அல்லேம் என்று மற்று இது தீரும் அளவு முயற்சியும் உணவும் குறியும் முதலிய இவ்வாறு மொழிவேம் என்னும் அறிவு உடையோன் தானேயும், ஒரு மருந்து ஆகும் இது. அல்லது மருந்து ஆவது ஒரு நோய்க்குப் பல மருந்து உள ஆயினும் உற்றான் அளவும் பின் அளவும் காலமும் நோக்கினால் இவற்றுடன் பொருந்தினது யாது மற்று அதுவும், தனி மருந்து ஆகும் இது அல்லது உழைச் செல்வான் அவனது தாயினும் இனிய தன்மையன் ஆகிய உற்ற இடத்து உதவும் பெற்றியோன் யாவன் மற்று அவன் தானும், ஒரு மருந்து ஆகும் எனவே இந்நான்கு பகுதியும் உடையது யாது மற்று அதுவே மருந்து என்று இயம்படுவது. ஆதலால் இந்நான்கினுள் ஒன்று உதவான் ஆயின் மற்று அதுவே கூற்றம் எ - று.

(ப - உ.) எ - து.—நோய் உற்றவனும், நோய் தீர்க்கும் அவனும், அதற்குத் தக்க மருந்தும் அதனைக் காலம் தப்பாமல் இயற்றுவானும் என்று இவ்வகைப்பட்ட நான்கு திறத்தது மருந்து எ - று.

எனவே இந்நான்கினும் ஒன்று தப்பும்
என்றவாறு ஆயிற்று. இது மருந்தின் பகுதி

ஆயின் நோய் தீராது
கூறிற்று. (10)

(பரி.) துன்ப இயல் முடிந்தது.



(கா - உ.) இனி, மற்று இவ்வாறு நல்லோரோடும் நல்லவற்றோடும் மருவுதலும், தீயாரோடும் தீயவற்றோடும் மருவாமையும் பெரும்பாலும் குடிப்பிறந்தோர்க்கு அல்லது வாராமையான் மற்று இதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 58. (கா.) குடிமை—(பரி.) குடியியல் - குடிமை.

(ப - உ.) குடி இயல் ஆவது அரசரும் அமைச்சரும் வீரரும் அல்லாத மக்களது இயல்பு கூறுதல். இஃது யாங்ஙனம் கூறினர் எனின், அது கூறிய அதிகாரம் பதின் மூன்றினும் முற்படக் குடிப்பிறந்தார் இலக்கணம் ஓர் அதிகாரத்தானும், மானம் உடையார் இயல்பும் சான்றோர் இயல்பும் நான்கு அதிகாரத்தானும், பண்பு இன்றிப் பொருள் ஈட்டினர்க்கு உளது ஆகும் குற்றம் கூறுதலும்,



அந்தக் குற்றத்துக்கு அஞ்சி ஒழுகுதல் ஆகிய நாண் உடைமையும், அந்நாண் உடையார் தம் குடும்பத்தை நோக்கும் ஆறும், அவர் குடும்பத்தை நோக்குதற்குப் பொருள் வருநெறி பலவற்றுள்ளும் சிறப்பு உடைத்து ஆகிய உழவினது இயல்பும் நான்கு அதிகாரத்தானும், பொருள் இல்லாத மக்களது இயல்பும், அவர் பொருள் தேடும் ஆறும் மூன்று அதிகாரத்தானும், மக்களில் இழிந்தார் இலக்கணம் ஓர் அதிகாரத்தானும் கூறப்பட்டது.

மேல் அரசர்க்கு முதலான பொருளும் பொருள் கேடும் கூறி இனி நிலத்து மக்களது இயல்பும் கூறுகின்றார் ஆதலின் அவற்றின் பின் கூறப்பட்டது.

குடிமை ஆவது உயர்குடிப் பிறந்தாரது இயல்பு கூறுதல். மக்கள் உடைத்து ஆகிய கணங்கள் எல்லாவற்றினும் உயர்குடிப் பிறத்தல் சிறப்பு உடைத்து ஆதலின் இது முன் கூறப்பட்டது.

**கா. 1.**

**ப. 2.**

இற்பிறந்தார் கண்ணல்ல தில்லை
செப்பமு நாணு மொருங்கு.

யியல்பாகச்

(கா - உ.) எ - து.—நாம் கீழ் விரித்துச் சொன்ன நடுவு நிலைமையும் மேல் விளங்கக் காட்டி விடுவது ஆகிய நாண் உடைமையும் இவை இரண்டும் ஒருங்கு உள ஆதல் குடிப்பிறந்தார் மாட்டு அல்லது பிறர் மாட்டு இல்லை எ - று.

யும்

(ப - உ.) உயர்குடிப் பிறந்தார் மாட்டு அல்லது நடுவு நிலைமை பழி நாணுதலும் இயல்பு ஆக ஒருங்கு உண்டாகா எ - று.

இஃது இற்பிறந்தார் இவ்விரண்டும் இயல்பு

என்றது.
ஆக உடையார் . கா. 2.
(1)

ப. 5. அடுக்கிய கோடி பெறினுங்
குடிப்பிறந்தார் குன்றுவ செய்வ திலர்.

(கா - உ.) எ - து.—ஒன்று இரண்டு அன்றிப் பிறபல அடுக்கிய கோடி பொருள் பெறினும் குடிப்பிறந்தோர் இக்காரணமும் கடுவும் குன்ற வருவன என்றும் கடிவது அல்லது செய்வது இலர் எ - று.

(ப - உ.)
குடிப்பிறந்தார்

எ - து.—பலகோடிப் பொருளைப் பெறினும் உயர் தம் குடிக்குத் தாழ்வு ஆயின செய்யார் எ - று.

இது மானம் விடார் என்றது.
(2)

58. (கா.) குடிமை—(பரி.) குடியியல் -

கா. 3.

ப. 7.

*வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி*
*பண்பிற் றலைப்பிரித லின்று.*

(கா - உ.) எ - து.—தமது இல்லின்கண் வழங்கிவரு பொருள் இனி மற்று யாதும் இல் என மாய்ந்தக் கண்ணும் நெடுநாள் பழகி வருகின்ற குடிப்பிறந்தோர் என்றும் தமது மாபின்கண் தலை அழிதல் இல்லை எ - று.

(ப - உ.) எ - து.—வழங்கும் பொருள் தம் அளவிற்குக் குன்றிச் சுருங்கிய இடத்தும் பழைய மாபு வழுவாத குடிப்பிறந்தார் தமது இயல்பினின்றும் நீங்குதல் இலர் எ - று.

இது பொருள் இல்லாத காலத்தும் இயல்பு குறையார் என்றமையின், ஒப்புரவு செய்தலும் தவிரார் என்றவாறு ஆயிற்று. இது பண்பு உடைமை விடார் என்றது. இவை எழும் குடிப்பிறந்தார் இலக்ஷணம் கூறின. (3)

கா. 4.

ப. 10.

*நலத்தின்க ணாரின்மை தோன்றி*
*குலத்தின்க ணையப் படல்.*

னவரைக்

(கா - உ.) எ - து.—நல்லொழுக்கத்தின்கண் தமக்குச் சிறிதும் கிருபை இல்லாமை தோன்றின் மற்று அவரைப் பிறந்த குலத்தின் கண் ஐயப்படுதல்: எனவே அவர் எக்கழுத்தின்கண் நலம் இல்லாமை யால் அவர் மாட்டு அஞ்சத்தகும் எ - று.

பரி. பா - ம். "ஊனயப் படும்".

(ப - உ.) எ - து.—ஒருவன் குடி நலத்தின்கண் நீர்மை இன்மை தோன்றும் ஆயின், அவனைக் குலத்தின்கண் தப்பினவன் என்று ஐயப்படுக எ - று.

இதனானும் குடிப்பிறந்தார் நீர் அல்ல மதித்தவாறு ஆயிற்று.

செய்யார் என்று நன்கு கா. 5.

(4)

ப. 6.

சலம்பற்றிச் சால்பில செய்யார்மா சற்ற

குலம்பற்றி வாழ்துமென் பார்.

(கா - உ.) எ - து.—பிறரோடு தமது தகுதிக்கு அமைவு இல்லன

நெஞ்சினுல் சலம்பற்றி நின்று
எஞ்ஞான்றும் செய்யார் : யார்
எனின் குற்றம் அற்ற தம் குடிப்பண்பினைச்
சலியாமல் இறுகப் பற் றிக்கொண்டு நின்று யாம்
வாழும் உயிர் வாழ்க்கையை இங்ஙனம் வாழ்தும்
என்னும் இயல்பினர் எ - று.



(ப - உ.) எ - து.—பொய்மைச் சார்ந்து அமைவு இல்லாதவற்றைச் செய்யார் : குற்றம் அற்ற குலத்தைச் சார்ந்து வாழ்வேம் என்று கருதுவார் எ - து.

இது சான்றுண்மை விடார் என்றது.

(5) கா. 6.

ப. 9.

குடிப்பிறந்தார் கண்விளங்குங் குற்றம்
மதிக்கண் மறுப்போ லுயர்ந்து.

விசும்பின்

(கா - உ.) ஒழுக்க நலத்திற்கு உரிய குடிப்பிறந்தோர் மாட்டும் ஒரு குற்றம் உளதாம் ஆயின், மற்று அது வானின் திகழும் மதியிடத்து உண்டாகிய மறுப்போல் உயர்ந்து விளங்கும் எ - று.

(ப - உ.) எ - து.—உயர் குடிப்பிறந்தார் மாட்டுக் குற்றம் உளதாயின், அது வானத்து மதியின்கண் உள்ள மறுப்போல உயர்ந்து விளங்கும்: ஆதலால் குற்றப்பட ஒழுகற்க எ - று.

இது குற்றம் செய்தலைத் தவிர வேண்டும் என்றது. (6)

கா. 7.

ப. 8.

நலம்வேண்டி னாணுடைமை
வேண்டுக யார்க்கும் பணிவு.

வேண்டுங் குலம்
[வேண்டின்

(கா - உ.) டின், நம்மாட்டு

எ - து.—தமது நல்லொழுக்கம் குன்றாமை வேண் ஒரு குறைவரின் என்னை என்னும் இந்நாண் உடைமையை வேண்டும்: இனி நீர்நும் குலனுக்கு வேண்டினது யாவர்க்கும் இனிது இயலும் பணிவு உடைமையை வேண்டும் எ - று.

(ப - உ.) எ - து.—ஒருவர் நாண் உடைமையை விரும்புக:

தமக்கு நலம் வேண்டுவார் ஆயின்,
அவ்வண்ணமே குலத்தை விரும்பு
வார் - ஆயின், யாவர் மாட்டும் தாழ்ந்து ஒழுகுதலை
விரும்புக எ - று.

இது பணிந்து ஒழுக வேண்டும் என்றது.

(7) கா. 8.

ப. 3.

ஒழுக்கமும் வாய்மையு நாணுமிம் மூன்று
மிழுக்கார் குடிப்பிறந் தார்.

(கா - உ.) எ - து.— கீழ்ச்சொல்லிப் போந்த ஒழுக்கம் உடை
மையும் வாய்மை நிகழ்ச்சியும் அங்குத் தோற்றம் செய்த நாணம்
உடைமையும் என்னும் இம்மூன்றும் சிறிதும் வழுவகில்லார்; யார்
எனின் குடிப்பிறந்தார் எ - று.

58. (கா.) குடிமை—(பரி.)

(ப - உ.) எ - து.—ஒழுக்கம் உடைமையும், மெய்ம்மை கூறுதலும், அற்றம் மறைத்தல் ஆகிய நாணம் உடைமையும் இம்மூன்றினையும் தப்பார் குடிப்பிறந்தார் எ - று.

இவை மூன்றினையும் தப்பி ஒழுகார் என்றது.

(8) கா. 9.

ப. 4.

நிலத்திற் கிடந்தது கால்காட்டுங் காட்டுங்

குலத்திற் பிறந்தார்வாய்ச் சொல்.

(கா - உ.) எ - து.—முன்னம் புலப்படாது நிலத்தின்கண் ஒரு விதை கிடந்தால் கிடந்தமையை முதல் தோன்றிய தழைத்த தண்டே காட்டிக் கொடுக்கும்: அது போலக் குலத்தில் பிறந்தாரையும் காட்டிக் கொடுக்கும்: யாது எனின், வாய்ப்பிறக்கும் சொல் தானே எ-று.

(ப - உ.) வித்து நிலத்தின்கண் மறைந்து கிடப்பினும், அது மறைந்து கிடவாமையை அதன் முளை அறிவிக்கும்: அது போல உயர் குடிப்பிறந்தாரை அவர் வாயில் சொல் அறிவிக்கும் எ - று.

இதனானே குடிப்பிறந்தார் இன்னாத சொல்லார் என்றவாறு ஆயிற்று. (9)

கா. 10.

ப. 1.

நகையீகை யின்சொ லிகழாமை நான்கின்
வகையென்ப வாய்மைக் குடிக்கு.

-

(கா
வறியவர்

- உ.) யாவர் மாட்டும் முகமலர்ச்சி உடையர் ஆகையும், யாவர்க்கும் யாதானும் ஒன்றைக் கொடுத்தலும், யாவர்

மாட்டும் முகம் மலர்ந்து இனியவை கூறலும், ஒருவரை நெஞ்சினன் இகழ்ந்திராமையும் இந்நான்கும் குடிப்பிறந்தார்க்கு வாய்ப்பு உடைமை என்று சொல்லுப சான்றோர் எ - று.

(ப - உ.) எ - து.—முகமலர்ச்சியும், கொடையும், இனியவை கூறுதலும், பிறரை இகழாமையும் ஆகிய நான்கினையும் குலத்தின் உள்ளார்க்கு அங்கம் என்று சொல்லுவார் எ - று.

தொகை என்பது பிண்டத்தின் பெயர் ஆதலின் வகை என்பது உறுப்பிற்குப் பெயர் ஆயிற்று. மெய்ம்மைக் குடி என்றதனானே எஞ்ஞான்றும் தப்பு இல்லாக் குடி என்று கொள்ளப்படும்: இவை நான்கினையும் தமக்கு உறுப்பு ஆக உடையார் என்றும் கூறிற்று. (10)

(கா - உ.) இங்குச் சொன்ன குணங்களில் சிறிது குன்றினும் குடிக்கு வடு என்று மானிக்கு மானம் உடைமையும் அக்குடிப் பிறந்தார்க்கே குணம் ஆகலான் மற்று அதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

# 59. மானம்.

(ப - உ.) மானம் ஆவது எல்லாக் காலத்திலும் தமது நிலைமையின் திரியாமை. இது குடிப்பிறந்தார்க்கு இன்றியமையாமையின், அதன்பின் கூறப்பட்டது. இது மூவகைப்படும், தமது தன்மை குன்றுவன செய்யாமையும், இகழ்வார் மாட்டுச் செல்லாமையும், இனி வரவு பொருமையும் என.

கா. 1. ப. 10.

இன்றி யமையாச் சிறப்பின வாயினுங்
குன்ற வருவ விடல்.

(கா - உ.) எ - து.—இதனை இன்றி இது அமையாது எனினும் பெரும் சிறப்பினை உடையவன் ஆயினும் தன் குடிப்பண்பு குன்ற வருவனவற்றைக் கைவிடுக எ - று.

(ப - உ.) எ - து.—இன்றியமையாத சிறப்பு உடையன ஆயி னும் தனது தன்மை குறைய வரும் பொருளையும் இன்பத்தையும் விடுக எ - று.

இது பொருளும் இன்பமும் மிகினும் தன்மை யற்க எ - று.

குறைவன செய் கா. 2.
(1)

ப. 2.

பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய
சுருக்கத்து வேண்டு முயர்வு.

(கா - உ.) எ - து.—குடிப் பிறந்தோர்க்கு என்றும் செல்வச் சிறப்பின்கண் வேண்டும் அச்செல்வம் செருக்கின இடத்தும் அதற்கு மறுதலை ஆகிய பணிவு உடையவர் ஆதல். இனி அச்செல்வம் நீங்கிய மிக்க வறுமைக்கண் வேண்டும் அவ்வறுமையால் பிறர்க்குத் தாம் குறை கூற மானித்து ஒழுகும் மேம்பாடு எ - று.

(ப - உ.) எ - து.—செல்வம் பெருகிய காலத்து எல்லார்க்கும் பணிந்து ஒழுகுதல் வேண்டும்: செல்வம் மிகவும் சுருங்கின காலத்துத் தமது தன்மை குறைவு படாமல் ஒழுக வேண்டும் எ - று.

இது திரு உடையார் பணிவு புகழப்படும்: திரு இலாதார் பணிதல் இகழப்படும்: ஆதலான் நல்கூர்ந்த காலத்தும் தன்மை குறைவன செய்யற்க என்றது. (2)



கா. 3.

ப. 8. .. மருந்தோமற் றூனோம்பும் வாழ்க்கை பெருந்
பீடழிய வந்த விடத்து.
[தகைமை

(கா - உ.) எ - து.—குடிப் பிறந்தோர்க்குத் தம் குடிப்பண்பு ஆகிய பெருந்தகைமை அழியவந்த இடத்து மானித்து ஒழியாது பின்னும் இருந்து ஊன் ஓம்பும் செய்கை மருந்தோ? எனவே சாவா மூவாப் பதம் தரும் செய்கையோ அச்செய்கை? எ - று.

மருந்து என்றது அமுதம்.

(ப - உ.) எ - து.—தனது பெரிய தகைமை வலி அழிய வந்த இடத்துச் சாவாதே இருந்து உயிர் ஓம்பி வாழும் வாழ்க்கை பின்பும் ஒருகாலம் சாவாமைக்கு மருந்து ஆமோ? எ - று.

பெருந்தகைமை அழிய

அதற்கு அழிவு வாவு உளது

வந்த இடத்து என்று கூட்டுக. இஃது

ஆயின் சாவவேண்டும் என்றது. (3) கா. 4.

ப. 7.

ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலி
கெட்டா னெனப்படுத லன்று.

னந்நிலையே

(கா - உ.) எ - து.—குடிமாபாளன்
மற்று இன்னாதார் பின் சென்று உயிர்

தனக்கு மானக்கேடு ஆம்
வாழ்தலின் அப்பொழுதே
மானித்து இறந்து பட்டான் என்று பலராலும் எடுத்து உரைக்கப் படுதல் சால இனிது: மற்று அதுதான் வந்து எய்தும் ஆயின் எ - று.

(ப - உ.) எ - து.—ஒருவன் தன்னை இகழ்வார் பின் சென்று வாழும் அவ்வாழ்க்கையின் அவர்பால் செல்லாத அந்நிலையிலே நின்று கெட்டான் என்று பிறரால் சொல்லப்படுதல் நன்று எ - று.

மேல் இம்மை மறுமையில் பயன்படாது

என்றார் : அஃது எற்
றுக்குப் பொருள் பயக்குமே என்றாற்குக் கூறப்பட்டது. இரண்டும் இகழ்வார்பால் சேறல் ஆகாது என்பது கூறிற்று.

இவை
(4) கா. 5.
ப. 4.

தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையி னிழிந்தக் கடை.

(கா - உ.) எ - து.—ஒருவர்க்கு எல்லா உறுப்பினும் தலைமைப் பாடு உடையது தலை ஆதலால் மற்று அதினின்று இழிந்த மயிரா னது பின்பு அத்தலைமைப்பாடு பெறுதல் இல்லை: மற்று அதனை

ஒப்பர் குல மேம்பாடு உடைய மாந்தர் தம் இடத்து எ - று.

நிலையினின்றும இழிந்த

(ப - உ.) எ - து.—தலையினின்றும் நீங்கின மயிரைப்போல இகழப்படுவர் மாந்தர் தமது நிலைமையினின்றும் நீங்கித் தாழ ஒழுகின இடத்து எ - று.

மேல் தலைமக்கள் செய்யார் என்றதனால் குற்றக் கூறப்பட்டது.

குற்றம் என்னை என்

(5)

கா. 6.

ப. 3.

சீரினுஞ் சீரல்ல செய்யாரே சீரொடு
பேராண்மை வேண்டு பவர்.

(கா - உ.) எ - து.— சீரிய செல்வம் பெரிது உய்ப்பினும் சீர் அல்லனவற்றைச் செய்யக் கருதாரே: யார் எனின் தம் குடிமை ஆகிய சீர்மைப் பாட்டோடு பெரிய ஆண்மைப் பாடும் விரும்புவார் எ - று.

(ப - உ.) எ - து.—தமக்குப் நிகர் அல்லாதன செய்யார்கள்

பொருள் மிகுதி உண்டாயினும் தலைமையோட கூடப் பெரிய ஆண்மை விரும்புவார் எ - று.

இது நல்கூர்ந்த காலத்துச் செல்வம் உளதாயின் தமது தன்மை குறைந்து குடிசெய்தல் வேண்டாவோ என்றாற்குத் தலை மக்கள் செய்யார் என்று கூறப்பட்டது. (6)

கா. 7.

ப. 9.

மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னா
ருயிர்நீப்பர் மானம் வரின்.

(கா - உ.) எ - து.—தனக்கு அலங்காரம் ஆகிய மயிர்க்கற்றை யின் ஒரு மயிர் போகின் மானித்துப் பின் உயிர்வாழாது அம்மயிர் த்வக்கு உண்ட இடத்து நின்று வற்றிவிடும் கவரி மா அன்னர் கடப்பாடு உடையார் தம் குடிமையின் சிறிது நீங்கி மானிப்பது ஓர் மானம் வந்து உறின் அப்பொழுதே தம் உயிர் துறப்பர் எ - று.

(ப - உ.) எ - து.—ஒரு மாவைப் போன்ற மானம்

மயிர் நீங்கின் உயிர் வாழாத கவரி

உடையார் அம்மானம் அழியவரின்
உயிரை விடுவார் எ - று.

மேல் சாவ வேண்டும் என்றார்: அது
ரூற்கு மானம் உடையார் சாவார் என்றது.

செய்யல் ஆகுமோ என்
(7)

59. மானம் 258

கா. 8.

ப. 10. இளிவரின் வாழாத மான
முடையா
ரொளிதொழு தேத்து முலகு.

(கா - உ.) எ - து.—..................................................
..................................இவாது பெருமை விட்டு விளங்கும் தோற்
றம் குறிக்கொண்டு உள்ளத்தால் புகழ்ந்து உரைப்பர் உலகத்தோர்
எ - று.

(ப - உ.) எ - து.—இளிவரவு உண்டானல்
உயிர் வாழாத
மானம் உடையாது புகழைத் தொழுது துதிக்கும்
உலகு எ - று.

மேல் சாவார் என்றதனால் பயன் என்னை கூறப்பட்டது.

என்றாற்கு இறு கா. 9.
(8)

ப. 6.

புகழின்றாற் புத்தேணாட் டுய்யாதா லென்மற்
றிகழ்வார்பின் சென்று நிலை.

(கா - உ.) எ - து —இங்ஙனம் குடிப் பிறந்தோர்க்கு இம்மைக்கண் பெரியது ஓர் இகழ்ச்சி அல்லது புகழ்ச்சி இல்லை: ஆயின் மறுமைக்கண் வான் உலகு உய்க்கும் வாய்ப்பு இல்லை: ஆதலால் இனி மற்று என்னை கொல்லோ தம்மை இகழ்வார் பின்னரே தாம் சென்று நிற்கும் நிலை எனவே மானக்கேடு அல்லது மற்று ஒரு பயன் இல்லை எ - று.

(ப - உ.) எ - து.—இம்மைப் பயன் ஆகிய புகழைத் தாராது ஆயின், மறுமைப் பயன் ஆகிய சுவர்க்கத்துப் புகுதல் இல்லை ஆயின், பின்னை என்ன பயனைக் கருதித்தான் தன்னை இகழ்ந்து உரைப்பார் பின்னே சென்று ஒருவன் நிற்கின்றது? எ - று.

இது தன்னை இகழ்வார் மாட்டுச் சென்று நிற்றலைத் தவிர்க என்றது. (9)

கா. 10.

ப. 5.

குன்றி னனையாருங் குன்றுவர் குன்றுவ
குன்றி யனைய செயின்.

(கா - உ.) எ - து.—குன்றினை ஒத்த பெருமையோரும் குன்றுவர்: தமது மானம் குன்றுவன ஆகிய சிறுமை ஒரு குன்றி அனைய் செய்யினும் எ - று.



(ப - உ.) எ - து.—மலைபோலப் பெரிய உயர்வு உடையாரும் தமது தன்மை குறைவர்: குறைவு வருவன குன்றி அளவு ஆயினும் செய்வார் ஆயின் எ - று.

இது மிக்கார் ஆயினும் இகழப்படுவர் என்றது. இத்துணையும் தன்மை குறைய ஒழுகல் ஆகாது என்று கூறப்பட்டது. (10)

(கா - உ.) ஆதலான்
மிகுதியை அறிவிக்கின்றது

மற்று இதன் பின்னரே பெருமையின்
மேலே அதிகாரம்.

# 60. பெருமை.

(ப - உ.) பெருமை ஆவது மேன்மை. அஃது ஆவது சிறியர் செய்வன செய்யாமை. அது பின்பு காணப்படும். இது மானம் உடையார்க்கு உளது ஆவது ஒன்று ஆதலின் அதன்பின் கூறப்பட்டது. அன்றியும் குடிப்பிறந்தார்க்கு உளது ஆகும் நற்குணம் எனினும் அமையும். இவ்வுரை மேல் வருவனவற்றிற்கும் ஒக்கும். குணங்கள் பலவும் சேரக் கூறுகின்றார் ஆதலின் அதன்பின் கூறப்பட்டது.

கா. 1. ப. 10.

பணியுமா மென்றும் பெருமை சிறுமை
யணியுமாந் தன்னை வியந்து.

(கா - உ.) எ - து.—உலகத்து என்றும் யாவர்க்கும் தண்ணளி கொண்டு தாழ்ந்து ஒழுகுவது ஆம் பெருமை: இனிச் சிறுமை தன்னைத் தானே மதித்துச் சாலத் தன் திறம் அலங்கரித்து ஒழுகும் எ - று.

(ப - உ.) எ - து.—செல்வமும் கல்வியும் தனக்கு உள்ளது ஆகும் காலத்துத் தாம் பணிந்து ஒழுகுவர் எக்காலும் பெருமைக் குணம் உடையார்: சிறுமைக் குணம் உடையார் அவை உளது ஆம் காலம் தொடங்கித் தம்மை வியந்துகொண்டு அணிவர் எ - று.

இது பணிந்து ஒழுகுதலும் பெருமை என்றது. (1)

கா. 2. ப. 1.

பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்குஞ் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்.

(கா - உ.) எ - து.—மக்கள் ஆகிய அனைவர்க்கும் பிறப்பின் கண் ஒரு வேற்றுமை இல்லை. அம்மக்கட்குச் சிறப்பு ஒவ்வாது என்பது என்னையோ எனில் இயல்பு நீங்கிய இழிவு தொழில் ஒருவர்க்கு உளது ஆயின் இவர் சாலச் சிறியர் என்றும் தமக்கு

60. பெருமை

255

இயல்பு ஆகிய பேரொழுக்கத்தின்கண் பிழையாது ஒழுகின் இவர் சாலப் பெரியார் என்றும் இங்ஙனம் வழங்கி வருதலால் யாவர்க்கும் சிறப்பு ஒவ்வாது என்பதனைத் தெரிந்து கொள்ளப்படும் எ - று.

சிறப்பு என்பது பெருமை.

(ப - உ.) எ - து —எல்லா உயிர்க்கும் பிறப்பால் ஒரு வேறுபாடு இல்லை: ஆயினும் தத்தம் செய்தொழிலினது ஏற்றச் சுருக்கத்தி னாலே பெருமை ஒவ்வாது எ - று.

என்வே பெருமை ஆவது குலத்தினான் ஆடம் அதற்குக் காரணமும் கூறிற்று.

அறியப்படாது என்ப

(2)

அற்ற மறைக்குஞ் சிறுமை பெருமைதான்
குற்றமாக் கொண்டு விடும்.

(கா - உ.) எ - து.—சிறுமையானது என்றும் தான் செய்யும் நெறி அற்றங்களைக் அடக்கிக் கொண்டு ஒழுகும்: மற்றுப் பெருமையானதுதான் அதனைக் குற்றம் ஆகக் கொண்டு விடும்: எனவே அதனை ஒருபொழுதும் தன்கண் நடக்க நிலை இல்லை என்பது பொருள் ஆயிற்று எ - று.

இவ்வாறு அன்றி

"அற்ற மறைக்கும் பெருமை சிறுமைதான்
சுற்றமாச் சூழ்ந்துவிடும்"

என்பது பாடம் ஆயின், தன்கண் ஓர் நெறி அற்றம் ஆகிய குற்றம் வந்து உளது ஆம் ஆயின் அதனை அப்பொழுதே மாய்த்து விடும் பெருமையானது: மற்று இனிச் சிறுமைதான் தன் நட்பின் இனிய கிளையாகக் கொண்டு ஒழுகும் எ - று.

இன்னும் பிறவாறு பாடம் ஓதுவாரும் உளர் ஏற்கும் ஆறு அறிந்து உரைக்க.

என்னின் அதற்கு

பரி. பா - ம்.

"அற்ற மறைக்கும் பெருமை சிறுமைதான்
குற்றமே கூறி விடும்."

(ப - உ.) எ - து.—பிறருடைய குறையை மறைத்துச் சொல்லும் பெருமை: சிறுமை அவர்க்கு உள்ள நன்மையைச் சொல்லுதலைத் தவிர்த்து குற்றத்தையே சொல்லி விடும் எ - று.

எனவே புறம் கூறுமை பெருமை என்று கூறப்பட்டது. (3).



ப. 3.

கா. 4.

இறப்பே புரிந்த தொழிற்றுஞ் சிறப்புந்தான்
சீரல் லவர்கட் படின்.

(கா - உ.) எ - து.—ஒருவர்க்குச் செல்வச் சிறப்பு உளது ஆயின் அதுவும் பெருமைக்குக் காரணம் அன்றோ? அங்ஙனம் சிறந்த செல்வச் சிறப்பும் சீர் அல்லாதவர் மாட்டது ஆம் ஆயின், மற்று அதுதானே முறையின் நீங்கிய மிகையே புரிந்த தொழிலினை உடைத்து ஆகும் அவர்க்கு எ - று.

(ப - உ.) எ - து.—செல்வம் ஆனது தனக்கு நிகர் இல்லாத இடத்தே நிற்கும் ஆயின், நிதியை இழத்தலிலே பொருந்திய தொழிலை உடைத்து ஆம் எ - று.

சீர் அல்லவர் - பெரியவர் அல்லவர். மேல் கூறிய வற்றிற்குக் காரணம் கூறிற்று. (4)

ப. 2.

கா. 5.

மேலிருந்து மேலல்லார் மேலல்லர் கீழிருந்துங்
கீழல்லார் கீழல் லவர்.

(கா - உ.) எ - து.—மனையும் மாடும் பொருளும் பூமியும் முதலியவற்றான் மேல் ஆயினும் தம் குலமும் ஒழுக்கமும் குணமும் ஞானமு முதலியவற்றான் மேம்பாடு உடையர் அல்லாதார் யாவர்? அவர் என்ஞான்றும் சாலச் சிறியரே: இனி மற்று அம்மனையும் மாடும் முதலியவற்றால் கீழ்ப்பட்டிருந்தும் அக்குலமும் ஒழுக்கமும் முதலியவற்றால் சிறிதும் கீழ்மைப்பாடு உடையர் அல்லாதார் யாவர்? மற்று அவர் என்ஞான்றும் கீழ் அல்லர்: எனவே அவரே சாலப் பெருமையர் என்பது பொருள் ஆயிற்று எ - று.

(ப - உ.) எ - து.—மேலான இடத்தில் இருந்தாலும் மேன்மை இல்லாதார் மேன்மக்கள் ஆகார்: கீழான இடத்து இருந்தாலும் கீழ்மை இல்லாதார் கீழ்மக்கள் ஆகார் எ - று.

இடம் என்றது செல்வத்தினால் இருக்கும் இடம். இது செல்வத்தினால் பெரியாரையும் பெரியார் என்று கொள்ளப்படாது என்றது. (5)

பெருமை பெருமித மின்மை சிறுமை
பெருமித மூர்ந்து விடும்.

(கா - உ.) எ - து.—பெரியோர்க்குத் தம் பெருமையாவது தற் குறிப்பான் ஒரு பெருந்தன்மை பாவியாமை: மற்றுச் சிறுமை

## 60. பெருமை

257

யானது தன் சிறுமைக்குப் பெரிதும் கூசி மற்று அது காகப் பிற பெருந்தன்மை மேல்கொண்டு விடும் எ - று:

மறைத்தற்

எனவே பெரியோர் பெருமையைத் தம்மேல் ஏறட்டுக்கொண்டு தாமும் பெரியோர் ஆகப் பாவித்து நடப்பர் ஒரு பயன் இல்லை ஆயி னும்: என்னை பாபம்! எ - று.

(ப - உ.) எ - து.—பெருமையாவது
சிறுமை செருக்கினை மேல்கொண்டு ஒழுகும்

செருக்கு இன்மை:
ஆதலான் எ - று.

மேல் குலத்தினாலும் செல்வத்தினாலும் பெரியாரைப் பெரியார் என்று கொள்ளப்படாது என்றார்: இனிப் பெருமை இலக்கணம் கூறுவார் முற்படச் செருக்கு இல்லாமையே பெருமை என்று கூறப் பட்டது. (6)

கா. 7.

ப. 9.

சிறியா ருணர்ச்சியி லில்லை பெரியாரைப்
பேணிக்கொள் வேமென்னு நோக்கு.

(கா - உ.) எ - து. - சிறியவர் உணரும் உணர்ச்சியுள் இல்லை: யாது எனின், பெரியோரைப் பொருள் எனக் கருதி நமக்கு இது வேண்டும் என்று விரும்பிக் கைக்கொள்வோம் என்னும் விசாரம் எ - று.

(ப - உ.) எ - து.—சிறுமை உடையார் உணர்வின்கண் இல்லை பெருமை உடையாரைப் போற்றித் துணையாய்க் கொள்வோம் என்னும் கருத்து எ - று.

எனவே பெருமை உடையார் மாட்டு உண்டு என்றவாறு ஆயிற்று. இது பெரியாரைப் பேணுதலும் பெருமை என்று கூறப் பட்டது. கா. 8.

(7)

ப. 8.

பெருமை யுடையவ ராற்றுவா ராற்றி
னருமை யுடைய செயல்.

(கா - உ.) எ - து.—தம் குடிமையால் பெருமை உடையவர் சால வல்லவர் : யாதினை எனின், நூல் நெறிப்பொருள் பலவற்றினும் வைத்துப் பலராலும் செய்தற்கு அருமை உடையவற்றைச் செய்து கோடல் எ - று.

(ப - உ.) எ - து.—பெருமை உடையவர் வல்லவர் ஆவர் : செய்தற்கு அருமை உடைய

நெறியினுனே செய்ய செயல்களை எ - று.

இது செய்தற்கு அரிய செய்வார் பெரியர் என்று கூறப் பட்டது.

38

(8)



கா. 9.
ப. 6.

ஒளியொருவர்க் குள்ள வெறுக்கை
கஃகிறந்து வாழ்து மெனல்.

யிளியொருவர்க்

(கா - உ.) எ - து.—தமது உள்ளம்

சேறவே ஒருவர்க்கு இவர் பெரியர் என்று

என்றும் பெருமைக்கண்
யேர் விளங்கும் தோற்றம்
ஆவது: அதனால் அஃது ஒழிந்து உயிர் வாழ்தும் என்று கருதுதல்
தமக்குப் பெரிதும் இள்வரவு ஆம் எ - று.

பிரி. பா - ம். "ஒளியொருவற்கு."—"யிளியொருவற்கு"—"வாழு
மெனல்".

(ப - உ.) எ - து —ஒருவனுக்கு மனப்பெருமை
அதனை நீங்கி வாழும் என்று பிறர் சொல்லுதல் இளிவு

புகழ் ஆம்:
ஆம் ஒருவ
னுக்கு ஆகலான் எ - று.

இ ம மிகக் கொடுக்க

வல்லாரைப் பெரியர் என்று கூறிற்று. (9) கா. 10.
ப. 7.

ஒ ருமை மகளிரே போலப்
பெருமையுந்

தன்னைத்தான் கொண்டொழுகி
னுண்டு.

(கா-உ.) எ-து.—பிறர் மதில் காவலும் மக்கள் காவலும் அன்றித் தாமே மனக் காவல் ஆகிய நெஞ்ச ஒருமைப்பாட்டால் கொண்டானைப் பிழையாத மகளிரைப் போலக் குடிப்பிறந்தோனது பெருமையும் அக்குடிப் பிறப்பிற் பிழையா வண்ணம் தன்னைத் தானே அமைத்துக் கொண்டு ஒழுகின் உண்டு எ-று.

(ப-உ.) எ-து.—தன்னைப் பிறர் விரும்பும் காலத்தினும், தன் உள்ளம் பிறரை விரும்பும் காலத்தினும் வேண்டியவாறு ஒழுகாத கற்பு உடைய மகளிரைப் போலப் பாதுகாத்து ஒருவன் ஒழுகுவன் ஆயின் பெருமை உண்டு ஆம்: அல்லது இல்லை ஆம் எ-று.

இது பெருமை ஆவது நிறை உடைமை என்று கூறப்பட்டது. (10)

(கா-உ.) இனி மற்று இங்ஙனம் தாம் தம்மைப் பிழைவழிச் செல்லாது அமைத்துக் கொண்டு ஒழுகுதல் ஆளுமை ஆட்சி சான்றாண்மைக்கு ஒரு தோற்றுவாய் ஆகலான் மற்று இதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேல் அதிகாரம்.

## 61. சான்றாண்மை.

(ப-உ.) சான்றாண்மை யாவது நற்குணங்கள் பலவற்றானும் அமைந்தார் இலக்கணம் கூறுதல். இது பெரும்பான்மையும் அறத்தின் தலையளிசெய்து ஒழுகுவாரை நோக்கிற்று.



கா. 1.

ப 10.

சான்றவர் சான்றாண்மை குன்றி

ருங்கல மன்ஞே பொறை.

னிருநிலந்தான்

(கா - உ) எ - து.—சான்றவர் தமது சான்ருண்மை சிறிது குன்றின, இப்பெரு நிலம்தான் தாங்குதல் உடைய அல்ல பாரம்: எனவே இவர் சிலரி...............................................ராயின் ஆற்ற வல்லாது இப்பூமி என்பது பொருள் எ - று.

பரி. பா - ம்., "தாங்காது".

(ப - உ) எ - து.—சான்ருர் தமது தன்மை குறைவர் ஆயின் பெரிய நிலமானது உயிர் முதல் ஆகிய பாரத்தைத் தாங்குதல் கழியும் எ - று

அவர்களும் தானும் ஆய்ப் பொறுக்கின்றவனைத் தனிப் பொறுக்கல் ஆகாது என்று ஆயிற்று. மேல் ஊழி பெயரினும் சான்ருேர் நிலை குலையார் என்ருர்; இது சான்ருேர் நிலை குலையின் ஊழி பெயரும் என்றது. (1)

கா. 2. ப. 9.

ஊழி பெயரினுந் தாம்பெயரார்
காழி யெனப்படு வார்.

சான்ருண்மைக்

(கா - உ.) எ - து.—அயன் ஊழி ஆகிய கற்ப காலம் பெயரும் காலத்து அவன் படைப்பு ஆகிய உலகு போந்து அழியும் அன்றே: அவ்வாறு அயன் ஊழி பெயரினும தாம் தமது "சான்றாண்மை யின் பெயரார்: யாவர் எனின்" இவர் சான்றாண்மைக்கு ஒரு தனிச் சாகரம் என்று பல நூலினும் எடுத்து உரைக்கப்படும் பண் பினர் எ - று.

(ப - உ.) எ - து.—சான்றாண்மைக்கு ஒரு கடல் என்று பிற ரால் சொல்லப்படும் அவர்கள் காலம் தனது தன்மை குலையினும் நின்ற நிலை குலையார் எ - று.

இது சான்றோர் நின்ற நிலை குலையார் என்றது.

(2) கா. 3.

ப. 1.

இன்மை யொருவர்க் கிளிவன்று
இன்மையுண் டாகப் பெறின்.

சால்பென்னுந்

(கா

ஆயினும்

- உ.) எ - து —ஒருவரை எளிமைப் படுத்துமது
அவ்வறுமையும் ஒருவர்க்கு இளிவாவு அன்று!

பொருட்பால் டுச் சார்பு என்று

நூல்கள் எடுத்து உரைக்கும் இட்பம் உளது ஆகப்
பெறின் எ - று.

பரி. பா - ம். "யொருவற் கிளிவன்று".

(ப - உ.) எ - து.—ஒருவனுக்குச் சார்பு ஆகிய நிலைமை
டாகப் பெறின் பொருள் இன்மை இளிவு ஆகாது எ - று.
உண்

இஃது அமைவு உடையர் ஆதல் பெறுதற்கு
கூறிற்று.

அரிது என்று
(3)

கா. 4. ப. 4.

குணநலஞ் சான்றோர் நலனே பிறநலம்
யாநலத் துள்ளதூஉ மன்று.

(கா - உ.) எ - து.—சான்றோர் நலம் யாதோ எனின், தமது உள்ளத்து அமைவு உடையர் என்னும் இந்நலமே ஆகலான், இவ் வமைவு தான் வேறு யாவை சில நன்மையினும் உள்ளது ஒன்று அன்று : எனவே எல்லா நன்மையினும் இவர்க்குச் சிறந்தது அதுவே என்பது பொருள் எ - று.

குணம் என்பது உள்ளத்து அமைவு உடைமை.

(ப - உ.) எ - து.—சான்றோர்க்கு நலம் ஆவது குணம் நல்லர் ஆகுதல் : அக்குண நலம் பிற நலம் ஆகிய எல்லா நலத்திலும் உள் ளது ஒரு நலம் அன்று எ - று.

இது குண நலம் சால்பிற்கு அழகு என்றது.
(4)

கா. 5. ப. 5.

ஆற்றுவா ராற்றல் பணித லதுசான்றோர்
மாற்றாரை யாற்றும் படை.

(கா - உ.) எ - து.—ஐம்புலன்களின் வேகத்தை ஆற்றுவாரது ஆற்றலாவது யாதோ எனின், தாம் யாவர் பாட்டும் பணிவு உடையர் ஆதல் : மற்று அது அச்சான்றோர் தம்மொடு மாறுபடும் பகைவரை எதிர் ஆற்றும் கருவி எ - று.

(ப - உ.) எ - து.—பெரியாரது பெருமை ஆவது எல்லார்க்கும் தாழ்ந்து ஒழுகுதல் : அதுவே சான்றவர் மாறுபட்டவரை வெல்லும் கருவி எ - று.

இது சான்றவர்க்கு வலியாவது தாழ்ந்து ஒழுகுதல் என்றவாறு.
(5)

கா. 6.

ப. 6.

சால்பிற்குக் கட்டளை யா தெனிற்
றோல்வி
துலையல்லார் கண்ணுங் கொளல்.

(கா - உ.) எ - து.—சான்றோர் சால்பிற்கு உறுதிப்பாடு ஆவது யாதோ எனின், தம்மொடு ஒப்பச் சீர்தூக்கும் தலைமை இல்லார் மாட்டும் தம் தோல்வி கொண்டு ஒழுகுதல் எ - று.

(ப - உ.) எ - து.—சால்பிற்கு அளவு யாது எனின், தோல்வி யைத் தனக்கு நிகர் அல்லாதார் மாட்டும் கொள்ளுதல் எ - று.

இஃது எல்லார்க்கும் இனிமை செய்ய வேண்டும் என்றது. (6) கா. 7.

ப. 7.

இன்னாசெய் தார்க்கு மினியவே
செய்யாக்கா
லென்ன பயத்ததோ சால்பு.

(கா - உ.) எ - து.—இன்னாங்கு செய்து ஒழுகுவார்க்கும் தாம் எப்பொழுதும் இனியவையே செய்யாத இடத்து மற்று என்னை பயன் உடையதோ உலகத்துச் சான்றோர் தம் சால்புடைமையது எ - று.

(ப - உ.) எ - று.—தமக்கு
வற்றைச் செய்யாத காலத்துச்

இன்னாத செய்தவர்கட்கும் இனிய
சால்புடைமையால் பயன் யாதோ
எ - று.

இஃது இன்னாதார்க்கும் இனிமை செய்ய
வேண்டும் என்றது.(7) கா. 8.

ப. 8.

கடனென்ப நல்லவை யெல்லாங் கடனறிந்து
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு.

(கா - உ.) எ - து.—நமக்குக் கடன் இஃது என்று இருந்து சான்றாண்மையைக் கைவிடாது தம்மாட்டுக் கைக்கொண்டு ஒழுகும் அவர் யாவர்? மற்று அவர்க்கு இச்சான்றாண்மை அடியாக மற்றும் இதுபோலும் நல்லவை எல்லாம் கைக்கொண்டு ஒழுகுதல் கடன் என்று சொல்லுப யாவரும் எ - று.

(ப - உ.) எ - து.—உலகு இயற்கை அறிந்து சான்றாண்மை மேலிட்டுக் கொள்ளும் அவர்களுக்கு நல்ல ஆயின எல்லாம் இயல்பு என்று சொல்லுவர் அறிவோர் எ - று.

இது மேல் கூறியவாறே அன்றி நற்குணங்கள் எல்லாம் வேண்டும் என்றது. (8)

கா.

9.
கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை
ப. 2.

சொல்லா நலத்தது சால்பு.

(கா - உ.) எ - து —யாதானும் ஒன்றினையும் தான் கொல்லாமை ஆகிய விரதம் கொண்ட இந்த நலத்தின் கண்ணதே நோன்பின் நன்மை ஆவது: மற்று இது போலத் தம் மாட்டு ஆயினும் பிறர் செய்தது ஓர் தீங்கினை இவர் இது செய்தனர் என்று எடுத்து உரையாத நன்மைக் கூறு உடையது யாது மற்று அதன் கண்ணதே சால்பு உடைமையும் எ - று.

(ப - உ.) எ - து.—தவத்திற்கு உறுப்பு ஆன சிலங்கள் பல உள ஆயினும் கொல்லாத நலத்தை உடையது தவம்: அதுபோலச் சான்றாண்மைக் குணங்கள் பல ஆயினும் பிறரது பழியைச் சொல்லாத நலத்தை உடையது சால்பு எ - று.

மேல் கூறிய சால்பிற்கு இலக்கணம் கூறுவார் முற்படப் புறஞ் சொல்லாமை எல்லாக் குணத்திலும் இன்றியமையாததாக வேண்டும் என்று கூறினர். (9)

கா. 10. ப. 3.

அன்புநா ணொப்புரவு கண்ணோட்டம் வாய்மையோ
டைந்துசால் பூன்றிய தூண்.

(கா - உ.) எ - து.—அன்பு முதலாக வாய்மையோடு எடுத்து எண்ணத் தொகுத்த ஐந்தும் சான்றோரது சால்பு தளராமல் ஊன்றி நிற்கின்ற தூண்: எனவே ஒருவர் சால்பின் தன்மையாவது இவை அனைத்தும் இனிது ஒழுக எனபது பொருள் ஆயிற்று எ - று.

(ப - உ.) எ - து—அன்பு உடைமையும், பழி நாணுதலும், ஒப்புரவு உடைமையும், கண்ணோட்டமும், மெய்புரையும் என்று சொல்லப்பட்ட ஐந்தும் சால்பினைத் தாங்கும் தூண் எ - று.

இவை ஐந்தும் சால்பிற்கு அங்கம் என்றது. (10)

(கா - உ.) இனி மற்று இக்குணம் உடையோர்க்கே மக்கட் பண்பு ஆகிய மரபு உள்ளது பிறர் மக்கள் உருபினரேனும் மக்கட் பண்பு ஏதும் இலர் என்று இங்ஙனம் இம்மரபு தெரித்து உணர்த்தல் வேண்டி மற்று இதன் பின்னரே அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 62. பண்புடைமை.

(ப - உ.) பண்பு உடைமை ஆவது யாவர் மாட்டும் அவரோடு ஒத்த அன்பினராய்க் கலந்து ஒழுகுதலும், அவர் அவர் வருத்தத் திற்குப் பரிதலும், பகுத்து உண்டலும், பழி நாணலும் முதலான நற்



குணங்கள் பலவும் உடைமை. இது பெரும்பான்மையும் பொருளி னால் தலையளி செய்வாரை நோக்கிற்று ஆதலான் பின் கூறப்பட்டது.

கா. 1.

ப. 5.

பண்புடையார்ப் பட்டுண் டுலக
மதுவின்றேல்

மண்புக்கு மாய்வது மன்.

(கா - உ.) எ - து.—மக்கள் பண்பு உண்டாகிய மரபுடையாளை
ரைப் பெற்று உண்டாயிற்று ஒழுக்கம் என்று மறைநூலும் பிறவும் வகுத்து உரைக்கின்ற அனைத்து ஒழுக்கத்திற்கும் காரணம் ஆகிய அம்மக்கள் பண்பு என்பது ஈண்டு இல்லை ஆயின் பிறந்தார் யாவரும் பெரும் பாவிகளே ஆனர் ஆகலால் அந்தப் பூமிக்கும் பெரும் பாரமே ஆகும் இதனைத் தரிக்க மாட்டாது எ - று.

(ப - உ.) எ - து.—பண்பு உடையாரைத் தோற்றி உலகம் ஆகிய பலவகை உயிரும் உண்டாயிற்று: அத்தோற்றம் இல்லை ஆனல் அவ்வுயிர்கள் எல்லாம் மண்ணின்கண் புக்கு மாய்வது நில்லை எ - று.

இது பண்பு உடையார் பிறத்தலானே உலக வருகின்றது என்றது.

நடை தப்பாமல் கா. ௨.
(1)

ப. 10.
அரம்போலுங் கூர்மைய ரேனு
மரம்போல்வர்
மக்கட்பண் பில்லா தவர்.

(கா - உ.) எ - து.—அரப்போலுர் யாதானும் ஒரு பொருளை வருத்து உளபுக்கு அறியும் அறிவின் கூர்மையை உடையர் ஆயினும் யாதும் அறியாத திண்ணிய உருபினது ஆகிய மரம் அனையர்: யார் எனின் மக்கள் வடிவினராய் வைத்தும் அம்மக்கள் பண்பு ஆகிய மாபு இல்லாதவர்கள் எ - று.

(ப - உ.) எ - து.—அரத்தை ஒத்த கூர்மையை உடையர் ஆயி னும் மக்கள் பண்பு இல்லாத மாந்தர் மரத்தை ஒப்பர் எ - று.

அரம் போலும் தனக்கு உள்ள கூர்மை பிறர் மாட்டு மடியாமை யும், தான் பிறனைக் கூரியர் ஆக்குதலும் ஆம். இஃது உணர்வு உடையார் ஆயினும் உணர்வு இல்லாத மரத்தை ஒப்பார் என்றது; எனனை? உணர்வால் பயன் இன்மையின். (2)

கா. 3. ப. 4.

நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்
பண்புபா ராட்டு முலகு.



(கா - உ.) எ - து.—ஒழுக்கத்துடனே நல்லறமும் தங்கிய வழி இருமைப் பயனும் உளது அன்றே! அதனால் இப்பயன் உடையார் பண்பினையே கொண்டாடும் இவ்வுலகு: எனவே உலகின் உள்ளோர் யாவரும் கொண்டாடுவர் எ - று.

(ப - உ.) எ - து.—பிறரால் விரும்பப்படுதலோடே கூட நன் னெறியின் கண்ணே பொருந்தின பொருள் உடையாது குணத் தினை உலகம் கொண்டாடும் எ - று.

இவை எல்லாரும் புகழ்வர் என்றது.

(3) கா. 4.

ப. 8.

நண்பாற்ற ராகி நயமில செய்வார்க்கும்
பண்பாற்ற ராதல் கடை.

(கா - உ.) எ - து.—உலகத்து மக்கள் பண்பு உடையோர் தம்மொடு நட்புச் செய்தற்கு ஒல்லாரும் ஆகி ஒழுக்கக் கேடே செய்து ஒழுகுவார்க்கும் தாம் தமக்கு இயல்பு ஆகிய மாபினைச் செய்யார் ஆதல் சாலக் கடை : எனவே ஈண்டும் தம் பண்பினர் ஆதலே தலை என்பது பொருள் ஆயிற்று எ - று.

(ப.- உ). எ - து.—நண்பு செய்ய மாட்டார் ஆய் விருப்பம் இல்லாதவற்றைச் செய்வார்க்கும் குணம் ஆயின செய்யார் ஆதல் குணம் உடையார்க்கு இழிவு எ - று.

குணம் செய்யாமை இன்னா செய்தல் ஆம். ஆதலால் பிறர் வருத்தத்திற்குப் பரியாமையால் வரும் குற்றம் கூறிற்று. (4)

கா. 5.
ப. 6.

நகல்வல்ல ரல்லார்க்கு மாயிரு ஞாலம்
பகலும்பாற் பட்டன் றிருள்.

(கா - உ.) எ - து.—யாவர் மாட்டும் கன்றிச் சேறல் மாபு அன்று என்று கருதி எஞ்ஞான்றும் இனிது ஒழுகுதல் மாட்டாதார் யாவர்? மற்று அவர் தமக்கு மிகவும் பெரிய உலகமானது பகலுங் கூட இருளின்பாற் பட்டது ஆம் : எனவே மக்கள் பண்பு இல்லாதவர்க்கு இவ்வுலக நீதி யாதும் தெரியாது இருண்டே கிடக்கும் என்பது பொருள் எ - று.

(ப
செய்ய

- உ.) எ - து.—எல்லாரோடும் கூடி இருந்து நகுதலைச் மாட்டாதார்க்குப் பெரிய உலகம் பகல் பொழுதும் இரு ளின்பாற் பட்டது எ - று.

எனவே இவனும் அறியான் : அறிவிப்பாரும் இல்லை என்ற
வாறு ஆயிற்று. இது கலந்து ஒழுகாமையால் கூறிற்று.
வரும் குற்றம்
(5)

62. பண்புடைமை.

265

கா. 6.

ப. 9.

உறுப்பொத்தல் மக்களொப் பன்றால் வெறுத்தக்க
பண்பொத்த லொப்பதா மொப்பு.

(கா - உ.) எ - து.—கை, கால், கண், மூக்குச் செவி முதலிய உறுப்பு ஒத்தல் மக்கள் ஆதற்கு ஒப்பு அன்று: மற்று யாதோ ஒப்பு எனின், ஒருவர்க்குப் பெருமை பொருள் எனத் தக்க பண்பு ஒத்தல் யாது! மற்று அது அகத்து உறுப்பு ஆகிய நெறிக்குறிப்பு என்றே மற்று அதனைச் சிலரொடு சிலர் ஒப்பதே ஒப்பு ஆவது எ - று.

(ப - உ.) எ - து.—மக்கள் ஒப்பு ஆவது உறுப்பு ஒத்தல் அன்று: செறியத்தக்க குணங்களை ஒத்தல் அதனை ஒப்பதே ஒப்பு ஆவது எ - று.

செறியத்தக்க குணங்கள் உள ஆதலின் செறியத்தக்க என்றார். பண்பு இல்லாதார் மக்கள் அன்று என்றது.

குணம்
(6) கா. 7.
ப. 7.

பண்பில்லான் பெற்ற பெருஞ்செல்வ
கலந்தீமை யாற்றிரிந் தற்று.

நன்பால்

(கா - உ.) எ - து.—உலகத்துப் பண்பு கேடன் ஆனவன் பெற்றது ஓர் பெருஞ் செல்வம் ஆனது எத்தன்மைத்தோ எனின், மும்மூர்ப் பாலினும் நன்பால் ஆவது ஆன்பால் அன்றே? மற்று

அதுதான் ஒரு கலத்தினது குற்றத்தினால் தன் உருபு திரிந்த தன்மைத்து: எனவே இவன் ஈட்டிய பொருளும் யாதும் நன்மை இன்றிக் கெட்டு விடும் எ - று.

அக்
ஒரு

(ப - உ.) எ - து.—குணம் இல்லாதவன் பெற்ற பெரிய செல்வம் நல்ல பால் கலத்தின் தீமையால் கெட்டாற் போலத் தனக்கும் பிறர்க்கும் இன்பம் பயவாது கெடும் எ - று.

இது பகுத்து உண்ணாமையால் வரும் குற்றம் கூறிற்று. (7)

கா. 8.

ப. 1. அன்புடைமை யான்ற குடிப்பிறத்த லிவ்விரண்டும் பண்புடைமை யென்னும் வழக்கு.

(கா - உ.) எ - து.—யாவர் மாட்டும் பரிவு உடைமையும் நெறி அமைந்த தம் குடிப்பிறப்பு என்னும் இவை இரண்டும் ஒருவர்க்கு உளது ஆயின் பண்புடைமை என்னும் முறைமை ஆம் எ - று.

(ப - உ.) எ - து.—யாவர் மாட்டும் அன்புடைமையும் அமைந்த குடியின்கண் பிறத்தலும் ஆகிய இவ்விரண்டும் பண்புடைமை என்று உலகத்தார் வழங்கப்படுகின்றது எ - று.

*அன்பு உடையன் ஆகப் பிறர் வருத்தத்திற்குப் பரிதலும் கலந்து ஒழுகுதலும் கொடுத்தலும் முதல் ஆயின உள ஆம். குடிப் பிறப்பினனே பழிப்படுவ செய்யாமையும் புறங்கூறாமையும் முதல் ஆயின உள ஆம்: ஆதலான் இவ்விரண்டினையும் உடைமை பண்பு உடைமை என்று கூறப்பட்டது.* (8)

கா. 9. ப. 3.

நகையுள்ளு மின்னா திகழ்ச்சி பகையுள்ளும்
பண்புள பாடறிவார் மாட்டு.

(கா - உ.) எ - து.—*தாம் சிலரோடு இளமை கொண்டு நகை நகையாடும் இடத்தும் இகழ்ந்து உரை கூறி நகையாடும் இகழ்ச்சிப் பாடு இன்னாது: அதுவும் இன்றி இனி ஒருவரோடு பகை பூணுங் காலும் (மாவு மிகவுளவா யிருக்குமெது முயிர்க்கிறுதி முற்கலிய வின்றி)? யாவர் மாட்டும் தாம் இனியராய் விடுதல் யாவர் மாட்டு உளது ஆவது எனின், தாம் செய்யத் தகுவது ஆகிய நெறிபாடு அறிந்து ஒழுகுவார் மாட்டே உள ஆம் எ - று.*

(ப - உ.) எ - து.—*அறிவார் மாட்டு நகையாடுதலின் கண்ணும் இகழ்ச்சி தோற்றும் ஆயின் இன்னாது ஆம்: பகை ஆகும் இடத்துப் பண்பு தோற்றம் ஆயின் பெருமை உளது ஆம் எ - று.*

*எனவே அறியாதார் மாட்டு இவை இரண்டும் இல்லை ஆம் என்ற வாறு ஆயிற்று. இகழ்ச்சி என்றது பண்பு இன்மை: இஃது அறிவுடையார் மாட்டு ஒருதலையாகக் கொண்டு ஒழுக வேண்டும் என்றது.* (9)

கா. 10. ப. 2.

எண்பதத்தா னெய்த லெளிதுமன் யார்மாட்டும்
பண்புடைமை யென்னும் வழக்கு.

(கா - உ.) எ - து.—போகச் சிறப்பினுன் எண்ணத் தக்க சுவர்க்க பதத்தின்கண் சென்று எய்துதல் மிகவும் எளிது : என்னை எனின், கீழ்ச்சொன்ன முறையானே தமக்கு இனியோரும் இன்ஞ தோரும் ஆகிய யார் மாட்டும் தனக்கு அடுத்த பண்புடைமை என் னும் இம்முறை முற்றிய இடத்து எ - று.

(ப - உ.) எ - து.—யாவர் மாட்டும் எளிய காலத்தை உடை யவன் எய்துதல் எளிது என்று சொல்லுவர் பண்புடைமை என்று வழங்கப்படுகின்ற இதனை எ - று.

எளிய காலம் ஆவது - எல்லாரும் தத்தம் குறை சொல்லுதற்கு எளிய செவ்வி. அஃது உடையார்க்குப் பண்பு உண்டாம் என்றது.

## 63. நன்றியில் செல்வம் 267

இது பெரும்பான்மையும் அரசரை நோக்கிற்று.
மேல் கூறிய வகையே அன்றி இதனாலும் பண்பு
உண்டு ஆம் என்று கூறப்பட்டது.
(10)

(கா - உ.) இனி மற்று இங்ஙனம் கூறிய பண்பு இல்லாதான் செல்வம் கொண்டு ஒரு பயன் தனக்கு இல்லாமையின் அதன் பின் னரே இதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 63. நன்றியில் செல்வம்.

(ப - உ.) நன்றியில் செல்வம் ஆவது அறத்தையும் இன்பத்தை யும் பயவாத செல்வத்து இயல்பு கூறுதல். இது பண்பு இல்லார் கார்க்கு உளது ஆவது ஒன்று ஆதலின் அதன்பின் கூறப்பட்டது.

கா. 1.

ப. 0.

அன்பொரீஇத் தற்செற் றறநோக்கா தீட்டிய
வொண்பொருள் கொள்வார் பிறர்.

(கா -
தன்னையும்

உ.) எ - து.—ஒருவன் தானும் உண்டு இனிது வாழாது செறுத்து மற்றும வறியார் மாட்டு ஓர் இரக்கம் இன்றி அதனால் அறனையும் செய்யக் கருதாது தான் தொகுத்து வைத்த ஒள்ளிய பொருள் இனிக் கைக்கொள்வார் பிறர்: எனவே தான் தன் பயன் இழந்தான் என்பது பொருள் எ - று.

(ப - உ.) எ - து.—பொருள் தேடுங்கால் பிறர் மாட்டு அன்பு செய்தலை நீக்கி அது தேடினான் நுகர்தலும் இன்றி அறத்தையும் செய்யாது தொகுத்த ஒள்ளிய பொருளைக் கொள்வார் பிறர் எ - று.

இது நன்றியில் செல்வம் ஆவது இத்தன்மையது என்பதூஉம் அது பிறர் கொள்வர் என்பதூஉம் கூறிற்று. பிறர் என்றது தன் வழியில் உள்ளார் அல்லாதாரை. (1)

கா. 2. ப. 0.

ஈட்ட மிவறி யிசைவேண்டா வாடவர்
தோற்ற நிலக்குப் பொறை.

(கா - உ.) எ - து.—இங்ஙனம் பொருள் ஈட்டம் காரணம் ஆக உலோபித்துப் புண்ணியதானம் புகழினை விரும்பாத மக்கட் பெரும் பாவியர் ஆனவர் இவ்விடத்து வந்து உதிக்கின்றது எல்லாம் இப் பூமிக்கு ஒரு பாரம் ஆம் இத்துணை எ - று.

பாத

(ப - உ.) எ - து.—பொருள் ஈட்டுதலை விரும்பிப் மாந்தர் பிறத்தல், நிலத்துக்குப் பாரம் ஆகும் எ -

புகழை விரும்

று.

இத்தன்மையார் பிறப்பதனினும் பிறவாமை நன்று என்றது.(2)——



கா. 3.

ப. 10.

நச்சப் படாதவன் செல்வ நடுவூரு
ணச்சு மரம்பழுத் தற்று.

(கா - உ.) எ - து.—தன் மாட்டு வந்து எமக்கு இது வேண்டும் என்று யாவராலும் விரும்பப்படாத அரும்பாவி பெற்ற பெருக்கிரு ஆனது எத்தன்மைத்தோ எனின், ஊர் நடு ஆகிய மன்றினுள் ஒரு மரம் பழுத்தால் மற்று அஃது யாவர்க்கும் பொது அன்றே: அங்ஙனப் பொதுப்பட நுகர்தற்கு உரிய மன்றினுள் நச்சு மரம் ஆகிய காஞ்சிரை பெரிதும் பழுத்து நின்ற அத்தன்மைத்து எ - று.

(ப - உ.) பிறரால் நச்சப்படாதவன் செல்வம் ஊர் நடுவுள் பழுத்து நிற்பது ஓர் நச்சு மரம் பழுத்த தன்மைத்து எ - று.

தமது ஆசையால் இன்பார் உண்டு ஆயின் இது கொல்லும் என்றவாறு ஆயிற்று. (8)

கா. 4. ப. 5.

எச்சமென் றென்னெண் ணுங் கொல்லோ [வொருவரா
னச்சப் படாஅ தவன்.

(கா - உ.) எ - து.—இங்ஙனம் யாவராலும் யாது ஒன்றும் நச்சப்படாதவன் இடத்துக் குலமும் உருபும் குணமும் ஒழுக்கமும் புதல்வரும் பொருளும் பூமியும் என்னும் எவ்வெச்சமும் இவனிடத்து இவை எல்லாம் உளவேனும் ஒன்றும் உளது என்று கருதார் உலகத்தோர் ஒரு பயன் இல்லாமையினான் எ - று.

குலம், உருபு, குணம், ஒழுக்கம், புதல்வர், பொருள், பூமி என்னும் எச்சத்தினுள்ளும் இவன் கண் உள்ளது ஆம் எச்சம் இது என்று என் எண்ணுங்கொல்லோ இவ்வுலகம்: எனவே யாது ஒன்றும் உளது ஆக எண்ணாது எ - று.

(ப - உ.) எ - து.—ஒருவராலும் நச்சப்படாத செல்வம் உடையான் தனக்குப் பின்பு நிற்கும் என்று யாதனை எண்ணுமோ? எ - று.

இது புகழ் இல்லை ஆம் என்றது. (4)

கா. 5. ப. 8.

ஏதம் பெருஞ்செல்வந் தான்றுவ்வான் றக்கார்க்
கொன்
றீத லியல்பிலா தான்.

(கா - உ.) எ - து.—தானும் உண்ணான் ஆகித் தக்கார்க்கு ஒன்று ஈதல் இயல்பும் இல்லாதான் இடத்து உள்ள பெருஞ் செல்வம் ஆனது பெரும்பாவத் திரள் என்பது பொருள் எ - று.

63. நன்றியில் செல்வம் 269

(ப - உ.) எ - து.—தானும் துவ்வாது
ஈயாத இயல்பினை உடையான் பெற்ற பெருஞ்

தக்கார்க்கும் ஒன்று
செல்வம் குற்றம் ஆம்
எ - று.

இஃது இறுதி பயக்கும் என்றது.

(5) கா. 6.

ப. 6.

பொருளானு மெல்லாமென் றீயா திவறு
மருளானு மாணாப் பிறப்பு.

(கா - உ.) எ - து.—நாம் படைத்த பொருளானே உள ஆம் நமக்கு எல்லா நன்மையும் என்று இங்ஙனம் கருதிப் பிறர்க்கு ஈயாது உலோபிக்கும் மதி மருட்சியானே உளது ஆம் மாட்சி இல்லாத பிறப்பு: எனவே இதனான் நாக யோனியும் திருக்கும் பிறவும் ஆகிய கடையான பிறப்பு உளது ஆம் இவர் ஈட்டிய பொருள் வெறும் பாவப் படைப்பு ஆகலான் எ - று.

(ப - உ.) எ - து.—பொருளினாலே எல்லாச் சிறப்பும் எய்தல் ஆம் என்று ஈயாதே உலோபுகின்ற மயக்கத்தினாலே மாட்சிமை இல்லாத பிறப்பு உண்டு ஆம் எ - று.

இது திக்கதியுள் உய்க்கும் என்றது.

(6) கா. 7.

ப. 7.

கொடுப்பதூஉந் துய்ப்பதூஉ மில்லார்க் கடுக்கிய
கோடியுண் டாயினு மில்.

(கா - உ.) எ - து.—ஒருவர் பொருள் பெற்றதனால் பயன் யாதோ எனின், நாள்தோறும் பிறர்க்கு உபகரித்தலும் தாம் உண்டு இன்பம் உறுதலும் அன்றே? அதனால் அவை இரண்டும் இல்லாத அரும் பாவிக்கு அளவு இறந்த கோடி பொருள் உண்டு ஆயினும் யாதும் இல்லை என்பதே துணிவு எ - று.

(ப - உ.) எ - து.—பிறர்க்குக் கொடுத்தலும் தாம் அது நுகர்தலும் இல்லாதார்க்குப் பல கோடி பொருள் உண்டு ஆயினும் இன்மையோடு ஒக்கும் எ - று.

இது நல்கூர்ந்தாரோடு ஒப்பர் என்றது. (7)

கா. 8.

ப. 4. அற்றார்க்கொன் றாற்றாதான் பெற்றா டமியண்மூத் தற்று.

செல்வ மிகநலம்

(கா - உ). எ - து.—தம்மாட்டு யோர்க்கு ஒன்று உதவாதான் பெற்ற

ஒன்று அற்றார் ஆகிய வறி பெருஞ்செல்வம் ஆணது மிக ஊ



நலம் பெற்றாள் கணவனொடு கலந்து இன்பு உறுதற்கு விதி இலள் ஆகித் தானே தனியள் ஆய் மூத்து இருந்த அத்தன்மைத்து: எனவே செல்வம் இருந்தும் இருந்திலன் என்பது பொருள் ஆயிற்று எ - று.

(ப - உ.) எ - து.—வறியவர்க்கு ஒன்றைக் கொடுக்க மாட்டா தான் பெற்ற பெரிய செல்வம். மிக அழகினைப் பெற்ற ஒருத்தி கொழுநனை இன்றி மூத்துத் தமியள் ஆய்க் கழிந்தது போலும் எ-று.

தமியள் மூத்தல் - தன்னைப் பிறர்க்கு ஈவார் இன்றித் தமியள் ஆகி மூத்தல். இது செல்வம் தானும் ஒரு பயன் பெறாது என்றது. (8)

கா. 9.

ப. 3.

வைத்தான்வாய் சான்ற பெரும்பொரு
செத்தான் செயக்கிடந்த தில்.

வாஃதுண்

[ணைன்

(கா - உ.) எ - து.—வாய்ப்பு அமைந்த பெரும்பொருள் ஈட்டி வைத்தான் யாவன்? அவன் அதுகொண்டு அனுபவியான் ஆகில், அவன் செத்தவனே என்பதனால் அவன் வேறு நடைப் பிணமே: என் எனின் பிணமும் தான் அறிந்து ஒன்று செய்யப்படுவது ஓர் செய்தி இல்லை: இவனும் அன்னன் ஆகலான் இவன் தன் குறிப்பினால் ஒரு செய்தி செயக் கிடந்தது இல்லை எ - று.

(ப - உ.) எ - து.—இடன் நிறைந்த பெரும்பொருளை ஈட்டி வைத்தான் ஒருவன் அதனை நுகரானாய்ச் செத்தான்: அவன் பின்பு செய்யக் கிடந்தது யாதும் இல்லை எ - று.

இஃது ஈட்டினன் ஆயினும் தான் ஒரு பயன் பெறான் என்றது. (9)

கா. 10.

ப. 9.

சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி

வறங்கூர்ந் தனைய துடைத்து.

(கா - உ.) எ - து.—அருளும் அன்பும் குடியும் முதலிய சீர்மைப் பாட்டினை உடைய செல்வர் பிறர் மாட்டுத் தம்மால் யாவரும் வெறுத்தக்க சிறு துனி ஆகிய வறுமை வரின், அஃது எனைத்தோ எனின், உலகு இன்புறுதற்கு உரித்து ஆகிய மழை வறம் கூர்ந்தாற் போல அதனை உடைத்து: எனவே பின்னும் பின்னும் தமக்கு உள வழி எல்லாம் பிறர்க்கு உபகரித்தலே அவர்க்குக் கடன் எ - று.

(ப - உ.) எ - து.—சீர்மையை உடைய செல்வர் சிறிது துனிதலால் ஈயாது ஒழிதல், மாரி பெய்யாமை மிக்காற் போலும் எ - று.



மேல் கூறிய சந்தியில் செல்வம் உடையார் அன்றி நற்செல்வம் உடையாரும் பிறர்க்கு ஈயார் ஆயின், மழை பெய்யாக்கால் உலகம் துன்பு உறும் ஆறு போலத் துன்பு உறும் என்றது. (10)

(கா - உ.) உலகத்துச் சீர்மை உடையோர் தாம் பிறர்க்குச் செய்வன செய்தற்கு இயையாக்கால் பெரிதும் நாணுவார்: ஆகலான் மற்று இதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 64. நாணுடைமை.

(ப - உ.) நாண் உடைமை ஆவது அறம் பொருள் இன்பங்களில் பிறர் பழியாமல் ஒழுகுதல். இது பண்பு உடைமையின் பின் கூறற்பாலது: பண்பு இன்மையும் சோச் சொல்ல வேண்டுதலின் பண்பு இன்மை ஆகிய நன்றியில் செல்வத்தைக் கூறி அதன் பின் கூறப்பட்டது.

கா. 1.

ப. 1.

ஊ ணுடை யச்ச முயிர்க்கெல்லாம்
நா ணுடைமை மாந்தர் சிறப்பு.

வேறல்ல

(கா - உ.) எ - து.—உணவின் உடையது உயிர்கட்கு எல்லாம் வேறுபாடு உடைய அல்ல :

அச்சம் உலகத்து
எனவே உணவின்
குறைபாட்டுக்கு அஞ்சுவது ஓர் அச்சம் எவ்வுயிர்க்கும் ஒக்கும் : மற்று யாதோ மக்கள் வேற்றுமை எனின் தமது முறைமைக் குற்ற பாட்டிற்கு உள் அஞ்சி நாணுவது ஓர் நாணம் உடைமையே மக்கட் பிறந்தார்க்குச் சிறந்தது எ - று.

பரி. பா - ம். "ஊணுடை யெச்சம்".

(ப - உ.) எ - து.—ஊணும் உடையும் ஒழிந்தனவும் பன்மக்கள் எல்லார்க்கும் வேண்டும் : தலைமை மக்களுக்கு விசேடம் ஆக வேண்டும் அது நாண் உடைமை எ - று.

இது நாணம் வேண்டும் என்றது.

(1) கா. 2.

ப. 2.

ஊணைக் குறித்த வுயிரெல்லா
நன்மை குறித்தது சால்பு.

நாணென்னு

(கா - உ.) எ - து.—தத்தம் உடம்பை வளர்த்தல் பொருட்டு ஊணை நத்தி எழும் உயிர் அவை: அது போல் மக்கள் பிறப்புத் தன்னிலும் உணர்வு இலாகிய மக்கள் எல்லாம் ஒழுகுப: இனி அவ்வாறு அன்றி மற்றுத் தம்முறைமைக்கு ஒரு குறை வருதலை நாணுவது ஓர் காண் என்று உரைக்கப்படும் நன்மையை வளர்த்தலைக் குறித்து ஒழுகுவர் உலகத்துச் சால்புடை மக்கள் எ - று.

(ப - உ.) எ - து.—மேல் கூறிய எல்லாவற்றினும் உண்டியைக் கருதிற்றுப் பலவகை உயிரும்: அதுபோல நாணல் ஆகிய தன்மையைக் கருதிற்றுச் சால்பு எ - று.

இது சான்றோர்க்கு நற்குணங்கள் ஈது இன்றியமையாது என்றது.

பலவும் வேண்டும் ஆயினும்

(2)

கா. 3.

ப. 6. பிறர்நாணத் தக்கது தானாணா

னாயி

னறநாணத் தக்க துடைத்து.

(கா - உ.) எ - து.—தான் செய்த குற்றங்களைச் சான்றோர் கண்டு நாணி அஞ்சுமாப் போலத் தான் நாணான் ஆயின், தன்னை அறம் நாணத் தக்கது உடைத்து: எனவே அறம் முதல் ஆகிய நாற்பெரும் பொருளுள் அறம் என்னும் பெரும் பொருளும் தன்னை அஞ்சுக எ - று.

(ப - உ.) எ - து.—உயர்ந்தார் பலரும் நாணத் தகுவது ஒன்றனைத் தான் நாணாது செய்வன் ஆயின், அவனை அறம் நாணி அடையாது ஒழியும் தகுதி உடைத்து ஆம் எ - று.

இது நாணம் இல்லாதாரை அறம் சாராது என்றது.

(3)

கருமத்தா னாணுத னாணுத் திருநுத
னல்லவர் நாணுப் பிற.

(கா - உ.) எ - து.—என்றும் தான் தீய கருமம் காரணம் ஆக நாணுதலே நாண் ஆவது: மற்று ஏனைய எல்லாம் மகளிர் நாணும் நாண் ஆம்: எங்ஙனம் என்னில், ஆண் மகன் ஆகியும் தகுவதற்கு ஒதுங்கினவனோடு பெண்ணோடு வாசி இல்லை என்பர் பலரும்: அத னால் அதற்கு நாணுதல் ஆண்மைப் பாடு என்பது பொருள் எ - று.

(ப - உ.) எ - து.—தாம் செய்யும் வினையினாலே நாணுதல் நாணம் ஆம்: அஃது அல்லாத நாணம் அழகிய நுதலினாலே நல்லார் ஆகிய கணிகையர் நாணத்தோடு ஒக்கும் என்றது மேல் கூறிய நாணம் எத்தன்மைத்து என்றார்க்கு இது கூறப்பட்டது. (4)

கா. 5. ப. 8.

நாணகத் தில்லா ரியக்க மரப்பாவை
நாணா லுயிர்மருட்டி யற்று.

(கா - உ.) எ - து —தமக்குத் தகுவதனைச் தகாததனைச் செய்கைக்கும் நாணுவது அன்றே

செய்யாமைக்கும்,
ஒருவர்க்கு காணம் 64. நாணுடைமை

ஆவது: மற்று அது தம் உள்ளத்து இல்லாதார் உளர்போல இயங்கித் திரிகின்ற இயக்கம் எத்தன்மைத்தோ எனின், மாத்திரன் மக்களைப் போலும் வடிவு பாவித்த பாவையானது ஊடு சென்று இயக்கும் கயிற்று வலியான் உயிருடை உருபு என்று தன்னையும் பிறர் மதிக்கும் ஆறு அவர் மதியினை மருட்டிய அத்தன்மைத்து: எனவே இவரும் ஊழ் வலியினால் ஒரு மக்கள் உருபு போல இயங்கித் திரியும் இத் துணை அல்லது அகத்து ஓர் உணர்வு இன்று என்பது பொருள் எ - று.

(ப - உ.) எ - து.—மனத்தின்கண் நாணம் இல்லாதார் இயங்கும் அது, மரப்பாவை கயிற்றினால் இயங்கி உயிர் உள்ளது போல மயக்கும் அதனை ஒக்கும் எ - று.

இது நாணம் இல்லாதார் மக்கள் அல்லர் என்றது. (5) கா. 6.

ப. 5.
அணியன்றோ நாணுடைமை
பிணியன்றோ பீடு நடை.

சான்றோர்க்
[கஃதிலரேற் (கா
ன்றோர்க்கு

- உ.) எ - து.—நாண் உடைமை ஆகின்ற இது அணிகலம் போல்வது ஓர் அலங்காரப் பண்பிற்று

சான்

: அத

ஞல் அஃது ஒருவர்க்கு இல் எனின் அவர் நடிக்கும் பெருமையும் ஒழுக்கமும் பெருந்துயரை விளைக்கும் பிணி ஆம் எ - று.

(ப - உ.) எ - து. சான்றோர்க்கு நாண் உடைமை அழகு அன்றோ ? அஃது இல்லை ஆயின் பெரிய நடை நோய் அன்றோ ? எ - று.

இது சான் றோர்க்கு அழகு ஆவது நாண் உடைமை என்றது.(6) கா. 7.

ப. 10.

பிறர்பழியுந் தம்பழியு நாணுவா ஞணுக்
குறைபதி யென்னு முலகு.

(கா

பெரிதும்

- உ.) எ - து.—பிறர் மாட்டு ஒரு பழி காணினும் தான் கூசித் தன் மாட்டு ஒரு பழி உறினும் தான் பெரிதும்

நாணிக் கழிவான் யாவன் ? மற்று அவனை நாணுக்கு எல்லாம் நன்று ஆக உறையும் ஆசு என்று எடுத்து உரைப்பார் உலகத்தோர் எ - று.

பரி. பா - ம். "நாணுவார் நாணுக்".

(ப - உ.) எ - து.—பிறர்க்கு வரும் பழியையும் தமக்கு வரும் பழியையும் அஞ்சி நாணும் அவர்களை நாணுக்கு அஃது இருப்பிடம் என்று சொல்லுவர் உலகத்தார் எ - று.

35



இது தம் பழிக்கு நாணுதலே அன்றிப் பிறர் பழிக்கும் நாண வேண்டும் என்றது. (7)

கா. 8. ப. 3.

நாணா லுயிரைத் துறப்ப ருயிர்ப்பொருட்டா
னாண்டுறவார் நாணாள் பவர்.

(கா - உ.) எ - து.—தமக்கு ஒருவாற்றான் ஒரு நாணக் கேடும் உளது ஆயின் அது காரணம் ஆகத் தம் உயிரினையும் துறப்பது அல்லது உயிர் பேணுதல் பொருட்டு ஆக நாணத்தை விடுத்து ஒன்றினை இயற்றார்: யார் எனின் நாணுதல் அறிந்து எப்பொழுதும் ஆண்டு வருகின்ற அறிவினர் எ - று.

(ப - உ.) எ - து.—நாண் பொருட்டு ஆக உயிரைத் துறப்பர்: உயிர்ப் பொருட்டு ஆக நாணைத் துறவார்: நாணம் வேண்டுவார் எ - று.

இது நாணம் உயிரினும் சிறந்தது என்றது. (8)

கா. 9. ப. 7.

குலஞ்சுடுங் கொள்கை பிழைப்பி னலஞ்சுடு
நாணின்மை நின்றக் கடை.

(கா - உ.) எ - து.—தம் குலப் பண்பினைச் சுட்டு விடும் அக் குலத்துக்கு ஏற்ற கோட்பாட்டைத் தாம் பிழைப்பர் ஆயின்; அது போல எல்லா நன்மையும் சுட்டு விடும் ஒருவர் உள்ளத்து நாணம் இல்லாமை நின்ற இடத்து எ - று.

(ப - உ.) எ - து.—ஒழுக்கம் தப்பும் ஆயின் அத்தப்புதல் குலத்தினைச் சுடும்: அதுபோல நாண் இன்மை நிற்கும் ஆயின் தமது நலத்தினைச் சுடும் எ - று.

இது நலம் இல்லை ஆம் என்றது.

(9)

கா. 10.

ப. 4.

நாண்வேலி கொள்ளாது மன்னோ
வியன்ஞாலம்
பேணலர் மேலா மவர்.

(கா - உ.) எ - து.—தமது மேன்மைக்கு வரம்பு ஆகிய நாணினை வேலி ஆகக் கொள்ளாது மற்று இப்பரந்த ஞாலம் முழுதும் பேரினும் நாணம் இழப்ப வரினும் வியன் ஞாலம் விரும்பலர் மேலாயவர் எ - று.

புரி. பா - ம். "மேலாயவர்".

(ப - உ.) எ - து.—நாண் ஆகிய வேலியை அமைத்துக் கொள்வார்கள் அல்லது பெரிய உலகத்தினைப் பெறுதற்கு விரும்பார்கள் மேன்மக்கள் எ - று.

இது நாணம் அழிய வரும் பொருள்
இது பொருளினும் நாணம் சிறந்தது என்றது.

கொள்ளார் என்றது.

(10)

(கா - உ.) இனி மற்று இவ்வாறு, நாணுச் சிறப்பு உடையம் எனமக்கள் தாம் பிறந்த குடி முழுதும் பேணுதல் செய்யும் கூறுபாட்டினை உடையர் ஆகலான் மற்று இதன்
விக்கின்றது மேலே அதிகாரம்.

பின்னரே அதனை அறி

## 65. குடி செயல்வகை.

(ப - உ.) குடி செயல்வகை ஆவது தம் குடியை ஓம்புதல் வேண்டும் என்று கூறுதல். இது நாணம் உடையார் செய்தல் ஆகலின் அதன் பின் கூறப்பட்டது.

கா. 1.

ப. 8.

குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வ
மடிதற்றுத் தான்முந் துறும்.

(கா - உ.) எ - து.—தம் குடி தளராமல் பேணுதலைச் செய்வல் என்னும் அவ்வொப்பு இறந்தோர்க்குத் தெய்வந்தானே மடியானத னைத் தாறு அறக் களைந்து மற்று அவன் உஞற்றின்கண் தான் வந்து முன் நிற்றலைச் செய்யும் எ - று.

மடி தற்று - என்பது மடியினைப் போக்கி

(ப - உ.) எ - து.—குடியை
என்றது. அவனுக்குத் தெய்வம் மடி தற்று

ஓம்புவேன் என்று கருதி முயலும்
தான் முற்பட்டு முயலும் எ - று.

மடி தற்றுதல் - தொழில் செய்வார் ஆடை உடுப்பதோர் திறன். மேல் சுற்றத்தார் நல்வினை இலர் ஆயின் ஓம்பும் ஆறு என்னை என்றார்க்குத் தெய்வம் அருள் செய்யும் என்று கூறப்பட்டது. இத்துணையும் குடி ஓம்புதல் வேண்டும் என்று கூறிற்று. (1)

கா. 2.

ப. 10.

இடுக்கண்கால் கொன்றிட வீழு
நல்லாளில் லாத குடி.

மடுத்தான்று

(கா - உ.) எ - து.—வந்து உற்ற இடுக்கண் ஆனது முன் நின்ற நிலையை அழித்திட விழ்ந்து அறும்: யாது எனின் அவ்விடுக்கண் வந்த இடத்துத் தளாரமல் முகம் வைத்து உறுதி மகன் இல்லாத குடி ஆனது எ - று.

செய்யும் நல் ஆண் 276 திருக்குறள்

பொருட்பால்

(ப - உ.) எ - து.—இடும்பை ஆகிய நவியம் அடித்துரை வெட்டுதலானே விழும்: பக்கத்திலே மடுத்து ஊன்றுகின்ற முட்டுக்கால் போலத் தாங்க வல்ல நல்ல ஆண் மகன் இல்லாத குடி ஆகிய மரம் எ - று.

இது குடி ஓம்புவார் இல்லாக் கால் அக்குடி கூறப்பட்டது.

கெடும் என்று கா. 8.

(2)

ப. 5.

இடும்பைக்கே கொள்கலங் கொல்லோ குடும்பத்தைக்

குற்ற மறைப்பா னுடம்பு.

(கா - உ.) எ - து.—தன் குடி ஆகிய குடும்பத்தை வந்து உற்ற குற்றத்தை மாய்த்துப் பாதுகாப்பவனது உடம்பு ஆனது எஞ்ஞான்றும் வருத்தத்திற்கே கொள்கலம் கொல்லோ: எனவே தம் குடி தாங்குதல் பொருட்டு வருந்துகின்றவனே ஆண் மகன் ஆவான் என்று அவனை வியந்து உரைத்தல் கருத்து எ - று.

(ப - உ.) எ - து.—சுற்றத்தார் மாட்டு உளது ஆகிய குறையை மறைக்கக் கருதுவான் உடம்பு துன்பத்துக்குக் கொள்கலம் ஆம் எ - று.

மேல் ஒழியாது கருமம் செய்தல் பெருமை என்றார்: அது துன்பம் ஆக்கும் என்றார்க்குத் துன்பத்திற்கு காணல் ஆகாது: அதனால் புகழ் ஆதலான் என்று கூறப்பட்டது. (3)

கா. 4.

ப. 2.

அமரகத்து வன்கண்ணர் போலத் தமரகத்து
மாற்றுவார் மேற்றே பொறை.

(கா - உ.) எ - து.—'ஆர்த்தார் எல்லாம் அல்லர்' என்னும் பழமொழி வழக்கினால் அமர்

போருக்கு உரியர்

இடத்து அஞ்சாது
நின்று எதிர்ந்து ஆசு அழியாமல் தாங்கும் தறுகண்ணாளரைப் போலத் தமர் இடத்தும் ஒன்று உற்ற இடத்துத் தள்ளாமல் பற்றித் தாங்க வல்லவர் யாவர் : மற்று அவர் மேலதே ஆகும் குடிப்பாரம் அனைத்துமே எ - று.

(ப - உ.) எ - து.—போர்க் களத்துச் செல்வார் பலர் உளர் ஆயினும் போர் தாங்குதல் வன்கண்ணர் மாட்டே உளது ஆனால் போல, ஒரு குடிப்பிறந்தார் பலர் உளர் ஆயினும் குடி ஓம்ப வல்ல வன்கண்ணதே குடி ஆகிய பாரத்தைப் பொறுத்தல் எ - று.

இஃது ஒரு குடிப்பிறந்தார் பலர் உளர் ஆயினும் அவருள் மூத்தவருக்குக் கடனே எல்லார்க்கும் கடனே என்று ஐயுற்றார்க்குக் கூறப்பட்டது. (4)

65. குடி செயல்வகை 277

கா. 5.

ப. 1.

நல்லாண்மை யென்ப தொருவற்குத் தா
ன்பிறந்த
வில்லாண்மை யாக்கிக் கொளல்.

(கா - உ.) எ - து.—நல் ஆண்மைப்பாடு என்று சிறப்பித்து உரைக்கப்படுவது ஒருவனுக்கு யாதோ எனின், தான் பிறந்த குடியினைத் தளரா நெறியினை ஆண்டு ஒழுகும் மாட்சிமையை நாளும் அழியாமல் ஆக்கிக் கொண்டு ஒழுகுதல் எ - று.

(ப - உ.) எ - து.—ஒருவனுக்கு மிக்க ஆண்மை என்று சொல்லப்படுவது தான் பிறந்த குடியை ஆளுதல் உடைமையை மனத்தின்கண் பெருக்கிக் கோடல் எ - று.

ஆளுதல் உடைமை - குடி ஓம்புதலை எப்பொழுதும் சிந்தித்தல் : எனவே இது குடி ஓம்புதல் வேண்டும் என்றது. (5)

கா. 6.

ப. 4.

கருமஞ் செயவொருவன் கைதூவே
பெருமையிற் பீடுடைய தில்.

னென்னும்

(கா - உ.) எ - து.—ஒருவன் தன் குடிகள் ஆம்படி எப்பொழுதும் அதற்கு ஏற்ற கருமம் செய்ய வேண்டிப் பிறிது ஒன்றிற்கு அக்கை உதவேன் என்னும் இப்பெருமை போலப் பெருமை உடையது யாதும் இல்லை எ - று.

(ப - உ.)
டிலேன் என்று

எ - து.—ஒருவன் கை கருமம் செய்தலினாலே உண் சொல்லுகின்ற பெருமை போலப் பெருமை உடையது பிறிது இல்லை எ - று.

மேல் எப்பொழுதும் இடைவிடாமல் வினை

செய்யவேண்டும்
என்றார் : அது பெரியோரால் செய்யல் ஆகுமோ
னின் மிகுத்தது ஓர் பெருமை இல்லை என்றது.

என்றார்க்கு இது
(ϐ) கா. 7.

ப. 6.

**குடிசெய்வார்க் கில்லை பருவ மடிசெய்து**
**மானங் கருதக் கெடும்.**

(கா - உ.) எ - து.—இவ்வுலகத்துப் பயிர் செய்வார்க்குப் பரு வம் வேண்டினால் போலக் குடி செய்வார்க்கு ஒரு பருவம் பார்த்து இருக்க வேண்டுவது இல்லை : எனவே எஞ்ஞான்றும் இனிய பருவம் என இதனை இங்ஙனம் பெற்று வைத்து இயற்றாது மடிப்பதும் செய்து
என்னை

மற்று இக்குடி தாங்குதற்கு யான் இக்கருமம் செய்வது என்று மானிக்கும் மானம் தான் கருதவே கெட்டு விடும் அக்குடி எ - று.



(ப - உ.) எ - து.—குடி ஓம்புவார்க்கு நன்மைப் பருவம் இல்லை ஆம் : தத்தம் குடும்பத்தின் குறையை நினைத்து, மடி செய்தலினால் உளது ஆகும் குற்றத்தை நினைக்கக் கெடும் ஆகலான் எ - று.

மேல் துன்பத்திற்குக் கொள்கலம் ஆக வேண்டும் என்றார்: அவ்வாறு துன்பு உற்று ஒழுதல் ஆகுமோ என்றார்க்குக் குடி செய்வார் இன்ப நுகர்ச்சியை விரும்பார் என்று கூறப்பட்டது. (7)

கா. 8.

ப. 7.

சூழாது தானே முடிவெய்துந் தங்குடியைத்
தாழா துஞற்று பவர்க்கு.

(கா - உ.) எ - து.—வருந்தித் தாம் ஒன்று சிந்திக்க வேண்டாமல் தானே வந்து முடிவு பெறும்: யாதோ எனின், தம் குடி செயல் வகையை இதற்கு ஒரு குறை வால் ஆகாது என்று நாளும் விரைந்து இயற்றும் அவர்க்கு அக்குடி செயல் வகை எ - று.

பரி. பா - ம். "சூழாமற் றானே".

(ப - உ) எ - து —தம் குடியைத் செய்யக் கருதுவார்க்கு அவ்வுயர்ச்சி

தாழச் செய்யாதே உயரச் எண்ணமல் முடிவு பெறும் எ - று.

யாதானும் ஒரு வினையை முயன்று முடிக்க வேண்டும்

முடியும் ஆறு எண்ணி அதன் பின்
அன்றே: இஃது அவ்வாறு அன்றி
இவன் கருதின அளவிலே அவாது நல்வினை தானே முடிக்கும்: இவன் அதனை மேற்கோடலே வேண்டுவது என்றவாறு ஆயிற்று.(9)

கா. 9. ப. 3.

ஆள்வினையு மான்ற வறிவு
மெனவிரண்டி னீள்வினையா னீளுங் குடி.

(கா - உ.) எ - து.—குடிசெயல் வகைக்கு வேண்டும் ஆண்மைத் தொழிலும் அதற்கு அமைந்த அறிவு உடைமையும் என உரைத்த இரண்டினது நெடுமுயற்சியால் நெடிது வாழும் தன் குடி [illegible]ரும் எ - று.

[illegible]ப - உ.) எ - து.—முயற்சியும் நிரம்பின அறிவும் என்று சொல்லப்பட்ட இரண்டினாலும் வளருகின்ற வினையினாலே குடி உயரும் எ - று.

இஃது ஒரு வினையைச் செய்யுங்கால் நல்லதும் தீயதும் அறிய வேண்டுதலின் அறிவு வேண்டும் என்று கூறப்பட்டது. வளருகின்ற வினையாவது ஒரு வினையைச் செய்து முடித்தால் அவ்வளவிலே

நின்று அமையாது பின்னும் ஒரு வினையைத் தொடங்குதல். மேல் குடி ஓம்ப வேண்டும் என்றார்: அஃது ஓம்பும் ஆறு என்னை என்றார்க்கு இது கூறப்பட்டது. (9)

கா. 10.

ப. 9.

குற்ற மிலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்
சுற்றமாய்ச் சுற்று முலகு.

(கா - உ.) எ - து.—பிறர் இவன் குடி ஓம்பாக் குணம் இலன் என்று உரைக்கும் குற்றம் இலன் ஆய், மற்று என்றும் குடி வாழ்தலைச் செய்து வாழ்வானையே சுற்றம் ஆகச் சூழ்ந்து வாழும் இவ்வுலகு: எனவே தன் குடி தாங்கலே அன்றித் தன்னை அடைந்தோர் அனைவரையும் தாங்கும் தன்மையவன் என்பது பொருள் எ - று.

(ப - உ.) எ - து.—குற்றம் பட ஒழுகுதல் இலன் ஆகித் தன் குடியை ஓம்பி வாழும் அவனை உலகத்தார் எல்லாரும் தமக்குச் சுற்றம் ஆக நினைத்துச் சூழ்ந்து நிற்பர் எ - று.

இது குடி ஓம்புவார்க்குப் பயன் கூறிற்று. (10)

(கா - உ.) இங்ஙனம் குடிசெயல் வகை கூறி வாழ்வினையில் ஒரு பக்கமே உழவு ஆம் ஆகலான் மற்று இதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்,

## 66 . உழவு.

(ப - உ.) உழவு
கூறுதல். இது குடி

ஆவது உழவின் திறனும் அதனால் பயனும் செய்வார்க்கு இன்றியமையாமையின் அதன் பின் கூறப்பட்டது.

உழவு, தொழில், வரைவு, வாணிகம், சிற்பம், வித்தை என்று சொல்லப்பட்ட அறுவகைத் தொழிலும் குடி செய்வார்க்கு வேண்டும் அன்றே? அவை எல்லாவற்றின் இயல்பும் கூறாதார், உழவு ஒன்றும் கூறியது எற்றுக்கு எனின், அவற்றுள் கல்வி பொருள் தரும் என்பது முன்பே கூறப்பட்டது. தொழில் ஆவது ஒருவன் ஏவல் செய்தல். அரசர் ஏவலால் அமைச்சர் செய்யும் தொழில் அ[illegible] சியலுள் கூறப்பட்டது. ஏனையோர் செய்யும் தொழிலும் வ[illegible] வாணிகமும் சிற்பமும் மேலை அதிகாரத்தின் 'ஆள்வினையும் ஆன்ற அறிவும் என இரண்டின் நீள்வினையால் நீளும் குடி' என்றதனாலே சொன்னார் ஆம்: என்னை அவை எல்லாம் முயற்சியானும் அறிவானும் வருதலின்; ஆயின் உழவும் அதனுள் அடங்காதோ எனின் அடங்கும்: அஃது ஈண்டுத் தொழிலை நோக்கிக் கூறப்பட்டது அன்று. முயன்று பொருள் ஈட்டினார் எல்லாரும் குடி ஓம்புங்கால்,



தானியத்தால் ஓம்ப வேண்டுதலின் அதனை
உண்டாக்க வேண்டும்
என்று கூறப்பட்டது.

கா. 1.
ப. 9.

உழுவா ருலகத்திற் காணியஃ தாற்றார்

தொழுவாரே யெல்லாம் பொறுத்து.

(கா - உ.) எ - து.—உழுது விளைத்துக் குடிமை செய்வார் யாவர்? மற்று அவரே உலகின் கட்டளை குலையாமைக்கு ஓர் அச்சு ஆணி ஆவர்: அதனால் மற்று அதின் முயலாதார் யாவரும் பிறரை வழிபட்டுத் தாழ்ந்து ஒழுகுவரோ: உணவு காரணம் ஆக அவர் அவர் செய்வன எல்லாம் பொறுத்து எ - று.

(ப - உ.) எ - து.—உலகம் ஆகிய தேருக்கு அச்சு ஆணிபோல் வார் உழுவரே: அதனைச் செய்யாதவர் பிறர் பெருமிதத்தினால் செய்வன எல்லாம் பொறுத்துத் தொழுது நிற்பர் எ - று.

இஃது உழுவார் தம்மையும் அரசனையும் பெரியர் ஆக்குதல் அன்றி உலகத்தையும் தாங்குவர் என்று கூறிற்று. (1)

கா. 2.
ப. 1.

சுழன்று மேர்ப்பின்ன துலக மதனு
லுழந்து முழவே தலை.

(கா - உ.) எ - து.—கடல் ஓடியும் மலை ஏறியும் காடு மண்டியும் நாடு பார்த்தும் ஒடித் திரிதலே அன்றியும் உண்பான் பொருட்டு இதனைப் பிற பிற முயன்று அலம் வந்தும் அதனால் ஒரு பயனும் இல்லை: ஆதலால் ஏர் கொண்டு வாழ்வார் தமது வழிச்சேறலே 'பயன் உள்ள வாழ்வு ஆம்; மற்று அது எங்ஙனம் எனில் உழுகை பொருட்டு ஆக உழு கருவிக்குக் காடு புக்கு மரம் தடிதலும் கனவிய கொழுவும் அதற்கு ஏற்ற பல கருவியும், வன்புலம் மென்புல வடிவத்து இயற்றலும், படைக்கால் அமைத்தலும் முதலிய பலவகைப் பயிர்கள் வளம் முற்றியவை அவை அனைத்தும் உழுதும் உழவு இயற்றலே தலைமைப்பாடு ஆவது எ - று.

(ப - உ.) எ - று.—உழவு ஒழிந்த எல்லா நெறிகளினும் சுழன்று திரிந்தாலும் ஏரின் வழியே வருவர் உலகத்தார்: ஆதலான் வருந்தியும் உழுதலே தலைமை உடைத்து எ - று.

இஃது உழவு வேண்டும் என்றது.

(2)

கா. 3.

ப. 7.

உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றல்லாதார்

தொழுதுண்டு பின்செல் பவர்.



(கா - உ.) எ - து.—அரசரும் அன்னரோ எனில் அவரும் இவர் இடு பொருளை நத்திடும் இயல்பு அல்லது தாம் அவர்க்கு இடுவது இல்லை ஆதலால் உழுது உண்டு வாழ்கின்றோரே வாழ்கின்றார் என்று சொல்லப்படுவார்: மற்றையார் அனைவரும் பிறர் ஏவல் செய்து தொழுது உண்டு பின் செல்கின்றவர் எ - று.

பரி. பா - ம். "மற்றெல்லாத்".

(ப - உ.) எ - து.—உலகின்கண் வாழ்வார் உழுது உண்டு வாழ் வாரே: மற்று வாழ்வார் எல்லாம் பிறரைத் தொழுது உண்டு அவர் ஏவல் செய்கின்றவர் எ - று.

இது செல்வம் ஆவது உழவினால் வரும் செல்வம் என்றது. (3) கா. 4.

ப. 6.

உழவினார் கைம்மடங்கி னில்லை
விட்டேமென் பார்க்கு நிலை.

விழைவதூஉம்

(கா - உ.) எ - து.—உழவு தொழிலினர் தமது ஒழுக்கம் ஆகிய குடிமை செய்வார் ஈண்டு உரைத்த பெரியோரைப் போலத் தாமும் இவ்வொழுக்கம் தணிவர் ஆயின், இப்பெரியோர்க்கும் அந்நிலைமை இல்லை ஆம்: என்பதனால் அவர்க்கும் அவ்வுடல் முடியும் அளவும் உண்ணாமை நில்லை பெறுதல் அரிது எ - று.

கை என்பது ஒழுக்கம்: விழைவதூஉம் விட்டேம் என்பார்க்கும் என்றது விரும்பத் தகுவது விட்டொழித்தோம் என்போர்களுக்கும் என்றது.

(ப - உ.) எ - து.—உழவை உடையவர்கள் அத்தொழிலைச் செய்யாது கை மடங்குவர் ஆயின் யாது ஒரு பொருளின் கண்ணும் விரும்புவதனையும் விட்டோம் என்பார்க்கு அந்நிலையின்கண் நிற்றல் இல்லை எ - று.

எனவே துறவு அறத்தின் நிற்பாரை
ண து என்றது. விழைவது - ஆசை.

நிறுத்தல் உழுவார் கண்

(4)

கா. 5. ப. 5.

இரவா ரிரப்பார்க் கொன்றீவர் கரவாது
கைசெய்தூண் மாலை யவர்.

(கா - உ.) எ - து.—பிறர்மாட்டுத் தாம் ஒன்று இரப்பதும் செய்யார்: தம்மாட்டு இரப்போர்க்கு உள்ளது ஒன்று ஈவதும் செய்வர்: யாவர்? மற்று அவர் தமது கைக்கொண்டு இனிய தொழில் செய்யும் இடத்தும் காவார்: தம்மாட்டு இரப்போர்க்கு ஒன்று ஈயும்





இடத்தும் காவார் : மற்று

இவ்வாழ்வினைத் தமக்கு இயல்பு ஆக
உடையவர் எ - று.

(ப - உ.) எ - து.—பிறரை இரவார்: தம்மை இரப்பார்க்குக் கரத்தல் இன்றி யாது ஒன்று ஆயினும் ஈவர்: கையினாலே உழவு தொழிலைச் செய்து உண்ணும் இயல்பினை உடையார் எ - று.

உழவினால் பயன் கூறுவார் முற்பட இல்லறம் செய்வது இவர் கண்ணது என்று கூறினார். (5)

கா. 6. ப. 10.

இலமென் றசைஇ யிரப்பாரைக் காணி
னிலமென்னு நல்லா ணகும்.

(கா - உ.) எ - து.—வறுமையால் கால் தளர்ந்து ஒருவர்பால் சென்று பெரிதும் இல்லா ஆளரேம் என்று இங்ஙனம் தம் நாவினால் இளி வந்த சொல்லி இரப்பாரைக் காணும் அளவில் நில மடந்தை என்னும் இத் தூயவள் நகுவள்: எனவே தாம் வேண்டுவ விளைத்துக் கொண்டு இனிது இவர் அலவுறுவதே என்று இவர்க்கு இரங்கிச் சிரிக்கும் என்பது பொருள் எ - று.

பரி. பா - ம். "யிருப்பாரை".

(ப - உ.) எ - து.—பொருள் இலேம் என்று தளர்ந்து இருப்பாரைக் கண்டால் நிலம் ஆகிய நல்லாள் இகழ்ந்து நகும் எ - று.

இது நிலம் மடி இல்லாதார்க்கு வேண்டியது கொடுக்கும் என்றது. (6)

கா. 7. ப. 2.

தொடிப்புழுதி கைசா வுணக்கிற் பிடித்தெருவும்
வேண்டாது சாலப் படும்.

(கா - உ.) எ - து.—முன்னம் தான் நீர் பதம் கொண்டு உழுத சாப் புழுதி எண் கழஞ்சும் இருகழஞ்சு ஆகக் கீழ்ப்புழுதி கிளர்ந்து மேற்பட்டு உணங்குமாறு பின்னும் பின்னும் பெயர்த்து இனிது உணக்கப் பெறின், பிடித்து ஒரு பிடி எருவும் கூட வேண்டா ஆறு அங்ஙனம் முழுது காய்ந்த புழுதிச் சுவடு தானே தன் வேர் ஊறு சுவை ஆக மிகவும் விளையும் எ - று.

தொடி என்றது ஒரு பலம் என்றது. கைசா என்றது கால் பலம் ஆக என்றது. சாலப் படும் என்றது மிகவும் விளையும் என்றது.

(ப - உ.) எ - து.—ஒரு பலப் புழுதியைக் கைசா உணக்குவன் ஆயின் ஒரு கையால் பிடித்த எருவும் இடாமல் அமைவு படும் எ - று.

## 66. உழவு 289

மேல் கூறிய உழவு செய்யும் திறன் கூறுவார் உணக்க வேண்டும் என்றார்.

முற்படப் புழுதி
(7)

கா. 8.

ப. 3.

ஏரினு நன்றா லெருவிடுதல் கட்டபி
னீரினு நன்றதன் காப்பு.

(கா - உ.) எ - து.—கூறிய புழுதி உழவு ஆயினும் சேற்று உழவு ஆயினும் உழுசால் எப்பற்றும் ஒழியாமல் செல்லும் எர் மிகுதியினும் மிக நன்று: மற்று அதனினும் நன்று அந்த நிலத்திற்கு ஏற்ற எருக் கொணர்ந்து இடுதல்: இனி அதனினும் நன்று ஆண்டு எழு பைங்கூழ் அருகு எழு களை கட்டல்: அங்ஙனம் களை தவிர் நன்மையே அன்றிப் பின்னும் சால நன்று நீர் முறை பிழையாமை நீர் பெய்தல்: மற்று அதனினும் சால நன்று அங்ஙனம் சிறந்த பயிர்ப் பயன் பழுது படாமல் முன்னுறக் கொண்டே கடிந்து காப்பது ஓர் காப்பு எ - று.

(ப - உ.) எ
தல் : களை கட்ட

- து.—உழுகின்றதனினும் நன்று ஆம் எரு இடு
பின்பு நீர் விடுதலினும் நன்று ஆம் அழியாமல்
காத்தல் எ - று.

இது பல கால் உழ வேண்டும் என்பதூஉம், எரு இட வேண்டும் என்பதூஉம் களை பறிக்க வேண்டும் என்பதூஉம், பசுப் புகுதாமல் காக்க வேண்டும் என்பதூஉம் கூறிற்று. (8)

கா, 9.

ப. 8.
பலகுடை
ரல்குடை
நீழலுந் தங்கொடைக் கீழ்க்காண்ப
நீழ லவர்.

(கா - உ.) எ - து.—கொற்றக் குடைமுதல் ஆகிய அளவு இறந்த குடைநிழல் கீழ் வாழ்வாரையும் அவர் அவர்க்குத் தாம் கொடுக்கும் கொடை வழி வருதலை காணும் காணும் கொண்டு ஒழுகு பவர் : இவ்வுலகு இயல்பு உடையார் யார் எனின் தமக்கு உழவைத் தரும் கலப்பைத் தண் நிழலினை உடையவர் எ - று.

அலகு என்பது கலப்பை.

பரி. பா - ம். "தங்குடைக் கீழ்".

(ப - உ.) எ -
குடைநிழல் கீழே

து.—பல அரசர் குடை நிழலையும் தம் அரசன்
வரக் காண்பர் : குடை அல்லாத நிழலை உடை
யவர எ - று.

குடை அல்லாத நிழல் ஆவது பைங்கூழ்
வாழ்தலே அன்றித் தம் அரசனையும் வாழ்விப்பர்

நிழல் : இது தாம்
என்றது. (9) 884 திருக்குறள் -

பொருட்பால்

கா. 10.
ப. 4.

செல்லான் கிழவ னிருப்பி
புல்லாள் புரள விடும்.

னிலமடந்தை

(கா - உ.) எ - து.—தன் நிலக் கிழத்தியைப் பயிர் முகத்துத் தான் சென்று பல நாளும் விழி ஓட்டிப் பாரான் ஆகில், அந்நில மடந்தை அவனை என்றும் மேவாள் ஆகித் தனக்கு அலங்காரம் ஆகிய பயிர்க் கோலம் அழிந்து தன்னோடு பொருந்தி வாழாள் ஆகிப் புலந்து இவன் வாழ்க்கையைப் புரள விடும் எ - று.

"நிலம் புலந்து இல்லாளின் ஊடி விடும்" என்பாரும் உளர்: கற்பு உடை மகளிரை ஊடி விடும் என்பது பொருள் அல்ல. கிழவன் என்றது அந்நிலத்துக்கு உரியன் என்றது.

பரி. பா - ம். "நிலம்புலந் தில்லாளி னூடி விடும்".

(ப - உ.) எ - து.—நிலத்திற்கு உரியன் நாள்தோறும் அந்நிலத் தின்பால் செல்லாது மனையகத்து இருப்பான் ஆயின், அதுதான் செல்லாமையினால் புலந்த இல்லாளைப் போலப் புலர்ந்து விடும் எ - று.

இது நாள்தோறும் சென்று பார்க்க வேண்டும் என்பதூஉம், பாராக்கால் பயன் குன்றும் என்பதும் கூறிற்று. இவை மூன்றினும் உழும் திறன் கூறிற்று. (10)

(கா - உ.) இனி மற்று இங்ஙனம் உழுது குடி செய்து இனிது வாழ்வார்க்கும் அதனை அவ்வாறு இயற்றாது இகழ்ந்து இருப்பின், இல்வாழ்க்கை புரளும் என்பதனால் வறுமை வந்து எய்தும் குறிப்பு உணர்த்தியமையான் மற்று இதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 67. நல்குரவு.

(ப - உ.) நல்குரவு ஆவது [பொருள் இல்லாதார்க்கு உளது ஆகும் குற்றம் கூறப்பட்டது. இஃது உழவு இல்லாதார்க்கு உளது ஆவது ஒன்று ஆதலின் அதன்பின் கூறப்பட்டது.

கா. 1. ப. 4.

நற்பொரு ணன்குணர்ந்து சொல்லினு நல்கூர்ந்தார்
சொற்பொருள் சோர்வு படும்.

(கா - உ.) எ - து.—மிக நன்று ஆகிய பொருளினைத் தமது நல்ல அறிவினால் நன்கு தெரிந்து சொல்லினும் அச் சொல்லு கின்றவர் வறியோர் ஆயின், அங்ஙனம் சொல்லுகின்றவர் சொல்

## 67. நல்குரவு

285

பொருள் செவி ஏற்றுக் கொள்ளாது உக்கு விடும் கைப்பொருள் உடையார் இடத்து எ - று.

(ப - உ.) எ - து —நல்ல பொருளை மிகவும் விலும் நல்கூர்ந்தார் சொல்லும் பொருள் சோர்வு

ஆராய்ந்து சொல்
படும் எ - று.

ஏற்றுக் கொள்ளார் என்றவாறு ஆயிற்று.
என்றது.

இது கல்வி கெடும் கா. 2.
(1)

ப. 8.

இற்பிறந்தார் கண்ணேயு மின்மை யிளிவந்த
சொற்பிறக்குஞ் சோர்வு தரும்.

(கா - உ.) எ - து.—குடிப் பிறந்தார் மாட்டேயும் வறுமை வந்த இடத்து மற்று அஃது யாது செய்யுமோ? எனில் அவாது கன்கு தெரிந்து உரைக்கும் நாவுக்கும் பெரிதும் இளி வந்த சொல் பிறப்பது ஆகிய உரை சோர்வுபாட்டினைக் கொடுக்கும்: அது அன்றி மற்றும் இரப்புரை வந்து விழும் எ - று.

(ப - உ.) எ - து.—நல்குரவு குடிப்பிறந்தார் மாட்டேயும் இளி வாவான சொற்கள் பிறக்கும் சோர்வினை உண்டாக்கும் எ - று.

இது குடிப்பழி உண்டாக்கும் என்றது. (2) கா. 3.

ப. 9.

நல்குர வென்னு மிடும்பையுட் பல்குரைத்
துன்பங்கள் சென்று படும்.

(கா - உ.) எ - து.—வறுமை என்று சொல்லப்படுகின்ற இத் துன்பத்தின் கண்ணே மற்றும் பல தன்மை ஆகிய துயரம் ஆவது தான் இனிது உண்ணப் பெறாத துயரமும், தன் சுற்றம் ஓம்பப் பெறாத துயரமும், சான்றோர்க்கு உதவப் பெறாத துயரமும், வரு விருந்து ஓம்பப் பெறாத துயரமும் பிறவும் சென்று சேரும்; எனவே வறுமைத் துயர் உற்றோன் மற்று உறாத் துயர் ஒன்றும் இல்லை. எல்லாத் துயரும் உறுவன் என்பது பொருள் எ - று.

(ப - உ.)

துன்பங்களும்

எ - து.—நல்குரவு ஆகிய துன்பத்தின் உள்ளே சென்று தோற்றும் எ - று.

பல

குறை - அசை: மேல் கூறியவே உண்டாம் என்பது.
அன்றி எல்லாத் துன்பமும்
(3)

கா. 4.
ப. 6.

நெருப்பினுட் டுஞ்சலு மாகு நிரப்பினுள்
யாதொன் றுங் கண்பா டரிது.

(கா - உ.) எ - து.—யாதானும் ஒருவாற்றான் நெருப்பினுள் கிடந்து கண்துஞ்சலும் இனிது ஆய்இருக்கும் : எனினும் அங்ஙனம் புற நெருப்பு அன்றி அகம் சுடும் வெவ்வழல் ஆகிய வறுமைத் தீயி னுள் அது தணிக்கும் மருந்து பிறிது இன்மையான் யாதானும் ஒரு வாற்றானும் கண்துஞ்சல் வறியோர்க்கு அரிது எ - று.

(ப - உ.) எ - து.—நெருப்பினுள்ளே ஆகும் : நிரப்பு இடும்பையுள் உறங்குதல்

கிடந்து உறங்கலும்
யாதொரு காலத்திலும்
அரிது எ - று.

இஃது உறங்க ஒட்டாது என்றது.

(4) கா. 5.
ப. 10.

துப்பிர வில்லார் துவரத் துறவாமை
யுப்பிற்குங் காடிக்குங் கூற்று.

(கா - உ.) எ - து.—தமக்கு உணவுக்கு உரம் பொருள் இல்லாதார் முதிரத் துறவாமை முன்னம்

ஆகிய கைப் மாட்டும் இனிது
தாம் யாவர் கூற்று : எனவே

ஒழுகும் இனிமைக்கும் தமது நடு நிலைமைக்கும் ஒரு
அஃது இவற்றைக் கொல்லும் என்பது பொருள்

எ - று.

இதில் உப்பு என்பது இனிமை. காடி என்பது நடுவு நிலைமை.
அஃது ஆவது சிறு மக்கள் பலர் கண்
அவருள் ஒருவனை இவன் காடிச்சால்

புதைத்து நகையாடும் இடத்து
என்று நடு இருத்துவர். நடு
நிலை ஆக வழக்கு என்பது அறிக துப்புரவு
இல்லாதார் என்பது உண்டிக்கு உரம் ஆகிய
கைப்பொருள் இல்லாதார் என்றது. துவர்த்
துறவாமை என்றது முற்றக் துறவாமை.

(ப - உ.) எ - து.—நுகரும்
ஸின்மேல் பற்று அறத் துறவாது

பொருள் இல்லாதார் அப்பொரு
வருந்துதல் உப்பிற்கும் காடிக்கும்
கேடு ஆக வேண்டி எ - று.

துறப்பார் ஆயின் நன்று என்றது நல்கூர்த்தார்க்குத் துன்பம் உறுதல் இன்றி இன்பம் நுகரும் நெறியும் உளவோ? என்பார்க்குத் துறப்பார் ஆயின் இன்பு உறல் ஆம் என்று கூறப்பட்டது. (5)

கா. 6.
ப. 3.

றது.
ஆசையைப் பண்ணுதலினல் ஆசை ஆயிற்று. தோல் -
இது குலத்தினையும் அழகினையும் கெடுக்கும் என்
(6)

கா. 7.

ப. 5.

அறஞ்சாரா நல்குர வீன்றதா யானும்
பிறன்போல நோக்கப் படும்.

(கா - உ.) எ - து.—பிறர்க்கு உதவி ஆகிய அறத்தோடு தனக்கு ஓர் இயைபு இல்லாத நல்குரவு ஆகின்ற இது பின்னும் யாது செய்யுமோ எனில், மற்று நல்கூர்ந்தானைப் பெற்ற தாயானும் உட்படப் பிறன் ஒருவனைப் போலக்
என்னை ? இனி இதுவும் யாம் முன்

காணப்படும் : எனவே இவனல்
செய்த பாவத்தில் ஒன்று என்று
இகழப்படும் எ - று.

(ப - உ.) எ
தன்னைப் பெற்ற

- து —அறத்தைப் பொருந்தாத நல்குரவாளன்
தாய் ஆயினும் எதிலாரைப் போல நோக்கப்
படுவான் எ - று.

அறம்
நல்கூருதல்.

சாரா நல்குரவு ஆவது பொருளும் இன்பமும்
இது சுற்றத்தாரும் கைவிடுவர் என்றது.

சிந்தித்து
(7) கா. 8.
ப. 1.

இன்மையி னின்னாத தியா தெனி
னின்மையி
னின்மையே யின்னா தது.

(கா - உ.) எ - து.—ஒருவர்க்கு இல்லாமையிற் காட்டின் பொல்லாதது யாதோ எனின் இல்லாமையின் பொல்லாதது பின்னும் அவ் வில்லாமையே : பிறிது ஒன்றும் இல்லை : இதனைப் பற்ற இன்னாங்கு உடையது எ - று.

(ப - உ.) எ - து.—நல்குரவு போல இன்னாதது நல்குரவு போல இன்னாதது தானே எ - று.

யாது எனின்

இது தன்னை ஒத்த இன்னாதது பிறிது இல்லை என்றது. (8) 288 திருக்குறள் -

பொருட்பால்
கா. 9.
ப. 2.

இன்மை யெனவொரு பாவி
மிம்மையு மின்றி வரும்.

மறுமையு

(கா - உ.) எ - து.—இல்லாமை என்று எடுத்து உரைக்கப்பட்ட
இணை இறந்த பாவி யாது ஒருவர் மாட்டு வரும் பொழுதே இம்மை ஆக்கமும் மறுமை ஆக்க மும் என்பன யாவும் இன்றித் தானே வந்து கைக்கொண்டு நிற்கும் எ - று.

பரி. பா - ம். "மின்றி விடும்".

(ப - உ.) எ - து.—நல்குரவு என்று கூறப்படுகின்ற நிகர் இல் லாத பாவத்தை உடை யவன் இம்மையின் கண்ணும் ம றுமையின் கண்ணும் நுகர்ச்சி இன்றி விடும் எ - று.

தானம் பண்ணுமையால் மறுமையினும் நுகர்ச்சி இல்லை ஆயிற்று. இஃது இன்பம் இல்லை ஆக்கும் என்றது. (9) கா. 10.
ப. 7.

இன்றும் வருவது கொல்லோ

கொன்றது போலு நிரப்பு.

நெருநலுங்

(கா - உ.) எ - து.—இன்றும் என்னை வந்து ஒறுப்பது கொல்லோ? நெருநலும் வந்து கொன்றது போல உயிரையும் உடலையும் செறுத்தும் ஒறுத்தும் அடர்த்தும் வருகின்ற வறுமைத் தொழில் எ - று.

(ப - உ.) எ - து.—இன்றும் வரும் போலும்: என்னைக் கொன்றது போலும் நிரப்பு இடும்பை எ - று.

நெருநலும்

இது நாள்தோறும் அச்சம் உறுத்தும் என்று கூறியவாறு. (10)

(கா - உ.) இனி மற்று இவ்வாறு வறுமை கூர்ந்தவர்க்கு இரவுத் தொழில் அல்லது பிறிது தொழில் இன்மையான் இதன் பின்னரே இதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 68. இரவு.

இது

(ப - உ.) இரவு ஆவது பிறர் மாட்டுச் சென்று இரந்து கோடல். நல்கூர்ந்தார் செய்தல் ஆதலான் அதன் பின் கூறப்பட்டது.

கா. 1.

ப. 1.

இரக்க விரத்தக்கார்க் காணிற் கரப்பி
னவர்பழி தம்பழி யன்று.

(கா - உ.) எ - து. — இங்ஙனம் வறியோர் மாட்டு இரக்கம் உடையாரைக் கண்ட இடத்துத் தாம் ஒன்று இரக்க வேண்டின் இரந்து



கொள்க:
இத்துணை

மற்று அவர் காக்க நினைப்பின் அஃது அவர் பழியாம்: அல்லது வேறு தம்பழி என்பது ஒன்று அன்று எ - று.

(ப - உ.) எ - து. — தமக்கு இல்லாத இடத்து இரக்கத் தக்காரைக் காணில் இரந்து கொள்க. அவர் இல்லை என்பர் ஆயின் அஃது அவர்க்கு அப்பழி ஆம்: தமக்குப் பழி ஆகாது எ - று.

ஈண்டுக்
என்பதூஉம்,

கூறுகின்ற இரத்தல் எல்லார் மாட்டும் செய்யல் ஆகாது தக்கார் மாட்டு இரக்கல் ஆம் என்பதூஉம் கூறிற்று. (1)

கா. 2 .

ப. 6.

இரந்தலு மிதலே போலுங் கரத்தல்
கனவி னுந் தேற்றுதார் மாட்டு.

(கா - உ.) எ - ரு.—இரத்தலும் ஈதலே போலும் இனிமையை உடைத்து : அஃது எவ்விடத்து எனில், இல்லை என்னும் சொல்லினைக் கனவிலும் அறியாதவர் இடத்து ; எனவே இரவு பகல் என்னும் பொழுது வரைவு இன்றி எப்பொழுதும் பிறர் மாட்டு இரக்கம் உடைய இயல்பினர் இடத்து எ - று.

(ப - உ.) எ - ரு.—கரத்தலைக் கனவின் கண்ணும் அறியாதார் மாட்டு இரந்து செல்லுதல் கொடுப்பதனோடு ஒக்கும் எ - று.

ஈதல் போலும் என்றது இரந்தோர் என்று சிறுமை உறுதல் இன்றி உயர்ந்தாரைப் போலப் பெருமிதத்தர் ஆவர் என்றது. மேல் இகழாது ஈவார் மாட்டு இரக்கல் ஆம் என்றார். அவர் மூவகையர் ஆதலின் முற்பட உதவுவார் பாட்டு இரக்கல் ஆம் என்று கூறப் பட்டது. காத்தல் கனவிலும் என்று கொள்ளப்படும்.

தேறாதார் என்றமையால் உதவுவார் கா. 3. (2)

ப. 7.

கரப்பிடும்பை யில்லாரைக் காணி

னிரப்பிடும்பை
யெல்லா முழுதுங் கெடும்.

(கா - உ.) எ - து.—தப்பால் வந்து இரப்பார்க்குத் தாம் இல்லை என்னும் இவ்விடும்பை இல்லாதார் யாவரும் அவரைக் கண்ட இடத்துப் பிறர் இரப்பு என்கின்ற இடும்பையானது எல்லாம் ஒன்று ஒழியாமையே கெட்டுவிடும்: எனவே இரக்கம் உடைய செல்வச் சிறப்பினர் ஈயுங் காலத்தும் பிறர் பாட்டுச் சென்று இனி ஒரு குறை கூறி இரக்க வேண்டாதவாறு ஈவாரும் உலகத்து உளர் எ - று

(ப - உ.) எ - து.—காப்பும் இடும்பையும் இல்லாதாரைக் காண் பார் ஆயின் நிரப்பினன் ஆகிய இடும்பை எல்லாம் ஒருங்கு கெடும் எ - று.

37



இவை இரண்டும் இல்லாதார் என்றமையால் இச் செல்வராயினர் மாட்டு இரக்கலாம் என்றது.

(3) கா. 4.
ப. 4.

இன்ப மொருவர்க் கிரத்த லிரந்தவர்
துன்ப முறா அ வரின்.

(கா - உ.) எ - து.—பின் எஞ்ஞான்றும் இரப்பு என்னும்

துன்பம் உறார் ஆயின், ஒருவர் பால் சென்று ஒருவா இரத்தல் பெரிதும் துன்பம் அன்றே: அதுவும் ஒருவர்க்கு இன்பம் தரும். எப்பொழுது எனில் அங்ஙனம் ஒருவர் மாட்டு இரந்தவர் பின்பு எஞ்ஞான்றும் ஒரு வறுமைத் துயர் உறுவாறு வாய்ப்பப் பெற்று வருவார் ஆயின் எ - று.

**பரி. பா - ம்.** " இன்ப மொருவற் கிரத்த லிரந்தவை ".

(ப - உ.) எ - து —இரத்தல் ஒருவற்கு இன்பம் ஆம்: இரக்கப்பட்ட பொருள்கள் தாம் வருத்தம் உறுவகை எய்தும் ஆயின் எ - று.

பழிக்கப் படாது ஆயினும் துன்பம் ஆகுமே என்றார்க்கு, வேண்டின பொருள் பெறின் துன்பம் ஆகாது என்று கூறப்பட்டது. இவை மூன்றினும் இரவு தீது என்பாரை மறுத்தவாறு ஆயிற்று. (4)

**கா. 5.**
**ப. 9.**

கரப்பிலார் வையகத் துண்மையாற் கண்ணி
னிரப்பவர் மேற் கொள்வது.

(கா - உ.) எ - து —ஏற்பவர்க்கு இங்ஙனம் இல்லை என்பது இல்லா அன்புடையாளரும் இவ்வுலகத்துச் சிலர் உளர் ஆகலான் இது காரணம் ஆக இவ்விரவு தொழிலைத் தம்பால் என்றும் 'மேற் கொள்வது எ - று.

**பரி. பா - ம்.** " கண்ணின் றிரப்பவர் ".

ப
லானே

- உ.) எ - து.—காப்பு இல்லாதார் உலகத்து உண்டு ஆக ஒருவன் முன்னே நின்று இரத்தலை இரப்பார் மேற்கொள்வது எ - று.

மேல் காவாதார் மாட்டு இரக்க என்றார் : அஃது உலகத்துப் பெறுதல் அரிது என்றார்க்கு இது கூறப்பட்டது. (5) கா. 6. ப. 5.

இகழ்ந்தெள்ளா தீவாரைக் காணின்
முள்ளு ளுவப்ப துடைத்து.

மகிழ்ந்துள்ள



(கா - உ.) எ - து.—தம்மாட்டு ஒருவர் இரந்து வந்த இடத்துத் தாம் அவரை அநாதரித்து அவமதி பண்ணாது அகம் மகிழ்ந்து ஈவாரைக் காணப் பெறின், அவ் விரப்போர் உள்ளம் பெரிதும் மகிழ்ந்து மற்று அவர் உபகார வளத்தை உள்ளுதொறும் உள்ளுதொறும் சால உள்ளுள்ளே உவப்பதனை உடைத்து எ - து.

(ப - உ.) எ - து.—இரப்பாரைக் கண்டால் உதாசனித்தலும் இன்றி அவர் சொன்ன மாற்றத்தை இகழ்ந்து உரைத்தலும் செய்யாது வேண்டப் பட்டதனைக் கொடுப்பாரைக் காணில் இரந்து சென் றவர் மனம் மகிழ்ந்து நின்று உள்ளுள்ளே இன்புறும் தன்மை உடைத்து ஆம் எ

- று.

மேல் இரக்கத் தக்கார் ஆவார் எத்தன்மையார் கூறப்பட்டது.

என்றூர்க்கு இது கா. 7.

(6)

ப. 8.

கரப்பிலா நெஞ்சிற் கடனறிவார் முன்னின்

றிரப்புமோ ரேஎ ருடைத்து.

(கா - உ.) எ - து.—இரவலர்க்கு என்றும் இலர் என்பது இலரும் ஆய் நெஞ்சினுல் ஈதல் கடப்பாட்டின் பயனும் அறிவார் யாவர்? மற்று அவர் முன் நின்று பிறர் ஒன்று இரக்கும் இரப்புத் தானும் இஃது ஓர் அழகு உடைத்து எ - று.

(ப - அறிவார்

உ.) எ - து.—கரப்பு இல்லா நெஞ்சினை உடைய ஒப்புரவு முன்பே நின்று இரத்தலும் ஓர் அழகு உடைத்து எ - று.

வர் - யாமும் இவ்வாறு செய்ய வேண்டும் என்று இஃது ஒப்புரவு அறிவார் மாட்டு இரக்கல் ஆம் என்றது.

கருதுதல்.

(7) கா. 8.

ப. 3.

ஈவார்கண் ணென்னுண்டாந் தோற்ற
மிரந்து

மேவா ரிலாஅக் கடை.
[கோண்

(கா - உ.) எ - து.—ஈவார் மாட்டு என் உளது ஆம்? யாவர் மாட்டும் தம் பெயர் தோன்ற நிற்பது ஓர் தோற்றம் தம்பால் சிலர் தம்மைப் பெருமை கூறி இரந்து கொள்ளும் தொழிலைப் பொருந்து வார் ஆகிய அறிகுனர் இவ்வுலகத்து இல்லாக்கால் எ - று.

மேவார் என்றது பொருந்துவார் என்றது.

(ப - உ.) எ - து.—இரந்து கோடலைப் பொருந்துவார் இல்லாத இடத்து ஈயக் கருதி இருப்பார் மாட்டுப் புகழ யாதான். உண்டு ஆம் ? எ - று.



இரந்து கோடல் இழிபு அல்ல ஆயினும் பழிக்கப்படும் என்றார்க் குப் பழிக்கப்படும் ஆயின், உலகத்து இரப்பர் இல்லை ஆம் : அவர் இல்லார் ஆகப் புகழ் உடையார் இலர் ஆம் : ஆதலால் பழிக்கப் படாது என்று கூறப்பட்டது. (8)

கா. 9.

ப. 2.

இரப்பாரை யில்லாயி னீன்கண்மா

ஞால

மரப்பாவை சென்றுவந் தற்று.

(கா - உ.) எ - து.—இனிது இடம் உடைத்து ஆகிய பெரிய உலகமானது இரப்போரை இலது ஆயின், இனிது அறம் இயற்றும் இயல்பு உடையோர் யாரையும் இலது இவ்வுலகு என்பது ஆம் :

அதனால் மற்று ஈண்டு வாழும் மக்கள் உருபு அனைத்தும் மரத்தினால் மக்கள் உருபு ஆக இயற்றிய மரப்பாவையானது போயும் வந்தும் திரிகின்ற அத்தன்மைத்து ; எனவே இருமைப் பெறுதியும் அறியா உருபின ஆம் என்பது பொருள் ஆயிற்று. ஈண்கண் மாஞாலம் என்பது இடம் மிகவும் பெரிய உலகம் என்பது.

பரி. பா - ம். "ஈர்ங்கண் மாஞாலம்".

(ப - உ.) எ - து.—குளிர்ந்த இடத்தை உடைய பெரிய உலகம் இரக்கும் அவர்களை உடைத்து அல்ல ஆயின், இதனின் உள்ள மக்களது இயக்கம், மரப்பாவை இயங்கினாற் போலும் எ - று.

மேல் கூறிய இரத்தல் இழிந்தது ஒன்று அன்றே : இதனைச் செய்க என்று விதித்தது என்னை என்றார்க்கு இரத்தலும் ஈதலும் உலகு இயல் ஆதலான் இழிபு என்று கொள்ளப்படாது என்றது. (9)

கா. 10.

ப. 10.

இரப்பான் வெகுளாமை வேண்டும்
தானேயுஞ் சாலுங் கரி.

நிரப்பிடும்பை

(கா - உ.) எ - து.—இரப்பு என்னும் இளிவு நோய் கொண்டவன் யாவன்: அவன் பின்னும் ஒருவரோடு வெகுளாமை வேண்டும்: என்னை காரணம் என்னில், முன்னும் பிறர் மாட்டு இரந்து

வெகுளி கொலை முதலிய கொடுவினை செய்து தனக்கு இக்குற்றம் புகுந்ததனால் தான் இக்காலத்து அனுபவிக்கின்ற இரப்பு என்னும் பேர் இடும்பை தானேயும் அமையும் இதற்குச் சான்று எ - று.

(ப - உ.) எ - து.—ஒருவனை இரந்தால் அவன் ஈய்ந்திலன் என்று தான் வெகுளாது ஒழிதல் வேண்டும். பொருள் அரிது என்பதற்குத் தன்னுடைய நிரப்பு இடும்பை தானேயும் அமையும் சான்று எ - று.



வெகுளாமைக்குக் காரணம் பிறிது கூறவேண்டா என்றது. இஃது இரப்பார்க்கு வேண்டுவது ஓர் இயல்பு கூறிற்று. (10)

(கா - உ.) இனி மற்று இரப்பு என்பது இக்குற்றம் எல்லாம் உடைத்து ஆகலான் இது பெரிதும் அஞ்சத் தகுவது ஒன்று என்பதனுன் மற்று அதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 69. இரவச்சம்.

(ப - உ.) இரவு அச்சம் ஆவது இரத்தலைத் என்பது கூறுதல். மேல் நல்கூர்ந்தார் ஈவார்

தவிர்தல் வேண்டும்
மாட்டே இரத்தல்
அமையும் என்று பொதுப்படக் கூறினர் ஆயினும் மேலாயினர்க்கு இது தகுதி அன்று என்பது குறித்து இவ்வதிகாரம் கூறப்பட்டது. மேலதனோடு இயைபும் இது.

கா. 1. ப. 2.

**கரவா துவந்தீயுங் கண்ணன்னார்**
**மிரவாமை கோடி யுறும்.**

கண்ணு

(கா - உ.) எ - து.—தாம் கருதிச் சென்றது ஒன்றைக் காத்தல் இல்லாத செறிந்த அன்பினை உடையர் ஆகிய கண் போலும் கேளிர் மாட்டும் ஒன்று இரத்தல் என்பது பெரிதும் இனி வரவு அன்றே: அதனால் அது செய்யாமை தானே கோடி பொருளினைப் பெறும் எ - று.

அல்லது காவாது வந்தீயும் என்று பாடம் ஓதுவாரும் உளர்.

(ப - உ.) எ - து.—இல்லை என்னாது மனம் மகிழ்ந்து கொடுக்கும் கண் போல்வார் மாட்டும் ஒரு பொருளை இரந்து செல்லாமை இரந்து பெற்ற பொருளினும் கோடி மடங்கு மிகுதி உடைத்து எ - று.

இஃது ஈவார் மாட்டும் இரக்கல் ஆகாது

என்றது. (1) கா. 2.

ப. 10.

இடனெல்லாங் கொள்ளாத் தகைத்தே
காலு மிரவொல்லாச் சால்பு.

யிடனில்லாக்

(கா - உ.) எ - து.—உலகு இடம் எங்கும்
பின்னும் புறம் போதும் தன்மையும் உடைத்தே

சென்று பூரித்தும்
: யாதோ எனின்?
தமக்கு ஒன்றிற்கும் ஒரு திரவு இல்லாத இடத்தும் இரக்குகோடல்
இல்லாமை என்கிற இந்தப் பெரிய சால்பு உடைமை எ - று.

பரி. பா - ம். "இடமெல்லாங் கொள்ளா".



(ப - உ.) எ - து.—தன் சுற்றத்து அளவு
உணவுக்கு வருவாய்
அகல இல்லாத காலத்தினும் பிறரை இரக்தற்கு
இசையாத சால்பு என்பது அகன்ற உலகம் எல்லாம்
கொள்ளாத பெருமை உடைத்து
எ - று.

இஃது இரவாதார் பெரியர் என்றது.
இரவாமையால் வரும் நன்மை கூறப்பட்டது.

இவை இரண்டினானும்

(2) கா. 3.

ப. 5.

இரவென்னு மேமாப்பி றோணி
கரவென்னும்
பார்தாக்கப் பக்கு விடும்.

(கா - உ.) எ - து.—இரவு என்று யாவராலும் இளித்து உரைக்கப்படுகின்ற இந்தச் சேமச் செறிவு இன்றிப் பெரிதும் நொய்து ஆகிய தோணி ஒருவர் இல்லை; போகு; என்னும் மிக்க பார் தாக்கவே உடைந்து விடும்; எனவே வறுமைக் கடல் நீந்துவதற்கு இரப்பு என்பது ஓர் கைத்தோணி என்று கருதுவது தம் அறியாமை எ - று.

(ப - உ.) எ - து.—ஒருவன் வறுமை ஆகிய கடலை நீந்தி ஏறுவது ஆக அமைத்துக் கொண்ட இரத்தல் ஆகிய அரண் இல்லாத தோணி இரக்கப் பட்டார் மாட்டுக் கரத்தல் ஆகிய கல்லோடே தாக்கப் பிரிந்து விடும் எ - று.

இது நல்குரவு
டினானும் இரவினால்

நிராமைக்குக் காரணம் கூறிற்று. இவை இரண்
பயன் இன்மை கூறப்பட்டது. (3)

கா. 4.

ப. 6.

இரவுள்ள வுள்ள முருகுங் கரவுள்ள
வுள்ளதூஉ மின்றிக் கெடும்.

(கா - உ.)
குடிமைக்கு ஒரு

எ - து.—அறிவு உடையோர்க்கு இரவு என்பது தம்
வடு என்று இங்ஙனம் கருதுப அன்றே? அதனால்
அவ்வின்னு இரவினை உள்ளவே தமது உள்ளம் சால்பு உடைமையும்
இனி நாம் ஒருவர் பால் இரந்து சென்றால் அவர் இல்லை: போகு:
எனின் எனே என்றதனையும் தாம் உள்ளவே பின்னைப் பண்டு உள்ள
தூஉம் இன்றிக் கெடும் எ - று.

(ப - உ.) எ - து.—இரப்பேம் என்று நினைக்க
உள்ளம் கரையும் இரக்கப்பட்டவர் கரக்கும் அதனை
மாய்ந்து கெடும் எ - று.

நினைக்கக் கரைந்து நின்ற உள்ளம்

இஃது இரப்பார்க்கு ஊக்கம் இல்லை ஆம்
என்றது. (4)

- 69. இரவச்சம்

295

கா. 5 .
ப. 8.

இரந்து முயிர்வாழ வேண்டிற் பரந்து
கெடுக வுலகியற்றி யான்.

(கா - உ.) எ - து.—குடிப் பண்பினர்க்குத் தமக்கு ஒன்று இரத்தல் இளி வரவு என்று ஒழியாது புறத்து ஈவாரைத் தேடி எங்கும் பரந்து சிறிது இரந்து கொண்டும் தமது உயிர் வாழ வேண்டுவது ஆயின், இவ்வுலகினைப் படைத்தோன் தான் உயிர் வாழாது பரந்து கெட்டு விடுக ; என்பதனால் உலகத்துச் சிலரை உயர்ந்தோர் ஆகப் படைக்கும் விதாதா ஆகியும் பின்னும் அவர்கள் இயல்பு ஆவது ஆயின் அவரும் இழந்தோரே ஆகலின் பெரிதும் வஞ்சனை உடைத்து இவன் படைப்பு எ - று.

பரி. பா - ம். " உயிர் வாழ்தல் ".

(ப - உ.) எ - து.—துப்புரவு இல்லாக்கால் பிறர்
இறந்து படாதே உலக

மாட்டு இரந்து கொண்டும் உயிர் வாழ்தல் வேண்டும் ஆயின் நடையை இவ்வாற்றால் கற்பித்த முதல்வன் மிகக் கெடுவான் ஆக வேண்டும் எ - று.

இரக்கும் அதனின் இறக்க அமையும் என்றது. இவை மூன்றி ' னும் இரவினால் வரும் குற்றம் கூறப்பட்டது. (5) கா. 6,
ப. 7.

கரப்பவர்க் கியாங்கொளிக்குங்

கொல்லே லிரப்பவர்
சொல்லாடப் போஒ முயிர்.

(கா - உ.) எ - து.—அவர் போல் அன்றித் தாம் கைப் பொருள் உடையர் ஆகியும் கரப்பவர் ஆகிய கடுவினை யாளர்க்கு அவர் உயிர் அவர் உடலில் யாங்குக் காத்து நிற்குமோதான்? இது அறிகின்றிலோம்: இது சால வியப்புடைத்து; எனவே இரப்பவர் உயர்குடி மாபினோர்க்கு அவ்விரவு என்னும் உரையாடவே உக்கு விடும் எ - று.

(ப - உ.) எ - து.—எமக்கு யாதும் இல்லை: சிறிது ஈய வேண்டும் என்று சொல்லுவார்க்கு, அக் குறித்தவர்கள் இல்லை என்று சொன்ன அளவிலே உயிர்போய்ப் பிணம்போல நிற்பர்கள். உடையராய் வைத்து அவர் சொன்ன இல்லை என்னும் சொல்லையே சொல்லி
ஈயாதார்க்கு உயிர் எவ்விடத்து ஒழித்து நிற்கின்றதோ? எ - று.

இது பிணத்தை ஒப்பர் என்றது.
(6)

கா. 7.
ப. 9.

தெண்ணீ ரடுபுற்கை யாயினுந்
தாடந்த
துண்ணலி னூங்கினிய தில்.

(கா - உ.) எ - து.—அடுபுற்கை தன்னினும் பசைபடு புற்கை அன்றி வெறும் தெளி நீர்ப்புற்கை ஆயினும் அது தமது தாளாண் மையால் தரப்பட்டது ஆயின் அதனைத் தாம் உண்டு இன்புறுதலின் மேற்பட்ட இனிமை உடையது யாதும் இல்லை எனவே பிறர்பால் சென்று இரந்து பெறுவது அமுதமே ஆயினும் இனிது அன்று என் பது பொருள் எ - று.

(ப - உ.) எ - து. - மோரினும் காடியினும் அடப்பெறாது தெளிந்த நீரிலே அடப்பட்ட புற்கை ஆயினும் தனது தாளாண்மை யால் வந்ததனை உண்டலின் மிக இனிது ஆய் இருப்பது பிறிது இல்லை எ - று.

இரந்து கொண்டு அக்காரம் பாலோடு

றல் இனிது என்றது.

அயிறலின் புற்கை அயி கா. 8.

(7)

ப. 4.

இன்மை யிடும்பை யிரந்துதீர் வாமென்

னும்

வன்மையின் வன்பாட்ட தில்.

(கா - உ.) எ - து.—வறுமை என்கின்ற வல்லிடும்பையைப் பிறர்பால் சென்று இரந்து கொண்டு தீர்க்கக் கடவோம் யாம் என்று கருதும் இவ்வன்கண்மையைக் காட்டி ல் வன்மைப் பாடு

உடையது பிறிது யாது ஒன்றும் இல்லை குடிப் பிறந்தோர்க்கு எ - று.

(ப - உ.) எ - து.—வறுமையால் உற்ற துன்பத்தைப் பிறர் மாட்டு இரந்து பெற்ற பொருளினுனே தீர்ப்பேம் என்று கருதுகின்ற வன்மை போல வன்பாய் இருப்பது பிறிது இல்லை எ - று

இஃது இரந்தாலும் நல்குரவு தீராது என்றது.

(8) கா. 9.
ப. 1.

இரப்ப னிரப்பாரை யெல்லா மிரப்பிற்
கரப்பா ரிரவன்மி னென்று.

(கா - உ.) எ - து.—பிறர்பால் எல்லாம் யானும் ஒன்று இரப்பல்;

காணுது சென்று இரப்பாரை அஃது யாதோ எனின் அங்

ஙனம் இரந்து உயிர் வாழக் கருதுகின்ற அவ்விரப்பான் அது கொண்டு உயிர்நிலை பெருது பின்னும் காப்பார்கண்

கண்ணும்
அவ்விளி

வாவு ஆகிய இரத்தலைச் செய்யன்மின் எனவே : இந்த எளிமை பட

டும் இரக்க வேண்டின் இரவாது இறத்தல் இனிது என்பது பொருள்

எ - று.

(ப - உ.) எ - து.—பிறர் மாட்டு இரந்து செல்வார் எல்லாரையும் யான் இரந்து கொள்ளா நின்றேன்: இரக்கும் இடத்து இல்லை என்பார் மாட்டு இரவாது ஒழியுங்கோள் என்று எ - று.



யாவர் மாட்டும் இரத்தல் ஆகாது என்று கூறுவார் முற்பட ஈயாதார் மாட்டு இரக்கல் ஆகாது என்றது. (9) கா. 10. ப. 3.

ஆவிற்கு நீரென் றிரப்பினு நாவிற்
கிரவி னிளிவந்த தில்.

(கா - உ.) எ - து.—தமக்கும் தம் கிளைக்கும் இரத்தல் இன்றி ஒரு பசுவிற்கு இத்துணை நீர் வேண்டும் என்று பிறர்பால் சென்று இரப்பது தகுமேயும் அன்றே ? மற்று அது சொல்லி இரப்பினும் அதுவும் அவ்விரவினுட் படுதலின், குடிமரபாளர் தமது நாவிற்கு இரத்தலின் மேற்பட்ட இளிவரவு உடையது பிறிது ஒன்றும் இல்லை எ - று.

(ப - உ.) எ - து.—இப்பசுவிற்குத் தண்ணீர்

தருமின் என்று பிறரை இரப்பினும் நாவிற்கு இரத்தல் போல இளிவரவு தருவது பிறிது இல்லை எ - று.

இஃது அறத்துக்காக இரக்கலும் ஆகாது என்றது. இவை மூன்றினானும் இரத்தலைத் தவிர வேண்டும் என்று கூறப்பட்டது.(10)

(கா - உ ) இனி மற்று இரப்பு முதல் ஆகிய இளிவு தொழிற்குச் சாகாமை குடிக்கு இளிபு ஆகிய கயமையாம் ஆதலான் மற்று இதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 70. கயமை.

(ப - உ.) கயமை ஆவது இழி குணத்தர் ஆகிய மாந்தரது இயல்பு கூறுதல். இவர் மேற் கூறப்பட்டார் எல்லாரினும் இழிந்தார் ஆதலின் இறுதியின் கூறப்பட்டது.

கா . 1 .

ப. 1.

மக்களே போல்வர் கயவ ரவரன்ன
வொப்பாரி யாங்கண்ட தில்.

(கா - உ.) எ - து.—கை கால் முதலிய

புறத்து உறுப்பு எல் லாம் கண்ட இடத்து விலங்கு ஒத்தல் அன்றி மக்கள் ஒப்பு உடையர் இக்கயவரும் : 38
ஆனல் மற்று அம்மக்கள் பண்பு உடையோர் தமது

பண்பு ஒப்புமை சிறிதும் அக்கயவர்பால யாம் கண்டது இல்லை : இது என்ன வியப்போ எ - று.

(ப - உ.) எ - து.—கயவர் மக்களை ஒப்பவர் : அம்மக்களை ஒக்குமாறு போல ஒப்பது ஒன்றனோடு மற்று ஒன்று உவமை கூறப் படும் அவற்றில் யாம் கண்டு அறிவது இல்லை எ - று.
உறுப்பு ஒத்துக் குணம் ஒவ்வாமையால் கயவர் மக்கள் அல்லர்
ஆயினர் : உறுப்பு ஒத்தலால் உவமிக்கப்பட்டார். இது குணம் இலர் என்றது.
(1) கா. 2.
ப. 2.

தேவ ரனையர் கயவ ரவருந்தா
மேவன செய்தொழுக லான்.

(கா - உ.) எ - து.—குடிமை என்னும் பண்பு உடைய மக்களைக் கயவர் ஒவ்வார் ஆதலால், மற்று யாரையும் ஒப்பாரோ ? எனில், ஈசன் முதல் ஆம்

தேவரை ஒப்பர் கயவர் : என்னை காரணம் என்னின் அவரும் பிறரால் இடித்துரை பெற்று அஞ்சி நடத்தல் இன்றித் தாம் வேண்டுவன செய்யும் தகுதியர் ஆதலால் அவர் போல் மற்று இக்கயவரும் இருபெருங்கு வரும் சான்றோரும் பிறரும் தம்மின் பெரியோர் என்று அஞ்சிக்கை இன்றி அவர் இடித்துரைக்கும் இடத்து இடித்துரைக் கைக்கொண்டு ஒழுகும் இயல்பினர் அன்றித் தாம் வேண்டியன செய்து ஒழுகலான் எ - று.

(ப - உ.) எ - து.—கயவர் தேவரை ஒப்பவர் : அத்தேவரும் இக்கயவரைப் போலத் தாம் வேண்டியன செய்து ஒழுகுவர் ஆதலான் எ - று.

இது கயவர் வேண்டிற்றுச் செய்வார் என்றது.

(2) கா. 3.

ப. 4.

அச்சமே கீழ்கள தாசார மெச்ச
மவாவுண்டே லுண்டாஞ் சிறிது.

(கா - உ.) எ - து.—கீழ்கள் ஆகியவாது ஆசாரம் அவர்க்கு இயல்பின் உளது ஆவது அன்று : மற்று என்னை எனின், பிறர் தம்மைச் செறுத்தும் சிறை செய்தும் செருக்கின் என்னை என்று இங்ஙனம் அஞ்சும் அச்சமே அதற்குக் காரணம் : அஃது

ஒழிந்த இடத்து உண்டு எனின் அவர் சில செய்வர் எமக்கு என்னும் அவா உளது 70. கயமை


ஆயின் அது பெறும் வழி உள ஆயின் சிறிதும் அவ்வாசாரம் உண் டகவும் கூடும் : எனவே கயவர்க்கு ஆசாரம் இயல்பு அல்ல என்றும் உண்டு எனின் அது கள்ளம் என்றும் பொருள் ஆயிற்று எ - று.

(ப - உ.) எ - து.—கயவர் ஆசாரம் உடையர் ஆகற்குக் கார ணம் அச்சமே : அஃது ஒழிய ஒரு பொருண்மேல் ஆசை உடையர் ஆயின் அது காரணம் ஆகவும் சிறிது ஒழுக்கம் உண்டாம் எ - று.

இஃது இயல்பான் ஒழுக்கம் இலர் என்றது. (3) கா. 4. ப. 7.

ஈர்ங்கை விதிரா ர் கயவர் கொடிறுடைக்குங்
கூர்ங்கைய ரல்லா தவர்க்கு.

(கா - உ.) எ - து.—பிறர் தம்பால் இரந்து கொள் ளும் இடத்து ஈரக் கை விதிர்த்தலும் இலர் கயவர் ஆனவர் : கொடிறு போல இடுக்கிப் பிடித்து

உடம்பை உடைக்கும் திறமையால் கூரிய கையினை உடையோர் அல்லாத குணம் உடையவர்க்கு எ - று.

(ப - உ.) எ - து.—தம் கதுப்பினை ஒடிக்கும் வலிய கையினை உடையர் அல்லாதார்க்கு ஈரக் கையும் தெறியார்கள் கயவர் எ - று.

ஈரக் கை - உண்டு கழுவின் கை. கூன் கை என்று பாடம் ஓதினும் அமையும். இஃது இரப்பார்க்குக் கொடார் என்றது. (4) கா. 5. ப. 9.

சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்புபோற்
கொல்லப் பயன்படுங் கீழ்.

(கா - உ.) எ - து.—ஒருவர் வந்து தம் குறை சொல்ல அமையும்: மற்று இவ்வளவிலே பயன்படுவர் சால்பினை உடையோர். இனி மற்று இவ்வாறு அன்றித் தரித்தும் நெரித்தும் அடர்த்தும் சாறு கொள்ளும் கரும்பு போலப் பெரிதும் கொல்லக் கொல்லப் பயன்படுவர் அத்துணைக் கீழான கயவர் எ - று.

(ப - உ.) எ - து.—பிறர் தம் குறையைச் சொல்ல அதற்கு இரங்கிப் பயன்படுவர்

மேன்மக்கள். அவ்வாறு அன்றிக் கரும்பு பயன்படுமாறு போலத் தம்மை நெருக்கினால் பயன்படுவர் கீழ் மக்கள் எ - று.

இஃது ஒறுப்பார்க்குக் கொடுப்பர் என்றது.

(5) 300 திருக்குறள் - பொருட்பால்

கா. 6.

ப. 6.

உடுப்பதூஉ முண்பதூஉங் காணிற்
பிறர்மேல்

வடுக்காண வற்றாகுங் கீழ்.

(கா - உ.) எ - து.—முன் நின்ற நிலையினும் மேற்பட உடுக்கும் ஆடையும் உண்ணும் சோறும் சிறிது மிகுதக் காணின் மற்று அப்பொழுதே பிறரைக் கெடுப்பது ஓர் வடுக்காண வற்று ஆகும் கீழ் எ - று.

(ப - உ.) எ - து.—பிறர் உடுப்பதனையும் உண்பதனையும் காண்பார் ஆயின் அவர் மாட்டு உள்ள குற்றங்களை ஆராய வல்லர் ஆவர் கயவர் எ - று.

இஃது அழுக்காறு உடையர் என்றது.

(6) கா. 7.
ப. 5.

அகப்பட்டி யாவாரைக் காணி னவரின்
மிகப்பட்டுச் செம்மாக்குங் கீழ்.

(கா - உ.) எ - து.—மனையினின்றும் புறப்பட்டாற் பட்டி புக்குப் பயிர் அழிக்கும் பட்டி மாட்டினை ஒத்தார் சிலரைத் தான் காணின், இதற்கு இவரினும் பெரியேன் ஆக வேண்டும் யான் என்று மற்று அவரது பட்டிமையினும் மிகப்பட்டு இறுமாக்கும் கீழ் ஆனது: எனவே தானும் நெறி கெட ஒழுகும்: பிற நெறி கேடரைக் காணினும் நமக்குத் துணையும் உண்டு என்று பெரிதும் இறுமாக்கும் கீழ் என்பது பொருள். அகப்பட்டி என்பது மனையுள் வாழும் பட்டி மாடு என்றது.

(ப - உ.) எ - து.—மனையகத்து இருந்து பறட்டை யாம் பெண்டிரைக் காணில் அவரினும் மிகப் பறட்டை ஆயினதனைப் பெற்றேம் என்று இறுமாப்பர் கயவர் எ - று.

இது நிறை இலர் என்றது.

(7) கா. 8.
ப. 3.

நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்

நெஞ்சத் தவல மிலர்.

(கா - உ.) எ - து.—நன்னெறி அறியும் சான்றோரினும் கயவர்

சால நலம் பெரிது உடையர்: தமது உள்ளத்து யாதும் ஓர் இடர்



எங்ஙனம் எனில் நன்னெறி ஆகிய கல்வியும், அறிவும், ஒழுக்கமும், குலமும், தருமமும், தவமும், பிறவும் குறைபடாமல் உண்டு மேற்பட வேண்டும் என்றும் குறைபடும் ஆயின் இம்மைக்கு அது வடு என்றும் இங்ஙனம் நெஞ்சம் அஞ்சி அவலிக்கும் அவலம் எஞ்ஞான்றும் இலர் எ - று.

(ப - உ.) எ - து.—நன்மை அறிவாரினும் கயவர் திரு உடையர்: இம்மை மறுமைக்கு உறுதி ஆவன செய்யப் பெறுகின்றிலோம் என்னும் கவற்சி நெஞ்சின்கண் உறுதல் இலர் ஆகலான் எ - று. இஃது அறப் பாடு அறியார் என்றது.

கா. 9.

(8)

ப 8.

பிறர்க்குக் கொண்டு சென்று அறிவித்தலான் இஃது அடக்கம் இலர் என்றது.

(9) கா. 10.

ப. 10. எற்றிற் குரியர் கயவரொன்

றுற்றக்கால்

விற்றற் குரியார் விரைந்து.

(கா - உ.) எ - து.—கயவராய் உள்ளார் வந்து மருவினால் ஒரு ர்க்கு இடுக்கண் வந்து உற்ற இடத்து மற்று அதுவே பட்டடை உயிர்க்கு ஈறு, பொருட்கு இறுதி வருமாறு விரைந்து எற்றுதற்கு



உரியார்: அஃது இயையாது எனின் உற்ற இடத்து உதவாது விரைந்து நீங்குதற்கு உரியார்: ஆதலால் எவ்வாற்றானும் கயவரொடு குடிப்பண்பு உடையோர் மருவாது ஒழிக என்பது பொருள் ஆயிற்று எ - று.

எற்றிற்கு என்பது எற்றுதற்கு என்பது: விற்றற் கென்பது வேறுபட்டு நீங்குதற்கு என்றது. விற்றற்கு எனற்பாலது விற்றற்கு எனக் குறுகி நின்றது:

(கா - உ.) பொருட்பாலினுள்

வகுத்துக்கொண்ட பொருள் பகுதி ஆவது :—

" அரசிய லவையைத் தமைச்சிய வீரைத்
திருவியல் வல்லாண மொன்றெனன் -
திருவிய

றிண்படை நட்புப் பதினேழ் குடிபதி
ன்)மூன்

றெண்பொரு ளேழ்பா னவை "
என இங்ஙனம் கண்டு கொள்க.

பொருட்பால் முற்றும்.

(ப - உ.) எ - து.—கயவர் யாதினுக்கு வல்லவர் எனில் தாக்குஒரு துன்பம் உற்றால் விரைந்து தம்மை விற்க வல்லர் எ - று.

இது நிலைமை இவர் என்றது.

பொருட்பால் முடிந்தது.

எழுதினது உதிரமாலை செட்டியார் குமாரன்
அரிஹரபுத்திரன்.

## செய்யுள் அகராதி.

| செய்யுள் | பக்கம் | செய்யுள் | பக்கம் |
| --- | --- | --- | --- |

செய்யுள் பக்கம்

செய்யுள் பக்கம் செய்யுள்

பக்கம் செய்யுள் பக்கம்

133 வைத்தான் 270

27

61

—:o:—

## பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 5 | 3 | வல்லார்கரு | வல்லாற்கு |
| 9 | 27 | கற்கக் | கற்க |
| 11 | 17 | (சேர்க்க) பரி. பா - ம். "யொருவற்கு" | |
| 17 | 1 | கல்லாமை | கேள்வி |
| 24 | 23 | சொல்லுதல | |
| 25 | 18 | தம்பால் | |
| 25 | 27 | யுய்க்கற்பின் | |
| 26 | 19 | இவவள | |
| 2[illegible] | 33 | (சேர்க்க) பரி. பா - | |

| | | |
|---|---|---|
| 31 | 19 | பொதுபட |
| 34 | 33 | துணையில்லைத் |
| 36 | 3 | தூணிங்கயின் |
| 39 | 2 | வரும். |
| 40 | 33 | தோன்று |
| 41 | 26 | எற்றார் |
| 50 | 32 | களரியி |
| 52 | 22 | உளதாம |
| 56 | 8 | காம |
| 58 | 5 | செய்கற்பாற் |
| 65 | 35 | கலிங்கர் |

செல்லுதல்
தன்பால்

காமம

செய்கிற்பாற்

காலிங்கா

| | | | |
|---|---|---|---|
| 77 | 24 | முன்னிரை | முக்கிரை |
| 78 | 5 | குடிகட்டு | குடிகட்கு |
| 78 | 13 | யாதேர் | யாதோ |
| 85 | 21 | என்ருராயினும் | என்ருராயினும் |
| 85 | 35 | முதலிய | (நீக்குக) |
| 89 | 3 | அறிப்பாமல் | அறியாமல் |
| 95 | 8 | (கெடும்பொருள்)வருதலும் | கெடுதலும் |
| 95 | 36 | என்றது | என்றது |
| 97 | 17 | டங்கிற்ற | டங்கிற்றன் |
| 103 | 27 | பாலும் | போலும் |
| 106 | 7 | வல்வவினை | வல்லவினை |
| 106 | 21 | மேமேல் | மேன்மேல் |
| 109 | 15 | (சேர்க்க) பரி. பா - ம். " அதினுட்பம் " | |
| 112 | 23 | காரியமும் | காரியம் |
| 112 | 26 | பட்ட | பட |
| 115 | 30 | (சேர்க்க) (உளர்) புறம் 252-செய்யுள். | |



பிழை திருத்தம்.

பக்கம். வரி. பிழை.

| | | |
|---|---|---|
| 136 | 15 | வெளியோ |
| 136 | 24 | யோடோ |
| 151 | 3 | தாம |
| 154 | 4 | ப. 9 |
| 156 | 17 | யிறைவர்க் |
| 162 | 18 | திறணநித்து |
| 164 | 3 | செணபொரு |
| 164 | 8 | உண்டாககிறைற்கு |
| 170 | 26 | வொரு... |
| 174 | 27 | பாதுகாப்பர் |
| 184 | 14 | பெயின் |
| 185 | 3 | பேதமை |
| 196 | 26 | எறட்டு |
| 198 | 3 | தாமடங்கா |
| 198 | 11 | தாம் |
| 199 | 31 | பிறிதுயாது |
| 201 | 29 | லொண்மை |

| | | |
|---|---|---|
| 206 | 7 | கருதிகொண்டு |
| 218 | 6 | இல்லாதோரோடு |
| 225 | 15 | கருதி |
| 227 | 3 | வேண்டு |
| 228 | 8 | பொய்மை |
| 228 | 13 | ஷை |
| 228 | 14 | புக்கவர் அப்பிணம் |
| 230 | 25 | கூறப்பட்டது |
| 236 | 21 | தன் |
| 239 | 30 | விரும்பாது |
| 241 | 4 | மருந்து |
| 244 | 12 | நெரிந்து |
| 245 | 15 | இயம்படுவது |
| 250 | 6 | இனிமைவு |
| 263 | 23 | உளபுக்கு |
| 263 | 28 | மக்கள |
| 266 | 10 | நகை |
| 267 | 12 | ப, 0 |

